த. பா. நி. (க.வெ.) வரிசை எண்—748

# தக்காண வரலாறு

## (கி. பி. 600 முதல் 973 வரை).

(மேல்பட்டப் படிப்பிற்குரியது)

ஆசிரியர்
டி. என். வாசுதேவ ராவ், எம்.ஏ., எம்.லிட்.,
வரலாற்றுப் பேராசிரியர்,
உலகநாத நாராயணசாமி அரசினர் கலைக் கல்லூரி,
பொன்னேரி.




தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—June, 1977
Number of copies—1,000

T.N.T.B.S. (C.P.) No. 748



**HISTORY OF DECCAN** (From 600 to 973 A,

T. N. VASUDEVA RAO

**Price Rs. 10-50**

Published by the Tamilnadu Textbook Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

This book has been printed on concessional paper made available by the Government of India.

*Printed by*
MEIPPORUL PRINTERS,
20, Konnur High Road,
Ayanpuram, Madras-600 023.

# பதிப்புரை

தக்காண வரலாறு (கி.பி. 600 முதல் 973 வரை) என்ற இந்நூல், தமிழ்நாட்டுப் பாட நூல் நிறுவனத்தின் 748 ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 783 நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு, கல்வி, சமூக நல அமைச்சகத்தின் 'மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்'தின்கீழ் வெளியிடப் படுகிறது.

மேலாண்மை இயக்குநர்
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

# பொருளடக்கம்

பக்கம்

## முதல் பாகம்
## அரசியல் வரலாறு



## இரண்டாம் பாகம்
## ஆட்சிமுறை, சமூக, பொருளாதார நிலை, சமயம், இலக்கியம், கலை.

# 1. தோற்றுவாய்

## நிலவியல் கூறுகள்

### வரலாற்றுச் சான்றுகள்

இந்திய வரலாற்றின் போக்கையும், இந்தியக் கலாச்சாரத்தின் வளர்ச்சியையும் சரிவரப் புரிந்துகொள்ள இந்தியாவின் பல்வேறு பகுதிகளின் பிரதேச வரலாற்றை (Regional history) அறிந்து கொள்ள வேண்டியது இன்றியமையாததாகும். இதுகாறும் இந்திய வரலாற்றில் வட இந்தியாவுக்கு அளவுக்கு மீறிய முக்கியத்துவம் கொடுக்கப்பட்டு, இந்தியப் பண்பாட்டையும் இந்தியாவின் சிறப்புப் பண்பையும் (Indian ethos) உருவாக்குவதில் தக்காணத்தின் பங்கு போதுமான அளவு வலியுறுத்தப்படாமல் இருந்துவந்துள்ளது. இக் கருத்தைத்தான் வின்சென்ட் ஸ்மித் 'இதுவரையில் பண்டைய இந்தியாவின் வரலாற்றை எழுதிய வரலாற்றாசிரியர்கள் தென்னிந்தியா என்னும் ஒரு பகுதி இருப்ப தாகவே நினைக்கவில்லைபோலும்' என்று கூறுகிறார். வின்சென்ட் ஸ்மித்துக்கு முன்னரே பேராசிரியர் சுந்தரம் பிள்ளை இதே கருத் தைப் பின்வருமாறு வலியுறுத்தியுள்ளார்: 'இந்திய வரலாற்றை ஆராய்ந்த அறிஞர் அனைவரும் நீண்ட காலமாக—மிக நீண்ட காலமாகத் தம்முடைய ஆராய்ச்சியைக் கங்கைச் சமவெளியில் தொடங்கி நடத்தி வந்துள்ளனர். ஆனால், அறிவியல் முறையில் ஆராய்ச்சி செய்ய விரும்பும் வரலாற்றாசிரியர்கள் இனிமேல் தங்க ளுடைய ஆராய்ச்சியைக் கிருஷ்ணா, காவிரி, வைகை ஆகிய சமவெளிகளிலிருந்து தொடங்கவேண்டும்.'[1]

எனவேதான் குறிப்பிட்ட பிரதேசங்களை ஆண்ட அரச மரபு களின் வரலாறும், அப் பகுதிகளின் கலாச்சாரமும் தனித்தனியா கவும், விரிவாகவும் ஆராயப்படவேண்டுமென்ற கருத்தைத் தற்கால வரலாற்றறிஞர்கள் வலியுறுத்தி வருகின்றனர். அதற் கேற்ப தக்காணப் பகுதியின் வரலாற்றை ஆராய முற்பட்டால், உலகில் மக்கள் வாழத் தொடங்கிய மிகப் பழமையான பகுதிகளுள் தக்காணமும் ஒன்று என்பது புலப்படும். கி.மு. மூன்றும்

[1] K. A. Nilakanta Sastri - A History of South India, p. 12

நூற்றுண்டு முதல் இப் பகுதி இந்திய வரலாற்றில் ஒரு சிறப்பிடத்தைப் பெற்றிருப்பதையும், தொடர்ந்து பல நூற்றுண்டுகளுக்குப் பல புகழ்பெற்ற அரச மரபுகளின் பேரரசுகளுக்கு மையமாக விளங்குவதையும் நாம் காணமுடிகின்றது. ஆந்திர-சாதவாகனர்கள், கடம்பர்கள், மேலைச் சாளுக்கியர்கள், ராஷ்டிரகூடர்கள் போன்றோர் இப் பிரதேசத்தின் வரலாற்றையும், கலாச்சாரத்தையும் உருவாக்குவதில் பெரும் பங்கேற்றிருக்கின்றனர். கி.பி. ஏழாம் நூற்றுண்டு முதல் பத்தாம் நூற்றுண்டு வரையிலான காலப்பகுதியில் தக்காணத்தை ஆண்ட அரச மரபுகளின் வரலாற்றை இந் நூலில் அடுத்துவரும் பக்கங்களில் ஆராயப் போகிறோம்.

நர்மதை ஆற்றுக்குத் தெற்கே அமைந்திருக்கும் இந்தியாவின் தீபகற்பப் பகுதியைக் குறிக்கும் 'தென்புலம்' என்று பொருள்படும் 'தக்ஷிணம்' என்னும் வடமொழிச் சொல் தமிழில் 'தக்காணம்' என்று குறிப்பிடப்படுகிறது. தென்பகுதி என்று பொருள்படும் 'தக்ஷிண பதம்' என்னும் சொல் வடமொழி இலக்கியத்திலும், பொறிப்புகளிலும் அடிக்கடி பயன்படுத்தப்பட்டுள்ளது. கி. பி. முதல் நூற்றுண்டைச் சேர்ந்த கிரேக்க மாலுமி ஒருவனுல் எழுதப்பட்ட 'பெரிபுளூஸ்' (Periplus of the Erythraean Sea) என்னும் நூலிலும், தக்காணம் என்னும் சொல் இடம் பெறுகிறது. கி.பி. ஐந்தாம் நூற்றுண்டில் இந்தியாவிற்கு வந்த சீன யாத்ரீகர் பாஹியான், இப் பகுதியைத் தம் குறிப்புகளில் 'தா-ஷின்' (Ta-Thsin) என்று குறிப்பிடுகிறுர். வடக்கே நர்மதை ஆற்றுக்கும், தெற்கே கிருஷ்ணு ஆற்றுக்கும், மேற்கே அரபிக் கடற்கரைக்கும் இடைப்பட்ட நிலப்பகுதியைத்தான் நாம் தக்காணம் என்று குறிப்பிடுகிறோம். பண்டைய தக்காணம் என்ற இப் பகுதி இன்றைய மகாராஷ்டிர மாநிலத்தையும், கர்நாடக ஆந்திர மாநிலங்களின் ஒரு பகுதியையும் தன்னுட் கொண்டிருந்தது. கிருஷ்ணு ஆற்றுக்குத் தெற்கே அமைந்துள்ள ஏனைய பகுதி தென்னிந்தியா என்று அழைக்கப்படுகிறது. தக்காணத்தில் கி.பி. ஏழாம் நூற்றுண்டு முதல் பத்தாம் நூற்றுண்டு வரையிலான காலப்பகுதியில் மேலைச் சாளுக்கியர்களும், அவர்களைத் தொடர்ந்து ராஷ்டிரகூடர்களும் தங்கள் ஆதிக்கத்தை நிலைநாட்டிப் பேரரசுகளைத் தோற்றுவித்தனர்.

கி.பி. ஆறும் நூற்றுண்டின் இடைப்பகுதியில் குப்தப் பேரரசின் வீழ்ச்சிக்குப் பிறகு தனித்தியங்கும் பல சிறுசிறு அரசுகளின் தோற்றம் இந்திய வரலாற்றின் சிறப்புக்கூறுக அமைந்துள்ளது. அதன் பிறகு அரசியல், போர்த்துறைகளில் சிறந்த மேதைகள்

பலர் தோன்றிக் குப்தப் பேரரசையொத்த ஒரு பேரரசை வட இந்தியாவில் நிறுவும் முயற்சியில் ஈடுபட்டு ஓரளவு வெற்றி பெறு வதையும், ஆனால் அவர்களால் நிறுவப்பட்ட பேரரசுகள் அவர் களுடன் அழிந்துவிடுவதையும் ஏழாம், எட்டாம் நூற்றாண்டுகளில் காண்கிறோம். வட இந்தியாவில் தோன்றிய ஹர்ஷன், யசோ தர்மன், சசாங்கன், யசோவர்மன் ஆகியவர்கள் முயற்சிகளை இதற்கு எடுத்துக்காட்டுகளாகக் கூறலாம். ஆனால் இதே காலப் பகுதியில் தக்காணமும், தென்னிந்தியாவும் மக்களின் கவனத்தை ஈர்க்கும் வகையில் இந்திய அரசியல் வரலாற்றில் முக்கியத்துவம் பெறுகின்றன. ஏனெனில் இந்தியாவின் இப் பகுதியில்தான் வட இந்திய மன்னர்களால் சாதிக்கமுடியாத ஒன்றினைச் சாதித்த— அதாவது வலிமை மிக்க, நீடித்து நிலைத்து நின்ற பேரரசுகளை உருவாக்கிய—சாளுக்கியர்களும், பல்லவர்களும் தோன்றினார்கள். சாளுக்கியர்களும், ராஷ்டிரகூடர்களும், பல்லவர்களும் ஆட்சி செய்த இந்தப் பகுதியில்தான் இந்திய நாட்டின் வலிமையும், உயிர்த்துடிப்பும் அப்பொழுது மையங்கொண்டிருந்தது என்று கூறினால் அது மிகையாகாது.

ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியிலிருந்து நிலவியல் ரீதி யில் வழக்கிலிருந்த வடஇந்தியா, தக்காணம், தென்னிந்தியா என்ற மூன்று இயற்கைப் பிரிவுகள் அரசியல் ரீதியில் முறையே வர்த்தனர்கள், சாளுக்கியர்கள், பல்லவர்கள் ஆகி யோரின் ஆதிக்க மண்டலங்களாக இந்திய வரலாற்றில் உருப் பெறுகின்றன. ஹர்ஷவர்த்தனனுக்கும், இரண்டாம் புலிகேசிக்கு மிடையே நடந்த ஆதிக்கப் போட்டியும், இரண்டாம் புலிகேசிக்கும் பல்லவ மன்னர்களான முதலாம் மகேந்திரவர்மன், முதலாம் நரசிம்மவர்மன் ஆகியோருக்கு மிடையே நடந்த ஆதிக்கப் போட் டியும் இக் காலப்பகுதியின் இந்திய வரலாற்றின் கருப்பொருளாக அமைந்துள்ளன. சாளுக்கிய புலிகேசியிடம் ஹர்ஷவர்த்தனன் அடைந்த படுதோல்வி, அவ் வட இந்திய மன்னன் நர்மதை ஆற்றைக் கடந்து வந்து தக்காணத்தில் தன் ஆதிக்கத்தை ஏற்படுத்தும் எண்ணத்தையே கைவிடும்படி செய்தது. அதே போலப் பல்லவ மகேந்திரவர்மன்மீது புலிகேசி பெற்ற வெற்றி பல்லவ ஆதிக்கத்தை நிலைகுலையச் செய்தது. ஆனால் விரைவிலேயே முதலாம் நரசிம்மவர்மன் ஆட்சியில் புலிகேசியின் ஆதிக்கம் ஒடுக் கப்பட்டு, மகேந்திரவர்மன் காலத்தில் பல்லவர்களுக்கு ஏற்பட்ட இழுக்கு அகற்றப்பட்டது. தொடர்ந்து நடந்த ஆதிக்கப் போட்டி யினால் வலிமை இழந்த சாளுக்கியப் பேரரசு ஏறத்தாழ இரண்டு நூற்றாண்டுகள் தக்காணத்தில் கோலோச்சிய பிறகு வீழ்ச்சியடை வதையும், அதன் விளைவாகத் தோன்றிய வெற்றிடம் அவர்களுக்கு

அடங்கியிருந்த சிற்றரசர்களான ராஷ்டிரகூடர்களால் நிரப்பப்படு வதையும் காணப்போகிறோம்.

மேலைச் சாளுக்கியர் வீழ்ச்சியினால் சாளுக்கியர் ஆதிக்கம் தக்காணத்திலிருந்து முற்றிலும் மறைந்து விடவில்லை. ஏனெனில் தக்காணத்தின் கிழக்குக் கடற்கரைப் பகுதியில் கோதாவரி-கிருஷ்ணா முகத்துவாரங்களுக்கு இடைப்பட்ட பகுதியில் இரண்டாம் புலிகேசியினால் நிறுவப்பட்ட ஒரு சிறு அரசு, அவன் ஆட்சிக்குப் பிறகு சுதந்திரமெய்தி, வேங்கி நகரைத் தலைநகராகக் கொண்டு கீழைச் சாளுக்கிய அரசு என்னும் பெயரால் தனித் தியங்கத் தொடங்கியது. மேலைச் சாளுக்கியர் வீழ்ச்சிக்குப் பிறகு தோன்றிய ராஷ்டிரகூட ஆதிக்கம் கீழைச் சாளுக்கிய அரசு சுதந்திரமாக இயங்குவதற்குத் தடையாக விளங்கிய போதிலும், மேலைச் சாளுக்கிய ஆதிக்கம் மறைந்து இரண்டு நூற்றாண்டு களுக்குப் பிறகும் கூட அவர்களுடைய பெருமையையும், புகழை யும் நினைவூட்டும் வகையில் கீழைச் சாளுக்கியர்கள் ஆட்சி அமைந்திருந்தது. இவ்வரசர்கள் சோழ மன்னர்களுடன் நட்புறவு கொண்டு அவர்கள் உதவியுடன் தங்களுடைய சுதந்திரத்தைப் பாதுகாத்துக் கொண்டார்கள். இந்த நட்புறவு காலப்போக்கில் மேலும் நெருக்கமாக வளர்ந்து பதினோராம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வேங்கி அரசும், சோழ அரசும் ஒன்றாக இணைந்து ஓர் அரசனே இரு அரசுகளையும் ஆளும் ஒரு நிலையைக் காண்கிறோம். இறுதியில் கி.பி. 973-ல் ராஷ்டிரகூட ஆதிக்கத்திற்கு முற்றுப்புள்ளி வைத்து, மீண்டும் மேலைச் சாளுக் கியர்கள் தக்காண வரலாற்றில் ஒரு முக்கிய இடத்தைப் பெறு கின்றனர். இவர்கள் கல்யாணி சாளுக்கியர்கள் என்று பிற்கால வரலாற்றில் அழைக்கப்படுகின்றனர்.[1] ராஷ்டிரகூடர்களின் ஆதிக்கத்தை ஒழித்து மீண்டும் மேலைச் சாளுக்கியர்களின் ஆட்சியை நிறுவிய பெருமை இரண்டாம் தைலன் என்ற அரச னைச் சாரும். அவன் வாதாபிச் சாளுக்கிய அரச மரபைச் சேர்ந் தவனாகவோ அதே மரபின் வேறொரு கிளையைச் சேர்ந்தவனா கவோ இருக்கக்கூடுமென்று வரலாற்றறிஞர்கள் கருதுகின்றனர்.

வாதாபிச் சாளுக்கியர்களின் வீழ்ச்சிக்குப் பிறகு எழுச்சிபெற்ற ராஷ்டிரகூடர்கள் அவர்களின் அரசியல் வாரிசுகளாக மேலைச் சாளுக்கியப் பேரரசைப் பெற்றதோடு மட்டுமன்றி, அப்பேரரசின் எல்லைகளை மேலும் விரிவுபடுத்தி ஒரு பெரிய சாம்ராஜ்யத்தின்

[1] இவர்களைத் தவிர வாதாபிச் சாளுக்கிய மரபைச் சேர்ந்த கிளை மரபினர் அதே பெயருடன் ராஷ்டிரகூட ஆதிக்கத்திற்குட்பட்டு வேமுலவாதம் என்னுமிடத்திலிருந் தும், மற்றொரு கிளையினர் குஜராத்திலிருந்தும் ஆண்டனர்.

அதிபதிகளாக விளங்கினார்கள். கி.பி. 753 முதல் கி.பி. 973 வரை நீடித்த அவர்களுடைய ஆட்சியில் வட இந்தியாவின் சில பகுதிகளும், தென்னிந்தியாவின் சில பகுதிகளும் அவர்களின் செல்வாக்கு மண்டலத்திற்குட்பட்டிருந்தன என்பதிலிருந்து அவர்களுடைய பெருமை நன்கு விளங்கும். இவ்வாறாகக் கி.பி. 600 முதல் கி.பி. 973 வரை தக்காணத்தில் தங்கள் ஆதிக்கத்தைச் செலுத்திய மேலைச் சாளுக்கியர்கள், ராஷ்டிரகூடர்கள் ஆகியோர்களின் வரலாறு இந் நூலின் கருப்பொருளாக அமைகின்றது. தக்காணத்தின் இந்த நான்கு நூற்றாண்டுக்கால அரசியல், சமூக, கலாச்சார வரலாற்றை இந் நூலின் அடுத்துவரும் பக்கங்களில் ஆராயப் போகிறோம்.

தக்காணம் இதுவரை கண்டிராத அளவிற்கு, வட இந்தியப் பேரரசுகளை ஒத்த, விரிந்த, பரந்த அரசுகளை சாளுக்கியர்களும், ராஷ்டிரகூடர்களும் நிறுவி, அவற்றைப் பேணிப் பாதுகாத்து வளர்த்தார்கள் என்பது அரசியல் ரீதியாக இக் காலப் பகுதியின் வரலாற்றின் சிறப்புக் கூறாகும். குறிப்பாக ராஷ்டிரகூடர்களின் ஆட்சி தக்காணத்திற்குப் பெருமையையும் புகழையும் தேடித் தருவதாக அமைந்தது. எனவேதான் அல்டேகர் என்ற வரலாற்றறிஞர் 'பண்டைய இந்திய வரலாற்றில் தக்காணம் ராஷ்டிரகூடர்கள் ஆட்சியில் பெற்றிருந்த செல்வாக்கையும், ஏற்றத்தையும் போல வேறு எந்தக் காலப் பகுதியிலும் பெற்றதில்லை' என்று கூறுகிறார்.[1] சுலைமான் என்னும் அக் காலத்து அரேபிய வரலாற்றுப் பதிவாளர் ராஷ்டிரகூடர்களைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது 'எல்லாராலும் அஞ்சப்பட்ட இந்தியாவின் வலிமைமிக்க அரசர்கள்' என்று வருணிக்கின்றார்.[2] கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் புத்துயிர் பெற்ற சோழர்களின் ஆதிக்க வளர்ச்சிக்கு ராஷ்டிரகூடர்கள் பெருந்தடையாக இருந்தனர். இவ்விரு அரச குடும்பங்களுக்கிடையே அடிக்கடி போர்கள் நிகழ்ந்தன. ஆனால் ராஷ்டிரகூடர்கள் தங்கள் நாட்டிலிருந்து மிகவும் தொலைவில் போரிடவேண்டியிருந்ததால், சோழர்களை எதிர்த்து நிலையான வெற்றிபெற முடியவில்லை. தெற்கில் ஓயாமல் போர் செய்தமையால் வலுவிழந்த நிலையிலிருந்த ராஷ்டிரகூடர்களின் ஆதிக்கத்தை ஒழிப்பது சாளுக்கிய அரசனான இரண்டாம் தைலனுக்கு மிக எளிதாயிற்று.

[1] 'In no other period of ancient Indian History did the Deccan enjoy the same high political prestige which it did under the Rashtrakutas.' A. S. Altekar-Rashtrakutas and their times, p. 413.

[2] 'The most feared and powerful rulers of India', Ibid, p. 413.

பேரரசுக் கோட்பாட்டைத் தக்காணத்தில் உருவாக்கி, நிலையான அரசாங்கத்தையும், செம்மையான நிர்வாகத்தையும் மக்களுக்கு அளித்ததோடு மட்டுமன்றி, மேலைச் சாளுக்கியர்களும், ராஷ்டிரகூடர்களும் கட்டடக் கலைக்கும், சிற்பக்கலைக்கும் பேராதரவு அளித்து, பொதுவாகத் தக்காணத்தின் கலாச்சார மேம்பாட்டிற்கும் வழி வகுத்தனர். குறிப்பாக மேலைச் சாளுக்கியர்கள் தென்னிந்தியக் கட்டடக்கலை வளர்ச்சிக்கு ஆற்றிய தொண்டு மகத்தானது. பல்லவர்களைப் போலவே இவர்களும் தென்னிந்தியக் கட்டடக் கலையின் பரிணும வளர்ச்சியில் ஒரு முக்கியப் பங்கை ஏற்றனர். இவர்களால் உருவாக்கப்பட்ட கட்டடக்கலை, சாளுக்கியர் பாணி என்றழைக்கப்பட்டு இந்தியக் கட்டடக்கலை வளர்ச்சியில் ஒரு முக்கிய இடத்தைப் பெறுகின்றது. ஐஹோள் (Aihole), அஜந்தா என்னுமிடங்களில் இவர்களால் நிறுவப்பட்ட குகைக் கோயில்களும், வாதாபி, பட்டடக்கல் போன்ற இடங்களில் கட்டப்பட்ட விருபாக்ஷர், மல்லிகார்ஜுனர், சங்கமேஸ்வரர் கோயில்களும் சமயத்திலும் கட்டடக் கலையிலும் இவர்களுக்கு இருந்த ஈடுபாட்டையும், கட்டடக் கலையின் பரிணும வளர்ச்சிக்கு இவர்கள் ஆற்றிய தொண்டினையும் புலப்படுத்தும். கட்டடக்கலை மட்டுமன்றிச் சிற்பக்கலையையும் வாதாபிச் சாளுக்கியர் போற்றி வளர்த்தனர். வாதாபி, அஜந்தா, ஔரங்காபாத், நாசிக், எல்லோரா குகைக்கோயில்களிலும், கட்டட அமைப்பு முறைப்படி பிற்காலத்தில் எழுப்பப்பட்ட கோயில்களிலும் செதுக்கப்பட்ட சிற்பங்கள் இதற்குச் சான்று பகரும். ராஷ்டிரகூட மன்னர்களும் கலையுணர்வு படைத்தவர்களாகவும், கலையார்வம் மிக்கவர்களாகவும் இருந்தனர். எல்லோராவில் ஒரு பெரிய கற்பாறையில் குடையப்பட்ட கைலாசநாதர் கோயிலும், அங்கு காணப்படும் சிற்பங்களும், பம்பாய்க்கு அருகிலிருக்கும் எலிபெண்டா தீவில் (Elephanta) காணப்படும் சிவன், பார்வதி, திரிமூர்த்தி ஆகிய சிற்பங்களும் ராஷ்டிரகூடர்களின் காலத்தைச் சேர்ந்தவையாகும். இவ்வாறு அரசியல், கலைத்துறையில் வியத்தகு சாதனைகள் புரிந்த இந்த இரண்டு அரச மரபினர்கள், ஏழாம் நூற்றுண்டு முதல் பத்தாம் நூற்றுண்டு வரை தக்காண வரலாற்றில் ஒரு சிறப்பிடத்தைப் பெறுகின்றனர்.

நிலவியல் ரீதியாகத் தக்காணத்தின் எல்லைகளை வரையுறுப்பதில் பண்டைய இந்திய நூலாசிரியர்கள் பல்வேறு கருத்துகளைத் தெரிவித்துள்ளனர். விந்தியமலையிலிருந்து தெற்கே கடற்பகுதி வரை வியாபித்துள்ள நிலப்பகுதிதான் தக்காணம் என்று பரத நாட்டிய சாஸ்திரம், புவனகோஸம் போன்ற வடமொழி நூல்கள் கூறுகின்றன. மத்ஸ்ய புராணம், பாலிஜாதகங்கள் போன்ற நூல்

களும் ஏறத்தாழ இந்த எல்லேகளேயே வரையறுத்துள்ளன. பேதவத்து என்ற பௌத்த சமய நூலின் உரை ஒன்றில் தூரத் தெற்கில் இருக்கும் 'டமிள விஷயம்' என்னும் தமிழ் நாடும் தக்காணத்தின் ஒரு பகுதியாகக் கருதப்படுகிறது. இராமாயணம், மகா பாரதம் ஆகிய இரு காவியங்களும் பண்டைய தமிழ்நாடு நீங்கலாகத் தென்னிந்தியாவின் மற்றப் பகுதிகளே தக்காணத்தின் எல்லேக்குட்பட்டவை என்ற கருத்தை வலியுறுத்துகின்றன. மகாநதிப் பள்ளத்தாக்கிலிருந்து காஞ்சிபுரம் வரையிலான நிலப்பகுதி அனேத்தும் தக்ஷிணுபதம் என்ற பகுதிக்குள் அடங்கும் என்று சமுத்திரகுப்தனின் அவைக் கவிஞரான ஹரிசேனர் கூறுகிருர். வடக்கே நர்மதை ஆற்றுக்கும், தெற்கே கடலுக்கும் இடைப்பட்ட நிலப்பகுதி தக்ஷிணுபதம் என்றழைக்கப்பட்டது என்பதைச் சாளுக்கியர் காலப் பட்டயங்களிலிருந்து நாம் அறியமுடிகின்றது. நர்மதை ஆற்றங்கரையிலமைந்திருக்கும் பேரிகாஸா (புரோச்) என்ற நகரத்திற்குத் தெற்கே உள்ள இந்தியாவின் நிலப்பகுதி அனேத்தும் தக்ஷிணுபதம் என்றும், ஆனல் 'தமிரிகா' (Damirica) என்ற தமிழகப்பகுதி தக்ஷிணுபதத்திற்கு உட்பட்டதன்று என்றும் பெரிபுளூஸ் என்னும் நூலாசிரியர் கருதுகிருர்.

நிலவியல் அடிப்படையில் தக்காணத்தை மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம்: (1) வடக்கே சாத்மாலா குன்றுகளுக்கும், மேற்குத் தொடர்ச்சி மலேக்கும் கிழக்குத் தொடர்ச்சி மலேக்கும், தெற்கே நீலகிரிக் குன்றுகளுக்கும் இடைப்பட்ட முக்கோண வடிவமான பீடபூமிப்பகுதி; (2) அரபிக் கடற்கரைக்கும் மேற்குத் தொடர்ச்சிமலேக்கும் இடைப்பட்ட குறுகிய கரடுமுரடான நிலப்பகுதி; (3) வங்காளக் குடாக் கடலுக்கும் கிழக்குத் தொடர்ச்சி மலேக்கும் இடைப்பட்ட தாழ் நிலப் பகுதி.

முதற் பகுதியான பீடபூமிப் பகுதிதான் மூன்று வெவ்வேறு மொழிகள் பேசும் மக்களேக்கொண்ட மகாராஷ்டிரம், கர்நாடகம், ஆந்திரம் என்ற மூன்று தனித்தனிப் பிரிவுகளாக வரையறுக்கப்பட்டுள்ளது. கடற்கரையிலிருந்து பல இடங்களில் படிப்படியாக உயரும் மேற்குத் தொடர்ச்சி மலேயின் வட பகுதியில் மிகக் கெட்டியான எரிமலேப் பாறைகள் உள்ளன. பல்லாயிரம் ஆண்டுகளாக மழை, வெயில், காற்று போன்ற இயற்கையின் ஆற்றல்களால் பாதிக்கப்பட்ட இப் பாறைகள் இயற்கை அரண்களாகவும், கோட்டைகளாகவும் உரு மாறி, இப்பகுதியின் வரலாற்றை உருவாக்குவதில் பெரும் பங்கைப் பெற்றுள்ளன.

மேற்குத் தொடர்ச்சி மலேயிலிருந்து கிழக்கு மேற்காகப் பல மைல்களுக்குப் பல பக்க மலேத் தொடர்கள் பரவியிருக்கின்றன,

இவை தக்காணப் பகுதியில் அமைந்திருக்கும் ஒரு சமவெளிப் பகுதியை மற்றொன்றிலிருந்து பிரிக்கின்றன. இவ்வாறு தபதி பள்ளத்தாக்கையும், கோதாவரிப் பள்ளத்தாக்கையும் ஷயாத்ரி பர்வதம் என்னும் மலைத்தொடர் பிரிக்கின்றது. இதே போல ஜால்னு, அகமதுநகர், மகாதேவ மலைத் தொடர்கள் போன்ற பக்க மலைகள் பலவும் இங்குக் காணப் படுகின்றன. மேற்குத் தொடர்ச்சி மலையைப்போல ஒழுங்கான அமைப்பைப் பெற்றிராத கிழக்குத் தொடர்ச்சிமலை பல இடங் களில் தொடர்பற்றுச் சிதறிக் கிடக்கின்றது. இத் தொடரைச் சேர்ந்த மலைகள் பல இடங்களில் தொடர்பற்றிருப்பதாலும், அவற்றின் உயரம் குறைவாக இருப்பதாலும் கடற்கரைக்கும் பீடபூமிக்குமிடையே போக்குவரத்துக்கு அவை பெருந்தடையாக இருக்கவில்லை. மேலும் கோதாவரி, கிருஷ்ணு போன்ற ஆறுகள் மேற்கு மலைத் தொடரில் உற்பத்தியாகிக் கிழக்கு நோக்கிப் பாய்ந்து, கிழக்குத் தொடர்ச்சி மலைகளை ஊடுருவிக்கொண்டு வங்கக் கடலில் கலக்கின்றன. அந்த ஆறுகள் இப் பகுதியில் போக்குவரத்து வசதியை மேலும் பெருக்கத் துணைபுரிகின்றன. அரபிக்கடல் வழியாக வீசுகின்ற தென் மேற்குப் பருவக் காற்றினுல் மேற்குத் தொடர்ச்சி மலையின் இரு பகுதிகளிலும் மழை பெய்கின்றது. அம்மலையின் மேற்குப் பகுதியில் மழை மிகுந்தும்; கிழக்குப் பகுதியில் மிகக் குறைந்தும் காணப்படுகிறது. மிகுதியான மழையின் காரணமாக மேற்குப் பகுதியில் பசுமை மாருத அடர்ந்த காடுகள் நிறைந்துள்ளன. அக் காடுகளில் தேக்கு, கருங் காலி, மூங்கில் போன்ற பல விலையுயர்ந்த மரவகைகள் ஏராளமாக வளர்கின்றன. மழைவளம் குறைந்த தக்காணப் பீடபூமிப் பகுதியில், அடர்ந்த காடுகள் இல்லையாயினும் சில பகுதிகளில் தேக்கு, சந்தனம் போன்ற மரங்கள் பயிர் செய்யப்படுகின்றன.

தக்காணப் பீடபூமி தென் கிழக்காகச் சரிவதால் இப் பகுதியின் ஆறுகளெல்லாம் பொதுவாகக் கிழக்கு நோக்கியே பாய்கின்றன. ஆனல் நர்மதை, தபதி ஆறுகள் மட்டும் மேற்கு நோக்கிப் பாய்கின்றன. பீடபூமியில் ஓடும் ஆறுகளுள் மகாநதி, கோதாவரி, கிருஷ்ணு, காவிரி ஆகியவை முக்கியமானவை. இந்த ஆறுகள் மேற்கு மலைச் சரிவுகளில் உற்பத்தியாகித் தீபகற்ப நிலப்பகுதி முழுவதையும் கடந்து கிழக்கிலுள்ள வங்கக் கடலில் கலக்கின்றன. இந்தியாவின் புனித ஆறுகளில் ஒன்ருகக் கோதாவரி ஆறு கருதப் படுகின்றது. தென்புல மக்கள் இதைக் கௌதமி கங்கை என்று அழைக்கின்றனர். வட இந்தியாவின் பாகீரதி, கங்கை ஆறுகளுக்கு இணையான புனிதத்தன்மை கோதாவரியும் பெற்றிருப்பதாக மக்கள் நம்புகின்றனர்: நாசிக் மாவட்டத்திலுள்ள குன்றுகளில்

இந்த ஆறு உற்பத்தியாகி வங்கக் கடலில் கலப்பதற்குமுன் பிரான்வஹிதா, இந்திராவதி போன்ற ஆறுகள் இதனுடன் கலக்கின்றன. உற்பத்தியிடத்திலிருந்து பாதி தூரம் ஓடியபின்பு கோதாவரி ஆந்திர மாநிலத்தில் நுழைந்து மிகப் பரந்த விளைநிலப் பகுதிக்குப் பாசன வசதியை அளிக்கிறது. ஆற்றுப் பரப்பின் இடையில் 'லங்கை' என்று வழங்கும் பல வண்டல் மண் தீவுகள் இருக்கின்றன. அரபிக் கடலுக்கு நாற்பது மைல் தூரத்தில் மஹாபலேஸ்வரத்திற்குச் சிறிது வடக்கில் உற்பத்தியாகும் கிருஷ்ணு நதி தெற்கு நோக்கிப் பாய்ந்து, பிறகு கிழக்கே திரும்பி, தென் மராட்டியத்தின் வழியாக ஓடிக் கர்நாடகம், ஆந்திரம் ஆகிய மாநிலங்களில் நுழைகிறது. வங்கக் கடலில் கலப்பதற்கு முன் காட்பிரபா (Ghatprabha), மால்பிரபா (Malprabha), துங்கபத்திரா போன்ற துணை நதிகள் இதனுடன் கலக்கின்றன. இவற்றுள் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்தது துங்கபத்திரா நதி ஆகும். விஜயநகரப் பேரரசிற்கு அது ஓர் இயற்கை அரணாக அமைந்திருந்தது. அதற்கு வடக்கில் ஆட்சி செய்த பாதாமி சாளுக்கியர், ராஷ்டிரகூடர், கல்யாணி சாளுக்கியர் ஆகியோரும் தெற்கில் ஆட்சி செய்த பல்லவர், சோழர், கங்கர் போன்றோரும் தங்களுடைய ஆதிக்கத்தைத் துங்கபத்திராவுக்கு அப்பாலும் பரப்புவதற்குச் செய்த முயற்சிகள் வெற்றி பெறவில்லை. இந்த ஆற்றுக்கும் கிருஷ்ணு ஆற்றுக்கும் இடைப்பட்ட ராய்ச்சூர் இடைத்துறை நிலம் (Raichur doab) தக்காணத்தின் போர்க் களமாக விளங்கியுள்ளது.

ஒரு நாட்டின் வரலாற்றை உருவாக்குவதில் அந்த நாட்டு நிலவியல் கூறுகள் பெரும் பங்கேற்கின்றன என்பது மறுக்க முடியாத உண்மையாகும். தக்காணம் இதற்கு விதி விலக்கு அன்று. தக்காணத்தின் மலைகளும், காடுகளும், ஆறுகளும் அதன் வரலாற்றை மிகவும் பாதித்திருக்கின்றன. தக்காணத்தின் வட பகுதியிலிருக்கும் மலைகளும், காடுகளும் அப்பகுதியைச் சிந்து-கங்கைச் சமவெளிப் பகுதியிலிருந்து பிரித்து இரு பகுதிகளையும் வெவ்வேறு இன, சமூக, கலாச்சாரக் கூறுகளைக் கொண்ட தனித் தனிப் பகுதிகளாக உருவாக்கியுள்ளன. இருப்பினும் தக்காணம் வட இந்தியாவின் செல்வாக்கிற்குட்படாமல் தப்பி விட்டது என்று கருதுவது பொருந்தாது. இயற்கையினுல் உருவாக்கப்பட்ட இந்தத் தடைகள் இருந்த போதிலும், வட இந்தியாவிலிருந்து புனித யாத்ரீகர்களும், சமயப் பிரசாரகர்களும் இத் தடைகளைக் கடந்து வந்து தென்னிந்திய மக்களின் வாழ்க்கை நெறியையும், ஆன்மீக வளர்ச்சியையும் தங்கள் செல்வாக்குக்கு உட்படுத்தி யிருக்கின்றனர். அதே போலச் செல்வம் ஈட்டும் ஆசையினுல்

உந்தப்பட்ட வர்த்தகர்கள் பலர் இத் தடைகளைப் பொருட் படுத்தாமல் வட இந்தியாவிலிருந்து தென்னிந்தியாவிற்கு வந்து வியாபாரம் மூலம் ஏராளமான செல்வத்தை ஈட்டியிருக்கின்றனர். சில சமயங்களில் பேரரசை நிறுவும் நோக்கங் கொண்ட வட இந்திய அரசர்கள் இத் தடைகளைக் கடந்து தென்னிந்தியாவின் மீது ஆக்ரமிப்பு நடத்தியிருப்பதையும் நாம் இந்திய வரலாற்றில் காண்கிறோம். எனவே நிலவியற் கூறுகள் தக்காணத்தைத் தனிப் பண்புகளைக் கொண்ட ஒரு பகுதியாக உருவாக்கிய போதிலும், வட இந்தியாவுடன் உள்ள தொடர்பை அவை அறவே ஒழித்துவிட வில்லை. அதே போல மேற்குத் தொடர்ச்சி மலையும், அதிலிருந்து பீடபூமிப் பகுதியில் பரவிக்கிடக்கும் பக்கமலைகளும், அவற்றி லுள்ள காடுகளும், அங்கு ஓடும் ஆறுகளும் தக்காணம் அரசியல் ரீதியில் பல துண்டுகளாகப் பிரிக்கப்படுவதற்குக் காரணமாக இருந்தன. தக்காணத்தின் குன்றுகளின் மேற்பரப்பை மூடியிருக் கும் திண்ணிய எரிமலைப் பாறைகள் எதிரிகளின் தாக்குதலுக்கு அசையாத அரண்களாயும், கோட்டைகளாயும் உருமாற்றப் பட்டன. இதுபோன்ற கோட்டைகளிலிருந்துதான் தென் புலத்தை ஆண்ட அரசர்கள் தங்கள்மீது ஆதிக்கம் செலுத்த வந்த அரசர்களை எதிர்த்துப் போரிட்டனர். ஏராளமான கனிச் செல்வத்தையும், செழிப்பான நிலத்தையும், நீர்வளத்தையும் பெற்றிருந்த மேட்டுச் சமவெளிப் பகுதிகள் மேற்குக் கிழக்குக் கடற்கரையிலமைந்திருந்த துறைமுகங்கள் வழியாக நடத்திய வியாபாரத்தின் மூலம் தங்கள் செல்வத்தைப் பெருக்கிக் கொண்டு சிந்து கங்கைச் சமவெளியில் தோன்றிய பேரரசுகளை ஒத்த பேரரசு களைத் தக்காணத்தில் தோற்றுவிக்கும் வாய்ப்பைப் பெற்றனர். நர்மதை, கோதாவரிப் பள்ளத்தாக்குகளைப் பாதுகாக்கும் இயற்கை அரண்களான இந்த மலைகளையும் காடுகளையும் கடந்து தக்காணத்தில் ஊடுருவ வட இந்தியர்கள் மேற்கொண்ட பல முயற்சிகள் தோல்வியடைந்ததை நாம் வரலாற்று வாயிலாக அறிகிறோம். தக்காணத்தின் வட பகுதியில் இயற்கையால் அளிக் கப்பட்ட இதுபோன்ற பாதுகாப்பு, தென் பகுதியில் இல்லாத காரணத்தினால்தான் கிருஷ்ணா-துங்கபத்திரா ஆறுகளுக்கு இடைப் பட்ட ராய்ச்சூர் ஆற்றிடைப் பகுதி (Raichur doab) அடிக்கடி புறத்தார் தாக்குதலுக்கு உள்ளானதையும், கடுமையான போர்கள் நிகழ்ந்த அரங்காகத் திகழ்ந்ததையும் காண்கிறோம். இதுபோல இயற்கையின் கருணையால் முழுப் பாதுகாப்புப் பெற்ற தால்தான் தக்காண அரசர்கள் இந்தியாவின் புகழ்பெற்ற அரசர்களாகத் திகழ்ந்ததும், சமய, கலாச்சார வளர்ச்சிக்குப் பெருந்தொண்டு புரிந்ததும் சாத்தியமாயிற்று.

பண்டைய கிரீஸ் நாட்டைப் போலத் தக்காணம் ஒன்றுடன் மற்றொன்று வேறுபட்ட பல சமூக, கலாச்சாரப் பிரிவுகளைக் கொண்டதாக இருந்தது. இதே சமூக, கலாச்சாரப் பிரிவுகள் தனி அரசியல் தொகுதிகளாகவும் விளங்கின. மலைத் தொடர்களும், ஆறுகளும் இத் தொகுதிகள் ஒன்றுடன் ஒன்று தொடர்பு கொள்ளுவதற்குத் தடையாக இருந்ததால், அவைகளிடையே சமூக அமைப்புகள், அரசியல் நிறுவனங்கள் ஆகியவற்றில் நுட்பமான பல வேறுபாடுகள் காணப்பட்டன. ஒரு பகுதியைச் சேர்ந்த அரசன் மற்றொரு பகுதியை வென்றவுடன் வெல்லப்பட்டவர்கள் மீது வென்றவர்களின் அரசியல் சமூகக் கருத்துகளும், அமைப்புகளும் திணிக்கப்பட்டன. இதை விரும்பாத மக்கள் தங்கள் மீது படையெடுத்து வந்தவர்களை எதிர்த்துப் போராடினர். இந்தச் சூழ்நிலையில் தென்னிந்தியாவிலும் பல்வேறு அரசுகளிடையே அடிக்கடி போர்கள் நிகழ்ந்தன. இந் நிலையில் பேரரசுக் கோட்பாடு வளருவது கடினமாக இருந்தது. இந்தத் தடைகளையெல்லாம் மீறித் தக்காணத்தில் பேரரசுகளை நிறுவிய மன்னர்கள் பேரரசு முழுவதிலும் தங்கள் அதிகாரத்தை நிலைநாட்டுவதில் பல இன்னல்களை அனுபவித்தனர். இயற்கையால் உருவாக்கப்பட்ட தடைகள் ஒருபுறமும், பேரரசிற்குள் போக்குவரத்துச் சாதனங்கள் போதுமான அளவு இல்லாமையும், பரந்த பேரரசை ஓர் இடத்திலிருந்து ஆளுவதைக் கடினமாக்கியது. ஆகவே, தக்காணத்து அரசர்கள் ஓரளவு அதிகாரத்தைப் பங்கீடு செய்துதான் ஆள வேண்டியிருந்தது. ஆதலால் தக்காண ஆட்சி முறையில் தல அரசாங்கங்கள் அதிக முக்கியத்துவம் பெற்றுக் கணிசமான அளவு ஆட்சி அதிகாரங்களைப் பெற்றன. இந்தக் குறிப்பிட்ட தன்மையைத் தமிழ்நாட்டில் சோழர்கள் ஆட்சி முறையில் காண்கிறோம்.

தக்காணத்தில் முடியாட்சி முறை நிலவிய அரசுகள்தான் இருந்தன. குடியாட்சி முறை வளர்வதற்கு ஏற்ற சூழ்நிலை தக்காணத்தில் நிலவவில்லை. இதற்கு தக்காணத்தின் இயற்கையமைப்பு ஓரளவு காரணமாக இருந்தது. இந்தியா ஒரு விவசாய நாடு; பெருவாரியான மக்கள் கிராமப்புறங்களில் வசிப்பவர்கள். அவர்கள் பழமை விரும்பிகள். நாட்டின் பெரிய அளவும், போக்குவரத்து வசதிகள் எளிதாகப் பெறமுடியாததும் அரசாங்க அலுவல்களில் பங்குகொள்ள மக்கள், அனைவரும் அடிக்கடி கூடுவதற்குத் தடையாக இருந்தன. எனவே, மக்களிடையே அரசியல் உணர்வும், அரசியல் வாழ்க்கையில் பங்குபெற வேண்டுமென்ற எண்ணமும் குறிப்பிடும்படியாக இருக்கவில்லை. தல அரசாங்க அமைப்புகளிலும், அவற்றின் இயக்கத்திலும் மக்கள் மிக்க ஆர்வம் காட்டினார்களேயன்றி, மேல்மட்ட ஆட்சி முறையில்

பங்கு கொள்ளுவதில் அவர்கள் அக்கறை காட்டவில்லை. திருடர்களாலும், கொள்ளைக்காரர்களாலும், வெளிநாட்டுப் படையெடுப்புக்களாலும் நாட்டிற்கு ஏற்பட்ட ஆபத்திலிருந்து நாட்டைப் பாதுகாக்கும் பணியைச் செவ்வனே செய்யக்கூடிய ஒரு தலைவனிடம் அதிகாரத்தை ஒப்படைத்துவிட அவர்கள் தயாராக இருந்தனர். இந்தச் சூழ்நிலையில் இந்தியாவின் மற்றப் பகுதிகளைப்போலத் தக்காணத்திலும் குடியாட்சி முறை தோன்றுவதற்கான சாத்தியக் கூறுகள் இல்லாமல் போயிற்று. எனவே, தக்காண மக்கள் தாங்களே விருப்பப்பட்டு முடியாட்சி முறையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டார்கள் என்று கருதுவதற்கு மாறாக, தக்காணத்தின் நிலவியல் கூறுகளும், அரசியல் கட்டாயமும், அவர்களை முடியாட்சி முறையை ஏற்கும்படிச் செய்தது என்று கருதுவதுதான் பொருத்தமுடையதாகும்.

**வரலாற்றுச் சான்றுகள் : பொறிப்புகள்**

தக்காணத்தின் பண்டைய வரலாற்றைத் தொகுத்தெழுதுவதற்குப் போதுமான வரலாற்றுச் சான்றுகள் இன்று ஏராளமாக உள்ளன. குறிப்பாக கி.பி. 600-க்கும் பிற்பட்ட காலப்பகுதியைப் பற்றிய வரலாறு குறித்து ஏராளமான கல்வெட்டுகளும் செப்பேடுகளும் கிடைத்துள்ளதால், தக்காணத்தின் வரலாற்றை எழுதும் பணியில் காணப்பட்ட இடையூறுகளும், சிக்கல்களும் ஓரளவுக்கு அகற்றப்பட்டுள்ளன. தக்காண வரலாற்றை எழுதுவதற்குப் பேருதவியாக இருக்கும் ஒரு முக்கியமான சான்று நமக்குக் கிடைத்துள்ள ஆயிரக்கணக்கான பொறிப்புகள் ஆகும் (Inscriptions). இப்பொறிப்புகள் கற்பாறைகளிலும், கற்றூண்களிலும், செப்பேடுகளிலும் காணப்படுகின்றன. இப்பொறிப்புகளில் காணப்படும் செய்திகளின் அடிப்படையில் தக்காணத்தின் அரசியல், சமூக, சமய, கலாச்சார வரலாற்றை நம்மால் வரையமுடிகின்றது. செப்பேடுகளை விட கல்வெட்டுகள் அதிகமாகக் கிடைத்துள்ளன. இப்பொறிப்புகள் வடமொழி, கன்னடம், தெலுங்கு, தமிழ் ஆகிய மொழிகளில் உள்ளன. பொறிப்புகளில் காணப்படும் செய்திகள் யாவும் உண்மை என்று கூறமுடியாது. கட்டுக்கதைகளும், உருவகங்களும், மிகைக் கூற்றுகளும் இவற்றில் காணப்பட்டாலும், உண்மை எது, பொய் எது என்பதை வேறுபடுத்திக் காட்டுவது அவ்வளவு கடினமல்ல. ஒரு போரில் ஈடுபட்ட இரு சாராரும் தாமே வெற்றி பெற்றதாகக் கூறிக்கொள்ளும் பொறிப்புகள் எண்ணற்றவை. சொத்துரிமை கொண்டாடுவதற்காகவும், வேறு பல காரணங்களுக்காகவும் போலிச் செப்பேடுகள் உருவாக்கப்படும் வழக்கமிருந்ததால், வரலாற்று ஆராய்ச்சியாளர்களுக்குப் பல குழப்பங்களும், சிக்கல்களும் விளைகின்றன. ஒன்றுக்கொன்று

முற்றிலும் முரண்பட்ட செய்திகளையும், கால வரிசைமுறை (Chronology) விவரங்களையும் சில பொறிப்புகளில் நாம் காண்கிறோம். இதனால் வரலாற்றாராய்ச்சியாளர்களின் பணியில் மேலும் இடர்ப்பாடுகள் தோன்றுகின்றன. பெரும்பாலான பொறிப்புகளில் அவை எந்த ஆண்டில் வெளியிடப்பட்டவை என்ற செய்தி கிடைக்கின்றது. அவ்வாறில்லாத பொறிப்புகளின் காலத்தைத் தொல்லெழுத்துக் கலையின் (Palaeography) உதவியினாலும், அவற்றில் காணப்படும் பிற செய்திகளின் அடிப்படையிலும் நிர்ணயம் செய்வது எளிது. இச் செய்திகளின் உதவியோடு பல அரச வம்சங்களின் காலத்தையும், அவற்றுடன் தொடர்பு கொண்ட பல்வேறு நிகழ்ச்சிகள் நடந்த காலத்தையும் வரையறை செய்வது சாத்தியமாகின்றது. கோயில்களுக்கும், அறநிலையங்களுக்கும், தனிப்பட்டவர்களுக்கும் அரசர்கள் அளித்த நன்கொடைகள், மானியங்கள் போன்றவற்றை அறிவிப்பவை தாம் பெரும்பாலான இந்தக் கல்வெட்டுகளும், செப்பேடுகளும். இதுபோன்ற அறிவிப்புகளை வெளியிடும்பொழுது கல்வெட்டுகளும் செப்பேடுகளும் அப்பொழுது ஆண்ட அரசர்களைப் பற்றியும், அவர்களது குணநலன்கள், அருஞ்செயல்கள் பற்றியும், அவர்களின் முன்னோர்கள், அதிகாரிகள், நிர்வாகமுறை பற்றியும் கூறுவதால், வரலாற்றிற்குப் பயன்படும் பல செய்திகளை நாம் இவற்றின்மூலம் அறிய முடிகின்றது. வரலாற்று ரீதியாகத் தக்காணத்தில் காணப்படும் பொறிப்புகளின் சிறப்புக்கூறு என்னவெனில், அவை காலக் கணிப்பிற்குப் பெரிதும் பயன்படுகின்றன என்பதாகும். கல்வெட்டுகளும் செப்பேடுகளும் அரசர்களுடைய ஆட்சிக் காலத்தையும் நிகழ்ச்சிகளையும் குறிப்பிடும்பொழுது சக சகாப்தத்தைப் பயன்படுத்துவதாலும், அரசர்களுடைய ஆட்சி ஆண்டைக் (Regnal year) குறிப்பிடுவதாலும் அரசர்களின் அல்லது அரச வம்சங்களின் காலத்தைப் பிழையின்றிக் கணிப்பதற்கு அவை பெரிதும் பயன்படுகின்றன. மேலைச் சாளுக்கியர்களின் கல்வெட்டுகள் இம் முறையைப் பின்பற்றின. முதலாம் புலிகேசியின் வாதாபிப் பாறைக் கல்வெட்டையும், இரண்டாம் புலிகேசியின் ஐஹோள் கல்வெட்டையும் இதற்கு உதாரணங்களாகக் கூறலாம். முதலாம் புலிகேசியின் பாதாமிக் கல்வெட்டில் சக வருஷம் முதல் முதலாகக் குறிப்பிடப்படுகின்றது. கோயில்கள், மடங்கள் போன்ற சமய-அறநிலையங்களுக்கு அளிக்கப்பட்ட நன்கொடைகளைப் பற்றிய பொது அறிவிப்புகளே பெரும்பாலான கல்வெட்டுகளும், செப்பேடுகளும் ஆகும். செப்பேடுகளில் அரசனுடைய பெயரும், அவன் வம்சத்தின் பெயரும் குறிப்பிடப்பட்டு அவனுடைய இலச்சினையும் பொறிக்கப்பட்டிருக்கும். சில கல்வெட்டுகள் சில குறிப்பிட்ட நிகழ்ச்சிகளின் நினைவாகப் பொறிக்கப்பட்டவை. இவற்றை

நினைவூட்டு சாஸனங்கள் என்றழைப்பர் (Commemorative records). நன்கொடையை அறிவிக்கும் கல்வெட்டுகளிலும், செப்பேடுகளிலும் நன்கொடை அளிப்பவர், அவருடைய முன்னோர்கள், பெறுபவர், நன்கொடைகள் ஆகியவை பற்றிய விவரங்கள் யாவும் அடங்கியிருக்கும். இந்த நன்கொடைகள் அரசர்களாலும், சில சமயங்களில் அரசனின் அதிகாரிகளாலும், மாநில ஆளுநர்களாலும் வழங்கப்பட்டன. நன்கொடைகள் வழங்கும் அரசர்கள், அதிகாரிகள் ஆகியோரைப் பற்றியும், அவர்கள் குடும்பத்தைப் பற்றியும், அவர்கள் சாதனை பற்றியும் பல விவரங்கள் சாஸனத்தின் முகப்பில் கூறப்பட்டிருக்கும். ஒரு சாஸனத்தின் 'பிரஸஸ்தி' (prasasti) என்ற இந்தப் பகுதியில்தான் வரலாற்றிற்குப் பயன்படும் பல செய்திகள் அடங்கியுள்ளன.[9] இது தமிழில் 'மெய்க்கீர்த்தி' என்றழைக்கப்படுகிறது. பெரும்பாலும் நிலக்கொடையைப் பற்றிய பட்டயங்கள் ஏராளமாகக் கிடைத்துள்ளன. அத்தகைய பட்டயங்களில் தானமாகக் கொடுக்கப்பட்ட நிலத்தின் எல்லைகள் தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளன.

மேலைச் சாளுக்கியர்களின் பொறிப்புகளில் தக்காணத்தின் மேற்குப் பகுதியில் காணப்படுபவை வடமொழியிலும், கன்னடத்திலும், கிழக்குப் பகுதியில் காணப்படுபவை வடமொழியிலும், தெலுங்கிலும் உள்ளன. மேலைச் சாளுக்கியர்களின் கல்வெட்டுகளில் பின்வருபவை குறிப்பிடத்தக்கவை. சக ஆண்டு 465ஐச் சேர்ந்த (கி.பி. 543) முதலாம் புலிகேசியின் பாதாமிக் கல்வெட்டு ஆகும். அது வாதாபி மலைக்கு அந்த அரசன் அரண் அமைத்த செய்தியையும், ஹிரண்யகர்ப்பம் போன்ற தானங்களையும், அஸ்வமேதம் போன்ற வேள்விகளையும் செய்ததைக் கூறுகிறது. சக ஆண்டு 556-ல் (கி.பி. 634) பொறிக்கப்பட்ட இரண்டாம் புலிகேசியின் ஐஹோள் கல்வெட்டு சாளுக்கிய வம்சத்தின் முந்திய அரசர்களைப் பற்றியும், இரண்டாம் புலிகேசியின் போர்ச் சாதனைகளையும் விளக்குகிறது. ரவிகீர்த்தி என்ற கவிஞனால் வடமொழியில் புனையப்பட்ட இக் கல்வெட்டு வாசகம், புலிகேசி கடம்பர்கள் மீதும், மேலைக் கங்கர்கள் மீதும் வெற்றி பெற்றதையும், கொங்கணத்தை வென்றதையும், ஹர்ஷரை நர்மதை ஆற்றங்கரையில் எதிர்த்துப் பெருவெற்றி பெற்றதையும், லாடர்களையும், மாளவர்களையும், கூர்ஜரர்களையும் தன் ஆதிக்கத்தை ஏற்றுக்கொள்ளும்படி செய்ததையும், கிழக்குத் தக்காணத்தின் மீது படையெடுத்துத் தென் கோசலம், கலிங்கம், பிஷ்டபுரம் ஆகிய அரசுகளை அடிபணிய வைத்ததையும், குனலா ஏரிக் கரையில் நடந்த சண்டையில் விஷ்ணு குன்டினர்களைத் தோல்வியடையச் செய்ததையும், பல்லவ மகேந்திரவர்மன், நரசிம்ம

வர்மன் ஆகியவர்களுடன் அவன் நடத்திய போரையும் குறிப்பிடு கிறது. ரவிகீர்த்தி தன்னைக் காளிதாஸர், பாரவி போன்ற கவிஞர் களுடன் ஒப்பிட்டுக்கொள்கிறார். இக் கல்வெட்டில் காணப்படும் இச் செய்தி காளிதாஸருடைய காலத்தை நிர்ணயம் செய்யப் பயன்படுகிறது. இரண்டாம் புலிகேசிக்குப் பிறகு பட்டமெய்திய முதலாம் விக்கிரமாதித்தியனின் இருபதாம் ஆட்சி ஆண்டு காட்வால் (Gadval) செப்பேடுகள் சாளுக்கியப்படைகள் காவிரி ஆற்றங்கரையிலமைந்திருந்த உறையூர்வரை முன்னேறிச் சென்ற தையும், புலிகேசியின் ஆட்சியில் சாளுக்கியர் அடைந்த தோல்வி யினால் ஏற்பட்ட இழுக்கைப் போக்குவதற்காக இந்த அரசன் பல்லவ நாட்டின்மீது படையெடுத்துக் காஞ்சிபுரத்தைக் கைப் பற்றியதையும் குறிப்பிடுகின்றது. இரண்டாம் விக்கிரமாதித்திய னின் காஞ்சிபுரம் பொறிப்பு மேலைச் சாளுக்கியர்கள் பெற்றிருந்த ஆதிக்கத்தையும், வலிமையையும் குறிப்பிடுவதோடு மட்டுமன்றி, அவ்வரசன் காஞ்சிபுரத்து ராஜசிம்மேஸ்வரர் ஆலயத்திற்குச் சென்று தன் படையெடுப்பின்பொழுது கைப்பற்றிய அக் கோயிலின் செல்வத்தையெல்லாம் திருப்பிக் கொடுத்த செய்தி யையும் கூறுகிறது. இரண்டாம் புலிகேசிக்கு முன் ஆண்ட மங்கலேசனின் நெரூர் சாஸனம் சாளுக்கியர்களுக்கும், காலசூரி களுக்கும் நடந்த ஆதிக்கப் போட்டியைப் பற்றிக் குறிப்பிடு கின்றது.

இதேபோல ராஷ்டிரகூடர்கள் ஆட்சியைப் பற்றிய செய்தி களைக் கூறும் பொறிப்புகள் ஏராளமாகக் கிடைத்துள்ளன. அவர் களுடைய கல்வெட்டுகளும், செப்பேடுகளும் அவர்களின் அர சியல், படைத்துறை, கலாச்சாரச் சாதனைகளை விளக்குகின்றன. அவற்றுள் பின்வரும் சிலவற்றைக் குறிப்பிடலாம்:

கி. பி. 754ஆம் ஆண்டைச் சேர்ந்த தந்திதுர்கனின் சாமன்காட் (Samangad) செப்பேடுகள், எல்லோரா தசாவதாரக் குகைக் கோயில் பொறிப்பு, முதலாம் கிருஷ்ணனின் ஆட்சியைச் சேர்ந்த தலேகான், பந்தூக் செப்பேடுகள் (Talaegaon, Bhanduk plates). தந்திதுர்க்கனின் சாமன்காட் செப்பேடுகள் அவன் காஞ்சிபுரம், கலிங்கம், ஸ்ரீ சைலம், கோசலம் இன்ன பிற நாடுகளுடன் போரிட்டு அவ்வரசர்களை முறியடித்த செய்தியைக் கூறுகின்றன.

முதலாம் கிருஷ்ணனின் செப்பேடுகள் பாதாமிச் சாளுக்கியர் ஆட்சிக்கு முடிவுகட்டி, ராஷ்டிரகூடர்கள் ஆதிக்கத்தை ஏற்படுத்தி யவன் தந்திதுர்க்கன் என்று குறிப்பிடுகின்றன. முதலாம் கிருஷ்ண னின் தலேகான் சாஸனம் அவன் கங்கர்கள்மீதும், வேங்கிச் சாளுக்கியர்கள்மீதும் போர் தொடுத்து அவர்களை அடக்கிய

செய்தியையும், காஞ்சிப் பல்லவ அரசனைப் போரில் வென்ற செய் தியையும் கூறுகின்றது. மூன்றும் கிருஷ்ணனின் சித்தலிங்கமாடம் பொறிப்பும், கர்ஹாட் செப்பேடும் அவன் காஞ்சிபுரத்தையும் தஞ்சாவூரையும் வென்றதைக் குறிப்பிடுகின்றன. முதலாம் அமோகவருஷனின் சஞ்சன் செப்பேடுகள் மூன்றும் கோவிந்தனின் வட இந்திய, தென்னிந்தியப் படையெடுப்புகளையும், முதலாம் அமோகவருஷன் அரசபதவியைத் துறந்ததையும் கூறுகின்றன. மூன்றும் இந்திரனின் பெகும்ரா சாஸனமும் (Begumra grant), நான்காம் கோவிந்தனின் காம்பே, சங்கிலி செப்பேடுகளும் (Cambay, Sangli plates) முதலாம் அமோகவர்ஷனுக்கும், கீழைச் சாளுக்கியர்களுக்கும் நடந்த போர்களை விவரிக்கின்றன.

கீழைச் சாளுக்கியர்களின் வரலாற்றை அறிய உதவும் சான்று களில் குறிப்பிடத்தக்கவை அவர்களுடைய ஏராளமான செப் பேடுகளும் சில கல்வெட்டுகளுமாகும். கீழைச் சாளுக்கிய வம்சா வளியைப் பற்றிய செய்திகளையும், ஒவ்வோர் அரசனின் ஆட்சிக் காலத்தையும், அவ்வாட்சியில் நடந்த முக்கிய அரசியல் நிகழ்ச்சி களையும் இப் பட்டயங்கள் மூலம் நாம் அறிகின்றோம். ஆனால் இப் பட்டயங்கள் கூறும் செய்திகளில் சில முரண்பாடுகள் இருப் பதையும் நாம் மறந்துவிடக்கூடாது. முதலாம் விஷ்ணுவர்த் தனின் திம்மாபுரம் (Timmapuram), சிப்புருபள்ளி (Chipurupalle) சாஸனங்கள், மூன்றும் விஜயாதித்தனின் தர்மாவரம் சாஸனம், முதலாம் சாளுக்கிய பீமனின் அனகபள்ளி பொறிப்பு போன்றவை கீழைச் சாளுக்கியர்களின் சாஸனங்களில் குறிப்பிடத்தக்கவை யாகும். மற்ற தென்னிந்திய அரச குடும்பங்களின் வரலாற்றைப் போலவே கீழைச் சாளுக்கியர்களின் வரலாற்றை அறிந்து கொள்ள அவர்களின் பொறிப்புகள் நமக்குப் பேருதவியாக உள்ளன. இவற்றுள் பெரும்பான்மையானவை செப்பேடுகளே யாகும். இவர்களுடைய சாஸனங்களின் சிறப்பியல்புகள் சில வற்றை இங்குக் கூறலாம். முந்தைய கீழைச் சாளுக்கிய அரசர் களின் பொறிப்புகளில் (முதலாம் விஷ்ணுவர்த்தனன் முதல், ஐந் தாம் விஷ்ணுவர்த்தனன் வரை) மெய்க்கீர்த்திப் பகுதியில் மூன்று தலைமுறையைச் சேர்ந்த அரசர்களின் பெயர் மட்டும் குறிப்பிடப் பட்டு, அவர்களைப்பற்றிய மற்ற எந்தச் செய்தியும் காணப்பட வில்லை. எனவே, இப் பொறிப்புகள் அரசர்களுடைய காலத்தை நிர்ணயம் செய்வதற்கோ, எந்த வரிசையில் அவர்கள் ஆண்டார்கள் என்பதைத் தெரிந்துகொள்வதற்கோ எவ்விதத்தி லும் பயன்படவில்லை. ஆனால் மூன்றும் விஜயாதித்தியன் ஆட்சியி லிருந்து இவ்வரசர்களுடைய சாஸனங்களின் மெய்க்கீர்த்திப் பகுதியில் ஒரு பெரும் மாற்றம் தோன்றுவதைக் காண்கிறோம்.

மூன்று தலைமுறையைச் சேர்ந்த அரசர்கள் பெயர்மட்டுமல்லாமல், அவன் கட்சிக்குப் பிறகு வெளியிடப்பட்ட பொறிப்புகளில் ஓர் அரசனின் முன்னோர்கள் எல்லாருடைய பெயர்களும் கால வரிசைப்படி கொடுக்கப்பட்டு, ஒவ்வொருவருடைய ஆட்சிக் காலமும், அவர்களுடைய ஆட்சியின் முக்கியமான நிகழ்ச்சிகளும் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன. பதினோராம் நூற்றாண்டி லிருந்து இச் சாஸனங்களில் அரசர்கள் தங்களைச் சந்திர குலத் தைச் சேர்ந்தவர்களென்றும், பாண்டவர்கள் வழிவந்தவர்க ளென்றும் கூறிக் கொள்ளும் வழக்கம் ஏற்பட்டது.

இவ்வாறு ,கீழைச் சாளுக்கியர்கள் வரலாற்றை வரைய நமக்கு உதவும் பொறிப்புகளில் குறிப்பிடத் தக்கவை பின் வரு வனவையாகும்.

இரண்டாம் புலிகேசியினால் வேங்கிப்பகுதி அளிக்கப்பட்ட செய்தியைக் கூறும் முதலாம் விஷ்ணு வர்த்தனின் சதாரா சாஸனம்;

கீழைச் சாளுக்கியர்களின் காலத்தை நிர்ணயிக்க உதவும் இரண்டாம் விஷ்ணு வர்த்தனின் தேராளா (Terala grant) சாஸ னம்; முதலாம் விஷ்ணு வர்த்தனன் உள்பட ஒன்பது கீழைச் சாளுக்கிய அரசர்களின் பெயரையும், அவர்கள் ஒவ்வொரு வரின் ஆட்சிக் காலத்தையும் குறிப்பிடும் மூன்றாம் விஜயாதித் தியனின் சாதலூரு (Satalura) சாஸனம்;

வேங்கி அரியணையைக் கைப்பற்ற இவ்வரசனுக்கும், இவன் தம்பி முதலாம் பீமனுக்கு மிடையே நடந்த வாரீசுரிமைப் போட்டியையும், ராஷ்டிரகூடர்கள் ஆதிக்கத்தை ஒழித்துக் கீழைச் சாளுக்கிய அரசை அவர்கள் பிடியிலிருந்து இவன் விடுவித் ததையும் இச் சாஸனம் கூறுகின்றது.

ராஷ்டிரகூட அரசன் இரண்டாம் கிருஷ்ணனுடன் இவன் நடத்திய போரைப் பற்றிய செய்தியைக் கூறும், தர்மாவரம் சாஸனம். ராஷ்டிரகூட அரசன் முதலாம் அமோகவருஷ னின் ஆணைக்குக் கீழ்ப்படிந்து மூன்றாம் விஜயாதித்தியன் கங்க நாட்டின் மீது படையெடுத்த செய்தியைக் கூறும், மசூலிப் பட்டினச் சாஸனம்.

முதலாம் அம்மனின் ஏடேறு செப்பேடுகள் (Ederu plates), இரண்டாம் பீமனின் கோலவென்னு செப்பேடுகள் (Kolavennu plates), இரண்டாம் அம்மனின் மலியம்பூண்டிச் சாஸனம்

(Maliyampundi grant) போன்ற பொறிப்புகளும் கீழைச் சாளுக்கியர்கள் வரலாற்றை அறிந்து கொள்ள உதவும் முக்கிய சான்றுகளாகும்.

மேற்கூறிய பொறிப்புகளைத் தவிர இம் மூன்று வம்சத்தின ரின் சமகாலத்தவர்களான பல்லவர்கள், சோழர்கள், கங்கர்கள் ஆகியோருடைய சாஸனங்களும், தக்காண வரலாறு தொடர்பான பல செய்திகளை அளிப்பதன் மூலம் நமக்கு உதவுகின்றன. குறிப்பாக மேலைச் சாளுக்கியர்களுக்கும் பல்லவர்களுக்கு மிடையே நிலவிய உறவு, அவர்களிடையே நடந்த ஆதிக்கப் போட்டி, ராஷ்டிரகூடர்களுக்கும் சோழர் களுக்கு மிடையே நடந்த போர்கள் கீழைச் சாளுக்கிய அரசர் களுக்கும் ராஷ்டிர கூட அரசர்களுக்கும் நடந்த ஆதிக்கப் போர்கள் போன்ற பல்வேறு செய்திகளை அறிய தென்னிந்திய அரச குடும்பங்களின் பொறிப்புகள் நமக்குப் பெரிதும் உதவு கின்றன. மேற் கூறிய வற்றிலிருந்து தக்காண வரலாற்றை எழுது வதற்குப் பொறிப்புகளில் காணப்படும் சான்றுகள் எவ்வளவு இன்றியமையாதன என்பது நன்கு விளங்கும்!

**இலக்கியச் சான்றுகள் :**

பொறிப்புகளுக்கு அடுத்தபடியாகத் தக்காண வரலாற்றை அறிந்து கொள்ளப் பயன்படுவது இலக்கியச் சான்றுகளாகும். நம் நாட்டு அறிஞர்களால் எழுதப்பட்ட நூல்கள், நம் நாட் டிற்கு வந்த அயல் நாட்டவர்களால் எழுதப்பட்ட நூல்கள் என இருவகையாக இலக்கியச் சான்றைப் பிரிக்கலாம். வரலாற்று நூலென்றே எழுதப்பட்ட இந்திய நூல்கள் இல்லை என்றே கூறி விடலாம். இலக்கியச் சான்றுகளில் வரலாற்று மாணவனுக்கு நேரடியாக உதவக் கூடிய செய்திகள் அதிகம் காணப்படுவதில்லை. ஏனெனில் அவற்றில் கட்டுக் கதைகளும், திரித்துக் கூறப்பட்ட தும், மிகைப்படுத்திக் கூறப்பட்டதுமான செய்திகளும் அதிகம் காணப்படுகின்றன. வேறு நம்பத்தக்க ஆதாரங்களோடு ஒப் பிட்டுப்பார்த்து அவற்றால் உறுதிபடுத்தப்படும் செய்திகளை மட்டும்தான் வரலாற்றாசிரியர்கள் பயன்படுத்த வேண்டும். இலக்கியச் சான்றுகள் மூலம் வரலாற்று மாணவன் மறைமுக உதவியைப் பெறுகின்றான் என்பதை மறுக்க முடியாது. ஒரு குறிப்பிட்ட காலப் பகுதியில் மக்கள் எந்தச் சமுதாய, சமய சூழ் நிலையில் வாழ்ந்தார்கள் என்பதை அறிந்து கொள்ள நமக்கு இலக் கியம் பெரிதும் பயன்படுகிறது. மேலும் பல்வேறு அறிஞர் களால் எழுதப்பட்ட நூல்களின் பாயிரம், முடிவுரை போன்ற பகுதிகளிலிருந்து நூலாசிரியர்களைப் பற்றியும் அவர்களை ஆதரித்த

அரசர்கள், அவர்கள் முன்னேர்களைப் பற்றியும் பல பயனுள்ள செய்திகளை நாம் அறிகின்றோம். பொறிப்புகளின் மூலம் நமக்குக் கிடைக்கின்ற செய்திகளில் காணப்படும் பல குறைகளை நிரப்பு வதற்கு இச் செய்திகள் உதவுகின்றன.

வாதாபிச் சாளுக்கியர்கள், ராஷ்டிரகூடர்கள், வேங்கி சாளுக் கியர்கள் ஆகியவர்களின் வரலாற்றை அறிந்து கொள்ள உதவும் இலக்கியச் சான்றுகள் மிகக் குறைவே. ராஷ்டிரகூட மன்னன் முதலாம் அமோக வருஷனல் எழுதப்பட்ட கவிராஜமார்க்கம் (Kaviraja marga) என்னும் கன்னட மொழி நூலில் ராஷ்டிர கூடர்களைப் பற்றிய சில செய்திகள் காணப்படுகின்றன. பம்ப பாரதம் என்னும் நூல் மகாபாரத நிகழ்ச்சிகள் பற்றியதாக இருப் பினும் சாளுக்கியர்கள், ராஷ்டிரகூடர்கள் காலத்து வரலாற்று நிகழ்ச்சிகள் சில அதில் இடம் பெறுகின்றன. பம்பன் (Pampa) என்ற கவிஞனல் எழுதப்பட்ட விக்கிர மார்ஜுன விஜயம், நன்னையாவின்(Nannaya) ஆந்திர மகாபாரதம்போன்ற தெலுங்கு மொழி நூல்களில் வேங்கி சாளுக்கியர்களின் வரலாறு தொடர் பான செய்திகள் உள்ளன. வாதாபி சாளுக்கியர்கள் வரலாறு தொடர்பான செய்திகளைக் கூறும் நம்நாட்டு நூல் எதுவும் இல்லை யெனினும், அவர்கள் ஆட்சிபற்றிய சில சுவையான செய்திகளைச் சீனப்பயணியும், புத்த தர்ம வல்லுநருமான யுவான் சுவாங்கின் குறிப்புகளிலிருந்து நாம் பெற முடிகின்றது. ஹர்ஷரின் ஆட்சிக் காலத்தில் வட இந்தியாவின் பல்வேறு பகுதிகளில் பயணம் செய்து விட்டு, கி. பி. 641-42ல் அவர் தக்காணத்திற்கு வந்தார் தக்காணத்திலும், தென்னிந்தியாவிலும் பலமாதங்கள் தங்கித் தான் கண்டதையும் கேட்டதையும் தன்னுடைய குறிப்புகளில் கூறியுள்ளார். அவர் தக்காணத்திற்கு வந்த பொழுது மேலைச் சாளுக்கியர்கள் ஆதிக்கம் இரண்டாம் புலிகேசியின் ஆட்சியில் உச்ச நிலையை அடைந்திருந்தது. மேலைச்சாளுக்கிய அரசில் சில மாதங்கள் தங்கி இரண்டாம் புலிகேசியைப் பற்றியும், அப்பகுதி மக்கள் பற்றியும் அவர் பல சுவையான செய்திகளைக் கூறியுள் ளார். மேலைச் சாளுக்கியப் பேரரசை அவர் மொஹொலாசா (Moho-la-cha-Mahararhtra) என்று குறிப்பிடுகின்றார். மேற்குப் பகுதியில் ஓர் ஆற்றை எல்லையாகக் கொண்டிருக்கும் நகரம் அப் பேரரசின் தலைநகரம் என்று அவர் கூறுகின்றார்.[1] அவருடைய குறிப்புகளிலிருந்து சாளுக்கியப் பேரரசு சுபிட்ச நிலையிலிருந்தது

[1] இந் நகரம் நாசிக் நகரமாகவோ, எல்லோராவாகவோ இருக்கக் கூடு மென்றும், அவருடைய வருணனைகளிலிருந்து அந்நகரம் வாதாபியாக இருக்க முடி யாதென்றும் வரலாற்றறிஞர்கள் கருதுகின்றனர். வாதாபி முதல் தலைநகரமாகவும் நாசிக் அல்லது எல்லோரா மேலைச் சாளுக்கியர்களின் மாற்றுத் தலைநகரமாகவும் இருந்திருக்கக் கூடும்.

என்பது தெரிகிறது. சாளுக்கிய நாட்டு மக்கள் தைரிய மிக்கவர் களாகவும், போர் ஆற்றல் மிக்கவர்களாகவும், நேர்மையானவர் களாகவும் இருந்தனர் என்று அவர்களைப் புகழ்ந்து கூறுகின்றூர். க்ஷத்திரிய வகுப்பைச் சேர்ந்த புலோகிஷி (Pu-lo-ki she) என்பவர் தான் அப்பேரரசின் அரசர் என்றும், மக்கள் யாவரும் அவருக்குக் கீழ்ப்படிந்து நடக்கின்றனர் என்றும் கூறுகிறூர். வட இந்தியாவில் வெற்றிக் கொடி நாட்டிய ஹர்ஷர், தன் ஆதிக்கத்தைத் தென்னிந்தியா மீதும் ஏற்படுத்தும் நோக்கத்துடன் தக்காணத் தின் மீது படையெடுத்த செய்தியும், மேலைச் சாளுக்கிய அரசர் இரண்டாம் புலிகேசியுடன் போரிட்டு அவர் தோல்வியடைந்த செய்தியும் யுவான் சுவாங் குறிப்பிடும் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த செய்திகளாகும்.

தபரி (Tabari) என்ற முஸ்லீம் வரலாற்றறிஞர் இரண்டாம் புலிகேசிக்கும் பாரசீக அரசர் இரண்டாம் குஸ்ரு (Khusru II) வுக்கு மிடையே நிலவிய நட்புறவைக் குறிப்பிடும் பொழுது, இரண்டாம் புலிகேசி அந்தப் பாரசீக அரசனுடைய அவைக்குத் தன் தூதுவன் ஒருவனை அனுப்பிய செய்தியைக் கூறுகின்றூர். அவருடைய குறிப்புகளில் புலிகேசியை அவர் 'பிரமேஷா' (Prmesha) என்று குறிப்பிடுகிறூர்.[1] கி. பி. ஒன்பதாம் நூற்றூண் டின் இடைப் பகுதியில் இந்தியாவிற்கு வந்த சுலைமான் என்ற அரேபிய முஸ்லீம் வணிகரின் குறிப்புகள் ராஷ்டிரகூடர்களைப் பற்றிய சில செய்திகளை நமக்குக் கூறுகின்றன. உலகத்தின் வலிமை மிக்க நான்கு அரசுகளில் ராஷ்டிரகூட அரசும் ஒன்று என்று இவர் கூறுகின்றூர். அரேபியா, சீனு, ரோம். ஆகியவை மற்ற மூன்று அரசுகளாகும். இவருடைய குறிப்புகளில் காணப் படும் 'பல் ஹாரா' (Balhara) என்னும் சொல் 'வல்லபராஜா' என்ற வடமொழிச் சொல்லின் திரிபு என்றும் வல்லபராஜா என்ற பட்டப் பெயரை ராஷ்டிரகூட மன்னர்கள் சூடிக் கொண்ட தால் சுலைமான் தன் குறிப்புகளில் 'பல்ஹாரா' என்று ராஷ்டிர கூடர்களைத்தான் குறிப்பிடுகின்றூர் என்றும் நாம் கருதுவது பொருத்தமுடையதாகும். பத்தாம் நூற்றூண்டைச் சேர்ந்த அல் மசூதி (Al Masudi) என்ற அரேபிய முஸ்லீம் பயணியின் நூலில் ராஷ்டிரகூடப் பேரரசைப் பற்றியும் அதன் தலைநகரமான மான்ய கேடத்தைப் பற்றியும் குறிப்புகள் காணப்படுகின்றன.

[1] இரண்டாம் புலிகேசிக்குப் 'பரமேஸ்வரன்' என்ற மற்றெரு பெயரும் உண்டு என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

தக்காண வரலாற்றிற்கு நாணயங்கள் மூலமாகக் கிடைக்கும் சான்று மிகக் குறைவானதே. தக்காணத்தில் பழங்காலத்து நாணயங்கள் மிகக் குறைவாகவே கிடைத்துள்ளன. அவற்றில் காணப்படும் பொறிப்புகள் மூலம் நமக்குக் கிடைக்கும் செய்தியும் மிகக் குறைவானதே. நாம் ஆராயும் காலப் பகுதியைச் சேர்ந்த தக்காண நாணயங்கள் பொன்னாலும், வெள்ளியினாலும் ஆனவை மேலைச்சாளுக்கியர்கள் காலத்து நாணயங்கள் எதுவும் நமக்குக் கிடைக்கவில்லை.[1] கீழைச் சாளுக்கிய மன்னர்களின் தங்க, வெள்ளி நாணங்கள் சில கிடைத்துள்ளன. 'சாளுக்கிய சந்திர' என்ற வாசகம் பொறிக்கப்பட்ட சில தங்க நாணயங்கள் அரக்கான், சயாம் பகுதிகளில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. 'சாளுக்கிய சந்திர' என்பது கீழைச் சாளுக்கிய மன்னன் முதலாம் சக்தி வர்மனின் பட்டப் பெயராகும். எனவே இந்த அரசன் காலத்தில் வேங்கி சாளுக்கியர்களுக்கும் தென் கிழக்கு ஆசிய நாடுகளுக்கு மிடையே வர்த்தகத் தொடர்பு இருந்தது என்ற செய்தியை நாம் இதன் மூலம் தெரிந்து கொள்ளலாம்.[2] கீழைச் சாளுக்கிய அரசை நிறுவிய விஷ்ணுவர்த்தனனால் வெளியிடப்பட்ட, சிங்க உருவமும் 'விஷம சித்தி' என்னும் பட்டப் பெயரும் பொறிக்கப் பட்ட மட்ட வெள்ளியினாலான நாணயம் ஒன்று நமக்குக் கிடைத் துள்ளது. கீழைச் சாளுக்கியர்களின் காலத்தை மிக உறுதியாக நிர்ணயம் செய்வதற்கு இது பேருதவியாக இருக்கின்றது.[3] மேலே கூறப்பட்ட அரசர்களால் வெளியிடப்பட்ட நாணயங்கள் பெரும் பாலும் உயர் மதிப்புள்ள தங்கம், வெள்ளி போன்ற உலோகங்களால் செய்யப்பட்டவையாதலால், அவை வருங் காலத்து ஆராய்ச்சியாளர்களுக்குக் கிடைக்காமல் மறைந்து விட்டன போலும்.

**கி. பி. 600க்கு முற்பட்ட தக்காண வரலாறு :**

கி. பி. 600லிருந்து தக்காணத்தின் வரலாற்றைப் புரிந்து கொள்ள, கி. பி. 600க்கு முற்பட்ட தக்காணத்தின் வரலாற்றுப் பின்னணி இன்றியமையாததாகும். அவ் வரலாற்றை இங்குச் சுருக்கமாக ஆராய்வது பொருத்தமுடையதாகும்.

ஆரியர்கள் வருகைக்குப் பிறகுதான் தக்காண வரலாறு தொடங்குகிறது. சுமார் கி.மு. 1000 த்தில் தொடங்கிய ஆரியரின்

[1] பொன்னாலான நாணயங்களுக்கு 'வராகன்' என்று பெயர். இப் பெயர் சாளுக்கியர்களின் பன்றிக் கொடிச் சின்னத்திலிருந்து (வராகம் - பன்றி) வந்திருக்க லாம். சாளுக்கிய நாணயங்களில் பன்றிக் கொடி 'பொறிக்கப்பட்டிருக்கக் கூடும்'

[2] N. Venkatararamanayya - The Eastern Chalukyas of Vengi, P. 4

[3] K. A. Nilakanta Sastri - Op, cit P. 20

தென் திசை இயக்கம் கி. மு. நான்காம் நூற்றாண்டிற்கு முன்பே முடிவுற்றது. தக்காணம் ஆரிய மயமாக்கப்படுவதற்குக் காரணமாக இருந்தவர் அகத்திய முனிவர் ஆவார். இதிகாசங்களிலும், புராணங்களிலும் காணப்படும் அகத்தியரைப்பற்றிய பல கட்டுக்கதைகள், தென்னிந்தியாவை ஆரியமயமாக்கி, ஆரிய நாகரிகத்தை அங்குப் பரப்பிய வரலாற்று நிகழ்ச்சியின் அடிப்படையில் புனையப்பட்டவையாகும். வட இந்தியாவிலிருந்து தக்காணத்தின் மீது படையெடுத்து வந்த ஆரியர்கள் மெதுவாகத் தங்கள் மொழியான சமஸ்கிருதத்தையும். தங்களது பண்பாட்டையும் அங்கே புகுத்தினார்கள். அங்கு வாழ்ந்துகொண்டிருந்த மக்கள் பேசிவந்த மொழியும், ஆரியர்களால் புகுத்தப்பட்ட சமஸ்கிருத மொழியும் கலந்து பல கிளை மொழிகள் தோன்றின. தக்காண மக்களின் கலாச்சாரத்தில் ஆரியப் பண்பாட்டின் கூறுகள் மேலோங்கியிருந்தன.

தக்காணம், நந்தர்கள், மௌரியர்கள் ஆட்சிக்குட்பட்டிருந்தது என்பதற்குப் பல கல்வெட்டுச் சான்றுகள் உள்ளன. நந்தர்களின் ஆட்சி தக்காணத்திலும் பரவியிருந்தது என்பதற்குக் காரவேலனின் கி.மு. இரண்டாம் நூற்றாண்டு ஹாதிகும்பா கல்வெட்டு, சான்று பகர்கின்றது. கி.பி. பத்தாம், பதினொன்றும் நூற்றாண்டுகளைச் சேர்ந்த கன்னடப் பொறிப்புகள் குந்தள நாடு நந்தர்கள் ஆட்சிக்குட்பட்டிருந்த செய்தியைப் பற்றிய நினைவுகளைப் பாதுகாத்துவைத்திருக்கின்றன. தக்காணத்தில் மாஸ்கி, கொப்பால், சித்தாபுரம் போன்ற இடங்களில் கிடைத்துள்ள அசோகரின் கல்வெட்டுகளின் அடிப்படையில், மௌரியப் பேரரசின் தெற்கெல்லையை நாம் நிர்ணயிக்கலாம். அதுவே நந்தர்களுடைய பேரரசின் தெற்கெல்லையாகவும் இருந்திருக்கவேண்டும். நாடு பிடிப்பதற்காக மௌரியர்கள் தென்னிந்தியாவின் மீது படையெடுத்தார்கள் என்பதற்குத் தெளிவான சான்றுகள் ஏதுமில்லை. (அசோகரின் கலிங்கப் படையெடுப்பைத் தவிர) நந்தர்களை வீழ்த்திய மௌரியர்கள், அவர்களுடைய ஆட்சிக்குட்பட்ட வட இந்தியப் பகுதிகளுக்கு அரசர்களானதுபோல, நந்தர்கள் ஆட்சிக்குட்பட்டிருந்த தக்காணப் பகுதிகளுக்கும் அரசர்களானார்கள் என்று கொள்ளலாம். சந்திரகுப்த மௌரியன் தன்னுடைய அரச பதவியைத் துறந்து பத்ரபாகு என்ற சமணத் துறவியுடன் தெற்கு நோக்கி வந்து சிரவணபெல்கோலாவில் வாழ்ந்தான் என்று சமண சமய மரபுச் செய்திகள் கூறுகின்றன.[8] சிரவண பெல்கோலாவிலும், அதற்கருகிலும் கிடைத்துள்ள பொறிப்புகள் இதை உறுதிப்படுத்தும் வகையில் சந்திரகுப்த மௌரியனையும்,

பத்ரபாகுவையும் குறிப்பிடுகின்றன. சீரங்கப்பட்டணத்திற் கருகில் கண்டுபிடிக்கப்பட்ட ஏறத்தாழ கி. பி. 900ஐச் சேர்ந்த இரண்டு பொறிப்புகள் சிரவணபெல்கோலாவையும், சந்திர குப்தனையும் தொடர்புபடுத்திப் பேசுகின்றன. வட இந்தியா விற்கும், தக்காணத்திற்கும் மௌரியர்கள் காலத்தில் வியாபாரத் தொடர்பு இருந்தது என்பது அர்த்த சாஸ்திரத்தில் கௌடில்ய ருடைய குறிப்புகளிலிருந்து தெரிகிறது. வைரம் முதலிய விலை யுயர்ந்த மணிக்கற்களும், பொன்னும், முத்தும், சங்கும் அங்கு ஏராளமாகக் கிடைக்கிறதென்றும், அவற்றை வட இந்திய வணிகர்கள் வாங்கி வருவார்கள் என்றும் அர்த்த சாஸ்திரம் கூறுகிறது. வட தக்காணத்திலிருந்த ராதிகர்கள், போஜர்கள். பிட்டனிகர்கள், தென் தக்காணத்திலிருந்த ஆந்திரர்கள்—ஆகிய யாவரும் அசோகரின் ஆட்சிக்குட்பட்டிருந்தவர்கள். தோசலி, சுவர்ணகிரி ஆகிய இரு இடங்களிலிருந்தும் அசோகரின் அரசப் பிரதிநிதிகள் தக்காணத்தை ஆண்டனர்.

மௌரியப் பேரரசின் வீழ்ச்சிக்குப் பின்பு தக்காணத்தில் சாத வாகனர் ஆட்சி தோன்றியது. சுமார் கி. மு. 230ஆம் ஆண்டில் தோன்றிய அந்த ஆட்சி கி.பி. மூன்றும் நூற்றுண்டின் தொடக்கம் வரை நீடித்திருந்தது. சாதவாகனர்களின் செல்வாக்கு உச்ச நிலையை அடைந்திருந்த காலத்தில் அவர்கள் ஆதிக்கம் தக்காணம் முழுவதும் மட்டுமன்றி வட இந்தியாவிலும் நெடுந்தூரம் பரவி யிருந்தது. இன்றைய ஆந்திர, கர்நாடக, மகாராஷ்டிர மாநிலங்கள் யாவும் அன்றைய சாதவாகனப் பேரரசிற்குட்பட்டிருந்தன. சிமுகன் என்பவனால் தொடங்கப்பட்ட சாதவாகன ஆட்சி கௌதமிபுத்ர சாதகர்ணி (சுமார் கி. பி. 80-104), ஸ்ரீ யக்ஞ சாதகர்ணி (சுமார் கி.பி. 170-199) ஆகியோர் ஆட்சியில் புகழின் உச்ச நிலையை அடைந்தது. சாதவாகனர் ஆட்சியில் தக்காணம் முழுவதும் ஒன்றுபடுத்தப்பட்டு, ஒரு குடையின் கீழ்க்கொண்டு வரப்பட்டது. சாதவாகனப் பேரரசு வீழ்ச்சியடைந்தபொழுது அதன் எல்லைக்குட்பட்ட பகுதிகளை இட்சுவாகுக்களும் (Ikshvakus) ஆபிரர்களும் (Abhivas) சுட்டுகளும் (Chutus) தங்களுக்குள் பங்கிட்டுக்கொண்டார்கள். இட்சுவாகுக்கள் ஆந்திரப் பகுதியை யும், சுட்டு வமிசத்தவர்கள் மராட்டிய கர்நாடகப் பகுதிகளையும் ஆட்சி செய்தனர். கிருஷ்ணு, குண்டூர் பகுதிகளில் இட்சுவாகுக் களின் பொறிப்புகளும், சித்தலதுர்க்கம், கன்ஹேரி, பனவாசி, மலவல்லி போன்ற இடங்களில் சுட்டு வமிசத்தினரின் பொறிப்பு களும் கிடைத்துள்ளன. இட்சுவாகு மரபினர் ஆட்சிக்குப் பின்பு ஆந்திர நாட்டைப் பிரகத் பலாயனர்களும், சாலங்கயானர்களும்,

விஷ்ணுகுண்டினர்களும் ஆட்சி செய்தார்கள். தக்காணத்தின் தென்மேற்குப் பகுதியில் சுமார் கி.பி. நான்காம் நூற்றுண்டின் இடைப் பகுதியில் கடம்பர்கள் என்ற மரபினர் தோன்றி மயூர சர்மனின் தலைமையில் பல்லவர்களின் ஆதிக்கத்தை எதிர்த்துப் போராடிப் பனவாசியை மையமாகக்கொண்ட ஒரு சுதந்திர அரசை நிறுவினுர்கள். கி.பி. ஆறும் நூற்றுண்டின் இடைப்பகுதி வரை ஆண்ட கடம்ப வம்சத்தின் முக்கிய அரசர்களுள் காகுத்த வர்மன் குறிப்பிடத்தக்கவன். மேலைச் சாளுக்கிய அரசன் முதலாம் புலிகேசியின் மகனுன கீர்த்திவர்மன் பனவாசியின் மீது படையெடுத்து வெற்றி கண்டபொழுது, கடம்பர்களின் மூத்த கிளையைச் சேர்ந்த இரண்டாம் கிருஷ்ணவர்மனே அவனுடைய மகன் அஜவர்மனே அங்கு ஆட்சி செய்திருக்கவேண்டும். இவ்வாருக மேலைச் சாளுக்கியர்கள் எழுச்சி கடம்பர்கள் வீழ்ச்சிக்கு வழிகோலியது.

கி.பி. நான்காம், ஐந்தாம் நூற்றுண்டுகளில் பீரார் பகுதியை ஆண்டுகொண்டிருந்த வாகாடகர்கள் தக்காணத்தின் அரசியலிலும், பண்பாட்டிலும் ஒரு முக்கிய இடத்தைப் பெறுகிருர்கள். சமகாலத்து அரச மரபுகளான குப்தர்கள், விஷ்ணுகுண்டினர்கள், கடம்பர்கள் போன்றவர்களுடன் அவர்கள் அரசியல் தொடர்புகளையும், திருமணத் தொடர்புகளையும் கொண்டிருந்தனர். அஜந்தாவில் முன்பே இருந்த சிற்பங்கள், ஓவியங்கள் ஆகியவற்றோடு இன்னும் பல சிற்பங்களைச் செதுக்குவதற்கும், ஓவியங்களை வரைவதற்கும் வாகாடகர்கள் பேராதரவு தந்தார்கள். சாதவாகனப் பேரரசின் வீழ்ச்சியையும் சாதவாகனர்களோடு தொடர்ந்து போர் செய்துகொண்டிருந்ததனுல் மேற்குச் சத்திரபர்கள் தங்கள் வலிமையிழந்து இருந்த நிலையையும் பயன்படுத்திக்கொண்டு வாகாடகர்கள் கி.பி. மூன்றும் நூற்றுண்டின் இறுதியில் தங்கள் ஆட்சியை நிறுவினுர்கள். விந்தியசக்தி என்பவன் வாகாடக அரசை நிறுவியவன். முதலாம் பிரவரசேனன், ருத்ரசேனன், இரண்டாம் பிரவரசேனன், நரேந்திரசேனன் ஆகியோர் இம்மரபின் மற்ற முக்கிய அரசர்கள் ஆவர். சுமார் கி.பி. 550ல் வாகாடகர்கள் ஆட்சி பாதாமிச் சாளுக்கியர்களால் வீழ்த்தப்பட்டது. வாகாடக அரசன் ஹரிவர்மனின் சிற்றரசனுக இருந்த மேலைச் சாளுக்கிய வம்சத்து முதலாம் புலிகேசி வாகாடக ஆதிக்கத்திலிருந்து தன்னை விடுவித்துக்கொண்டு வாதாபியில் சுதந்திர அரசை நிறுவினுன்.


பாதாமி (மேலைச்) சாளுக்கிய வம்சம்
முதலாம் ஜெயசிம்மன் (கி. பி. 500-520)
ரணராகன் (கி .பி. 520-540)
முதலாம் புலிகேசி (கி.பி. 540-566)
பூகவர்மன்
முதலாம் கீர்த்திவர்மன் (கி. பி. 566-67—597-98)
மங்கலேசன் (கி.பி. 597-98—610-11)
இரண்டாம் புலிகேசி (கி.பி. 610-11—642)
குப்ஜவிஷ்ணுவர்த்தனன்
ஜெயசிம்மன்
சந்திராதித்யன்
ஆதித்யவர்மன்
முதலாம் விக்ரமாதித்யன் (கி.பி. 655-681)
ஜெயசிம்மன்
அம்பேரன்
வினயாதித்யன் (கி.பி. 681-696)
விஜயாதித்யன் (கி.பி. 696-733)
இரண்டாம் விக்கிரமாதித்யன் (கி.பி. 733-745)
இரண்டாம் கீர்த்திவர்மன் (கி.பி. 745-757)

# 2. வாதாபி (மேலைச்) சாளுக்கியர்கள்

## (கி. பி. 500 - 757)

கி. பி. 500 வரை தக்காணத்தில் நீடித்திருந்த கடம்பர்களின் ஆட்சிக்கு ஒரு முடிவுகட்டிச் சாளுக்கிய ஆதிக்கத்தை நிலைநாட்டிய பெருமை மேலைச் சாளுக்கிய முதலாம் புலிகேசியைச் சாரும். இரண்டாம் கிருஷ்ணவர்மன் என்ற கடைசி கடம்ப அரசரைப் போரில் தோற்கடித்து, இதுவரை அவன் ஆதிக்கத்திற்குட்பட்டிருந்த சாளுக்கிய அரசை ஒரு சுதந்திர அரசாக நிறுவியது முதலாம் புலிகேசியின் சாதனையாகும். இவ்வாறு கடம்பர்களின் நேர் வாரிசுகளான சாளுக்கியர்களின் ஆட்சி தக்காணத்தில் ஏற்பட்டது, அதன் அரசியல், கலாச்சார வரலாற்றில் ஒரு புதுச் சகாப்தத்தைத் தொடங்கியது என்று கூறலாம். தனித்தனியாக இயங்கிக் கொண்டிருந்த பலவீனமான சிறு சிறு அரசுகளின் சகாப்தம் முடிவடைந்து வலிமைமிக்க, கட்டுக் கோப்புடன் விளங்கிய நீடித்த பேரரசுகளின் தோற்றம்தான் இந்தப் புதுச் சகாப்தத்தின் சிறப்புத்தன்மை என்று கருதலாம். இவ்வாறு முதலில் தோன்றிய சாளுக்கியர்கள் வரலாற்றில் மேலைச்சாளுக்கியர்கள் அல்லது பாதாமி (வாதாபி) சாளுக்கியர்கள் என்றழைக்கப்படுகின்றனர். இவர்களுக்குப் பிறகு இதே மரபைச் சேர்ந்த வேறு கிளையினர்தான் பிற்காலத்தில் ஆந்திரப் பகுதியில் கீழைச் சாளுக்கியர் (வேங்கி) என்ற பெயருடனும், வெமுலவாடம் (Vemulavada–Hyderabad) குஜராத் போன்ற பகுதிகளிலும், தக்காணத்திலேயே மீண்டும் கல்யாணியைத் தலைநகராகக் கொண்டும் ஆட்சி புரிந்தார்கள். இந்த நூலில் நாம் மேலைச் சாளுக்கியர்கள், கீழைச் சாளுக்கியர்கள் ஆகியவர்களின் வரலாற்றை மட்டும் சற்று விரிவாக அடுத்து வரும் பக்கங்களில் ஆராயப் போகிறோம்.

சாளுக்கியர்கள் யார்? பாதமிச் சாளுக்கியர்களின் பொறிப்புகள் இவர்கள் வம்சத்தை 'சள்கியா' (Chalkya) 'சளிக்யா' (chalikya) 'சளுக்கியா' (Chalukya) என்ற வெவ்வேறு சொற்களின் மூலம் குறிப்பிடுகின்றன. பிற்காலத்தில் தக்காணத்தை ஆண்ட இவர்களின் கிளைக் குடும்பங்களின் பொறிப்புகளில் 'சாளுக்கிய' என்ற பெயர் காணப்படுகிறது. இச் சொல்லின்

சரியான பொருள் என்ன என்பது தெளிவாக விளங்கவில்லை. சாளுக்கியர் என்ற சொல் 'சளிகி' அல்லது 'சளுகா' என்றழைக்கப் பட்ட ஒருவரின் பெயரிலிருந்து பெறப்பட்ட சொல்லாக இருக்கக் கூடும். இதுபோன்ற பெயர் பண்டைய தக்காணத்தில் வழக் கிலிருந்தது என்பதற்கு கி. பி. மூன்றும் நூற்றுண்டு நாகார்ஜுன கொண்டா பொறிப்பு ஒன்று சான்று கூறுகின்றது. இட்சுவாகு அரசனுன வீரபுருஷதத்தனின் சேனுதிபதியாக ஸ்கந்த சளிகி ரெம் மனகா (Skanda Chalikiremmanaka-ஸ்கந்த சளிகி என்பவனு டைய மகனுன ரெம்மனகா என்று இது பொருள்படும்.) பணி புரிந்தான் என்று இப் பொறிப்பு கூறுகிறது. இந்த ஸ்கந்த சளிகி என்பவன்தான் பிற்காலச் சாளுக்கியர்களின் முன்னேர்களில் ஒரு வனுக இருக்க வேண்டும். இதைப்பற்றித் திட்டவட்டமாக நாம் எதையும் கூறமுடியாத நிலையிலிருக்கின்றேம். ஏனெனில் இந்த ஸ்கந்தசளிகி என்பவன் வாசிதிபுத்திரன் (Vasithibutra) என்று அழைக்கப்படுகின்றுன். ஆனுல் மேலைச் சாளுக்கியர்களோ ஹாரீதிபுத்திரர்கள் (Haritiputro) என்று அழைக்கப்படுகின்றனர். சாளுக்கியர்களுக்கும் இந்த ஸ்கந்தசளிகி என்பவனுக்கும் தொடர்பு உண்டா என்பதைப்பற்றி நாம் உறுதியாகக் கூற இயலாவிட்டாலும், பிந்தைய சாதவாகன ஆட்சியிலும் அவர் களுக்குப்பின் ஆண்டவர்கள் காலத்திலும், அதிகாரிகளாகப் பணி புரிந்து தக்காண வரலாற்றில் முன்னணிக்கு வந்தவர்கள்தான், சாளுக்கியர்கள் என்பதில் ஐயப்பாடு ஒன்றும் இல்லை. இவர்கள் நம் நாட்டவர்கள்தான் என்பது பற்றியும் சிறிதும் ஐயம் இல்லை. தக்காணத்தில் குந்தலம் (Kuntala) என்றழைக்கப்பட்ட கர்நாட கப் பகுதியைச் சேர்ந்தவர்கள் இவர்கள். கன்னடம் இவர்களு டைய தாய் மொழி ஆகும். சாளுக்கியர்களைப்பற்றிய குறிப்பு ஒன்று தமிழ் இலக்கியத்தில் காணப்படுகின்றது. கி. பி. 800ஆம் ஆண்டைச் சேர்ந்த திவாகரம் என்னும் தமிழ் நிகண்டு கேழல் கொடியைச் சின்னமாகக் கொண்ட சாளுக்கை வேந்தர் வேள் புலம் என்னும் பகுதியை ஆண்டனர் என்ற செய்தியைக் கூறு கிறது.[1] ஹூணர்கள் இந்தியாவின் மீது படையெடுத்து வந்த பொழுது அவர்களுடன் இந்தியாவில் வந்து குடியேறிய அந்நிய இனத்தைச் சேர்ந்தவர்கள் சாளுக்கியர்கள் என்ற சில அறிஞர் களுடைய கருத்தை ஏற்றுக் கொள்ளுவதற்குப் போதுமான ஆதாரங்கள் இல்லை. இந்தியாவின் வேறு பகுதிகளிலிருந்து கர்நாடகப் பகுதியில் குடிபுகுந்தவர்கள் சாளுக்கியர்கள் என்ற கருத்தும் ஏற்புடையதன்று. தக்காணத்தை இவர்களுக்கு முன் ஆண்ட கடம்பர்களின் அரசியல், கலாச்சார மரபுகளையே இவர்கள்

[1] Yazdani (ed.) - The Early History of the Deccan, P. 205.

பின்பற்றியதாலும், இவர்கள் கன்னடப் பெயர்களையும், பட்டங்களையும் சூட்டிக் கொண்டதாலும், இவர்களின் பொறிப்புகள் கன்னட மொழியில் இருப்பதாலும், கன்னட மொழிக்கும், இலக்கியத்திற்கும் இவர்கள் ஆதரவு அளித்தாலும் இவர்கள் கர்நாடகப் பகுதியைச் சேர்ந்தவர்கள் என்பதும், அந்நியர்கள் அல்லர் என்பதும் சிலருடைய கருத்தாகும்.[1]

கி. பி. 578 ஆம் ஆண்டைச் சேர்ந்த பாதாமிக் கல்வெட்டு ஒன்றில் சாளுக்கியர் தோற்றம் பற்றிய மரபுவழிக் கதை ஒன்று கூறப்பட்டுள்ளது. கார்த்திகேயன் என்னும் முருகக் கடவுளை வழிபடுபவர்கள் என்றும், மாளவ்ய கோத்திரத்தைச் சேர்ந்த ஹாரீதி என்பவரின் பிள்ளைகள் என்றும் தங்கள் வலிமையாலும், விஷ்ணு தங்களுக்கு அளித்த பன்றிக் கொடியின் மூலமும் மற்ற அரசர்கள் எல்லோரையும் அடிபணிய வைத்தவர்கள் என்றும் இவர்களைப்பற்றி இக் கல்வெட்டு கூறுகிறது. கடம்பர்களைப் பற்றியும் ஏறத்தாழ இதே செய்திகள் கூறப்படுவதால், சாளுக்கியர்கள் தங்களுக்கு முன் தக்காணத்தில் ஆதிக்கம் பெற்றிருந்த கடம்பர்களை வென்று அவர்களின் மரபு வழிக்கதைகளையே தாங்களும் பின்பற்றினார்கள் என்று கருதலாம். கி. பி. 612ஆம் ஆண்டைச் சேர்ந்த இரண்டாம் புலிகேசியின் ஹைதராபாத் சாஸனத்தின் மெய்க்கீர்த்தியிலும் இதே செய்திகள் கூறப்பட்டுள்ளன. சாளுக்கியர்கள் ஹாரீதி புத்திரர்கள் என்றும், மாளவ்ய கோத்திரத்தைச் சேர்ந்தவர்களென்றும், கார்த்திகேயக் கடவுளின் அருளால் தொடர்ந்து சுபிட்ச நிலையைப் பெற்றவர்கள் என்றும் விஷ்ணுவின் அருளால் பன்றிச் சின்னத்தைப் பெற்று அதன்மூலம் எல்லா அரசர்களையும் அடிபணிய வைத்தவர்கள் என்றும் இச்சாஸனம் கூறுகின்றது. மேற்கூறிய சாஸனங்களிலிருந்து சாளுக்கியர்கள் கார்த்திகேயன், விஷ்ணு ஆகிய இரு கடவுளர்களையும் வழிபட்டவர்கள் என்பது புலப்படும். இவர்கள் பன்றி இலச்சினையைப் பெற்றதில் ஒரு சிறப்பு இருக்கிறது. அது சாளுக்கிய அரசர்கள் மேற்கொண்ட பணியின் தன்மையை விளக்கும் வகையில் இருக்கின்றது. வராஹ அவதாரத்தில் விஷ்ணு மேற்கொண்ட பணியை ஒத்ததாக இவர்கள் பணி இருந்தது என்பதை இது சுட்டிக்காட்டுகின்றது. விஷ்ணு வராஹ அவதாரத்தில் உலகத்தைத் தீய சக்திகளிடமிருந்து காப்பாற்றியது போலச் சாளுக்கியர்களும், நாட்டில் அறம் ஓங்க, சுபிட்சம் ஏற்பட தீய சக்திகளை ஒழிக்கும் பொறுப்பைத் தாங்கள் ஏற்றுக் கொண்டார்கள் என்பதை இது

[1] P. B. Desai (ed.) - A History of Karnataka: P. 91.

உணர்த்துகின்றது.[1] 'சாளுக்கிய' என்ற சொல்லின் உண்மைப் பொருளை அறியாத காரணத்தினால் பிற்காலச் சாஸனங்களும் இலக்கியங்களும் இச் சொல்லுக்கு விளக்கம் தரும் வகையில் தங்கள் கற்பனையை ஓடவிட்டுப் பல்வேறு வேடிக்கையான கதைகளைக் கூறுகின்றன. சாளுக்கிய என்னும் சொல் 'சுலுகா' (Chuluka) என்னும் வடமொழிச் சொல்லை ஒத்திருப்பதால் அதன் அடிப்படையில் சாளுக்கியர் தோற்றம்பற்றிய சில விசித்திரமான விளக்கங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. சாளுக்கிய அரசன் ஆறும் விக்கிரமாதித்யனின் அவைப் புலவரான பில்ஹணர் தன்னுடைய விக்ரமாங்க சரிதம் என்னும் நூலில் பின்வரும் விளக்கத்தைக் கொடுக்கிறார். கலியுகத்தில் அநீதியையும், நாத்திகத்தையும் ஒழிக்கவல்ல ஒரு தலைவனைத் தந்தருள வேண்டுமென்று இந்திரன் பிரம்மாவை வேண்டிக் கொண்டதற்கிணங்க பிரும்மா தன் மாலைக் கடமைகளைச் செய்யும் பொழுது தன் உள்ளங்கைக் குழியிலிருந்து ஒரு வீரனைத் தோற்றுவித்தார் என்றும் அவனுடைய வம்சம் சாளுக்கிய வம்சம் என்றழைக்கப்பட்டது என்றும் கூறுகிறார்.[2] கதாயுத்தம் (Gadayaddham) என்னும் கன்னடச் செய்யுள் நூலின் முன்னுரையில் அதன் ஆசிரியர் அயோத்தியின் அரசன் சத்யாசிரையன் என்பவனைப் பற்றியும் அவன் வழித்தோன்றல்களில் ஒருவனான ஜயசிம்மனைப் பற்றியும் கூறுகிறார். இந்த ஜயசிம்மன்தான் இராஷ்டிரகூடர்களை முறியடித்துச் சாளுக்கிய முடியாட்சியைத் தக்காணத்தில் ஏற்படுத்தியவன் என்று இந் நூல் கூறுகிறது. இதே கருத்து கல்யாணி சாளுக்கிய அரசனான ஐந்தாம் விக்ரமாதித்யனின் கௌதம் (Kautham grant) சாஸனத்திலும் காணப்படுகிறது. சாளுக்கிய வம்சத்தைச் சேர்ந்த ஐம்பத்தொன்பது அரசர்கள் வடக்கே அயோத்தியில் ஆட்சி செய்த பிறகு தெற்கு நோக்கிக் குடிபெயர்ந்து வந்து தக்காணத்தில் தங்கள் ஆட்சியை ஏற்படுத்தினார்கள் என்றும் பதினான்கு மன்னர்கள் ஆண்ட பிறகு இவர்கள் ஆதிக்கம் தற்காலிகமாக மறைந்தது என்றும், ஜயசிம்மன் இவர்கள் புகழை மீண்டும் ஏற்படுத்தினான் என்றும் இச் சாஸனம் கூறுகிறது. கி. பி. பதினோராம் நூற்றாண்டுக் கீழைச் சாளுக்கியப் பொறிப்புகள் சாளுக்கியர்களை க்ஷத்திரியர்களென்றும், சந்திர குலத்தில் தோன்றியவர்களென்றும், இவ்வம்சத்து ஐம்பது அரசர்கள் அயோத்தியை ஆண்ட பிறகு, அவர்களின் வழித் தோன்றல் ஒருவன் தக்காணத்தில் சாளுக்கியர் ஆதிக்கத்தை

[1] G. Yaydani (ed.) - The Early History of the Deccan. P. 206.

[2] 'சுலுகா' (Chuluka) என்னும் வடமொழிச் சொல்லிற்கு உள்ளங் கைகளைச் சேர்த்து வைப்பதால் ஏற்படும் 'குழி' என்று பொருள்.

ஏற்படுத்தினன் என்றும் கூறுகிறது.[1] சாளுக்கியர்களின் தோற்றம் அவர்கள் முந்திய வரலாறு பற்றிய மேற்கூறிய மரபுகள் வரலாற்றிற்குப் பயன்படாத புராணக் கட்டுக்கதைகளின் கதம்பம் என்பது வரலாற்றறிஞர் பெரும்பான்மையோரின் கருத்தாகும். புராணக்கதைகளுக்கு வரலாற்று அடிப்படையில் விளக்கம் தரும் ஒரு முயற்சி என்று இதைக் கருதலாம். கல்யாணி சாளுக்கியர்களாலும் வேங்கிச் சாளுக்கியர்களாலும் போற்றப்பட்டு வந்த மரபுகளிடையே பல வேறுபாடுகள் காணப்பட்டாலும் இவர்கள் வட இந்தியாவிலிருந்து வந்தவர்கள் என்ற ஒரு கருத்தையே இவ்விரு மரபுகளும் வலியுறுத்துகின்றன. இவர்கள் வட இந்தியாவிலிருந்து வந்தவர்கள் என்பதை மறுத்துக் கூறுவதற்குப் போதுமான சான்றுகள் இல்லை. இவர்கள் தங்களை க்ஷத்திரிய வகுப்பைச் சேர்ந்தவர்கள் எனக் கூறிக் கொள்கின்றனர். கி. பி. ஆறும் நூற்றுண்டில் ஆண்ட முதலாம் புலிகேசியின் பாதாமிப் பொறிப்பில் அவ்வரசன் தன்னை அஸ்வமேதம் போன்ற வேள்விகளைச் செய்தவன் என்று கூறிக் கொள்கிறான். அவனுடைய மகன் மங்கலேசனின் நெரூர் செப்பேடுகள் அவன் அஸ்வமேதம், அக்னிஸ்தோமம், வாஜபேயம் போன்ற வேள்விகளைச் செய்தவன் என்று குறிப்பிடுகின்றன. இதுபோன்ற வேள்விகளை இருபிறப்பாளர்களாகக் கருதப்படும் (Dvija) பிராம்மணர்கள், க்ஷத்திரியர்களைத் தவிர வேறு எவ் வகுப்பினரும் செய்ய முடியாது என்பதால் இவர்கள் க்ஷத்திரியர்களாகத்தான் இருக்க வேண்டும் என்று கருதப்படுகிறது. கி,பி. ஏழாம் நூற்றுண்டில் மேலைச் சாளுக்கிய அரசிற்கு வருகை புரிந்த சீனப் பயணி யுவான்சுவாங் அதன் அரசன் இரண்டாம் புலிகேசி க்ஷத்திரிய வகுப்பைச் சேர்ந்தவன் என்று திட்டவட்டமாகக் குறிப்பிடுவது இக் கருத்தை உறுதி செய்யும் வகையில் இருக்கிறது.

சாளுக்கியர்களை இராஜபுத்திர இனத்தைச் சேர்ந்த ஒரு பிரிவினர் என்றும் கருதுவோர் உண்டு. கூர்ஜரர் என்ற இராஜபுத்திர வகுப்புடன் நெருங்கிய உறவு கொண்ட ஒரு பிரிவினராக இவர்கள் இருக்கக் கூடும். புலிகேசி என்னும் பெயர் கூர்ஜரர்களிடையேயும் வழக்கிலிருப்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. இவர்கள் தங்களை க்ஷத்திரியர்களாகக் கருதிக் கொண்டாலும், இவர்களுக்கும் பண்டைக்கால க்ஷத்திரியர்களுக்கும் உண்மையி

[1] **N. Venkataramanaypa- Op, cit. P. 6.** விஜயாதித்யன் என்னும் இம் மரபைச் சேர்ந்த அரசன் தெற்கு நோக்கிப் படையெடுத்துச் சென்று திரிலோசன பல்லவன் என்ற அரசனைத் தோற்கடித்துப் போரில் உயிர் துறந்தான். அவன் இறந்த பிறகு அவனுடைய மகன் விஷ்ணுவர்தனன் என்பவன் நர்மதை முதல் ராமேஸ்வரம் வரையிலுள்ள தக்காணத்தின் மீது தன் ஆதிக்கத்தை ஏற்படுத்தினன்.

லேயே தொடர்பு இருந்திருக்கக் கூடுமா என்பது ஐயப்பாட்டிற் குரியது. சாளுக்கியர், கூர்ஜரர் போன்றோர் கி. பி. ஐந்து, ஆறும் நூற்றாண்டுகளில் வடஇந்தியா மீது படையெடுத்து வந்த ஹூணர்கள் போன்ற நாகரிகமற்ற மக்களின் வழித் தோன்றல் களாக இருக்கலாம். இவர்கள் பிற்காலத்தில் இந்தியச் சமூகத் துடன் இணைத்துக் கொள்ளப்பட்டனர், அந்நியர்களாதலால் இவ்விணைப்பிற்கான தகுதியைப் பெறுவதற்கு அவர்கள் தங்களைத் தூய்மைப்படுத்திக் கொள்ள வேண்டியதாயிற்று. அந்நியர்கள் என்ற மாசு நீங்கிய பிறகு அவர்கள் தடையேதுமின்றி இந்தியச் சமூகத்தின் ஓர் அங்கமாக, க்ஷத்திரியர்களாக ஏற்றுக் கொள்ளப் பட்டார்கள். பன்னிரண்டாம் நூற்றாண்டில் ஹிந்திக் கவிஞர் சந்த் என்பவர் வசிஷ்டர் செய்த வேள்விக்குப் பிறகு அவருடைய அக்னி குண்டத்திலிருந்து தோன்றியவர்களே இராஜபுத்திரர்கள் என்று கூறும் மரபு இந்தப் பழக்கத்தின் எதிரொலியாக இருக்க லாம். அதாவது ஹூணர்கள் போன்ற அந்நியர்கள் இந்தியச் சமூகத்துடன் ஒன்றிணைவது சாத்தியமாவதற்குத் தங்களைத் தூய் மைப் படுத்திக் கொள்ளும் சடங்குதான் இவ்வாறு பன்னிரண் டாம் நூற்றாண்டு எழுத்தாளர்களால் குறிப்பிடப்பட்டிருக்க வேண்டும். இதன் அடிப்படையில்தான் இராஜபுத்திரர்கள் தோற்றம் பற்றிய இக்கொள்கை அக்கினி குலக் கொள்கை (Agnikula theory) என்றழைக்கப்படுகிறது.

சாளுக்கியா என்னும் சொல் செலுகியா என்னும் சொல்லை ஒத்திருக்கிறது என்ற அடிப்படையில் சாளுக்கியர்களைச் செலுஸிட் (Selucid) இனத்தவராகவும், தென்னிந்தியாவில் சாளுக்கியர் களுக்கும் பல்லவர்களுக்கும் நடந்த ஆதிக்கப் போட்டியை, யூப்ரடீஸ் டைக்ரீஸ் நதிக் கரையில் செலூஸிட்டுகளுக்கும், பார்த்தியர்களுக்கும் நடந்த போர்களின் தொடர்ச்சியாகவும், சாளுக்கியர்கள் செலூஸிட்டுகளாதலால் அவர்களுடன்போரிட்ட அவர்கள் எதிரிகளான பல்லவர்கள் பார்த்தியர்களாக இருக்க வேண்டுமென்றும் டாக்டர் ரைஸ் என்னும் அறிஞர் ஊகிக்கிறார்.[1]

மேற்கூறிய கருத்துக்கள் யாவற்றையும் ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது சாளுக்கியர்கள் என்போர் கூர்ஜரர் போன்ற இராஜ புத்திரர்களின் ஒரு பிரிவினராக இருக்கக் கூடும் என்பது வரலாற் றறிஞர்கள் பெரும் பான்மையினரால் ஏற்றுக் கொள்ளப்பட்ட கருத்தாகும்.

[1] R. Sathianathier - A Political and cultural History of India Vol. I. P 325.

சாளுக்கிய வம்சத்தின் முந்திய அரசர்களுள் குறிப்பிடத் தக்கவர்கள் ஜயசிம்மனும், அவன் மகன் இரணராகனும் ஆவர். (Jayasimha c. 500-520 A. D; Ranaraga c. 520-540 A. D) கி. பி. ஆறும் நூற்றுண்டின் முற்பகுதியில், பீஜப்பூர் மாவட்டத்தின் பாதாமிப்பகுதியில் வாழ்ந்த இவ்விரு அரசர்களைப் பற்றிச் சாளுக்கியர்களின் சில பொறிப்புகள் குறிப்பிடுகின்றன. வல்லபன், வல்லபேந்திரன் [1] போன்ற பட்டங்களை ஜயசிம்மன் சூட்டிக் கொண்டான். இவ்விரு அரசர்களின் சாதனைகளைப் பற்றி நமக்கு எந்தச் செய்திகளும் கிடைக்கவில்லையாயினும், சாளுக்கிய வம்சத்தின் தோற்றத்தையும், முந்திய வரலாற்றையும் விளக்கும் நோக்கத்துடன் இவர்களைப் பற்றிப் பல கட்டுக்கதைகள் பிற்காலத்தில் தோன்ற ஆரம்பித்தன. இது போலக் கதைகள் இலக்கியங்களிலும், சாளுக்கியர் சாஸனங்களிலும் இடம் பெற்றிருப்பதை நாம் காண முடிகின்றது. எடுத்துக் காட்டாகப் பிற்காலக் கல்யாணிச் சாளுக்கிய அரசன் ஐந்தாம் விக்கிரமாதித்தனின் கௌதம் சாஸனம் (Kautham grant. கி. பி. 1009), ராஷ்டிரகூட அரசன் கிருஷ்ணனின் மகன் இந்திரனை வென்று, ஜெயசிம்மன் சாளுக்கியர் ஆதிக்கத்தை மீண்டும் நிலைநாட்டினன் என்று கூறுகிறது. பாதாமிச் சாளுக்கியர்கள் சாஸனங்களில், ஒன்றில் கூட ஜெயசிம்மனின் இந்தச் சாதனை கூறப்படவில்லை. சாளுக்கியர்கள் ஆட்சி ஏற்பட்ட முதல் நூற்றுண்டு வரலாற்றைக்கூறும், ஐஹோள் கல்வெட்டுகூட (Aihole Inscription) இந்த நிகழ்ச்சியைப் பற்றிக் குறிப்பிடவில்லை. எனவே கௌதம் சாஸனத்தில் விவரிக்கப் பட்டிருக்கும் இந் நிகழ்ச்சி, இரண்டாம் தைலன் என்னும் அரசன் ராஷ்டிர கூடர்கள் ஆதிக்கத்தை ஒழித்து, மீண்டும் சாளுக்கிய ஆதிக்கத்தை ஏற்படுத்திய பிற்கால நிகழ்ச்சி ஒன்றைக் குறிப்பிடுவதாக இருக்கலாம், என்பது வரலாற்றறிஞர்கள் கருத்து. இருப்பினும், முந்திய காலச் சாளுக்கியர்கள், தெற்கு மகாராஷ்டிரப் பகுதியில் ஆண்டு கொண்டிருந்த தங்கள் அண்டை நாட்டினர்களான ராஷ்டிரகூடர்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கக்கூடும் என்று கருதுவதற்கு இடமிருக்கின்றது. ராஷ்டிர கூட அரசன் அபிமன்யுவின் படைத் தலைவனை ஜயசிம்மன் என்பவன் இந்தச் சாளுக்கிய ஜெயசிம்மனாக இருக்கக் கூடும் என்ற சில வரலாற்றறிஞர் கருத்து, இந்த ஊகத்தை உறுதிப்படுத்தும் வகையிலிருக்கிறது. [2]. மேற்கூறியவை தவிர வரலாற்றிற்குப் பயன்

[1] இந்தப் பட்டங்கள் சாளுக்கிய அரசர்கள் அனைவரும் சூட்டிக்கொண்ட ஸ்ரீபிரிதிவி வல்லபன் என்ற பட்டத்தின் சுருக்கமாகும்.

[2] R. C. Majumdar and others: History and culture of the Indian People. - The Classical Age. Vol. III P. 229.

படும் எந்தச் செய்தியையும் முதல் இரண்டு சாளுக்கியர்கள் பற்றி நாம் அறிய முடியவில்லை.

**முதலாம் புலிகேசி :**

(கி. பி. c-535-566). பாதாமிச் சாளுக்கிய வம்ச அரசை நிறுவியவன் முதலாம் புலிகேசி என்பவன். புலிகேசி என்பது புலி என்ற கன்னடச் சொல்லும் கேசி என்ற வடமொழிச் சொல்லும் சேர்ந்து தோன்றிய சொல்லென்றும் 'புலி முடியோன்' என்பது அதன் பொருளென்றும் டாக்டர் ஃப்ளீட் கருதுகிறார். புலிகேசி என்னும் முழுச் சொல்லும், வடமொழிச் சொல்லே என்றும், 'அரியேறு' என்று அது பொருள்படும் (Pul-Pula-great kesi-lion) என்ற கருத்து மேற்கூறிய கருத்தை விட ஏற்புடையதாக இருக்கின்றது. புலிகேசியின் தகப்பன் ரணராகன், பாட்டன் ஜெயசிம்மன் என்ற செய்தி மங்கலேசனின் கி. பி. 602ஆம் ஆண்டு மஹாகூடம் தூண் கல்வெட்டில் முதல் முதலாகக் காணப்படுகின்றது. கி. பி. 543-44ல் அவன் பாதாமிக்கு அருகிலிருந்த குன்றை ஒரு வலிமைமிக்க அரணாக மாற்றி அமைத்துத் தன் தலைநகராக அமைத்துக் கொண்டான் என்னும் செய்தி அவனுடைய பாதாமிக் கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது. மலப்பிரபா ஆற்றிலிருந்து மூன்று மைல் தொலைவில் எதிரிகளின் தாக்குதலைச் சமாளிப்பதற்கு ஏற்ற ஓர் உயர்ந்த இடத்தில் இந்தக் கோட்டை அமைந்திருந்ததால், போர்த்திற முக்கியம் வாய்ந்த பல நன்மைகளைப் பெற்றிருந்தது. இவன் அசுவமேதம் போன்ற வேள்விகளைச் செய்ததையும், வல்லபன், வல்லபேஸ்வரன் போன்ற பட்டங்களைச் சூட்டிக் கொண்டதையும் இக் கல்வெட்டு குறிப்பிடுகிறது. இவன் வாதாபியைத் தன் தலைநகராக ஆக்கிக் கொண்ட செய்தியும் அசுவமேத வேள்வி செய்த செய்தியும், இரண்டாம் புலிகேசியின் ஐஹோள் கல்வெட்டில் காணப்படுகின்றன. வாதாபியில் அரண் அமைத்துக் கொண்டு புலிகேசி கடம்பர்கள் ஆதிக்கத்திலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு ஒரு சுதந்திர அரசை நிறுவியிருக்க வேண்டும். இறைமையின் சின்னமான அசுவமேத வேள்வியை அவன் செய்த செய்தி பல பொறிப்புகளில் காணப்படுகிறது. மங்கலேசனின் நெரூர் சாஸனம் முதலாம் புலிகேசியின் அறிவுக் கூர்மையையும், மனுவினுடைய சட்டங்களில் அவனுக்கிருந்த ஆழ்ந்த புலமையையும், இராமாயண, மகாபாரதக் காவியங்களில் அவன் பெற்றிருந்த அறிவையும் போற்றிப் புகழ்கின்றது. மகாகூடம் தூண் கல் வெட்டு அவனைச் சத்யாசிரையன், ஸ்ரீபிரிதிவி வல்லபவன், ரணவிக்ரமன் போன்ற பட்டப் பெயர்களால் அழைக்கிறது. அவனுடைய

மனைவி பத்பூரவம்சத்தைச் சேர்ந்த (Batpura) துர்லப தேவி என்பவள். அவனுக்குப் பிறகு அவனுடைய இரு புதல்வர்கள் முதலாம் கீர்த்திவர்மனும், மங்கலேசனும் சாளுக்கிய அரியணையிலமர்ந்தார்கள்.

**மகாராஜா முதலாம் கீர்த்திவர்மன் :**

**(C. கி. பி. 566-67 முதல் 597-98 வரை)**

அவனுடைய முன்னோர்களால் நிறுவப்பட்ட அரசை விரிவுபடுத்தியும் வலிமைப்படுத்தியும் சாளுக்கிய ஆட்சிக்குச் சிறப்பு ஏற்படுத்திய பெருமை முதலாம்கீர்த்திவர்மனைச்சாரும் அவனுடைய முன்னோர்கள் கடம்பர்களைத் தோற்கடித்திருந்த போதிலும், அவர்கள் ஆதிக்கம் இன்னும் முற்றிலும் ஒழிக்கப்படவில்லை. அவர்களில் சிலர் இன்னும் சாளுக்கியர் மேலாண்மையை ஏற்றுக் கொள்ளத் தயங்கினர். எனவே அவர்கள் ஆதிக்கத்தை முற்றிலும் ஒழிக்கும் பணியைக் கீர்த்திவர்மன் மேற்கொள்ள வேண்டியதாயிற்று. மங்கலேசனுடைய மகாகூடம் தூண் கல்வெட்டு அங்க, வங்க, கலிங்க, மகத, மத்ரக, கேரள, கங்க, பாண்டிய, த்ரமிள, சோழீய, ஆளுக, வைஜயந்திய நாடுகளைக் கீர்த்திவர்மன் வென்றதாகக் கூறுகிறது. அரசர்கள் திக்விஜயம் சென்று தாம் பெற்ற வெற்றிகளைத் தற்பெருமையுடன் மிகைப்படுத்திக் கூறும் மரபின் அடிப்படையில்தான் இதுபோன்ற செய்திகள் கல்வெட்டுக்களில் இடம் பெற்றுள்ளன என்பதை நாம் இங்கு வலியுறுத்திக் கூற வேண்டிய தேவை இல்லை. இக் கூற்று நூற்றுக்கு நூறு உண்மை என்று நாம் ஏற்றுக்கொள்ள வேண்டிய அவசியமில்லை. கீர்த்திவர்மன் அண்டை நாடுகளோடு போர் புரிந்து தன் அரசின் எல்லைகளை விரிவாக்கினான் என்பதுபற்றி ஐயப்பாடு ஒன்றும் இருக்க முடியாது. இந் நிகழ்ச்சியின் எதிரொலிதான் மிகைப்படுத்தப்பட்ட உருவில் மேலே கூறியுள்ளபடி மகாகூடம் கல்வெட்டில் இடம் பெற்றுள்ளது என்று கருதலாம். 'த்ரமிள' என்று குறிப்பிடப்பட்டுள்ள பகுதி பல்லவ நாட்டைக் குறிக்கலாம். சாளுக்கியக் கீர்த்திவர்மனுக்கும், பல்லவ சிம்ம விஷ்ணுவுக்கும் ஒரு போர் நிகழ்ந்திருக்கக் கூடும். அடுத்தடுத்து இருந்த இரு நாட்டரசர்கள் தங்கள் அரசின் எல்லையைப் பெருக்கிக் கொள்ள முயற்சிகளை மேற்கொள்ளும்பொழுது, இருவரிடையே ஒரு போர் மூள்வது இயற்கையே. அவ்வாறு இப்போர் நிகழ்ந்திருக்கலாம். இவ்வாறு இவ்விரு வம்சங்களுக்கிடையே தோன்றிய பகைமை தொடர்ந்து இரண்டு நூற்றாண்டுகள் நீடித்திருந்தது.[1] ஆனால் இரண்டாம்

1. T. V. Mahalingam-Kanchipuram in Early South Indian History. P. 60.

புலிகேசியின் ஐஹோள் கல்வெட்டில் கீர்த்திவர்மனின் இந்தப் போர்ச் சாதனைகள் பற்றிய ஓர் உண்மையான வருணனை காணப் படுகிறது. மேலே குறிப்பிட்டுள்ள வருணனையைவிட இது நம்பத் தகுந்ததாக இருக்கிறது. கடம்பர்களுடைய கூட்டணி ஒன்றை உடைத்துக் கடம்பர்களையும், பெல்லாரி-கர்நூல் பகுதியில் நளவாடி என்ற அரசை ஆண்ட நளர்களையும், மௌரியர்களையும்,[1] தென் கன்னடத்தை ஆண்ட ஆலுபர்களையும் (Alupas) தலைக் காட்டுக் கங்கர்களையும் வென்ற செய்தி இந்தக் கல்வெட்டில் வருணிக்கப்பட்டுள்ளது. கடம்பர்களின் தலைநகரான வனவாசியைக் கீர்த்திவர்மன் கைப்பற்றிய செய்தி மேலைச் சாளுக்கிய சாஸனங்களில் சிறப்பாகக் கூறப்படுகிறது. இந்த வெற்றிகளின் விளைவாக மேலைச் சாளுக்கியர்களின் செல்வாக்கு இன்றைய மகாராஷ்டிர மாநிலத்தின் தென் பகுதியிலும், அடுத்திருந்த மைசூர் மாநிலத்திலும், தமிழ் நாட்டின் ஒரு சில பகுதிகளிலும் பரவியது என்று உறுதியாகக் கூறலாம்.

இரண்டாம் புலிகேசியின் பொறிப்புகள் 'வாதாபி நகரை உருவாக்கியவன்'[2] என்று கீர்த்திவர்மனுக்குப் புகழ்மாலை சூட்டுகின்றன. தன்னுடைய தலைநகரமாக ஆக்கிக்கொண்ட பிறகு, கோயில்கள், கட்டடங்கள் முதலியவை கட்டி அந் நகரைப் பொலிவு பெறச் செய்ததனால் அவனை 'வாதாபி நகரை முதலில் உருவாக்கியவன்' என்று பொறிப்புகள் அழைப்பது சாலப் பொருத்தமே. பாதாமி வைஷ்ணவக் குகைக் கோயிலில் காணப் பட்ட இவனுடைய பன்னிரண்டாம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு ஒன்று (கி. பி. 578) இவனுடைய விருப்பத்திற்கிணங்க இவனுடைய தம்பி மங்கலேசன் இந்தக் கோயிலைக் கட்டி முடித்த செய்தியையும், லஞ்ஜீஸ்வரம் என்னும் கிராமத்தை இக் கோயிலுக்குக் கொடையாக வழங்கிய செய்தியையும் கூறுகின்றது. கீர்த்திவர்மனின் அரசியார், கடம்பர்களின் ஆதிக்கத்திற்குட்பட்டு வனவாசிப் பகுதியில் ஆண்டுகொண்டிருந்த சேந்தரக வம்சத்தைச் சேர்ந்த ஓர் இளவரசி என்பது இரண்டாம் புலிகேசியின் ஒரு பொறிப்பிலிருந்து நமக்குத் தெரிகின்றது. கீர்த்திவர்மன் கொங்கணத்தைக் கைப்பற்றிய பிறகு ரேவதித் தீவு (தற்காலக் கோவா) சாளுக்கியர் ஆட்சிக்குட்படுத்தப்பட்டு, சாளுக்கியர்கள் ஆட்சியை

[1] இந்த மௌரியர்கள் எனப்படுவோர் மௌரியப் பேரரசின் தென்பகுதியான தக்காணத்தை ஆண்ட மௌரிய ஆளுநர் ஒருவரின் வழித் தோன்றல்களாயிருக்கலாம். அவர்கள் கொங்கணப் பகுதியை ஆண்டு கொண்டிருந்தார்கள்.

R. C. Majumdar and others-History and culture of the Indian People. - Op-cit Vol. III p. 232.

[2] Vatapyah Prathama Vidhata. Epigraphia India - vol. XXVIII p.20.

ஏற்றுக்கொண்டு அங்கிருந்து ஓர் அதிகாரி ஆட்சி செலுத்தினுன் என்று பிற்காலச் சாளுக்கியக் கல்வெட்டுக்கள் கூறுகின்றன.

**மங்கலேசன்.**

(C. கி.பி. 597-8—610-11) கீர்த்திவர்மன் இறந்தபொழுது அவனுடைய மகன் இரண்டாம் புலிகேசி இளவயதினனுக இருந்ததால், அவன் சிற்றப்பன் மங்கலேசன் அவன் சார்பில் ஆட்சி செய்தான். அவன் கல்வெட்டுகள் அவனைப் 'பரம பாகவதன்', அதாவது விஷ்ணுவை வழிபடுபவன் என்று அழைக்கின்றன. மரபுப்படி வாரிசுரிமையை இரண்டாம் புலிகேசி பெற்றிருக்க வேண்டிய போதிலும், மங்கலேசன் எவ்வாறு அரசுரிமை பெற்றுன் என்பது பற்றிய விளக்கம் அவன் கால எந்தக் கல்வெட்டிலும் தெளிவாகக் காணப்படவில்லை. ஆனுல் பிற்காலக் கல்யாணி சாளுக்கியர்கள் கல்வெட்டுகளிலும் இரண்டாம் புலிகேசி இளைஞுதலால், அரசுப் பொறுப்பை அவன் சிற்றப்பன் மங்கலேசன் ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று என்ற விளக்கம் காணப்படுகிறது. ஆனுல் இரண்டாம் புலிகேசியின் ஐஹோள் பொறிப்பு கூறும் கதை வேருக இருக்கிறது அதைப் பின்னர் ஆராய்வோம்.

மங்கலேசன் தன் பேரரசை விரிவாக்கும் பணியில் மிகுந்த அக்கறை காட்டினுன். அவனுடைய போர்ச் சாதனைகளில் மிக முக்கியமானது அவன் காலசூரிகளுடன் போரிட்டு அவர்களை வென்றதாகும். மகாகூடம் தூண் கல்வெட்டில் இந் நிகழ்ச்சி குறிப்பிடப்பட்டிருப்பதால் இது கி. பி. 602ஆம் ஆண்டிற்கு முன்பே நிகழ்ந்திருக்கவேண்டும். இப் பெரும் வெற்றியைப்பற்றி ஐஹோள் கல்வெட்டும், கௌதம் சாஸனமும் பேசுகின்றன. புத்தராஜன் என்ற காலசூரி அரசன் மங்கலேசனுல் போரில் முறியடிக்கப்பட்டவன் என்று நெரூர் சாஸனம் கூறுகின்றது. இத் தோல்வியினுல் காலசூரிப் பேரரசு சிதைவுற்றுச் சாளுக்கியர்கள் ஆதிக்கம் வட திசையில் மத்திய மகாராஷ்டிரப் பகுதியில் பரவுவதற்கு வழிவகுக்கப்பட்டது என்ற கருத்து மிகைப்படுத்தப்பட்ட கருத்தாகும். இதன் மூலம் மங்கலேசன் ஏராளமான செல்வத்தைக் கொள்ளைப் பொருள்களாகப் பெற்றுன் என்பதை மறுக்க முடியாது. காலசூரிகள் மீது சாளுக்கியர்கள் மேற்கொண்ட ஒரு வெற்றிகரமான படையெடுப்பு என்று மட்டுந்தான் இந் நிகழ்ச்சியைக் கருதலாகுமே யன்றி, காலசூரிகள் வீழ்ச்சிக்கு இது வழிவகுத்தது என்று கூறுவது பொருந்தாது. ஏனெனில் இந் நிகழ்ச்சிக்குச் சில ஆண்டுகள் கழித்துப் புத்தராஜன் சுதந்திர

அரசனாக ஆரவாரத்துடனும், ஆடம்பரத்துடனும் ஆட்சி செய்து கொண்டிருந்தான் என்ற செய்தி அவனுடைய பொறிப்புகளில் காணப்படுகிறது.

இந்த வெற்றிக்குப் பிறகு மங்கலேசன் வட இந்தியப் படையெடுப்பு ஒன்றை மேற்கொண்டு கங்கைவரையில் சென்று ஒரு வெற்றித்தூணை நாட்டி வரவேண்டுமென்று திட்டமிட்டானென்றும், ஆனால் உள்நாட்டில் நிலவிய குழப்பநிலை காரணமாக இந்தத் திட்டத்தை நிறைவேற்ற முடியவில்லை என்றும் மகாகூடம் பொறிப்பு கூறுகின்றது. மங்கலேசனின் நெரூர் சாஸனம் கொங்கணப் பகுதியைச் சாளுக்கியர் சார்பில் ஆண்டு கொண்டிருந்த சுவாமிராஜன் என்ற ஓர் அதிகாரியை அவன் போரில் கொன்ற செய்தியையும், அவன் தலைநகரான ரேவதித் தீவைக் கைப்பற்றிய செய்தியையும் கூறுகின்றது.[1] (கொங்கணத்தின் மற்றொரு பகுதியின் ஆளுநனாக இருந்த துருவராஜ் இந்திரவர்மன் என்பவனை சுவாமிராஜனுக்குப் பதிலாக ஆளுநனாக மங்கலேசன் நியமித்தான்.)

வாதாமியில் மகாவிஷ்ணுவிற்கு ஒரு குகைக் கோயில் எழுப்பும் பணியை மங்கலேசன் தன் சகோதரன் ஆணைக்கேற்ப ஏற்றுக்கொண்டான் என்பதை முன்பே கூறியுள்ளோம். அரிய வேலைப்பாடுகளமைந்த அக்கோயிலைக் கட்டியதோடு மட்டுமன்றி, அங்கு விஷ்ணு சிலையைப் பிரதிஷ்டை செய்த சமயத்தில் அக்கோயிலுக்குப் பல அறக் கொடைகளையும் மங்கலேசன் அளித்தான். (வைணவ சமயத்தை மட்டுமல்லாமல் சைவ சமயத்தையும் அவன் ஆதரித்தான்) என்பது முக்தேஸ்வரன் கோயிலுக்கு அவன் அளித்த அறக்கட்டளைகள் மூலம் நன்கு புலப்படும். (நன்கு கற்றறிந்தவன், பண்பாளன், ஈகைக்குணம் படைத்தவன், அரசியல் கலையில் வல்லவன் என்று அவன் போற்றப்படுகின்றான்.)

மங்கலேசனுடைய ஆட்சியின் இறுதியில் நடந்த நிகழ்ச்சிகளுக்கும், அவனுடைய மெய்க்கீர்த்திகளில் அவனைப்பற்றி அவைக் கவிஞர்கள் பாராட்டிக் கூறும் கருத்துக்களுக்கு மிடையே எந்தவிதப் பொருத்தமும் இல்லை. இந் நிகழ்ச்சிகளைப் பற்றி நமக்குக் கிடைத்திருக்கும் ஒரே சான்று ஐஹோள் கல்வெட்டு ஆகும்.

[1] கீர்த்திவர்மன் கொங்கணப் பகுதியை வென்றவுடன், சுவாமிராஜன் என்பவனை ஆளுநனாக நியமித்திருக்கக் கூடும். இந்தச் சுவாமிராஜன் மங்கலேசன் ஆட்சியில் அவனை எதிர்த்துக் கலகம் விளைவித்திருக்கக் கூடும். அந்தக் கலகத்தை அடக்கி, கொங்கணத்தில் மீண்டும் சாளுக்கிய ஆட்சியை நிறுவ இப்போர் நடைபெற்றிருக்கலாம்.

அதில் கூறப்பட்டிருக்கும் செய்திகள் தெளிவாக இல்லாத காரணத்தினால், நடந்தது என்ன என்பதை நம்மால் திட்டவட்டமாகக் கூற முடியாவிட்டாலும், அந் நிகழ்ச்சியின் போக்கை எளிதில் ஊகிக்கலாம். கீர்த்திவர்மனின் மகன் இரண்டாம் புலிகேசிக்கும், மங்கலேசனுக்குமிடையே வாரிசுரிமைப் போட்டி ஏற்பட்டிருக்கவேண்டும். ஐஹோள் பொறிப்பில் காணப்படும் செய்திகளை அலசி ஆராய்ந்து பார்த்தால் பின்வரும் உண்மை புலப்படும். புலிகேசி அரசாளும் பருவத்தை அடைந்த பிறகும் கூட மங்கலேசன் அரசாட்சியை அவனிடம் ஒப்படைக்காததோடு மட்டுமன்றித் தன்னுடைய மகனையே அரசனாக்கும் நோக்கத்துடன் காலங் கடத்தினான். தன் சிற்றப்பன் மகனைவிடத் தனக்கு உரிமை அதிகம் என்பதை உணர்ந்த புலிகேசி தன் உரிமையை நிலை நாட்டிக்கொள்ளும் நோக்கத்துடன் நாட்டை விட்டுச் சென்று, பெரும்படை திரட்டிக்கொண்டு, மங்கலேசன் மீது படையெடுத்து அவனைப் போரில் கொன்று, அரியணையைக் கைப்பற்றித் தன்னை அரசனாக அறிவித்துக்கொண்டான். இந் நிகழ்ச்சி கி.பி. 610-11ல் நிகழ்ந்திருக்கலாம். எனவேதான் வாதாபிச் சாளுக்கிய அரசர்களின் பொறிப்புகள், சாளுக்கிய அரச மரபில் மங்கலேசனுக்கு உரிய இடம் அளிக்கவில்லை. பிற்காலத்துச் சாளுக்கியர்கள்தாம் தங்கள் சாஸனங்களில் மங்கலேசனுக்கு அரசமரபில் ஓர் இடத்தை அளிக்கின்றார்கள்.

## இரண்டாம் புலிகேசி (C. கி.பி. 610-11—642)

இரண்டாம் புலிகேசியின் ஹைதராபாத் செப்பேட்டில் காணப்படும் விவரங்களிலிருந்து இவ்வரசன் ஆட்சி 610-11ல் தொடங்கியிருக்க வேண்டுமென்று கருதலாம். அண்மையில் நடந்த உள்நாட்டுப் போரின் விளைவாக நாட்டின் வலிமை குறைந்தது. ஐஹோள் பொறிப்பில் ரவிகீர்த்தி வருணித்திருப்பது போலச் சாளுக்கியப் பேரரசு 'பகைவர்கள் என்னும் இருளால் சூழப்பட்டிருந்தது'. நாட்டில் குழப்பமும், அமைதியின்மையும் மேலோங்கியிருந்தன. பகைவர்கள் பல திசைகளிலிருந்தும் கிளம்பினார்கள். இரண்டாம் புலிகேசி மிகச் சிறந்த போர்வீரன். இவனிடம் குடிகொண்டிருந்த வீரமும், ஆற்றலும் நாட்டின் நிலைமையைச் சமாளிக்க இப்பொழுது அவனுக்கு தேவைப் பட்டன. வெகு விரைவிலேயே அவன் தன் திறமையை மெய்ப்பித்தான். தக்காணம் முழுவதிலும் தன் ஆதிக்கத்தை நிறுவி, ஆந்திரப் பகுதியிலும், குஜராத் பகுதியிலும் தன் வம்சத்தைச் சேர்ந்த மற்றொரு கிளையினரின் ஆட்சி ஏற்பட அவன் வழி வகுத்தான். அவன் கடைப்பிடித்த போர்க் கொள்கையும், அவன்

தொடர்ந்து பெற்றுக் கொண்டிருந்த வெற்றிகளும் அவன் பகைவர் உள்ளத்தில் ஒரு பொறாமை உணர்ச்சியையும், வெறுப் புணர்ச்சியையும் தோற்றுவித்து, அவற்றின் விளைவாக அவன் ஆட்சியின் இறுதியில் பல தொல்லைகள் அவனுக்கு ஏற்பட்டன. இருப்பினும் அவனுடைய மகன் விக்கிரமாதித்தன் ஆட்சியில் புலிகேசியின் பேரரசு மீண்டும் வலுப்பெற்று புலிகேசியின் பகைவர்கள் மீது வஞ்சம் தீர்த்துக் கொள்ளப்பட்டது.

இரண்டாம் புலிகேசியின் போர்ச்சாதனைகளை அறிந்துகொள் வதற்கு நமக்கு ஐஹோள் பொறிப்பு மிகவும் பயன்படு கிறது. நாட்டின் பலவீன நிலையைப் பயன்படுத்திக்கொண்டு ஆப்பாயிகன், கோவிந்தன் என்னும் இருவர் புலிகேசிக்கு எதிராகக் கலகங்கள் விளைவித்து, அவனுக்குச் சொந்தமான பகுதிகளை அபகரிக்கத் திட்டமிட்டனர். ஒரு பெரும் யானைப் படையுடன் அவர்கள் பீமரதி ஆற்றங்கரையில் புலிகேசியை எதிர்க்க ஆயத்த மாயினர். இந்த இக்கட்டான சூழ்நிலையில் புலிகேசி தன்னிட மிருந்த அரச தந்திர ஆற்றலையெல்லாம் பயன்படுத்திக் கோவிந் தனை ஆப்பாயிகனிடமிருந்து பிரித்துத் தன்னுடன் சேர்த்துக் கொண்டு, மற்றவனைப் போரில் வென்றான்.[1]

இவ்வாறு நாட்டில் தன்னைச் சூழ்ந்திருந்த ஆபத்திலிருந்து விடுவித்துக்கொண்ட பிறகு, புலிகேசி அண்டை நாடுகளின் மீது படையெடுத்து வென்ற நாடுகள்பற்றியும் ஐஹோள் கல்வெட்டு விரிவாகக் கூறுகின்றது. அடுத்து அவனுடைய படையெடுப்பிற்கு உள்ளான நாடு கடம்பர்கள் நாடாகும். கடம்பர்களின் தலை நகரமான வனவாசி முற்றுகையிடப்பட்டுக் கைப்பற்றப்பட்டது. ஐஹோள் கல்வெட்டில் ரவிகீர்த்தியினுடைய வருணனையிலிருந் தும், ஏறத்தாழ இக்காலப் பகுதியில் கடம்பர்கள் தென்னிந்திய வரலாற்றிலிருந்து மறைந்துவிட்ட நிலையிலும், கடம்பர்களுக் கெதிராகப் புலிகேசியினால் மேற்கொள்ளப்பட்ட படையெடுப்பு முழு வெற்றியில் முடிந்தது என்று கருதுவது பொருத்தமுடைய தாகும். இதற்குப் பிறகு தென் கன்னடப் பகுதியை ஆண்டு கொண்டிருந்த ஆலுபர்களும், மைசூரில் ஆண்டு கொண்டிருந்த கங்கர்களும் புலிகேசியின் ஆக்கிரமிப்பிற்கு ஆளானார்கள். கடந்த போரில் கடம்பர்களுக்கு அவர்கள் உதவி செய்தது புலிகேசியின் ஆத்திரத்தைத் தூண்டிவிட்டிருக்கக் கூடும். இவ்விருவரும், போரில் தோற்கடிக்கப்பட்ட புலிகேசியின் மேலாதிக்கத்தை ஏற்றுக்கொண்டனர். புலிகேசியினால் தோற்கடிக்கப்பட்ட கங்க

[1] இந்தக் கோவிந்தன் ராஷ்டிரகூட தந்திதுர்க்கரின் முப்பாட்டனாக இருக்கக் கூடும் என்று சில அறிஞர்கள் கருதுகின்றனர்.

அரசன் துர்விநீதனாக இருக்கலாம். துர்விநீதன் தன் மகளைப் புலிகேசிக்கு மணம் செய்து வைத்தான் என்பதற்கான பிற்காலச் சான்றுகள் உள்ளன. இந்தக் கங்க இளவரசியின் மகன்தான் முதலாம் விக்கிரமாதித்தன்.[1] புலிகேசியினுடைய அடுத்த படையெடுப்பு வட கொங்கணத்தை ஆண்ட மௌரியர்களுக்கு எதிராக மேற்கொள்ளப்பட்டது. புரி என்ற செல்வ வளம் மலிந்த துறைமுகப்பட்டினம் இதன் தலைநகரம் ஆகும். இது பம்பாய்க்கு அருகிலிருக்கும் எலிபெண்டாத் தீவில் உள்ளது. வளமிக்க இந் நகரத்தைப் பெறவேண்டுமென்ற நோக்கத்துடன் புலிகேசி நூற்றுக் கணக்கான கப்பல்களைக் கொண்ட ஒரு பெருங் கப்பற்படையுடன் இந் நகரைத் தாக்கிக் கைப்பற்றினான். ஏறத்தாழ இதே காலப் பகுதியில்தான் வட இந்தியாவில் ஹர்ஷவர்த்தனின் ஆதிக்கம் வேகமாகப் பரவிக்கொண்டிருந்தது. ஹர்ஷனுடைய ஆதிக்க வளர்ச்சியைக் கண்டு அஞ்சிய லாடர்களும், மாளவர்களும், கூர்ஜரர்களும் ஒருவர் பின் ஒருவராகப் புலிகேசிக்குக் கீழ்ப் பணிந்து அவனுடைய நட்புறவை நாடினார்கள். இவ்வாறாகப் புலிகேசியின் செல்வாக்கு வடக்கே மஹீ நதிவரை பரவியது.

## புலிகேசியும் ஹர்ஷனும்

புலிகேசியின் தலைசிறந்த சாதனையாகக் கருதப்படும் ஹர்ஷன் மீது அவன் பெற்ற வெற்றி அவன் ஆட்சியின் அடுத்த சிறப்பு நிகழ்ச்சியாகும். ஹைதரபாத் சாஸனம், ஐஹோள் பொறிப்பு, மற்றப் பிற்கால மேலைச் சாளுக்கிய சாஸனங்கள் மட்டுமன்றிச் சீனப்பயணி யுவான் சுவாங்கின் பயணக் குறிப்பும் புலிகேசியின் இந்த வெற்றியைப் பற்றிக் குறிப்பிடுகின்றன. வட இந்தியாவில் தன் ஆதிக்கத்தை நிறுவிய ஹர்ஷரும் தக்காணத்தைத் தன் குடைக்கீழ் கொண்டுவந்த புலிகேசியும் தங்கள் பேரரசை மேலும் விரிவாக்கும் நோக்கத்துடன் குஜராத் பகுதியைத் தங்கள் ஆதிக்க மண்டலத்திற்குள்ளாக்க முயன்றதின் விளைவுதான் இம் மோதலாக இருக்கவேண்டும். அடுத்தடுத்து இருக்கும் அரசுகள் பேரரசுக் கோட்பாட்டின் அடிப்படையில் செயல்பட முனையும்பொழுது

[1] கி. பி. 1077ம் ஆண்டு ஹூம்சா (Humcha) சாஸனத்தில் 'துர்விநீதன் காடுவெட்டியைப் போரில் தோற்கடித்துத் தன் மகளின் மகனை ஜயசிம்ம வல்லபனின் அரியணையில் அமர்த்தினான்' என்ற வாசகம் காணப்படுகிறது. டாக்டர் வெங்கட்ரமணையா இச் சாஸனத்தில் கூறப்பட்டிருக்கும் காடுவெட்டி பல்லவ அரசன் நரசிம்மவர்மனென்றும், மகளின் மகன் என்று குறிப்பிடுவது இரண்டாம் புலிகேசியின் மகன் முதலாம் விக்ரமாதித்யன் என்றும் கருதுகிறார். இவ்வாறு முடிவு செய்வதற்குப் போதுமான திட்டவட்டமான செய்திகள் அச் சாஸனத்தில் இல்லை. யாருடைய பெயரும் நேரடியாகக் குறிப்பிடப்படவில்லை. துர்விநீதன் ஆட்சிக் காலம் கி. பி. 529 முதல் 579 வரை. ஆகையால் அவன் புலிகேசியின் மகனான விக்ரமாதித்யனை அரியணையிலமர்த்தியிருக்கக் கூடும் என்று கருதுவது பொருத்தமுடையதாகாது. P. B. Desai op. cit. P 96.

இதுபோல மோதல்கள் நிகழ்வது இயற்கையே. ஹர்ஷரின் ஆக்ர மிப்பு அபாயத்திற்கு உட்பட்ட லாடர்கள், மாளவர்கள், கூர்ஜரர்கள், மைத்ரகர்கள் போன்றோர், தங்களை இந்த அபாயத்தி லிருந்து காத்துக்கொள்ள புலிகேசியின் மேலாதிக்கத்தை ஏற்றுக் கொண்டு அவன் உதவியைப் பெற்றனர் என்றும், இதன் விளைவாக ஹர்ஷருக்கு எதிராக ஒரு மாபெரும் கூட்டணி உருவாகிய தென்றும் சிலர் கருதுகின்றனர். பொறிப்புகளின் மூலமாகவும், இலக்கிய வாயிலாகவும் நமக்குக் கிடைத்திருக்கும் அரைகுறைச் செய்திகளின் அடிப்படையில் இந்த முடிவுக்கு வருவது இயலாது.

விந்திய மலை நர்மதை ஆற்றுப்பகுதியில் புலிகேசியின் படைகள் முகாமிட்டிருந்த செய்தியையும், ஹர்ஷன் மீது புலிகேசி பெற்ற வெற்றியையும் ஐஹோள் பொறிப்பு குறிப்பிடுகிறது. நர்மதை ஆற்றங்கரையில் இப்போர் நிகழ்ந்திருக்கலாம். ஹர்ஷ னுடைய படைகள் பெருஞ் சேதத்திற்குள்ளாக்கப்பட்டு, குறிப் பாக அவருடைய யானைப்படை பெரும் சேதமடைந்து, போர்க் களத்திலிருந்து பின்வாங்க நேரிட்டது. கி.பி. 612ஆம் ஆண்டைச் சேர்ந்த ஹைதராபாத் சாஸனம் ஹர்ஷனுடைய பெயரை நேரடி யாகக் குறிப்பிடாவிட்டாலும், 'நூறு போர்க்களங்களைக் கண்ட அரசன் மீது பெற்ற வெற்றி காரணமாகப் புலிகேசி பரமேஸ்வரன் என்ற பட்டத்தைச் சூட்டிக் கொண்டான்' என்ற செய்தியைக் கூறுகின்றது. முதலாம் விக்கிரமாதித்தன் காலத்திற்குப் பிற்பட்ட மேலைச் சாளுக்கியப் பொறிப்புகளிலும் புலிகேசியின் இவ்வெற்றி பற்றிய செய்தி மேலும் தெளிவாகவும் ஐயப்பாட்டிற்கிடமின் றியும் குறிப்பிடப்படுகிறது. யுவான் சுவாங்கின் பயணக் குறிப் புகள் இச் செய்தியை உறுதிப்படுத்தும் வகையில் அமைந்துள்ளன. இந் நிகழ்ச்சி பற்றி யுவான் சுவாங் பின்வருமாறு கூறுகிறார்:[1] 'புகழ்பெற்ற அரசன் சீலாதித்யன் (ஹர்ஷன்) இந்தச் சமயத்தில் கிழக்கிலும், மேற்கிலும் படையெடுத்துக் கொண்டிருந்தான். அருகிலும், தொலைவிலுமிருந்த நாடுகளெல்லாம் அவன் மேலா திக்கத்தை ஏற்றுக்கொண்டிருந்தன; ஆனால் மகாராஷ்டிரம் அவனுக்குக் கீழ்ப்பணிய இசையவில்லை.' இதே செய்தியை யுவான் சுவாங்கின் வாழ்க்கை வரலாற்றாசிரியர் 'சீலாதித்யராஜன் (ஹர்ஷன்) தன்னுடைய திறமையையும், தன் படைத் தலைவர் களின் வெற்றியையும் பற்றித் தற்பெருமை கொண்டு, தன்னம் பிக்கையோடு இந்த அரசனை எதிர்க்கத் தன் படைகளுடன்

[1] "The great king siladitya (Harsha) at this time was invading East and west and countries far and near were giving in allegiance to him but Maharashtra refused to become subject to him." T-Watters - On Yuvan Chwang's Travels in India - vols. I & II.

வந்தான். ஐந்து இந்தியாக்களிலிருந்தும் (பஞ்சாப், கன்னேசி, மிதிலை, வங்காளம், ஒரிஸ்ஸா) திரட்டப்பட்ட படைகளையும், எல்லா நாடுகளிலிருந்தும் கொணரப்பட்ட தலைசிறந்த படைத் தலைவர்களைப் பெற்றிருந்தும் அவனால் இந்த அரசனை வெல்லமுடிய வில்லை' என்று குறிப்பிட்டிருக்கிறார்.[1] மேற்கூறிய இலக்கியம், கல் வெட்டு ஆகியவற்றின் செய்திகளிலிருந்து ஹர்ஷன் வலுத்தாக்கு தல் மூலம் புலிகேசியை வெல்லச் செய்த முயற்சி வெற்றி பெற வில்லை என்னும் உண்மைதான் பெறப்படுமேயன்றி, ஹர்ஷன் புலிகேசியிடம் படுதோல்வியடைந்தான் என்று கருதப்படுவதற் கான ஆதாரம் இல்லை. ஆனால் புலிகேசியின் சந்ததியார்கள் இந் நிகழ்ச்சிக்கு அளவுக்கு மீறிய முக்கியத்துவத்தைக் கொடுத்து, பெருமைக்குரிய ஒரு விஷயமாக இதைக் குறிப்பிடுகிறார்கள்.

இப்போர் எப்பொழுது நிகழ்ந்திருக்கக்கூடும் என்பது பற்றி வரலாற்றறிஞர்களிடையே கருத்து வேறுபாடு நிலவுகிறது. டாக்டர் ஸ்மித் கி.பி. 620ல் இப் போர் நிகழ்ந்திருக்கக் கூடுமென்று கருதுகிறார். ஆர். கே. முகர்ஜி கி. பி. 612ஆம் ஆண்டு இப் போர் நிகழ்ந்தது என்று கூறுகிறார். இரண்டாம் புலிகேசியின் 612ஆம் ஆண்டு ஹைதராபாத் சாஸனம், புலிகேசி தான் பெற்ற வெற்றிகளின் அறிகுறியாகப் பரமேஸ்வரன் என்ற பட்டத்தைச் சூட்டிக் கொண்டான் என்ற செய்தியைக் குறிப் பிடுவதால், இந் நிகழ்ச்சி கி. பி. 612ஆம் ஆண்டிலோ அதற்கு முன்போ நிகழ்ந்திருக்கவேண்டும். இந்தக் கருத்தை ஏற்றுக்கொள் வதில் சில சிக்கல்கள் உள்ளன. எடுத்துக்காட்டாக ஹர்ஷன் கி. பி. 606ஆம் ஆண்டும், இரண்டாம் புலிகேசி கி. 610-11ஆம் ஆண்டும் பட்டமெய்தினர் என்பதை நாம் அறிவோம். இவ்விரு அரசர்களுக்கும் அவர்கள் ஆட்சியின் தொடக்கத்தில் பல உள் நாட்டுப் பிரச்சினைகளும், சொந்தப் பிரச்சினைகளும் இருந்தன. ஹர்ஷனுக்குச் சசாங்கன் போன்ற பகைவர்களும், புலிகேசிக்கு ஆப்பாயிகன், கோவிந்தன், கடம்பர்கள் போன்ற பகைவர் களும் தொல்லைகள் கொடுத்துக் கொண்டிருந்தார்கள். இவர் களின் அபாயத்திலிருந்து தங்கள் நாட்டைப் பாதுகாப்பதற்கு முன்பாக, ஹர்ஷனோ, புலிகேசியோ ஒருவருடன் ஒருவர் ஒரு பலப்பரிட்சையில் இறங்கியிருக்க முடியும் என்று கருதுவது

[1] "Siladityaraja, boasting of his skill and the invariable success of his generals, filled with confidence himself, marched at the head of his troops to contend with this prince, but he was unable to prevail or subjugate him (although) he had gathered troops from the five Indias (The Punjab, Kanauj, Mithila, Bengal and Orissa) and the best generals from' all countries." (Hwui-Li-Life of Hiuen-Tsang - Beal's Translation).

பொருந்தாது. எனவே கி. பி. 612ஆம் ஆண்டு இப்போர் நிகழ்ந்திருக்கக் கூடுமென்ற கருத்து வலுவிழக்கின்றது. புலிகேசி பரமேஸ்வரன் என்ற பட்டம் சூட்டிக்கொண்டான் என்று ஹைதராபாத் சாஸனம் கூறும் செய்தியின் பொருள் என்ன? ஹர்ஷன் மீது பெற்ற வெற்றியின் அறிகுறியாக இப் பட்டத்தைச் சூட்டிக்கொண்டான் என்று ஹைதராபாத் சாஸனம் ஹர்ஷனுடைய பெயரைக் குறிப்பிட்டுக் கூறவில்லை என்பது இங்கு நோக்கத்தக்கது. எனவே புலிகேசி தன் உள்நாட்டு எதிரிகளான ஆப்பாயிகன், அண்டை நாட்டவர்களான கடம்பர்கள், மௌரியர்கள் போன்றவர்களை வென்றதன் அறிகுறியாக இப் பட்டத்தைச் சூட்டிக்கொண்டிருக்கலாம் அல்லவா? கி. பி. 634-35ல் வெளியிடப்பட்ட ஐஹோள் கல்வெட்டில் இந் நிகழ்ச்சி இடம் பெறுவதால், அது இந்த ஆண்டிற்கு முன் நிகழ்ந்திருக்க வேண்டும் என்று நாம் உறுதியாகக் கூறலாம். ஆனால் இரண்டாம் புலிகேசியின் கி. பி. 630ஆம் ஆண்டு லோஹ்னர் செப்பேடுகளில் இச் செய்தி குறிப்பிடப்படாதது வியப்பாக இருக்கிறது. ஒருவேளை அச் செப்பேடுகள் வெளியிடப்பட்ட பிறகு இப்போர் நிகழ்ந்திருக்கக்கூடும். புலிகேசி ஹர்ஷன் மீது வெற்றி பெற்றது இரண்டாம் புலிகேசியின் போர் நடவடிக்கைகளுக்கு முத்தாய்ப்பு வைத்தது போல அமைந்தது என்பதை ஐஹோள் பொறிப்பில் ரவிகீர்த்தியின் வருணனையிலிருந்து நாம் எளிதில் புரிந்துகொள்ளலாம். வலிமையிலும், அறிவாற்றலிலும் இந்திரனை ஒத்திருந்த புலிகேசி 99,000 கிராமங்களைக் கொண்ட மூன்று பெரிய அரசுகளின் மீது (Three Maharashtrakas) ஆதிக்கம் பெற்றான் என்று அப் பொறிப்பு கூறுகின்றது. தற்கால மஹாராஷ்டிரம், கர்நாடகம், கொங்கணம் ஆகிய மூன்று பகுதிகளை இது குறிப்பிடும். எனவே இந்தக் காலப் பகுதியில் இரண்டாம் புலிகேசியின் பேரரசு மேலைத் தக்காணத்தில் குஜராத் முதல் தெற்கு மைசூர் பகுதிவரை பரவியிருந்தது என்று கருதலாம்.

### புலிகேசியும் கிழக்குத் தக்காணப் படையெடுப்புகளும்

இதற்குப் பிறகு புலிகேசி கிழக்குத் தக்காண அரசுகளின் மீது தன் கவனத்தைச் செலுத்திய செய்தியை ஐஹோள் பொறிப்பு கூறுகிறது. தன் இளவலான விஷ்ணுவர்த்தனனிடம் ஆட்சிப் பொறுப்பை ஒப்படைத்துவிட்டு, கிழக்குத் தக்காணத்தின் மீது ஒரு திக்விஜயத்தை புலிகேசி மேற்கொண்டான். அவன் படை எடுத்துச் சென்ற நாடுகளையும், அவன் பின்பற்றிய வழியையும் ஐஹோள் பொறிப்பு வரிசையாகக் கூறுகிறது. கிழக்குத் தக்காணத்தில் அவன் தாக்குதலுக்கு இலக்கான இரண்டு அரசுகள்

கோசலமும், கலிங்கமும் ஆகும். (கோசலம் என்பது பாண்டு வம்சிகளால் ஆளப்பட்டு வந்த தட்சிண கோசலமாகும். (மத்திய இந்தியா); கலிங்கம் என்பது கலிங்க நகரத்துக் கங்கர்கள் அல்லது கீழைக் கங்கர்களால் ஆளப்பட்டு வந்த தற்கால ஒரிஸ்ஸா மாநில மாகும். இந்த இரு அரசுகளும் எளிதில் முறியடிக்கப்பட்டு, புலிகேசியின் ஆதிக்கத்திற்கு உட்படுத்தப்பட்டன.) இதையடுத்து புலிகேசியின் படைகள் கிழக்குக் கரையோரமாக தெற்கு நோக்கி முன்னேறின. பிஷ்டபுரம் என்னும் கோட்டை நகரம் (பித்தா புரம்—கோதாவரி மாவட்டம்) கைப்பற்றப்பட்டது. அடுத்துப் புலிகேசியின் படைகள் விஷ்ணுகுண்டினர்களின் ஆட்சிக்குட்பட் டிருந்த வேங்கிமண்டலப் பகுதியில் நுழைந்தன. அங்கு குணலா (Kunala-ஏலூருக்கு அருகாமையிலிருக்கும் கொல்லேறு பகுதி) என்ற பகுதியும் புலிகேசியின் வசமாயிற்று. விஷ்ணுகுண்டினர் களின் எதிர்ப்பு முறியடிக்கப்பட்டது. விக்ரமேந்திரனுடைய மகன் என்று தன்னைக் கூறிக்கொண்ட பிருதிவி மகாராஜன் என் பவன் வேங்கிப் பகுதியைப் பிஷ்டபுரத்திலிருந்து ஆண்டுகொண் டிருந்தான். இந்த வெற்றிக்குப் பிறகு பிரிதிவி மகாராஜன் பதவியிலிருந்து நீக்கப்பட்டு, அந்தப் பகுதி புலிகேசியின் ஆட்சிக்கு உட்படுத்தப்பட்டது. புலிகேசியின் தம்பி விஷ்ணுவர்த்தனனிடம் அந்தப் பகுதியின் ஆட்சிப் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டது. வேங்கிப் பகுதியில் விஷ்ணுவர்த்தனின் ஆட்சிதான் கீழைச் சாளுக்கியர்களின் ஆட்சியின் தொடக்கமாகும். இந்த விஷ்ணு வர்த்தனன்தான் வரலாற்றில் கீழைச் சாளுக்கியக் கிளை அரச மரபைத் தோற்றுவித்தவனுவான். (இரண்டாம் புலிகேசிக்குப் பிறகு கீழைச் சாளுக்கியர்கள் மேலைச் சாளுக்கியர்களின் ஆதிக்கத் திலிருந்து விடுபட்டுச் சுதந்திரமாகச் செயல்பட ஆரம்பித் தார்கள். இவர்கள் கி. பி. 1070 வரை தக்காண வரலாற்றில் ஒரு தனி அரசாக இலங்குவதைக் காணப்போகிறோம்.)

## இரண்டாம் புலிகேசியும் பல்லவர்களும்

விஷ்ணுகுண்டினர்களின் அரசிற்கும் தெற்கே, சிம்மவிஷ்ணு வம்சத்தைச் சேர்ந்த பல்லவர்களின் ஆட்சிக்குட்பட்ட பகுதி இருந்தது. பல்லவ அரசின் மீது புலிகேசி அடுத்து மேற்கொண்ட படையெடுப்பை ஐஹோள் விளக்கிக் கூறுகிறது. இந்தப் பல்லவ அரசன் யார் என்பது பற்றி வரலாற்றறிஞர்களிடையே கருத்து வேறுபாடு உள்ளது. ஐஹோள் பொறிப்பு இதுபற்றிக் கூறும் செய்தி என்ன என்பதைப் பார்ப்போம். 'பல போர்களில் பெற்ற வெற்றியினுல் பூரிப்படைந்திருந்த புலிகேசியின் படைகளின் முன்னேற்றம், பல்லவர் தலைவனின் பெருமையைக் குலைத்தது;

பிறகு அவன் காஞ்சிபுரத்தில் ஓடி ஒளியச் செய்தது[1] என்று அப் பொறிப்பு கூறுகிறது. இந்தப் பல்லவ அரசன் முதலாம் மகேந்திர வர்மனாக இருக்கலாம் என்று சிலர் கருதுகின்றனர். இப் படையெடுப்பின் விளைவாகச் சாளுக்கியப் படைகள் காஞ்சிபுரம் வரை முன்னேறின என்றும், பல்லவ நாட்டின் வடபகுதிகள் சாளுக்கியர் வசமாயின என்றும் ஊகிக்கலாம். இப் பல்லவ அரசன் மகேந்திர வர்மன் என்று ஐஹோள் பொறிப்பு குறிப்பிட்டுச் சொல்லவில்லை. புலிகேசியுடன் போரிட்ட பல்லவ அரசன் முதலாம் மகேந்திர வர்மன்தான் என்ற கருத்தை வலியுறுத்தும் வகையில், காசாக் குடிச் செப்பேடு ஆதாரமாகக் கூறுகிறது. புல்லலூரா என்ற இடத்தில் மகேந்திரவர்மன் தன் பகைவர்கள் மீது பெற்ற வெற்றியை இச் செப்பேடு குறிப்பிடுகிறது. இவ்வாறாகச் சாளுக்கிய அரசன் பல்லவன் மீது வெற்றி கண்டான் என்று ஐஹோள் பொறிப்பும், மகேந்திரவர்மன் தன் பகைவன் மீது புல்லலூராப் போரில் வெற்றி பெற்றான் என்ற காசாக்குடிச் செப்பேடுகளும் கூறும் செய்தி ஒன்றுடன் ஒன்று முரண்பட்டதாக உள்ளது. இரண்டாம் புலிகேசி எந்தப் பல்லவ அரசன் மீது வெற்றிபெற்றான் என்ற செய்தி ஐஹோள் பொறிப்பில் காணப்படாதது போல, மகேந்திரவர்மன் புல்லலூராப் போரில் பெற்ற வெற்றி யார்மீது என்பதும் காசாக்குடிச் செப்பேட்டில் குறிப்பிடப்படவில்லை. ஐஹோள் பொறிப்பில் காணப்படும் அரை குறை செய்தியிலிருந்து புலிகேசி பல்லவ மகேந்திரனுடன் போரிட்டான் என்பதைத் திட்டவட்டமாகக் கூறமுடியாது. அதேபோல மகேந்திர வர்மன் தன்னுடைய 'முக்கிய பகைவர்களை (dvisatam visesan) அப்போரில் வென்றான் என்று பன்மையில் கூறுகிறது. எனவே அப் பகைவன் புலிகேசியாக இருக்க முடியாது. அப்படி புலிகேசி புல்லலூராவில் தோற்கடிக்கப்பட்டிருந்தால், ஐஹோள் பொறிப்பு கூறுவது போல அவன் எப்படித் தெற்கே காவிரி வரை முன்னேறிச் சென்றிருக்க முடியும்? மகேந்திரவர்மனுடைய சாஸனங்களோ, அவன் வழித் தோன்றல்களின் சாஸனங்களோ அவன் சாளுக்கிய அரசன் மீது வெற்றி பெற்றதாகக் குறிப்பிட்டுச் சொல்லவில்லை. எனவே புல்லலூரில் மகேந்திர வர்மனால் தோற்கடிக்கப்பட்டதாகக் கூறப்படும் அரசன் யாராக இருக்கக்கூடும்? அவன் சோழ வம்சத்தைச் சேர்ந்த ஒருவனாக இருக்கக்கூடும் என்று டாக்டர் டி. வி. மகாலிங்கம்

[1] The forces of Pulakesin "caused the splendour of the Lord of The Pallavas first to be obscured by the dust they raised, and then to vanish behind the walls of Kanchipuram.".

கருதுகிறார்.[1] பல்லவர்கள் பல்வேறு காலப்பகுதிகளில் சோழர்களைத் தங்கள் ஆதிக்கத்திற்கு உட்படுத்தியிருந்தார்கள் என்பதையும், சோழர்கள் பல்லவர்கள் ஆதிக்கத்திலிருந்து தங்களை விடுவித்துக்கொள்ள அடிக்கடி முயன்றதால் அவர்களிடையே போர்கள் நிகழ்ந்தன என்பதையும் நாம் பல்லவர்கள் சாஸனங்களிலிருந்து அறிய முடிகின்றது. ஆகவே மகேந்திரவர்மன் புல்லலூரிலிருந்து போரிட்டது ஒரு சோழ அரசனுக்கு எதிராக இருக்கலாம். அந்தச் சோழ அரசன் சுந்தரச் சோழனின் 'அன்பில்' செப்பேடுகளில் கூறப்பட்டிருக்கும் கோச்செங்கணனின் மகன் நல்லடியாக இருக்கலாம். கோச்செங்கணன் சிம்மவிஷ்ணு பல்லவனின் சமகாலத்தவன். கோச்செங்கணனின் மகன் நல்லடி சிம்மவிஷ்ணுவின் மகன் மகேந்திரவர்மனின் சமகாலத்தவனாக இருக்கக்கூடும். நல்லடி, பல்லவர் ஆதிக்கத்தை எதிர்த்து நடத்திய போரில் புல்லலூரில் மகேந்திரவர்மனால் தோற்கடிக்கப்பட்டிருக்கக்கூடும். இந்தப் போரில் மகேந்திரவர்மனை எதிர்த்துப் போரிட்ட அரசன் சாளுக்கியனுமல்லன், சோழனுமல்லன்; அவன் துர்வீநீதன் என்ற கங்க அரசன் என்று கருதுவோரும் உண்டு.

இரண்டாம் புலிகேசி பல்லவர்களைக் காஞ்சிபுரத்திற்கருகே போரில் வென்ற பிறகு, காவிரி ஆற்றைக் கடந்து சோழர்கள், கேரளர்கள், பாண்டியர்கள் ஆகியவர்களைப் பல்லவர்களுக்கு எதிராகக் கிளர்ச்சி செய்யும்படித் தூண்டும் நோக்கத்துடன் அவர்களுடன் நட்புறவை ஏற்படுத்திக் கொண்டான் என்று ஐஹோள் சாஸனம் மேலும் கூறுகிறது. இதன்பின்பு புலிகேசி தன்னுடைய தலைநகரான வாதாபிக்குத் திரும்பிவிட்டான். அவனுடைய கீழைத் தக்காணப் படையெடுப்பும், பல்லவர்களுடன் போரும் கி. பி. 630-631ஆம் ஆண்டுக் காலப்பகுதியில் நிகழ்ந்திருக்கவேண்டும். அவன் கிழக்குக் கரைப் பகுதிகளில் தங்கியிருந்த செய்தியைக் கொப்பாரம் செப்பேடுகளும் (631 கி.பி.) 'கிழக்கு மேற்குக் கடல்களின் அதிபதி' என்று அவன் பட்டப் பெயரைச் சூட்டிக் கொண்டதைக் கி. பி. 630ஆம் ஆண்டு லோஹ்னர் சாஸனமும் கூறுவதால் இந் நிகழ்ச்சிகள் இக் காலப் பகுதியில்தான் நடந்திருக்கவேண்டும்.

புதிதாக வென்ற பகுதிகளைத் தன்பேரரசிற்குட்படுத்தி அவற்றின் செம்மையான நிர்வாகத்திற்குத் தேவையான ஏற்பாடுகளையும் புலிகேசி செய்தான். நாசிக் பகுதியைத் தன் சகோதரன் ஜயசிம்மன் வசமும், வேங்கிப் பகுதியை மற்றொரு சகோதரன்

[1] T, V. Mahalingam - op. cit. P. 68.

விஷ்ணுவர்தனனிடமும் ஒப்படைத்து, அவற்றின் சீரான, செம்மையான நிர்வாகத்திற்குத் தேவையான பல நடவடிக்கைகளையும் மேற்கொண்டான். இவனுடைய பேரும் புகழும் கடல் கடந்த நாடுகளிலும் பரவியது. இரண்டாம் புலிகேசி கி. பி. 625-26ல் பாரசீக மன்னனான இரண்டாம் குஸ்ரு என்பவனுடைய அவைக்குத் தன் தூதுவர்களைப் பல பரிசுப் பொருள்களுடன் அனுப்பியதாகப் பாரசீக வரலாற்றறிஞர் டபரி (Tabari) குறிப்பிடுகிறார் [1]. பாரசீக மன்னன் குஸ்ருவும் புலிகேசியின் அவைக்கு ஒரு தூதுவனை அனுப்பியிருக்கக் கூடும். இந்த இரு அரசர்களுக்குமிடையே நிலவிய நட்புறவையும், தூதுவர்கள் பரிவர்த்தனையையும் உறுதி செய்யும் வகையில், அஜந்தா குகை ஓவியங்களிலிருந்து நமக்குச் சான்றுகள் கிடைத்துள்ளன. அஜந்தா முதல் குகையின் (Cave I) கூரையில் வரையப்பட்டுள்ள ஓவியத்தில் காணப்படுவது பாரசீக அரசன் இரண்டாம் குஸ்ரு, அவன் மனைவி ஷிரின் ஆகியவர்களுடைய உருவங்கள் என்றும், அதே குகையின் முன் பிரகாரச் சுவரில் காணப்படும் மற்றொரு ஓவியம் புலிகேசி பாரசீக மன்னனால் அனுப்பப்பட்டதூதுவனை வரவேற்கும் காட்சியைச் சித்திரிக்கிறதென்றும் வரலாற்றறிஞர் கருதுகின்றனர். டபரியால் குறிப்பிடப்பட்டிருக்கும் அரசன் யார் என்பது பற்றியும், மேலே குறிப்பிடப்பட்டுள்ள அஜந்தா ஓவியங்களின் பொருள் விளக்கம் குறித்தும் கருத்து வேறுபாடுகள் இருக்கலாம். ஆனால் அந்தக் காலப் பகுதியில் இந்தியாவிற்கும் பாரசீக நாட்டிற்கும் நெருங்கிய உறவு இருந்தது என்பது பற்றிக் கருத்து வேற்றுமை இருக்க முடியாது.

துங்கபத்திரை ஆற்றின் இரு மருங்கிலும் அமைந்திருந்த பேரரசுகளிடையே தென்னிந்திய வரலாற்றில் ஓயாமல் நடந்து கொண்டிருந்த ஆதிக்கப் போட்டியின் ஒரு கட்டமாகத்தான் மேலே விளக்கப்பட்டுள்ள பல்லவ சாளுக்கியப் போரை நாம் கருத வேண்டும். (இரண்டாம் புலிகேசிக்கும், முதலாம் மகேந்திரவர்மனுக்குமிடையே நடந்த போருடன் தொடங்கிய இவ் வாதிக்கப் போட்டி, பல நூற்றாண்டுகள் விட்டு விட்டு நடந்து கொண்டிருந்தது.) அதன் மற்றொரு கட்டம்தான் புலிகேசிக்கும் மகேந்திரவர்மன் மகன் முதலாம் நரசிம்மவர்மனுக்குமிடையே

[1] டபரியின் குறிப்புகளில் சாளுக்கிய அரிசனின் பெயர் 'பரமேசா' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. 'பரமேசா' அல்லது பரமேஸ்வரா என்பது புலிகேசியின் மற்றொரு பெயர் என்பது அவனுடைய பல பொறிப்புகளிலிருந்து புலப்படும். (Paramesvarapara—namadheya) பரமேஸ்வரா என்பது ஒரு பட்டப்பெயர் என்றும் டபரி குறிப்பிட்டிருப்பது, பரமேஸ்வரா என்ற பட்டத்தைத் தரித்த ஹர்ஷவர்த்தனராகவே இருக்கலாம் என்னும் ஒருசிலருடைய கருத்து ஏற்புடையதாகாது. ஏனெனில் இங்கு 'பரமேஸ்வரா' என்பது ஒருவரின் பெயராகக் குறிப்பிடப்பட்டதேயன்றி, ஒரு பட்டப்பெயராக அன்று, எனவே டபரி குறிப்பிட்டிருக்கும் இந்திய அரசன் இரண்டாம் புலிகேசியாகத்தான் இருக்க வேண்டும்.

நடந்த போராகும். தன்னுடைய முதல் பல்லவ நாட்டுப் படையெடுப்பு ஏற்படுத்திய விளைவு, சாளுக்கியர்களுக்கு எதிர்பார்த்த பலனை அளிக்கவில்லை என்பதை உணர்ந்த, முதலாம் புலிகேசிக்கு, முதலாம் நரசிம்மவர்மன் பல்லவ அரியணை யெய்திய செய்தி மகிழ்வூட்டுவதாக இருந்தது. மீண்டும் ஒரு பல்லவப்படையெடுப்பை மேற்கொண்டு, முதலில் சாதிக்க முடியாததை இம் முறை சாதித்து விடவேண்டுமென்று புலிகேசி உறுதி பூண்டான். வளர்ந்து வரும் பல்லவர்களின் செல்வாக்கை ஒழித்து, அவர்கள் போட்டிக்கு ஒரு முடிவு கட்டவேண்டும் என்பது தான் இப்படையெடுப்பின் நோக்கமாகும், என்பது ஐஹோள் பொறிப்பிலிருந்து பெறப்படும்[1]. முதலாம் புலிகேசியின் காலத்திலிருந்து சாளுக்கியர்கள் ஆதிக்கத்திற்கு அடங்கிய சிற்றரசர்களாக இருந்த பாணர்கள் மீது பல்லவர்கள் தங்கள் செல்வாக்கை ஏற்படுத்துவதில் ஓரளவு வெற்றி கண்டார்கள் என்பது பெத்தவடுகூரு (Peddavaduguru) என்ற இடத்தில் கிடைத்த கன்னடப் பொறிப்பு ஒன்றிலிருந்து புலப்படும். முதலாம் மகேந்திரவர்மன் ஆட்சியின் இறுதியில் பாணர்கள் சாளுக்கியப் பிடியிலிருந்து தங்களை விடுவித்துக் கொண்டு பல்லவர்களின் ஆதிக்கத்தை ஏற்றுக் கொண்டிருக்கக் கூடும். இதைத்தான் ஐஹோள் பொறிப்பு 'வளர்ந்து வரும் பல்லவர்களின் செல்வாக்கு' என்று குறிப்பிடுகிறது போலும். எனவே பல்லவர்கள் செல்வாக்கை ஒழிக்கும் பணியின் முதல் கட்டமாகப் பாணர்களை மீண்டும் தன் ஆதிக்கத்திற்குட்படுத்த அவர்கள் மீது ஒரு படையெடுப்பை இரண்டாம் புலிகேசி மேற்கொண்டான். இப் படையெடுப்பு பல்லவ-சாளுக்கியப் போரின் அடுத்த கட்டத்தின் தொடக்கமாக அமைந்தது. பாணர்கள் மீது இப் படையெடுப்பு மேற்கொள்ளப்பட்டது. என்பதற்குக் கி.பி. 631ஆம் ஆண்டைச் சேர்ந்த இரண்டாம் புலிகேசியின் கொப்பாரம் செப்பேடுகள் சான்று பகர்கின்றன. புலிகேசி தானே நேரில் வந்து அந்தணன் ஒருவனுக்குக் கர்மராஷ்டிரத்திலுள்ள இர்புலி என்னும் கிராமத்தில் நிலத்தைக் கொடையாக வழங்கிய செய்தியை இச் செப்பேடு குறிப்பிடுகிறது. கொண்டவீடு என்ற இடத்திற்குத் தெற்கிலும் விப்பர்லா என்ற இடத்திற்கு வடக்கிலும் இந்த் நிலம் அமைந்திருந்தது. கி. பி. 631 ஆம் ஆண்டில் புலிகேசி தன் படைகளுடன் தெற்கு நோக்கி வந்திருக்க

[1] 'akranta. atmabalonnatim' என்ற ஐஹோள் பொறிப்பு வாசகத்திற்குப் பல்பொருள் விளக்கங்கள் கூறப்படுகின்றன 'புலிகேசியின் எழுச்சியை எதிர்த்த பல்லவர்கள்' என்று இது பொருள்படும் என்று சிலர் கருதுகின்றனர். ''வளர்ந்து வரும் பல்லவர்களின் செல்வாக்கு புலிகேசியின் ஆதிக்கவளர்ச்சிக்குப் போட்டியாக இருந்தது'' என்று பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியார் இதற்குப் பொருள் கூறுகிறார்.

வேண்டும். என்பதை இச் செப்பேடுகளிலிருந்து நாம் அறிந்து கொள்ளலாம் பாணர்களைத் தோல்வியடையச் செய்து, மீண்டும் தன் ஆதிக்கத்தை அவர்கள் ஏற்றுக் கொள்ளும்படி செய்த பிறகு, புலிகேசி பல்லவர்கள் மீது தன் கவனத்தைத் திருப்பினான். அதற்கு முன், பல்லவர்கள் செல்வாக்கிற்குட்பட்டிருந்த மற்றொரு அரச மரபினர்களான ரேநாடு பகுதியை ஆண்ட தெலுங்கு சோடர்களைத் தன் ஆதிக்கத்திற்குட்படுத்தினான். நந்திவர்மன், சிம்மவிஷ்ணு, மகேந்திரவர்மன் போன்ற பெயர்களைச் சூட்டிக் கொண்ட தெலுங்கு சோட அரசர்கள் பல்லவர்கள் ஆதிக்கத்திற் குட்பட்டிருந்தவர்கள் என்பது அவர்களின் பெயரிலிருந்தே விளங் கும். மகேந்திரவர்மனின் மகன் புண்யகுமாரன் காலத்தில்தான் தெலுங்கு சோடர்கள் பல்லவர்கள் ஆதிக்கத்திலிருந்து புலிகேசியின் உதவியால் விடுதலை பெற்றிருக்க வேண்டும். ஏனெ னில் புண்யகுமாரனுடைய ராமேஸ்வரம் தூண் கல்வெட்டில் அவன் 'பிரிதிவி வல்லபவன்' என்ற பட்டத்தைச் சூட்டிக் கொண் டிருப்பதை நாம் காண்கிறோம். அவனுக்குப் பின்பு ஆண்ட அரசர்களும் விக்கிரமாதித்தன், சத்யாதித்யன் போன்ற பட்டங் களையே சூட்டிக் கொண்டனர். இப் பட்டப்பெயர்கள் யாவும் சாளுக்கிய அரசர்களால் பயன்படுத்தப்பட்டவை என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. மேலே கூறிய செய்திகளிலிருந்து புலிகேசி தெலுங்கு சோடர்களையும் தன் ஆதிக்கத்திற்குட்படுத்திக் கொண்டான் என்பது விளங்கும்.

புலிகேசி முதலாம் நரசிம்மவர்மனுடன் போர் தொடுத்ததற்கு மற்றொரு காரணமும் இருக்கலாம் என்று டாக்டர் டி. வி. மகா லிங்கம் கருதுகிறார்.[1] புலிகேசியின் தம்பியும் வேங்கியின் ஆளு நனுமான விஷ்ணுவர்த்தனனை மகாராஜன் என்ற பட்டப் பெயர் கொண்டு அழைக்கும் முதல் சாஸனம் கி. பி. 641ஆம் ஆண்டைச் சேர்ந்தது. எனவே அவன் ஆண்டுகொண்டிருந்த வேங்கிப் பகுதி கிழக்குச் சாளுக்கிய அரசு என்ற பெயருடன் கி.பி. 641 ஆம் ஆண்டிலோ அதற்கு முன்போ சுதந்திர அரசாக மலர்ந்திருக்க வேண்டும். கி. பி. 641-42 ஆம் ஆண்டு விஷ்ணுவர்தனின் கடைசி ஆட்சி ஆண்டு. அந்த ஆண்டில் அவன் இறந்திருக்க வேண்டும். அவனுக்குப் பிறகு இளைஞனான அவன் மகன் முத லாம் ஜயசிம்மவல்லபன் அரியணையேறினான். அப்பொழுது தான் சுதந்திர நிலை எய்தியிருந்த கீழைச் சாளுக்கிய அரசிற்கு அது ஒரு சோதனைக் காலம் ஆகும். விஷ்ணுவர்த்தனனும் இறந்து, நாட்டின் ஆட்சிப் பொறுப்பு ஓர் இளைஞனின் கையில் ஒப்படைக்

[1] Ibid, P. 83.

கப்பட்டிருந்த இந்த நெருக்கடியான சூழ்நிலையை நரசிம்மவர்மன் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டிருக்க வேண்டும். தன்னுடைய தந்தைக் காலத்தில் இழக்கப்பட்ட பல்லவ அரசின் வடபகுதியை மீட்கும் நோக்கத்துடன் கீழைச் சாளுக்கிய அரசைத் தன் அடுத்த இலக்காகக் கருதி நரசிம்மவர்மன் செயல் பட்டிருக்க வேண்டும். வட பகுதியில் நரசிம்மவர்மனின் இந்த ஆதிக்க வளர்ச்சி புலிகேசியை அச்சுறுத்தியிருக்க வேண்டும். சாளுக்கியர் ஆதிக்கத்திற்கு மேலும் ஊறு விளைவிப்பதைத் தடுக்கும் பொருட்டுப் புலிகேசி நரசிம்மவர்மன் மீது போர் தொடுக்க முடிவு செய்திருக்க வேண்டும். இந்தப் போர் கி. பி. 641-42 ஆம் ஆண்டில் நடந்திருக்கக் கூடும். இந்தப் போரைப் பற்றிய செய்திகளை நாம் பல்லவர் சாஸனங்களிலிருந்து தான் அறிய முடிகின்றது. கூரம், உதயேந்திரம், வேலூர்ப்பாளையம் செப்பேடுகளும், வாதாபிப் பொறிப்பும் நரசிம்மவர்மன் பெற்ற வெற்றியைக் குறிப்பிடுகின்றன. முதல் இரண்டு செப்பேடுகள் புலிகேசி நரசிம்மவர்மனால் மணி மங்கலம், பரியளா, சூரமாரா ஆகிய மூன்று போர்களில் தோற்கடிக்கப்பட்டுப் புறமுதுகு காட்டி ஓடினான் என்று கூறுகின்றன. வேலூர்ப்பாளையம் செப்பேடுகள், நரசிம்மவர்மன் புலிகேசி மீது பெற்ற வெற்றியைக் குறிப்பிடுவதோடு மட்டுமன்றி வாதாபி நகரின் மையத்திலிருந்த வெற்றித் தூணைக் (Jayasthamba) கைப்பற்றினான் என்றும் கூறுகிறது. புலிகேசி தன் படைகளுடன் பல்லவர்களின் நேரடி ஆட்சிக்குட்பட்ட பகுதிகளில் நுழைந்து காஞ்சிபுரத்திற்கு அருகில் வந்து விட்டான். இந்தக் கட்டத்தில்தான் காஞ்சிபுரத்திற்குக் கிழக்கே இருபது மைல் தொலைவில் இருக்கும் மணி மங்கலத்தில் ஒரு போர் நடந்தது. அதில் நரசிம்மவர்மன் பெருவெற்றி அடைந்தான்.[1] சூரமாரா என்பது சித்தூர் மாவட்டத்திலுள்ள சூரமாலா என்ற இடமாக இருக்கலாமென்றும், பரியளா என்பது கடப்பை மாவட்டத்திலுள்ள பைடலா என்ற ஊராகவோ கிருஷ்ணா மாவட்டத்திலுள்ள பர்த்தியலா என்ற ஊராகவோ இருக்கக்கூடும் என்று வரலாற்றறிஞர் கருதுகின்றனர். கர்நூலுக்கருகிலுள்ள பர்லே என்ற ஊரைத்தான் இது குறிக்கும் என்பது ஒரு சிலருடைய கருத்து. இதன் அடிப்படையில் இப் படையெடுப்பை ஆராய்ந்தால், புலிகேசி முதலில் தெற்கே காஞ்சி வரை முன்னேறி மணிமங்கலப் போரில் தோற்றுப்

[1] இப்போரில் இலங்கை அரச மரபைச் சேர்ந்த மானவர்மன் நரசிம்மவர்மனுக்குப் பெருந்துணையாக இருந்தான், பின்னர் அவன் இலங்கையின் அரசனாவதற்கு நரசிம்மவர்மன் உதவிபுரிந்தான். நரசிம்மவர்மன் என்னும் காடு வெட்டி (பல்லவ) அரசன், வல்லபனுக்கு (இரண்டாம் புலிகேசி) எதிராகச் செய்த போரில் மானவர்மன் பல்லவ அரசனுக்கு உதவினான் என்று இலங்கை பௌத்தசமயநூலான ''மகாவம்சம்'' கூறுகின்றது.

பின்வாங்க நேரிட்டது என்பதையும், பின்வாங்கி ஓடிக்கொண்டிருந்த சாளுக்கியப் படைகளைப் பல்லவப் படைகள் பின்தொடர்ந்து சென்று சூரமாராப் போரில் மீண்டும் தோற்கடித்தன என்பதையும், பரியளாப் போரில் மீண்டும் வெற்றி கண்ட நரசிம்மவர்மனின் படைகள் வடக்கு நோக்கி முன்னேறிச் சாளுக்கியத் தலைநகரம் வாதாபி வரை சென்று, அந் நகரைக் கைப்பற்றின என்பதையும் தெளிவாகப் புரிந்து கொள்ளலாம். இந்த வாதாபிப் போரில் தான் புலிகேசி உயிர் இழந்திருக்க வேண்டும். 'வாதாபி கொண்டான்' என்று நரசிம்மவர்மன் வைத்துக் கொண்ட பட்டப் பெயரும், பாதாமி நகரில் உள்ள மல்லிகார்ஜுன கோயிலுக்குப் பின்புறமுள்ள ஒரு பாறையில் செதுக்கப் பட்டுள்ள 'சிம்ம விஷ்ணு அல்லது நரசிம்ம விஷ்ணுவினால் இந் நகரம் கைப்பற்றப்பட்டது' என்ற வாசகமும் நரசிம்மவர்மன் வாதாபி நகரைக் கைப்பற்றிய செய்தியை உறுதிப்படுத்துகின்றன.

வாதாபி நகரம் பல்லவர்கள் வசம் எவ்வளவு காலம் இருந்தது என்பதை அறுதியிட்டுக் கூறமுடியாது. புலிகேசி தன் தகப்பன் ஆட்சியில் பல்லவ நாட்டின் மீது படையெடுத்து வந்ததற்குப் பழி வாங்குவதுதான் நரசிம்மவர்மனின் நோக்கமேயன்றி, வாதாபியைக் கைப்பற்றுவதோ சாளுக்கிய அரசைப் பல்லவ அரசுடன் இணைப்பதோ அவன் நோக்கமல்ல. நரசிம்மவர்மனின் இந்தப் படையெடுப்பின் விளைவாகச் சாளுக்கிய அரசு பெருங் குழப்பத்தில் ஆழ்ந்தது. பிரிவினைச் சக்திகள் நாட்டில் ஏற்றம் பெற்றன. புலிகேசியின் ஆட்சிக்குட்பட்டிருந்த சிற்றரசர்கள் பலர் தங்களைச் சுதந்திர அரசர்களாக அறிவித்துக் கொண்டனர். குஜராத் சாளுக்கிய கிளை மரபைச் சேர்ந்த விஜயராஜன் என்னும் அரசனின் கி. பி. 643 ஆம் ஆண்டு கைரா சாஸனத்தில் (Kaira grant) காலசூரி சகாப்தம் பயன்படுத்தப்பட்டிருப்பதோடு மட்டுமல்லாமல், வாதாபிச் சாளுக்கியர்களின் ஆதிக்கத்தைப் பற்றி ஒரு குறிப்பும் இல்லை. இதுவரை மேலைச் சாளுக்கியர்களுக்கு அடங்கியிருந்த சேந்த்ரகர்களும் சுயயேச்சை பெற்றனர். புலிகேசிக்குப் பிறகு அரச குடும்பத்திலும் விரும்பத்தகாத பொறாமை உணர்ச்சி தோன்றி வாரிசுரிமைக்காகப் பல இளவரசர்களிடையே போட்டி ஏற்பட்டது. இளவரசர்கள் தங்களிடம் ஒப்படைக்கப்பட்டிருந்த மாநிலங்களில் தங்களைச் சுதந்திர அரசர்களாக அறிவித்துக் கொண்டார்கள். இவ்வாறாகச் சிற்றரசர்கள், இளவரசர்கள் ஆகியோரின் நடவடிக்கைகள் புலிகேசியினால் உருவாக்கப்பட்ட சாளுக்கியப் பேரரசின் ஒற்றுமைக்கும், ஒருமைப்பாட்டிற்கும் குந்தகம் விளைவிக்கும் வகையில் அமைந்திருந்தன.

புலிகேசியின் மகன் முதலாம் விக்கிரமாதித்யன் பட்டத்திற்கு வருவதற்கு, அவனுடைய இருசகோதரர்கள் ஆதித்யவர்மனும் சந்திராதித்யனும், தடையாக இருந்தனர். இவ்வாறு சாளுக்கியப் பேரரசில் நிலவிய குழப்ப நிலைக்கு ஒரு முடிவு கண்டு, மீண்டும் சாளுக்கியர் ஆதிக்கத்தை நிலைநாட்டிய பெருமை கி. பி. 655ஆம் ஆண்டில் அரியணையேறிய முதலாம் விக்கிரமாதித்தனைச் சாரும். சாளுக்கியர் பெருமையை மீட்கும் இந்தப் பணியில் விக்கிரமாதித்தனுக்கு உறுதுணையாக இருந்தவன் அவன் தாய் வழிப்பாட்டனை கங்க அரசன் துர்விநீதன் ஆவான். தன் மகள் மீதும் பேரன் மீதும் துர்விநீதனுக்கு இருந்த அக்கறையும், தன் மருமகனையும் (இரண்டாம் புலிகேசி) அவன் அரசையும் அழித்த பல்லவன் மீது இருந்த பகைமையும், தன் மேலாட்சியாளர்களான சாளுக்கியர்கள் மீது கொண்டிருந்த பற்றுறுதியும் துர்விநீதன் சாளுக்கிய விக்கிரமாதித்தனுக்கு உதவி செய்ய முன் வந்ததற்குத் தூண்டுகோலாக இருந்திருக்கக் கூடும்.[1]

### மேலைச் சாளுக்கிய அரசு பற்றிய யுவான் சுவாங் குறிப்பு

சாளுக்கிய-பல்லவப் போர்நடந்த இந்தக் காலப்பகுதியில், சுமார் கி. பி. 641ல் யுவான் சுவாங் என்ற சீனப்பயணி சாளுக்கிய நாட்டிற்கு வந்தார். பௌத்த சமயத்தின் பிறப்பிடமான இந்தியாவிற்கு வந்து, புத்தரின் வாழ்க்கையோடு நெருங்கிய தொடர்பு கொண்ட பல்வேறு நகரங்களைப் பார்வையிட வேண்டுமென்பதும், பௌத்த சமய நூல்களை இந்தியாவிலிருந்து சேகரித்துத் தன் நாட்டிற்கு எடுத்துச் செல்ல வேண்டும் என்பதும் யுவான் சுவாங் இந்தியாவிற்கு வந்ததின் நோக்கமாகும். பாஹியானைப் போலல்லாமல், யுவான் சுவாங் இந்தியா முழுவதையும் சுற்றிப் பார்க்கும் வாய்ப்பைப் பெற்றார். சென்றவிடங்களிலெல்லாம் தான் கண்டதையும் கேட்டதையும் தன்னுடைய பயணக் குறிப்புகளில் அவர் எழுதி வைத்துள்ளார். பௌத்த சமயந்தான் அவருடைய முக்கிய ஈடுபாடு. ஆகையால் அவர் குறிப்புகளில் பௌத்த சமயத்தைப் பற்றிய பல செய்திகள் காணப்படுகின்றன. இந்தியாவில் பௌத்த சமயத்தின் வரலாற்றை அறிந்து கொள்ள இக்குறிப்புகள் பெரிதும் பயன்படும். அரசியல், நிர்வாகம் பற்றிய செய்திகள் அங்குமிங்குமாகத்தான் காணப்படுகின்றன. வட இந்தியாவின் பல்வேறு பகுதிகளையும் சுற்றிப் பார்த்து விட்டு ஹர்ஷருடைய பேரரசில் அவர் சிட்டு

[1] G. yaydani (Ed.) The Ealy History of the Deccan. P. 220. இரண்டாம் புலிகேசி கங்க அரசன் துர்விநீதன் மகளை மணந்திருக்கக்கூடும் என்ற அடிப்படையில் விக்கிரமாதித்தன் துர்விநீதனின் மகள் வயிற்றுப் பேரனாகக் கருதப்படுகிறான்.

ஆண்டுகள் தங்கியிருந்தார். அவர் ஹர்ஷரைப் பற்றியும், அவர் ஆட்சியைப் பற்றியும், வட இந்தியாவின் சமூக, சமய நிலை பற்றியும் தன்னுடைய பயணக் குறிப்புகளில் கொடுத்திருக்கும் செய்திகள் வரலாற்று மாணவர்களுக்குப் பெரிதும் பயனளிப்பவையாக உள்ளன. தெற்கே பல்லவ நாட்டிற்கு வந்து, அங்கிருந்து பாண்டிய நாடு சென்று மீண்டும் பல்லவ நாட்டிற்கு வந்து, அங்கிருந்து சாளுக்கிய நாட்டை கி. பி. 641-42 ஆம் ஆண்டில் அடைந்தார். சாளுக்கியர்கள் நாட்டை அவர் மொஹா-லா-சா (Moho-la-cha) என்று அழைக்கின்றார். இந்த நாட்டைப் பற்றியும், அம் மக்கள் பற்றியும் அஜந்தாவின் பௌத்த மடாலயங்கள் பற்றியும், ஓவியங்கள் பற்றியும் பல சுவையான செய்திகள் அவர் குறிப்பில் காணப்படுகின்றன. அந் நாட்டு அரசனின் பெயர் புலோகிஷி (Pu-lo-ki-she) என்றும் அவர் க்ஷத்திரிய குலத்தைச் சேர்ந்தவன் என்றும் அவர் குறிப்பு கூறுகிறது. அவனுடைய அன்பு கலந்த ஆதிக்கம் நாடெங்கும் பரவியிருந்ததென்றும், அவனைச் சார்ந்து வாழ்ந்த சிற்றரசர்கள் அவனிடம் பற்று உறுதியுடன் இருந்தனரென்றும் யுவான் சுவாங் கூறுகிறார். அவனுடைய நாடு ஐந்தாயிரம் லீ அதாவது 836 மைல் பரப்பளவு கொண்டதாகவும், அதன் தலைநகரம் முப்பது லீ; அதாவது 5 மைல் பரப்பளவு கொண்டதாகவும் இருந்தது. அந் நகரின் மேற்கு எல்லையாக ஒரு பெரிய ஆறு இருந்தது.[1] அவருடைய அந் நாட்டைப் பற்றிய வருணனையிலிருந்து சாளுக்கிய நாடு சுபிட்ச நிலையில் இருந்தது என்பது புலப்படும். 'நாட்டு விளை நிலங்கள் தவறாமல் பயிர்த்தொழிலுக்குப் பயன்படுத்தப்பட்டன, நிலம் செழிப்பு மிக்கதாக இருந்தது. உருவத்தில் உயரமாக இருந்த அந் நாட்டு மக்கள் எளிமை, நேர்மை போன்ற பண்புகளைப் பெற்றிருந்தனர். அவர்களிடம் பழி வாங்கும் தன்மையும் காணப்பட்டது. கல்வியறிவு பெறுவதில் அம் மக்கள் ஆர்வம் காட்டினர். தங்களுக்கு உதவி செய்தவர்களுக்குக் கடப்பாடு உடையவர்களாகவும், பகைவர்களிடம் ஈவிரக்கம் இல்லாதவர்களாகவும் அவர்கள் காணப்பட்டனர். இன்னலுற்றவர்களுக்கு உதவி செய்யத் தயங்காத அம் மக்கள், தங்களை அவமதித்தவர்கள் மீது பழிவாங்குவதில் தங்கள் உயிரையே பணயம் வைக்கவும் தயங்கமாட்டார்கள். தப்பித்துச் செல்ல முயன்ற பகைவர்களைத் துரத்திச் செல்வார்கள். ஆனால் சரணடைந்து விட்ட ஒருவனுக்கு எந்தத் தீங்கும் இழைக்கமாட்டார்கள்' என்று அந் நாட்டு மக்களின் பண்புகளைப்பற்றி யுவான் சுவாங் குறிப்பிடுகிறார்.

[1] இந்நகரம் மஹாராஷ்டிரத்தில் இருக்கும் நாசிக் நகரமாக இருக்கக்கூடும் என்று சிலரும் எல்லோராவாக இருக்கக் கூடும் என்று சிலரும் கருதுகின்றனர்.

ஹர்ஷருக்கும் புலிகேசிக்கும் நடந்த போரில் ஹர்ஷர் தோற்ற செய்தியை யுவான் சுவாங் தன் பயணக் குறிப்புகளில் கூறுகின்றார் என்பதை நாம் முன்பே குறிப்பிட்டிருக்கிறோம்.

மேலைச் சாளுக்கிய அரசர்களில் இரண்டாம் புலிகேசி ஒரு சிறப்பிடத்தைப் பெறுகின்றான். அவனுடைய போர்ச்சாதனைகளும், அண்டை நாடுகளைக் கைப்பற்றி ஒரு பேரரசை உருவாக்கியதும் அவன் பெருமைக்குக் காரணங்களாகும். தென்னிந்தியாவிலேயே வலிமை மிக்க அரசனாகத் திகழ்ந்த புலிகேசி ஹர்ஷருடைய ஆதிக்கம் தென்னிந்தியாவின் மீது பரவுவதைத் தடுத்து நிறுத்தினான். வேகமாக வளர்ந்து கொண்டிருந்த பல்லவர்களின் ஆதிக்கத்தைத் தற்காலிகமாகத் தடை செய்தான். அவனுடைய புகழும், பெருமையும் இந்தியா மட்டுமன்றி, அயல் நாடுகளிலும் பரவியது என்பதைப் பாரசீக வரலாற்றறிஞன் தபரியின் குறிப்புகளிலிருந்து நாம் அறிகிறோம். சத்யாசிரையன், பிரிதிவி வல்லபன், பரமேஸ்வரன், பரம மஹேஸ்வரன் போன்ற பட்டப் பெயர்களை இவன் சூட்டிக் கொண்டான்.

கி. பி. 642 முதல் 655 வரை சாளுக்கிய வரலாற்றில் இருண்ட காலம் எனக் கருதலாம். இரண்டாம் புலிகேசி இறந்த பிறகு, முதலாம் விக்கிரமாதித்யனுடைய ஆட்சி கி. பி. 654-55ல் தொடங்கும் வரை சாளுக்கிய நாட்டில் நடந்த நிகழ்ச்சிகளைப் பற்றித் திட்டவட்டமாக எதையும் கூற இயலாது. அந்த இடையாட்சிக் காலத்தில் புலிகேசியின் பிள்ளைகளிடையே வாரிசுரிமைப் போட்டி ஏற்பட்டிருக்க வேண்டும். முதலாம் விக்கிரமாதித்யனுடைய ஆட்சியின் தொடக்கத்தில் வெளியிடப்பட்ட சாஸனங்களுலிருந்து நாட்டில் ஒரு குழப்பமான சூழ்நிலை நிலவியது என்பதை நாம் புரிந்து கொள்ளலாம். விக்கிரமாதித்யனுடைய சாஸனங்களிலும், அவன் சந்ததியார்கள் சாஸனங்களிலும் காணப்படும் சாளுக்கிய அரச மரபுப் பட்டியலில் இரண்டாம் புலிகேசிக்கும் முதலாம் விக்கிரமாதித்யனுக்குமிடையே வேறெந்த அரசனும் ஆட்சி செய்ததாக விவரங்கள் கிடையா. எனவே அந்தக் காலப்பகுதியில் சாளுக்கிய அரியணை காலியாகவே இருந்தது என்று சிலர் கருதுகின்றனர். பல்லவர்கள் சாளுக்கியப் பேரரசின் ஒரு சில பகுதிகளைத்தான் தங்கள் வசம் ஆக்கிக்கொண்டிருந்தார்கள். பல்லவர்களால் கைப்பற்றப்பட்ட பகுதிகளில் ஏன் முதலாம் விக்கிரமாதித்யன் தன்னை அரசனாக அறிவித்துக் கொள்ளவில்லை? சாளுக்கிய அரியணைக்கு ஒன்றுக்கும் மேற்பட்ட இளவரசர்கள் போட்டியிட்டிருக்கக் கூடும்; அவர்களில் ஒருவரேனும் பல்லவர்களை வாதாபியிலிருந்து வெளி

யேற்றித் தங்கள் ஆதிக்கத்தை நிலை நாட்டக் கூடிய ஆற்றலைப் பெற்றிருக்கவில்லை போலும். இறுதியில் விக்கிரமாதித்யன் கங்க அரசனின் உதவியைப் பெற்றுப் பல்லவர்களை வாதாபியிலிருந்து விரட்டித் தன் தகப்பனின் அரியணையைக் கைப்பற்றியிருக்க வேண்டும். சாளுக்கிய நாட்டில் காடு வெட்டியைக் கைப்பற்றி (அதாவது பல்லவ அரசனைப் பிடித்து) தன்னுடைய மகளின் மகனை (அதாவது முதலாம் விக்கிரமாதித்யனை) அந் நாட்டு அரசனாக ஆக்கிக் கங்க அரசன் துர்விநீதன்பெருமை ஈட்டினான் என்று கங்க அரசர்கள் பொறிப்பு ஒன்றில் கூறப்பட்டிருக்கும் செய்தி நாம் மேலே கூறிய விளக்கத்தை உறுதி செய்யும் வகையில் அமைந்துள்ளது. கர்நூல் சாஸனத்தில் புலிகேசியின் 'அன்பு மகன்' என்றழைக்கப்படும் ஆதித்யவர்மனும், வேறுசில பொறிப்புகளில் குறிப்பிடப்பட்டிருக்கும் சந்திராதித்யனும் முதலாம் விக்கிரமாதித்யனுடன் அரியணைக்குத் தீவிரமாய்ப் போட்டியிட்ட அவனுடைய இரண்டு சகோதரர்களாக இருக்கலாம். முதலாம் விக்கிரமாதித்யனின் தலமன்சி (Talamanchi) நெரூர் (Nerur) சாஸனங்கள் அவன் கி. பி. 654-55ல் அரியணை எய்தினார் என்று கூறுகின்றன.

### முதலாம் விக்கிரமாதித்யன் (கி. பி. 655-681):

கி. பி. 655 ஆம் ஆண்டில் விக்கிரமாதித்யன் சாளுக்கிய அரசைப் பல்லவர்கள் பிடியிலிருந்து விடுவித்துத் தன் 'மரபு வழி உரிமையை நிலை நாட்டினான். இந்நிகழ்ச்சிக்கு முன் சாளுக்கியப் பேரரசு மூன்று அரசர்களால் ஒளிமங்க வைக்கப்பட்டது. (Avanipati tritayantarita) (eclipsed) என்று இவனுடைய பொறிப்புகள் கூறுகின்றன. இம்மூன்று அரசர்கள் யார்? விக்கிரமாதித்யனுடைய இரண்டு சகோதரர்கள் ஆதித்யவர்மனும், சந்திராதித்யனும், பல்லவ அரசன் முதலாம் நரசிம்மவர்மனும் ஆகிய இந்த மூவர் என்று பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரி கருத்துத் தெரிவிக்கிறார். கி.பி. 642ல் புலிகேசி இறந்தது முதல் விக்கிரமாதித்யன் கி.பி. 655ல் அரியணை எய்திய வரையிலான இடைப்பட்ட காலப் பகுதியில் வாரிசுரிமைப் போட்டியும் போர்களும் நடந்திருக்கக் கூடும் என்பதற்குப் பல கல்வெட்டுச் சான்றுகள் உள்ளன. எனவே விக்கிரமாதித்யன் இறுதியாகத் தன்னுடன் போட்டியிட்டவர்களை வென்று அரியணையைக் கைப்பற்றியதற்கு முன் தனக்குப் போட்டியாகக் கிளம்பிய தன்னுடைய சகோதரர்களுடனேயே போரிட்டிருக்கக் கூடும். பல்லவ அரசனை, அவன் ஆக்கிரமித்துக்கொண்ட பகுதிகளிலிருந்து விரட்டும் பொருட்டு அவனுடனும் போரிட்டிருக்கக் கூடும்.

இந்த மூன்று அரசர்கள் பற்றி வேறொரு விளக்கமும் கூற லாம். இவர்கள் சோழ, கேரள, பாண்டிய அரசர்களாக இருக்க லாம்.[1] விக்கிரமாதித்யனுடன் தீராப் பகைமை கொண்டிருந்த பல்லவ அரசனுக்கு இந்த மூன்று அரசர்களும் உதவியாகவும், உடந்தையாகவும் இருந்திருக்கக் கூடும். விக்கிரமாதித்யன் பல்ல வர்களோடு மட்டுமன்றி, இம் மூன்று அரசர்களுடனும் போரிட வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கலாம். விக்கிரமாதித்யனுடைய சந்ததியார்களின் பொறிப்புகள், அவனுடைய மகன் வினயாதித் யன் பல்லவ அரசனின் தலைமையில் இயங்கிக் கொண்டிருந்த மூன்று அரசுகளைக் கீழ்ப்பணிய வைத்தான் (Trairajya kanchi-pati) என்ற செய்தியைக் கூறுகின்றன என்பதை நோக்கும் பொழுது மேலே கூறப்பட்டுள்ள விளக்கமும் பொருத்த முடையதே என்பது புலப்படும்.

விக்கிரமாதித்யனுடைய மூன்றும் ஆட்சி ஆண்டைச் சேர்ந்த கர்நூல் செப்பேடுகளும், அவனுடைய ஆறுவது ஆட்சி ஆண்டைச் சேர்ந்த தலமன்சி செப்பேடுகளும், அவனுடைய அன்னவரம், திப்பலூரு கல்வெட்டுகளும் விக்கிரமாதித்யன் பட்டத்திற்கு வந்து குறுகிய காலத்திலேயே கடப்பை, கர்நூல், நெல்லூர் பகுதிகளைப் பல்லவர்கள் ஆக்ரமிப்பிலிருந்து மீட்டான் என்பதை உணர்த்துகின்றன. நரசிம்மவர்ம பல்லவனால் வாதாபி நகரம் கைப்பற்றப்பட்டவுடன், கர்மராஷ்டிரம் என்றழைக்கப்பட்ட (கடப்பை, கர்நூல், நெல்லூர்) இப் பகுதியும் பல்லவர்களின் ஆதிக்கத்திற்கு உட்படுத்தப்பட்டது. மேற்கூறிய விக்கிரமாதித் யனின் பொறிப்புகள் யாவும் இப் பகுதியில் கிடைத்திருப்பதால், அப் பகுதிகள் மீண்டும் சாளுக்கியர் ஆளுகைக்கு உட்படுத்தப் பட்டன என்று கருதலாம். மேலே கூறப்பட்ட போர்களில் தனக்கு உறுதுணையாக இருந்த இளவல் ஜயசிம்மவர்மனை, விக்கிர மாதித்யன் குஜராத்திற்கு அரசப் பிரதிநிதியாக நியமித்தான்.

**விக்கிரமாதித்யனும், பல்லவர்களும்**

காட்வால் (Gadval) சாவனூர் (Savnur) செப்பேடுகளும், ஹைதராபாத் சாஸனமும் அடுத்தடுத்து முதலாம் நரசிம்ம வர்மன், இரண்டாம் மகேந்திரவர்மன், முதல் பரமேஸ்வர வர்மன் ஆகிய மூன்று பல்லவ அரசர்களுடன் விக்கிரமாதித்யன் போரிட்டான் என்று கூறுகின்றன. நரசிம்மவர்மனுடைய ஆட்சியின் இறுதி ஆண்டுகளில் விக்கிரமாதித்யன் அப்பல்லவ அரச னோடு போர் புரிந்து கடப்பை, கர்நூல், நெல்லூர் பகுதிகளை

[1] P. B. Desai (Ed.)- A. History of Karnataka. P. 101.

(கர்மராஷ்டிரம்) மீட்டிருக்கவேண்டும். ஜயசிம்மவர்மனின் கி.பி. 671ஆம் ஆண்டைச் சேர்ந்த நவசாரி செப்பேடுகள் விக்கிரமாதித்யன் பல்லவர்களைப் பணியவைத்த செய்தியைக் கூறுகின்றன. அச் செய்தி கூறப்பட்டிருக்கும் முறையிலிருந்து அந் நிகழ்ச்சி அண்மையில் நிகழ்ந்திருக்கவேண்டும் என்பது புலப்படும். கி. பி. 670-71 காலப்பகுதியில் விக்கிரமாதித்யன் காஞ்சிபுரத்திற்கு அருகே மல்லியூர் என்னுமிடத்தில் தன் படைகளுடன் முகாமிட்டிருந்தான் என்ற செய்தி இதை உறுதிப்படுத்துவதாக இருக்கிறது. நரசிம்மவர்மனுடைய பெருமையைக் குலைத்தவன் என்றும், மகேந்திரவர்மனுடைய அதிகாரத்தை ஒழித்தவன் என்றும், பரமேஸ்வரவர்மனை அரசியலறிவு கூர்மையில் மிஞ்சியவன் என்றும் ஹைதராபாத் சாஸனம் விக்கிரமாதித்யனை வருணிக்கிறது. கி.பி. 674ல் பொறிக்கப்பட்ட காட்வால் செப்பேடு விக்கிரமாதித்யனின் பல்லவ நாட்டுப் படையெடுப்புப் பற்றிய பல செய்திகளைக் கூறுகின்றது. முதலாம் நரசிம்மவர்மனையும், இரண்டாம் மகேந்திரவர்மனையும், முதலாம் பரமேஸ்வரவர்மனையும் விக்கிரமாதித்யன் போரில் வென்றதையும், காஞ்சிபுரத்தைக் கைப்பற்றியதையும், மாமல்லனாகிய நரசிம்மவர்மனையே வென்ற காரணத்தினால் 'ராஜமல்லன்' என்று பட்டப் பெயர் சூட்டிக்கொண்டதையும் இச் செப்பேடு குறிப்பிடுகின்றது. சோழிக விஷயத்திலுள்ள உரகபுரம் (உறையூர்) என்ற இடத்திலிருந்து இச் சாஸனம் வெளியிடப்பட்டதால் இச் சாஸனத்தை வெளியிடும்பொழுது விக்கிரமாதித்யன் தெற்கே பல்லவர்களுடன் போரில் ஈடுபட்டிருந்தான் என்பது விளங்கும்.[1] இப் போர் பற்றிய மற்ற விவரங்கள் தெரியவில்லையாயினும், இரண்டாம் மகேந்திரவர்மன் போரில் தோல்வியடைந்திருக்க வேண்டும் என்று கருதலாம்.

முதலாம் பரமேஸ்வரன் ஆட்சியின் தொடக்கத்திலேயே மீண்டும் விக்கிரமாதித்யன் பல்லவ நாட்டின்மீது படையெடுத்துக் காஞ்சிபுரத்திற்கருகே பரமேஸ்வரவர்மனைத் தோற்கடித்தான் என்னும் செய்தியை கி. பி. 670-71ஆம் ஆண்டு ஹொன்னூர் செப்பேடுகளிலிருந்து நாம் அறிகிறோம். மீண்டும் கி. பி. 674ல் விக்கிரமாதித்யன் மற்றொரு படையெடுப்பை மேற்கொண்டான். தெற்கே காவிரிக் கரையிலுள்ள உறையூரில் தன் பாசறையை

[1] விக்கிரமாதித்யன் குஜராத்தில் சாளுக்கிய மரபின் மற்றொரு கிளையை ஸ்தாபித்ததற்கு இது காரணமாக இருக்கலாம் தெற்கே பல்லவர்களுடன் நீண்ட போரில் ஈடுபட்டிருந்த சமயத்தில் சாளுக்கியப் பேரரசின் வட எல்லையைப் பாதுகாக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டதால் அதன் பொருட்டு குஜராத் கிளையை ஸ்தாபிக்க விக்கிரமாதித்யன் முடிவு செய்திருக்கக் கூடும். தன்னுடைய இளவலான ஜெயசிம்மவர்மன் நாட்டின் எதிரிகளை அழிக்கும் பணியில் தனக்கு அளித்த உதவிக்கு நன்றி செலுத்தும் நோக்கம் மற்றொரு காரணமாக இருக்கலாம்.

அமைத்துக்கொண்டு விக்கிரமாதித்யன் தங்கியிருந்த பொழுது, அவனுக்கு உதவியாக அவனது நண்பன் பாண்டிய மன்னனும் அவனுடன் சேர்ந்துகொண்டான். காஞ்சிபுரத்திலிருந்து துரத்தப்பட்ட பரமேஸ்வரவர்மன் ஒரு பெரும் படையைத் திரட்டிக் கொண்டு கங்க மன்னன் பூவிக்ரமனோடு விளந்தை என்னுமிடத்தில் போரிட்டான். ஆனால் அப்போரிலும் அவனுக்கு வெற்றி கிட்டவில்லை. இந்தக் கங்க அரசனின் பெதிரூர் சாஸனம் (Bedirur grant) இப்போரைப் பற்றிக் குறிப்பிடுகின்றது. வேறு சில கங்க சாஸனங்கள் பூவிக்ரமன் ஒரு பல்லவ அரசனைப் போரில் தோற்கடித்து, அவனுடைய விலையுயர்ந்த கற்கள் பதித்த 'உக்ரோதயம்' என்னும் கழுத்தணி ஒன்றைப் பறித்து வந்தான் என்று கூறுகின்றன. கங்கர்கள் சாளுக்கிய அரசன் விக்கிரமாதித்யனுடன் நட்புறவு கொண்டு அவனுடைய பல்லவப் போர்களில் கலந்துகொண்டு அவனுக்கு உதவியதால், அவர்களைத் தண்டிக்கும் நோக்கத்துடன் பரமேஸ்வரவர்மன் இப் போரை மேற்கொண்டிருக்கலாம்.

அடுத்துத் தன் தலைநகரை ஆக்கிரமித்துக்கொண்டிருந்த சாளுக்கிய விக்கிரமாதித்யனை வெளியேற்ற ஒரு பெரும் படையைத் திரட்டினான். ஆனால் சாளுக்கியப் படைகளைப் போர்க்களத்தில் சந்திப்பதற்கு முன்பு, சாளுக்கியப் படைகளின் கவனத்தை வேறுபுறம் திருப்ப, பரஞ்சோதி என்னும் சிறுத்தொண்டர் என்ற படைத் தளபதியின் தலைமையில் ஒரு பல்லவப் படை சாளுக்கிய நாட்டின் மீது ஏவி விடப்பட்டது. மற்றொரு படையுடன் பரமேஸ்வரவர்மன் சாளுக்கிய விக்கிரமாதித்யனுடைய பல லட்சம் வீரர்களைக் கொண்ட பெரும் படையைப் பெருவளநல்லூர்ச் சண்டையில் (லால்குடி தாலுக்கா, திருச்சி மாவட்டம்) முறியடித்தான் என்றும், விக்கிரமாதித்யன் போர்க்களத்திலிருந்து ஓட்டம் பிடித்தான் என்றும் பரமேஸ்வரவர்மனின் கூரம் சாஸனம் குறிப்பிடுகின்றது.[1] இந்தக் கூற்று நூற்றுக்கு நூறு உண்மை என்று நாம் ஏற்

[1] மூன்றும் நந்திவர்மனின் வேலூர்ப்பாளையம் சாஸனம் முதலாம் பரமேஸ்வரவர்மன் சாளுக்கிய அரசனின் படைகளை வென்ற செய்தியைப் பொதுப்படையாகக் கூறுகின்றது. இரண்டாம் நந்திவர்மனின் உதயேந்திரம் சாஸனம் பரமேஸ்வரவர்மன் வல்லபனுடைய (விக்ரமாதித்யன்) படைகளைப் பெருவள நல்லூர்ப் போரில் முறியடித்த செய்தியைக் குறிப்பாகக் கூறுகிறது. இப் போர் கி. பி. 674க்குப் பிறகும, விக்கிரமாதித்யனின் கடைசி ஆட்சி ஆண்டான கி பி 678க்கு முன்பும் நிகழ்ந்திருக்க வேண்டும். இந்தப் பெருவள நல்லூர்ப் போர் நிகழ்ச்சி பற்றிய குறிப்புதான் மற்றொரு இடத்திலும் காணப்படுகின்றது. வைணவ ஆழ்வார்களுள் ஒருவரான திருமங்கை ஆழ்வார், நாங்கூர்ப் படைகள் வடபுலத்து அரசன் ஒருவனையும், பாண்டிய அரசனையும், தோல்வியடையச் செய்த செய்தியை பெரிய திருமொழியில் குறிப்பிடுகிறார். (பெரிய திருமொழி 4-5-6) நாங்கூர், பல்லவர்கள் ஆட்சிக்கு உட்பட்டிருந்ததால் நாங்கூர்ப் படைகள் என்பது பல்லவர் படையின் ஒரு பகுதியைக் குறிக்கும். வடபுலத்து அரசன் சாளுக்கிய அரசன் விக்ரமாதித்யனைக் குறிக்கும். பாண்டிய அரசன் உதவியோடு பல்லவர்களை எதிர்த்த சாளுக்கியன் பெருவள நல்லூரில் பரமேஸ்வரவர்மனால் தோற்கடிக்கப்பட்ட நிகழ்ச்சியினுடைய எதிரொலிதான் இக் குறிப்பு என்று கருதலாம்.

றுக்கொள்ளவேண்டிய அவசியமில்லை. ஆனால் சாளுக்கிய விக்கிர மாதித்யன் தன் படைகளுடன் பல்லவ நாட்டிலிருந்து வெளியேறச் செய்த சாதனையைப் பரமேஸ்வரன் புரிந்தான் என்று கருதுவது பொருத்தமுடையதாகும். அதற்குள் பரஞ்சோதியின் தலைமையில் சாளுக்கிய நாட்டின் மீது படையெடுத்துச் சென்றிருந்த பல்லவப் படை, விக்கிரமாதித்யனுடைய மகன் வினயாதித்யனையும், பேரன் விஜயாதித்யனையும் தோல்வியுறச் செய்து, வாதாபியை அழித்து ஏராளமான கொள்ளைப் பொருள்களுடன் பல்லவ நாட்டிற்குத் திரும்பியது[1] என்ற செய்தி பெரிய புராணத்தில் காணப்படுகிறது. இப் பல்லவப் படையெடுப்பு சாளுக்கிய நாட்டின் அமைதியை யும், சீரான நிர்வாகத்தையும், பொருளாதார நிலையையும் வெகு வாகப் பாதித்தது என்பது பற்றி ஐயப்பாடே இருக்க முடியாது. ஏனெனில் போர் முடிந்தவுடன் வினயாதித்யன் பல்வேறு மாநிலங் களில் நிலவிய குழப்பமான சூழ்நிலையைச் சீர்படுத்தும் பணியில் ஈடுபட்டிருந்தான் என்ற செய்தி இப் படையெடுப்பு சாளுக்கிய அரசை எந்த அளவிற்குப் பாதித்தது என்பதைச் சுட்டிக்காட்டு கிறது. விக்கிரமாதித்யனுடைய இறுதி ஆட்சி ஆண்டுகளில் அவ னும், அவனுடைய மகன் வினயாதித்யனும், பேரன் விஜயாதித்ய னும் நாட்டின் அரசியல்,படைத்துறைச் சீரமைப்புப் பணிகளில் முனைந்து ஈடுபட்டிருந்தனர் என்ற செய்தியும் இப் படையெடுப் பின் விளைவுகளின் தன்மையை நமக்கு எடுத்துக் காட்டுகிறது.

மேலே விவரிக்கப்பட்டுள்ள முதலாம் விக்கிரமாதித்யன் ஆட்சியின் நிகழ்ச்சிகளிலிருந்து, அவ்வரசன் தன் நாட்டைப் பகைவர்களிடமிருந்து காத்து எவ்வாறு சாளுக்கிய அரச மரபின் பெருமையை நிலைநாட்டினான் என்பது புலப்படும். தன்னுடைய தகப்பன் இரண்டாம் புலிகேசியின் ஆட்சியின் இறுதியில் சாளுக்கி யர்கள் பெருமைக்கும், புகழுக்கும் ஏற்பட்ட இழுக்கைப் போக்கி யதிலும், சாளுக்கிய ஆதிக்கத்தை மீண்டும் நிலைநாட்டியதிலும் முதலாம் விக்கிரமாதித்யனுக்கு ஒரு பெரும் பங்கு உண்டு. சாளுக் கிய நாடு பல்லவர்கள் ஆக்கிரமிப்பிற்கு உட்பட்டிருந்த காலத்தில் வழக்கொழிந்திருந்த ஆலய-அறநிலைய அறக்கட்டளைக்ள் யாவும் இவ்வரசனால் புதுப்பிக்கப்பட்டன. 'வல்லபன்' அல்லது 'பிரிதிவி வல்லபன்', 'மகேஸ்வரன்', 'பரம மஹேஸ்வரன்', 'மகா ராஜாதி ராஜன்' போன்ற பட்டப் பெயர்கள் மட்டுமன்றி 'சத்யாசிரையன்' (உண்மையின் புகலிடம்) 'ரணரசிகன்' (போரில் விருப்பங்கொண்டவன்) 'ராஜமல்லன்' (மாமல்லனைப்

[1] பரஞ்சோதி நரசிம்மவர்மனுடைய சம காலத்தவர் என்று முதலில் கருதப்பட்டது. ஆனால் ஆராய்ச்சியாளர்கள் அவர் முதலாம் பரமேஸ்வரவர்மனின் காலத்தவர் என்று கருதுகின்றனர். இந் நிகழ்ச்சி கி. பி. 679-ல் நடந்திருக்கலாம்.

போரில் வென்றதால் மல்லர்களின் அரசன்) போன்ற பட்டங்களாலும் இவன் அழைக்கப்பட்டான்.

**வினயாதித்யன் (கி.பி. 681-696)**

வினயாதித்யனுடைய ஆட்சி பொதுவாக அமைதியாகவும், வளமிக்கதாயும் இருந்தது. பல்லவர்களுக்கும் சாளுக்கியர்களுக்குமிடையே போர் ஓய்ந்து அமைதி நிலவியது. அவனுடைய ஆட்சியின் தொடக்க ஆண்டு கி. பி. 679 என்று சில பொறிப்புகளிலும், கி. பி. 681 என்று மற்றச் சில பொறிப்புகளிலும் காணப்படுகிறது. இந்த முரண்பாட்டிற்குக் காரணம் என்ன? கி. பி. 679ல் அவன் இளவரசனாக முடிசூட்டப்பட்டிருக்கக் கூடும் என்றும், அந்த ஆண்டையே அவன் ஆட்சியின் தொடக்கமாகக் கருதலாம் என்றும் ஒரு விளக்கம் கூறப்படுகிறது. அது பொருந்தாது. ஏனெனில் கி. பி. 679ஆம் ஆண்டிற்கு முன்பே வினயாதித்யன் நாட்டின் பாதுகாப்புப் பொறுப்பிலும், நிர்வாகப் பொறுப்பிலும் பங்கு பெற்றிருந்தான் என்பதை நாம் சாஸனங்கள் மூலம் அறிகிறோம். கி. பி. 679ஆம் ஆண்டு அவர் அரியணை எய்தியிருந்தாலும், அவனுடைய முடிசூட்டு விழா கி. பி. 680ஆம் ஆண்டில் நடந்திருக்கக் கூடும் என்றும், எனவே அந்த ஆண்டிலிருந்துதான் அவரது ஆட்சியின் தொடக்கம் கணக்கிடப்பட வேண்டுமென்றும் மற்றொரு விளக்கம் கூறப்படுகிறது. ஒரு நாட்டில் குழப்பமான சூழ்நிலை நிலவும்பொழுதுதான் ஓர் அரசன் பட்டம் பெற்ற ஆண்டை வெவ்வேறான சாஸனங்கள் குறிப்பிடுவது வழக்கம். அதுபோன்ற சூழ்நிலை சாளுக்கிய நாட்டில் இருந்ததா? முதலாம் விக்கிரமாதித்யன் ஆட்சியின் இறுதியில் நடந்த பல்லவர்களின் படையெடுப்பும், அதன் விளைவாக வாதாபி நகரம் கைப்பற்றப்பட்டுப் பல்லவர்களால் சூறையாடப்பட்டதும் இக் குழப்பத்திற்குக் காரணமாக இருக்கலாம். கி. பி. 679ல் முதலாம் விக்கிரமாதித்யன் இறந்தவுடன் அரியணை எய்திய வினயாதித்யன் இந்தக் குழப்ப நிலையில் உடனடியாக முடிசூட்டு விழாவை நடத்தியிருக்க முடியாது. பல்லவப் படையெடுப்பினால் உருவாகிய குழப்பநிலைக்கு முடிவுகட்டி, அமைதியையும், ஒழுங்கையும் நிலைநாட்டி, சாளுக்கிய ஆதிக்கத்தை மீண்டும் ஏற்படுத்தும் பணியில் வினயாதித்யன் ஒரு முக்கியப் பங்கேற்றான் என்பதை நாம் முன்பே ஆராய்ந்துள்ளோம். எனவே கி. பி. 679ல் பட்டமெய்தியிருந்தாலும் கி. பி. 681 வரை அவன் இந்தப் பணியில் ஈடுபட்டிருந்ததால் உடனடியாக முடிசூட்டிக் கொள்ளாமல், இந்தப் பணி முடிந்த பிறகு கி. பி. 681ல் அரசனாக முடிசூட்டிக் கொண்டிருக்கலாம். எனவே அவனுடைய சில பொறிப்புகள் அவனுடைய முடிசூட்டு விழா ஆண்டான கி. பி. 681ஐ அவன் ஆட்சியின்

தொடக்க ஆண்டாகக் கருதுகின்றன என்று கொள்ளலாம்.[1] முதலாம் விக்கிரமாதித்யன் கி. பி. 679ல் இறந்தவுடன் வினயாதித்யன் அரியணை எய்தியதால் அந்த ஆண்டையே அவன் ஆட்சியின் தொடக்க ஆண்டாக மற்றச் சில பொறிப்புகள் கணக்கிடுகின்றன.

வினயாதித்யன் பதினோராம் ஆட்சி ஆண்டுச் சாஸனம் ஒன்று விஜயாதித்யனை 'யுவராஜன்' என்று குறிப்பிடுவதால் அவன் இளவரசுப் பட்டம் சூட்டப்பட்டிருக்க வேண்டுமென்றும், விஜயாதித்யனுடன் அரசு அலுவல்களில் பங்கு பெற்றிருக்க வேண்டுமென்றும் கருதலாம். சேந்திரகர்கள், ஆலுபர்கள், கங்கர்கள் போன்ற சிற்றரசர்கள் வினயாதித்யனின் ஆதிக்கத்திற்கு உட்பட்டு, அவனுடைய உண்மை ஊழியர்களாக இருந்தார்கள். பல்லவர்கள், களப்பிரர்கள், கேரளர்கள், ஹைஹயர்கள், மாளவர்கள், சோழர்கள், பாண்டியர்கள் போன்றவர்கள் மீது வினயாதித்யன் வெற்றி பெற்று அவர்களை ஆலுபர்கள் கங்கர்கள் போன்ற சிற்றரசர்கள் நிலைக்குப் பணிய வைத்தான் என்று அவனுடைய ஹரிஹர் சாஸனம் கூறுகின்றது. இப் போர்கள் பற்றிய வேறு எந்த விவரமும் கிடைக்காததால் இவையாவும் வரலாற்று உண்மைகள் என்று நாம் கருதவேண்டிய தேவை இல்லை. சாஸன வாசகங்களை இயற்றிய அவைக் கவிஞர்களின் கற்பனை நயத்தைத்தான் இதில் நாம் காண முடிகிறதேயன்றி உண்மையான வரலாற்று நிகழ்ச்சிகளை அல்ல. ஏதோ சில போர்கள் நடந்திருக்கக் கூடும் என்று கருதுவதைத் தவிர வேறு எந்த முக்கியத்துவத்தையும் இக்கூற்றுகளுக்கு நாம் அளிக்கக் கூடாது. வினயாதித்யன் பாரசீகம், சிங்களம் போன்ற தொலைவிலுள்ள நாட்டு அரசர்களிடமிருந்து கப்பப் பணம் வசூலித்ததாகப் பிற்காலப் பொறிப்புகள் சில கூறுகின்றன. இதையும் ஒரு மிகைக் கூற்று என்று கருதலாம். ஆனால் அக் காலப் பகுதியில் பாரசீகத்திலும், இலங்கையிலும் நிலவிய சூழ்நிலையைக் கருத்தில் கொண்டு பார்க்கும்பொழுது இக்கூற்றில் ஓரளவு உண்மை இருக்குமோ என்று கருதத் தோன்றுகிறது. இரண்டாம் புலிகேசியின் ஆட்சியில் இலங்கை அரசன் மானவர்மன் பல்லவ நரசிம்மவர்மனோடு நட்புறவு கொண்டு, புலிகேசியுடன் அவன் செய்த போரில் அவனுக்குப் பேருதவியாக இருந்தான் என்பதையும், நரசிம்மவர்மன் உதவியைப் பெற்று, மானவர்மன் தனக்குப் போட்டியாக அரியணையைக் கைப்பற்றியிருந்த ஹம்ஸ தம்ஷடரன் என்பவனைப் போரில் கொன்று இலங்கை அரச பதவியைத் தனதாக்கிக்

[1] T. V. Mahalingam - Op. cit. P. 103

கொண்டான் என்ற செய்தியை நாம் முன்பே கூறியிருக்கின்றோம். மானவர்மன் கி. பி. 668 முதல் கி. பி. 703 வரை ஆட்சி புரிந்தான். இலங்கை வாரிசுரிமை கொண்டாடிய போட்டி இளவரசன் மற்றொருவன் மானவர்மனுக்கு எதிராகச் சாளுக்கியர்கள் உதவியை நாடியிருக்கக்கூடும். மானவர்மன் நரசிம்மவர்மனிடம் சரணடைந்ததைப் போல இந்த இளவரசன் சாளுக்கிய உதவியை நாடி வினயாதித்தனிடம் சரணடைந்திருக்கக் கூடும். அதே போலப் பாரசீக க்ஷத்ரபன் (கவர்னர்) ஒருவனும் சாளுக்கிய வினயாதித்யன் உதவியை நாடி . அவனிடம் வந்திருக்கலாம். ஏனெனில் உமர் என்பவன் காலிஃபாக இருந்த காலப் பகுதியில் தான் (கி. பி. 634-644) பாரசீகம் அராபியர்கள் ஆதிக்கத்திற் குட்படுத்தப்பட்டது. எனினும் பாரசீகப் பேரரசின் கவர்னர் களான க்ஷத்ரபர்கள் செல்வாக்கை முற்றிலும் ஒழிக்க நீண்ட காலம் தேவைப்பட்டது. எனவே தன் அதிகாரத்தைப் பறி கொடுத்த பாரசீகக் கவர்னர் ஒருவன் தன் அதிகாரத்தை மீட்டுக் கொள்ள சாளுக்கிய அரசன் வினயாதித்யன் உதவியை நாடி யிருக்கக்கூடும்.[1] மேலே கூறிய இவ்விரு நிகழ்ச்சிகளைத்தான் சாளுக்கியப் பொறிப்புகள் மிகைப்படுத்திக் கூறியன போலும்!

வினயாதித்யனின் மகன் விஜயாதித்யனின் பொறிப்புகள் வினயாதித்யன் வட இந்தியப் படையெடுப்பு ஒன்றை மேற் கொண்ட செய்தியைக் குறிப்பிடுகின்றன. இந்த அரசர்களின் புகழ்பாட வேண்டுமென்ற நோக்கந்தான் இப் பொறிப்புகளில் மேலோங்கியிருப்பதாகத் தோன்றுகிறதேயன்றி, வரலாற்று உண்மைகளைச் சொல்லவேண்டுமென்பதல்ல. எனவே பொறிப்பு களில் காணப்படும் உயர்வு நவிற்சி, மிகைக்கூற்று போன்ற குறைபாடுகளை, இப் பொறிப்புகளில் சற்று அதிகமாகவே காண் கிறோம். வடபுலத்து அரசர்கள் மீது படையெடுத்துச் சென்று வினயாதித்யன் அவர்களுடைய 'பாலித்வஜம்' (அரசுச் சின்னங்க ளான கொடிகளை ஒரு குறிப்பிட்ட முறையில் வரிசைப்படுத்தி வைத்தல்) போன்ற இறைமையின் சின்னங்களைக் கைப்பற்றி வந்தான் என்று விஜயாதித்யனின் கி. பி. 703ஆம் ஆண்டு ராயகாட் (Rayagad) செப்பேடுகள் கூறுகின்றன. விஜயாதித் யனைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது, தகப்பனின் வட இந்தியப் படையெடுப்பில் அவன் ஒரு முக்கியப் பங்கேற்றான் :என்றும், போரின் முன்னணியில் நின்று பகைவர்களைப் புறமுதுகு காட்டி ஓடச் செய்தான் என்றும், கங்கை, யமுனை உருவங்களையும், பாலித்வஜம், போர்முரசு, விலையுயர்ந்த ஆபரணங்கள், யானைகள்

[1] R, C, Majumdar (Ed.) Op. cit. P. 245

போன்றவற்றையும் கைப்பற்றி வந்து தன் தகப்பனிடம் ஒப்படைத்தான் என்றும் அச் செப்பேடுகள் கூறுகின்றன. வினயாதித்யனின் இந்த வட இந்தியப் படையெடுப்பின் வரலாற்று உண்மை பற்றி இதுவரையில் யாரும் திருப்திகரமான விளக்கம் தர முடியவில்லை.

'வடபுலம் முழுவதற்கும் தலைவனான அரசனை' (Sakalot tarapathanatha-the Lord of the entire North வென்றான் என்று பொறிப்புகளில் பொதுப்படையாகக் கூறப்பட்டிருக்கிறதே யன்றி, அவ்வரசனின் பெயரும் குறிப்பிடப்படவில்லை. எனவே அவ்வரசன் யாராக இருக்கக்கூடும் என்பதை அறுதியிட்டுக் கூற முடியாது. கங்கை, யமுனை ஆற்றின் உருவங்களைக் கைப்பற்றினான் என்று கூறப்பட்டிருப்பதால், இப்போர் கங்கை-யமுனை ஆற்றிடைப் பகுதியில் நடந்திருக்கக் கூடும் என்று நாம் யூகிக்கலாம். இப் போர் நடந்திருக்கக்கூடிய காலத்தையும் (வினயாதித்யன் ஆட்சியின் இறுதியில் சுமார் கி. பி. 695ல் இப் போர் நடந்திருக்கலாம் என்று கருதப்படுகிறது). இப் போர் நடந்த இடத்தையும், போரில் தோல்வியடைந்த அரசனைப் பற்றிய குறிப்பையும் மனத்தில் கொண்டு பார்க்கும் பொழுது இவ்வரசன் கன்னோசியை ஆண்ட யசோவர்மனாக இருக்கக்கூடும் என்று பேராசிரியர் ஆர். ஸி. மஜும்தார் கருதுகின்றார்.[1] போரில் தோல்வியடைந்து பின்வாங்கிய பகைவர்கள் விஜயாதித்யனைச் சிறைபிடித்துச் சென்றுவிட்டனர் என்ற செய்தியும் பொறிப்புகளில் காணப்படுகிறது. இவ்வாறு விஜயாதித்யன் பகைவர்களிடம் சிறைபட்டிருந்த காலத்தில்தான் வினயாதித்யன் இறந்திருக்கவேண்டும். விஜயாதித்யன் எப்படியோ பகைவர்களிடமிருந்து தப்பிவந்து, தன் தந்தை இறந்ததின் விளைவாக நாட்டில் நிலவிய குழப்ப நிலையைச் சமாளித்து அமைதியையும், ஒழுங்கையும் மீட்டான் என்று சாஸனங்கள் கூறுகின்றன. சாளுக்கியர்கள் வஜ்ரதன் என்ற ஒரு வட இந்திய அரசனைத் தோற்கடித்ததாக ஒரு குறிப்பு ராஷ்டிரகூடர்களின் பொறிப்புகளில் காணப்படுகின்றது. வினயாதித்யனால் தோற்கடிப்பட்ட அரசன் வஜ்ரதனாக இருக்கக்கூடும். ஆனால் போதுமான ஆதாரங்கள் இல்லாமையினால் வஜ்ரதன் யார் என்பதைப் பற்றி அறுதியிட்டுக் கூறமுடியாத நிலையிலிருக்கின்றோம்.

வினயாதித்யன் சாஸனங்களிலும் அவன் சமகாலத்தவனாக இரண்டாம் நரசிம்மவர்ம பல்லவன் (ராஜசிம்மன்) சாஸனங்

[1] **Ibid. P. 130.**

களிலும் சாளுக்கிய-பல்லவப் போர்கள் பற்றிய எந்தச் செய்தியும் காணப்படாததால் இவர்கள் ஆட்சியில் இவ்விரு அரச மரபினர் களிடையே தொடர்ந்து நடந்து கொண்டிருந்த போர் சற்று ஓய்ந்திருந்தது என்று கருதலாம். ஆனால் பல்லவர்களுடைய சில பொறிப்புகளைக் கூர்ந்து ஆராய்ந்தால் சாளுக்கிய-பல்லவப் போர் தொடர்ந்து இவர்கள் ஆட்சியிலும் சிறிய அளவிலேனும் நடந்திருக்கக்கூடுமோ என்ற ஐயப்பாடு எழுகின்றது. எடுத்துக் காட்டாகக் கைலாசநாதர் கோயில் முன்புற நுழைவாயிலில் காணப்படும் ஒரு பொறிப்பு இரண்டாம் நரசிம்மவர்மனின் போர்ச்சாதனைகளை வருணிக்கிறது. அப் பொறிப்பு அவனுடைய சாதனைகளைப் பரமசிவக் கடவுளின் சாதனைகளோடு ஒப்பிடு கின்றது. பரமசிவன் 'புர' என்ற கொடியவனை அழித்ததுபோல இராஜசிம்மனும் 'புரத்தை' அழித்திருக்கவேண்டும். 'புரம்' என்பது இங்கு எதைக் குறிப்பிடுகின்றது? இராஜசிம்மன் அழித்த புரம் என்பது ஒரு நகரமாகத்தான் இருக்கவேண்டும். ராஜசிம்ம னுடைய தகப்பன் முதலாம் பரமேஸ்வரவர்மன், கைலாசநாதர் கோயில் பொறிப்பு ஒன்றில் ரணரசிகபுரத்தை அழித்தவன் என்று அழைக்கப்படுகின்றான். ரணரசிகபுரம் என்பது முதலாம் விக்ர மாதித்யன் நினைவாக (அவன் ரணரசிகன் என்ற பட்டப் பெயர் உடையவன்) வாதாபிக்கு அருகில் நிறுவப்பட்ட நகரமாகும். இது சாளுக்கியர்களின் புதுத் தலைநகரமாக இருந்திருக்கக்கூடும். அந் நகரத்தின்மீது ராஜசிம்மன் மேற்கொண்ட படையெடுப்பைத் தான் கைலாசநாதர் கோயில் பொறிப்பு குறிப்பிடுகின்றது போலும். அங்ஙனமாயின், ராஜசிம்மன் ஆட்சியில் மீண்டும் பல்லவ - சாளுக்கியப் போர் தொடர்ந்திருக்கவேண்டும்.[1]

'ஸ்ரீ பிரிதிவி வல்லபன்', 'சத்தியாசிரையன்', 'ராஜ சிரையன்', யுத்தமல்லன்' போன்ற பட்டங்களை வினயாதித்யன் சூட்டிக்கொண்டான். வினயவதி என்பது அவனுடைய அரசியின் பெயர். அவர்களுக்குக் குங்கும மகாதேவி என்ற ஒரு மகள் இருந் தாள். சித்ரவாகனன் என்ற ஆலுப சிற்றரசன் ஒருவன் அவளை மணந்து கொண்டான்.

### விஜயாதித்யன் (கி. பி. 696-733)

சாளுக்கிய அரசர்களிலேயே விஜயாதித்யன் ஆட்சிதான் மிக நீண்ட ஆட்சியாக இருந்தது. அவன் ஆட்சி நீண்டதாக இருந் தாலும் அவன் ஆட்சிக்காலத்துப் பொறிப்புகள் மிகக் குறைந்த அளவிலேயே கிடைத்துள்ளன. அவ்வாட்சிக் காலந்தான்

[1] Mahalingam. op, cit, P. 112-113

பாதாமிச் சாளுக்கிய வரலாற்றில் மிக அமைதியானதாகவும், மிக வளமானதாகவும் இருந்ததென்று கருதலாம். தன்னுடைய பாட்டனுன முதலாம் விக்கிரமாதித்யன் ஆட்சியிலிருந்தே அவன் நிர்வாகத்திலும், படைத்துறையிலும் நல்ல பயிற்சி பெற்றான். தன் தகப்பன் வினயாதித்யனின் வட இந்தியப் படையெடுப்பில் விஜயாதித்யன் ஒரு முக்கியப் பங்கேற்று முன்னணியில் நின்று போரை நடத்தினான் என்ற செய்தியை முன்பே குறிப்பிட்டுள்ளோம். அப்போர் முடிவில் விஜயாதித்யன் பகைவர்களால் கடத்திச் செல்லப்பட்டான் என்பதையும் பார்த்தோம். அவனைக் கடத்திச் சென்றவர்கள் யார்? ஏன்? எப்பொழுது கடத்திச் சென்றார்கள் என்ற வினாக்களுக்குச் சரியான விடை கிடைக்கவில்லை. பகைவர்களால் சிறைபிடிக்கப்பட்ட விஜயாதித்யன் எப்படியோ சிறையிலிருந்து தப்பி வந்து, தன் தந்தையின் இறப்பால் நாட்டில் நிலவிய குழப்ப நிலையைச் சமாளித்து அமைதியையும், ஒழுங்கையும் நிலைநாட்டினான் என்று சாஸனங்கள் கூறுகின்றன.

பொதுவாக அவன் ஆட்சியில் அமைதி நிலவியதாகக் கருதப்பட்டபோதிலும், அண்மையில் கண்டுபிடிக்கப்பட்ட விஜயாதித்யனின் முப்பத்தைந்தாம் ஆட்சி ஆண்டு (அதாவது கி. பி. 631) உள்சலா (கர்நூல் மாவட்டம்) கல்வெட்டு ஒன்றில் காணப்படும் செய்தியிலிருந்து, பல்லவர்களுடன் அவன் ஒரு போரில் ஈடுபட்டான் என்பது தெரியவருகின்றது. இப்பல்லவப் படையெடுப்பு அவன் ஆட்சியின் ஒரு முக்கியமான நிகழ்ச்சியாகும். அதில் இளவரசனான இரண்டாம் விக்கிரமாதித்யன் ஒரு முக்கியப் பங்கேற்றான். சாளுக்கியப் படை ஒன்று இரண்டாம் விக்கிரமாதித்யன் தலைமையில் காஞ்சிபுரம் நோக்கிச் சென்று, காஞ்சிபுரத்தை வென்று, பல்லவ அரசன் இரண்டாம் பரமேஸ்வரவர்மனைக் கப்பங் கட்டும்படிச் செய்தது என்று இக்கல்வெட்டு கூறுகின்றது. விக்கிரமாதித்யனின் அரசியார் லோகமாதேவியின் பட்டடக் கல் பொறிப்பு ஒன்றில் விக்கிரமாதித்யன் பல்லவர்கள் மீது மேற்கொண்டதாகக் கூறப்படும் மூன்று படையெடுப்புகளில் இது முதலாவதாக இருக்கக்கூடும். இப் படையெடுப்பின் காரணம் என்ன என்பதைத் திட்டவட்டமாகக் கூறமுடியவில்லை. இரண்டாம் நரசிம்மவர்ம பல்லவன் (ராஜசிம்மன்) சாளுக்கியர்கள் ஆதிக்கத்தை ஒழித்து, பல்லவர்கள் பெருமையையும் புகழையும் நிலைநாட்டுவதில் வெற்றி கண்டான் என்பதை முன்பு பார்த்தோம். பல்லவர்களிடம் தோல்விகண்ட சாளுக்கியர்கள் பழிக்குப் பழிவாங்க ஒரு தக்க வாய்ப்புக்காகக் காத்திருந்தனர் போலும். ராஜசிம்மன் இறந்த செய்தியைக் கேட்டதும், விஜயா

தித்யன் இவ்வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு, இரண்டாம் பரமேஸ்வரவர்மனைப் போரில் வென்று அவனைக் கப்பங் கட்டும்படி செய்திருக்கவேண்டும். உள்சலா கல்வெட்டில் விஜயாதித்யன் அறிவித்த கொடையைப் பெற்றுக்கொண்டவன் துர்வீநீதன் எரையப்பன் என்பவன். இவன் மேலைக் கங்க குலத்தைச் சேர்ந்த ஓர் இளவரசன். இதிலிருந்து விஜயாதித்யனின் பல்லவ நாட்டுப் படையெடுப்பில் இந்த மேலைக் கங்க இளவரசனும் பங்கு பெற்றிருக்கக்கூடும் என்று ஊகிக்கலாம்.

விஜயாதித்யனுடைய பல பொறிப்புகள் அவனுடைய பத்தாம் ஆட்சி ஆண்டில் ஏலாபுரம் (எல்லோரா) என்னுமிடத்திலும், இருபத்திரண்டாம் ஆட்சி ஆண்டில் ஹீதம்புரம் என்னுமிடத்திலும், முப்பத்தி நான்காம் ஆட்சி ஆண்டில் இரக்தபுரம் என்னுமிடத்திலும் அவன் பாசறை அமைத்துக் கொண்டிருந்ததாகக் கூறுகின்றன. இவை அவனுடைய ஆட்சியின் போர் நிகழ்ச்சிகளைக் குறிப்பிடுகின்றன என்று கருதுவது பொறுத்தமுடையதாகும். ஆனால் இப்போர்கள் பற்றிய மற்ற விவரங்கள் ஏதும் நமக்குக் கிடைக்கவில்லை. பாணர்கள், ரே நாட்டுத் தெலுங்கு சோடர்கள், பூபாத்தியன், உபேந்திரன் போன்றோர் அவனுக்குக் கட்டுப்பட்டிருந்த சிற்றரசர்கள் என்ற செய்தி சில பொறிப்புகளில் காணப்படுகிறது.

'சத்யா சிரையன்' 'ஸ்ரீ பிரிதிவி வல்லபன்' 'மஹாராஜாதிராஜ பரமேஸ்வர பட்டாரகன்' போன்ற வழக்கமான சாளுக்கியப் பட்டங்களைத் தவிர விஜயாதித்யன் 'சமஸ்த புவனசிஸ்ரயன்' ('அகில உலகத்தின் புகலிடம்') என்ற பட்டத்தையும் சூட்டிக்கொண்டான். விஜயேஸ்வரர் என்னும் கோயில் தற்பொழுது சங்கமேஸ்வரர் கோயில் என்று அழைக்கப்படும் பிரம்மாண்டமான ஒரு சிவன் கோயிலைப் பட்டடக்கல் என்னுமிடத்தில் விஜயாதித்யன் கட்டினான். அவன் சமயத்துறையில் பொறையுடைமைக் கொள்கையைக் கடைப்பிடித்தான். சமணத் துறவிகளுக்குக் கிராமங்களைத் தானமாக வழங்கிய செய்தி அவன் சாஸனங்களில் காணப்படுகிறது. அவனுடைய தங்கை குங்கும மகாதேவி சமண சமயத்தில் பற்று கொண்டவள். அவள் லக்ஷ்மேஸ்வரம் என்னுமிடத்தில் சமணக் கோயில் ஒன்றை எழுப்பியதாகக் கூறப்படுகிறது. விஜயாதித்யனுடைய மனைவியின் பெயர் வினைபோதிகல் என்பதும், அவள் ஹிரண்ய கர்ப்பதானம் ஒன்றைச் செய்தாள் என்பதும் அவனுடைய மகாகூடம் பொறிப்பிலிருந்து தெரிகிறது.

## இரண்டாம் விக்கிரமாதித்யன் (கி. பி. 733-745)

இவனுடைய ஆட்சியின் இரண்டு முக்கிய நிகழ்ச்சிகள், சிந்துவைப் படையெடுத்த அரேபியர்களின் தக்காணப் படையெடுப்பும், சாளுக்கியர்களின் பரம்பரைப் பகைவர்களான பல்லவர்களுடன் நடந்த போரும் ஆகும். இரண்டாம் விக்கிரமாதித்யனின் ஆட்சித் தொடக்கத்தில் சிந்து மாநிலத்தைக் கைப்பற்றியிருந்த அரேபியர்கள் சாளுக்கிய அரசன் மீது படையெடுத்தனர். இப்படையெடுப்பைப் பற்றி மேலைச் சாளுக்கிய அரசர்களின் பொறிப்புகள் ஒன்றிலும் எதுவும் கூறப்படவில்லை. ஆனால் குஜராத்தை ஆண்டுகொண்டிருந்த சாளுக்கியக் கிளை மரபைச் சேர்ந்த அவனிஜனாசிரையன் புலிகேசியின் கி. பி. 739ஆம் ஆண்டு நவசாரி சாஸனம் இந்த அரேபியப் படையெடுப்பைப் பற்றிக் குறிப்பிடுகிறது. வட இந்திய அரசுகளையெல்லாம் ஒன்றன் பின் ஒன்றாக வென்று, அரேபியர்கள் தக்காணத்தில் ஊடுருவ முயன்றபொழுது புலிகேசி அவர்களைத் தடுத்து நிறுத்திக் கூர்ஜர நாட்டிலிருந்து வெளியேற்றினான் என்று அச் சாஸனம் கூறுகிறது. இவ்வாறு புலிகேசி சாளுக்கியப் பேரரசை அரேபியர்கள் படையெடுப்பு அபாயத்திலிருந்து காப்பதற்காக ஆற்றிய தொண்டிற்காக 'அவனிஜனாசிரையன்', தக்ஷிணாபதஸ்வாதாரணன்' போன்ற பல பட்டங்களை இரண்டாம் விக்கிரமாதித்யன் அவனுக்கு அளித்தான். சாளுக்கிய மேலாதிக்கத்தை ஏற்றுக் கொண்டிருந்த சிற்றரசர்கள் பலரும் அரேபியப் படையெடுப்பை எதிர்ப்பதில் உதவி செய்தார்கள். அவர்களில் ஒருவன் ராஷ்டிரகூட நந்திவர்மன் என்பவன் விக்கிரமாதித்யனால் பெரிதும் பாராட்டப்பட்டான்.

இதை அடுத்து விக்கிரமாதித்யன் தன் அரச மரபின் பரம்பரை எதிரிகளான பல்லவர் மீது தன் கவனத்தைச் செலுத்தினான். பல்லவ அரசன் இரண்டாம் நந்திவர்மன் பல்லவ மல்லனுடன் இவன் ஒரு போரைத் தொடங்கினான். இரண்டாம் விக்கிரமாதித்யனின் கி. பி. 742ஆம் ஆண்டு நர்வான் செப்பேடுகளும் இப்போரைப் பற்றிக் கூறுகின்றன. காஞ்சிபுரத்தை மூன்று முறை கைப்பற்றியதாக விக்கிரமாதித்யனுடைய பட்டடக் கல் பொறிப்பு கூறுகிறது. காஞ்சிபுரம் கைலாசநாதர் ஆலயத்தின் தூண் ஒன்றில் கன்னட மொழியில் பொறிக்கப்பட்ட விக்ரமாதித்யனின் சாஸனம் ஒன்று இதை உறுதி செய்கின்றது. விக்கிரமாதித்யன் பட்டம் எய்தியவுடன் தன்னுடைய இயற்கை விரோதிகளான பல்லவர்களைப் பூண்டோடு ஒழிக்கும் நோக்கத்துடன் அவசரமாகத் துண்டகவிஷயத்தில் (பல்லவ நாட்டில்) நுழைந்து, தன்னை

எதிர்த்த பல்லவ அரசன் நந்திபோதவர்மனைப் போரில் வென்று, அவனைப் புறமுதுகு காட்டி ஓடச் செய்து, படைத்துறையில் பயன்படுத்தப்படும் இசைக் கருவிகளையும், ஏராளமான விலை யுயர்ந்த ஆபரணங்களையும், பல யானைகளையும் கைப்பற்றி, காஞ்சிபுரத்தில் நுழைந்து நந்திவர்மனால் கட்டப்பட்ட ராஜசிம் மேஸ்வர ஆலயத்திற்கும் மற்ற ஆலயங்களுக்கும் பொற்குவியல் களைத் தானமாக அளித்தான் என்று அப் பொறிப்புகள் கூறு கின்றன. ராஜசிம்மேஸ்வரர் கோயிலுக்குத் தானம் அளித்த இச் செய்தியைக் கைலாசநாதர் கோயில் தூண் ஒன்றில் காணப் படும் கன்னடப் பொறிப்பு ஒன்று உறுதிப்படுத்துகின்றது. விக்கிர மாதித்யனின் எதிர்க்க முடியாத வல்லமை பாண்டியர்களுக்கும், சோழர்களுக்கும், கேரளர்களுக்கும், களப்பிரர்களுக்கும் துன் பத்தை விளைவித்தது என்றும் தெற்கே கடல்வரை பரவிய அவன் புகழின் நினைவாக ஒரு வெற்றித் தூணை நிறுவினான் என்றும் அப் பொறிப்புகள் கூறுகின்றன.

மேற்கூறிய செய்திகளைச் சற்று விளக்கமாக ஆராயலாம். விக்கிரமாதித்யனுடைய இந்தப் போர் ஓர் ஆக்கிரமிப்புப்போராக அமைந்தது. இப்போர் விக்கிரமாதித்யனுடைய முடிசூட்டு விழா நடந்தவுடனேயே மேற்கொள்ளப்பட்டது என்பதைச் சாளுக் கியப் பொறிப்புகளிலிருந்து நாம் அறிகிறோம். எனவே கி.பி.734ல் இப் படையெடுப்பு நடந்திருக்கலாம். இதற்கு முன்பே ஒரு முறை விக்கிரமாதித்யன் தலைமையில் ஒரு படையெடுப்பு வினயாதித்யன் ஆட்சியில் நடந்தது என்பதையும், அப்பொழுது இளவரசப் பதவி யிலிருந்து விக்கிரமாதித்யன் பல்லவஅரசன் இரண்டாம் பரமேஸ்வரவர்மனைப் போரில் தோற்கடித்து அவனைக் கப்பங் கட்டும்படிச் செய்தான் என்றும் விஜயாதித்யனின் உள்சலா கல்வெட்டு கூறுகின்றது என்ற செய்தியை முன்பே ஆராய்ந்துள் ளோம். இதை அடுத்து கி.பி. 734ல் மேற்கொள்ளப்பட்ட இப் படையெடுப்பு விக்கிரமாதித்யனின் இரண்டாம் படையெடுப்பு ஆகும். அப்பொழுது பல்லவ அரசன் பன்னிரண்டே வயது நிரம்பிய நந்திவர்மன் பல்லவ மல்லன் என்பவன், ஏற்கெனவே சாளுக்கியர்களுக்குக் கீழ்ப்படிந்து கப்பங்கட்ட ஒப்புக்கொண்ட பிறகு, இந்தப் பல்லவ அரசன் மீது உடனேயே மற்றொரு படை யெடுப்பை மேற்கொள்ள வேண்டிய அவசியம் என்ன என்ற கேள்வி எழுவது இயற்கையே. காஞ்சிபுரம் வைகுந்தப் பெரு மாள் கோயிலின் சுவர்களில் உள்ள சிற்பங்களுக்குக் கீழ் காணப் படும் விவரக் குறிப்புகள் இதற்கான விடையை மறைமுகமாக அளிக்கின்றன. பல்லவமல்லன் முடி சூட்டிக் கொள்வதற்காகக் காஞ்சிபுரத்திற்கு வந்து கொண்டிருந்தபொழுது, நகரின் வெளிப்

புறத்தில் அவனைச் சந்திக்க வந்த பல்லவாதி அரையர் என்ற ஒருவன் இறந்து போன செய்தியை இக்குறிப்புகளில் ஒன்று கூறு கின்றது. ஒரு மங்கள்கரமான முடிசூட்டு விழாவைப்பற்றிக் கூறும்பொழுது அமங்கலமான ஒரு சாவுச் செய்தியைக் கூற வேண்டிய அவசியம் என்ன? இவ்விரண்டு நிகழ்ச்சிகளுக்கும் ஏதோ தொடர்பு இருக்க வேண்டும். பல்லவாதி அரையர் நந்தி வர்மனின் ஆதிக்கத்தை ஏற்ற சிற்றரசர்களுள் ஒருவராக இருக்கக் கூடும் என்றும், முடிசூட்டு விழாவின்போது தன்னுடைய ராஜ பக்தியைக் காட்டுவதற்காக அங்கு வந்திருக்கக் கூடும் என்றும் இதற்குப் பொருள் விளக்கம் தரப்படுகிறது. ஆனால் அவ்விளக்கக் குறிப்புகளில் காணப்படும் வேறு சில செய்திகளின் அடிப் படையில் ஆராயும் பொழுது, இப்பொருள் விளக்கம் பொருத்த மற்றது என்பது புலப்படும். எவ்வாறெனில் இந்தப் பல்லவாதி அரையர் அரசராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பல்லவமல்லனைப் பார்க்க ஒரு பெரும் படையுடன் (மகாபலம்) வந்ததாக அக் குறிப்பு கூறுகிறது. ஒரு சிற்றரசன் தன் எஜமானனைப் பார்க்க ஏன் மகா பலத்துடன் வரவேண்டும்? எனவே, இந்தப் பல்லவாதி அரையர் ஒரு சிற்றரசர் என்று கருதுவதை விட பல்லவ அரச குடும்பத்தைச் சேர்ந்த ஓர் இளவரசர் என்று கருதுவதுதான் பொருத்தமாக இருக்கும். இளவரசர் என்றுபொருள்படும் வகையில் 'அரையர்' என்ற சொல் பொறிப்புகளில் பயன்படுத் தப்பட்டிருப்பதை நாம் காண முடிகின்றது-(உதாரணமாக கங் காதி அரையர் = கங்க இளவரசர்) மேலும், மேலே கூறப்பட்டுள்ள வைகுந்தப்பெருமாள் கோயில் சிற்பங்களைக் கூர்ந்து ஆராய்ந் தால், அங்குச் சித்திரிக்கப்பட்டிருக்கும் காட்சி—யானைப்படை, குதிரைகள் போர் வீரர்களின் அணிவகுப்பு ஆகிய யாவும்—நமக்கு ஒரு போர்க்களத்தை நினைவூட்டுவதாக இருக்கின்றது. மேற்கூறிய செய்திகளிலிருந்து நிலைமை என்ன என்பதை நாம் எளிதில் ஊகிக்கலாம். பல்லவ மல்லன் பல்லவ அரியணைக்குத் தேர்ந் தெடுக்கப்பட்டதைச் சிலர் ஆட்சேபித்திருக்க வேண்டும். பல்ல வாதி அரையர் பாதிக்கப்பட்ட இளவரசரைக் குறிக்கும். எனவே நந்திவர்மன் முடிசூட்டிக் கொள்ள காஞ்சிபுரம் நோக்கிச் சென்று கொண்டிருந்த பொழுது அவனைத் தடுத்து நிறுத்த பல்லவாதி அரையர் படைகளுடன் வந்து, போர் செய்து இறந்திருக்க வேண்டும்.[1] பல்லவ மல்லனை எதிர்த்து இறந்த இந்த இளவரசர் யார் என்பது தெளிவாகத் தெரியவில்லை. இந்த இளவரசனைத்

[1] விளக்கக் குறிப்பில் 'எற்றிக்கொண்டு' 'மறிந்து போந்த' என்ற இரண்டு சொற்கள் காணப்படுகின்றன. 'எற்றுதல்' என்ற சொல் 'தாக்குதல்' 'ஓங்கி அடித்தல்' என்று பொருள்படும். 'மறிந்து போந்த' என்பது 'இறந்துவிட்ட' என்று பொருள்படும்.

தவிர பல்லவர் மரபைச் சேர்ந்த சித்திர மாயன் என்று மற்றொரு இளவரசனும் இருக்க, இவர்கள் இருவரையும் புறக்கணித்துக் கிளைமரபைச் சேர்ந்த பல்லவ மல்லனை அரசனாகத் தேர்ந்தெடுத்ததை ஏற்காதவர்கள் பலர் இருந்திருக்கக் கூடும். இவ்வாறாகப் பல்லவநாட்டில் நந்திவர்மனை ஆதரித்து ஒரு கட்சியும், நந்திவர்மனை எதிர்த்து மற்றொரு கட்சியும் உருவாகியிருக்கலாம். நந்திவர்மன் அரியணையில் அமருவதை எதிர்த்த பல்லவாதி அரையருக்குச் சாளுக்கியர்கள் ஆதரவு அளித்திருக்கக் கூடும். இரண்டாம் விக்கிரமாதித்யன் முடிசூட்டிக் கொண்டவுடனேயே நந்திவர்மன் மீது படையெடுத்துச் சென்றது இதை உணர்த்துகிறது. தன்னால் ஆதரிக்கப்பட்ட பல்லவாதி அரையர் இறந்த செய்தியைக் கேட்ட விக்கிரமாதித்யன் பழிவாங்கும் நோக்கத்துடன் இப் படையெடுப்பை மேற்கொண்டிருக்கலாம். காஞ்சிபுரம் கைலாசநாதர் கோயிலில் உள்ள விக்கிரமாதித்யனின் கன்னடப் பொறிப்பு ஒன்று இப் படையெடுப்பு வெற்றிகரமாக முடிந்தது என்று கூறுவதிலிருந்து விக்கிரமாதித்யன் பல்லவ நாட்டைக் கைப்பற்றி மற்றொரு இளவரசனை சித்திரமாயனை அரியணையில் அமர்த்தியிருக்கக்கூடும். சாளுக்கியப் பொறிப்புகள், இப் போரில் தோற்ற நந்திவர்மன் நாட்டைவிட்டே ஓடிவிட்டான் என்று கூறுகின்றன. சித்திரமாயன், ஸ்கந்த சிஷ்யன் என்ற பெயரோடு சாளுக்கியப் பாதுகாப்போடு அடுத்த இருபது ஆண்டுகள் பல்லவ நாட்டை ஆட்சி செய்தான் என்பது நந்திவர்மனின் உதயேந்திரம் செப்பேடுகளிலிருந்து தெரிய வருகின்றது. இந்த இருபது ஆண்டுகள் நந்திவர்மனின் நிலை என்ன? தன்னிடமிருந்து அரியணையைக் கைப்பற்றிய பல்லவ அரசனின் அபாயத்திலிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்ளவும், எதிர்காலத்தில் பல்லவ அரியணையை மீட்டுத் தனதாக்கிக் கொள்ளும் திட்டத்திற்குத் தேவையான உதவியை நாடியும் நந்திவர்வன் ராஷ்டிரகூட அரசன் தந்திதுர்க்கனிடம் புகலிடம் பெற்றிருக்க வேண்டும்.[1] விக்கிரமாதித்யனின் மேலே விவரிக்கப்பட்டுள்ள பல்லவ நாட்டுப் படையெடுப்பில் கங்க அரசன் ஸ்ரீ புருஷ கொங்கணி மஹாதிராஜன் அவனுக்கு உதவியிருக்க வேண்டும் என்பது கங்க அரசனின் இரண்டு பொறிப்புகளிலிருந்து நமக்குத் தெரிகிறது. கங்க அரசன் தனக்கு எதிராக விக்கிரமாதித்யனுக்கு உதவி செய்ததற்கு,

[1] சாளுக்கிய சிற்றரசர்களில் ஒருவனான இந்த தந்திதுர்க்கன் தன் செல்வாக்கைப் பெருக்கிக்கொண்டு கி.பி. 753ல் மேலைச் சாளுக்கிய ஆதிக்கத்தை ஒழித்து ராஷ்டிரகூட அரச மரபின் ஆட்சியைத் துவக்கினான். நந்திவர்மன் இவனுடைய போர்களிலெல்லாம் இவனுக்கு உறுதுணையாக இருந்து இறுதியில் இவன் உதவியுடனும் ஒத்துழைப்புடனும் பல்லவ அரசையும் அரியணையையும் மீட்டுக்கொண்டான். மேலே கூறப்பட்டுள்ள சாளுக்கிய-பல்லவ தொடர்பு பற்றிய செய்திகள் டாக்டர் T. V. மகாலிங்கம் அவர்களின் முந்தைய தென்னிந்திய வரலாற்றில் காஞ்சிபுரம் என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்டுள்ளது.

அவனைத் தண்டிக்கும் வகையில் நந்திவர்மன் கங்க நாட்டின் மீது படையெடுப்பை மேற்கொண்டான், என்ற செய்தி நந்திவர்ம னின் புல்லலூர் செப்பேட்டில் காணப்படுகிறது. காலசூரி குடும் பத்தைச் சேர்ந்த லோக மகாதேவி, த்ரைலோக்ய மகாதேவி என்ற இரு சகோதரிகளை விக்கிரமாதித்யன். மணந்திருந்தான். இருவரும் கோயில்களை நிர்மாணித்தல் அறநிலையங்களை நிறுவுதல் போன்ற நற்பணிகளில் ஈடுபட்டார்கள். பட்டடக்கல் என்னு மிடத்தில் சிவபெருமானுக்குக் கற்களாலான லோகேஸ்வரர் கோயிலை லோகமகாதேவி கட்டினார் (இதுதான் இன்று விருபாக்ஷர் கோயிலென்று அழைக்கப்படுகிறது). இக்கோயிலில் வழிபாட்டிற்காகவும், இசை, நடனம் போன்ற நிகழ்ச்சிகளுக் காகவும் கணிசமான உதவித்தொகைகள் அவரால் வழங்கப் பட்டன. மற்றொரு அரசியும் அதே இடத்தில் சிவபெருமானுக்கு லோகேஸ்வரர் கோயிலுக்கு அருகில் த்ரைலோகேஸ்வரர் கோயிலை நிர்மாணித்தார்.

## இரண்டாம் கீர்த்திவர்மன் (கி. பி. 745-757)

த்ரைலோக்ய மகாதேவிக்குப் பிறந்த கீர்த்திவர்மன் கி. பி. 745ல் அரியணை எய்தினான். அவன் இளவரசனாக இருக்கும் பொழுதே தன் தகப்பனுடைய பல்லவ நாட்டுப் படையெடுப்பில் பங்கு கொண்டான் என்பதை முன்னரே கூறியிருக்கின்றோம். அவனுடைய ஆட்சியில் அமைதி நிலவிய பொழுதும் அவன் ஆட்சி யின் இறுதி ஆண்டுகளில் மேலைச் சாளுக்கிய ஆதிக்கத்தின் வீழ்ச்சி தொடங்கியது. எனவே பாதாமிச் சாளுக்கிய கிளையின் கடைசி அரசனாக அவனை நாம் கருதவேண்டும். சாளுக்கியர் வீழ்ச்சிக்குக் காரணமாக அமைந்தது ராஷ்டிரகூடர்களின் எழுச்சியே ஆகும். ராஷ்டிரகூட மரபைச் சேர்ந்த பல சிற்றரசர்கள் இக்காலப் பகுதியில் தக்காணத்தின் பல்வேறு பகுதிகளில் ஆட்சி புரிவதைக் காண்கிறோம். அவர்களில் சிலர் சாளுக்கியர் ஆதிக்கத்திற்குட் பட்ட சிற்றரசர்களாகவும் இருந்தனர். கீர்த்திவர்மனை வென்று மேலைச் சாளுக்கிய ஆதிக்கத்திற்கு முடிவுகட்டிய பெருமை மான்யகேடத்து ராஷ்டிரகூட மரபை நிறுவிய தந்திதுர்க்கனைச் சாரும். மேலைச் சாளுக்கிய ஆதிக்கத்திற்குக் கட்டுப்பட்டு ஒரு சிற்றரசனாய் இருந்த தந்திதுர்க்கன் (இவன் இரண்டாம் தந்தி வர்மன் என்றும் அழைக்கப்பட்டான்.) அவ்வாதிக்கத்தை ஒழித்து ராஷ்டிரகூட அரசை ஒரு தனி சுயேச்சை அரசாக நிறுவிய நிகழ்ச்சி திடீரென்று நிகழ்ந்தது அன்று. படிப்படியாக அந்த உயர்நிலையை அவன் எய்தினான் என்பது அவனது பொறிப்பு களிலிருந்து விளங்கும். தந்திதுர்க்கனின் கி.பி. 742ஆம் ஆண்டு எல்லோரா சாஸனம் அவன் அப்பொழுது சிற்றரசன் நிலையில்தான்

இருந்தான் என்பதைக் காட்டுகிறது. ஏனெனில் அவன் அச்சாஸனத்தில் தன்னைச் சிற்றரசு நிலையை உணர்த்தும் 'மகா சாமந்திபதி' என்று அழைத்துக் கொள்கிறான். (சாமந்தன் = சிற்றரசன்—feudatory) ஆனால் தன்னுடைய மேலாளனான சாளுக்கிய விக்கிரமாதித்யனைப் பற்றி ஒன்றும் அச்சாஸனத்தில் கூறாததிலிருந்து அவன் சாளுக்கிய மேலாண்மையிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ளும் எண்ணம் கொண்டிருந்தான் என்பது புலப்படும். அவனுடைய கி. பி. 754ஆம் ஆண்டு சாமான் காட் சாஸனம், சாளுக்கியப் பேரரசின் வட மாநிலங்கள் ராஷ்டிரகூடர்களின் ஆதிக்கத்திற்கு உட்படுத்தப்பட்டிருந்தன என்பதை உணர்த்துகின்றது. இந்தச் சாஸனமும் மற்றச் சாஸனங்களும் தந்திதுர்க்கன் மகாராஜாதிராஜன், பரமேஸ்வரன் போன்ற பட்டங்களைச் சூட்டிக்கொண்ட செய்தியையும் வல்லபனை வென்றதன் மூலம் மேலாதிக்க இறைமை பெற்றதையும் கூறுகின்றன. காஞ்சிபுரத்து அரசனையும். கேரள அரசனையும், சோழர்களையும், பாண்டியர்களையும் பெருமைமிக்க ஹர்ஷனையும் முன்பு வென்ற கர்நாடகப் படையினை (சாளுக்கியர்களை) வென்றவன் என்றும் தந்திதுர்க்கன் வருணிக்கப்படுகின்றான். சாளுக்கிய ஆதிக்கத்தை ஒழிக்கப் போர் துவக்கும் முன்பு தந்திதுர்க்கன் தன் படை வலிமையைப் பெருக்கிக்கொண்டும் அரச தந்திர யுக்திகளைக் கையாண்டும் போருக்கான ஆயத்தங்களைச் செய்திருக்கவேண்டும். சாளுக்கியர்களுக்கு எதிரான நடவடிக்கைகளை அவன் மத்தியப் பிரதேசத்திலிருந்து தொடங்கியிருக்கவேண்டும். முதலில் மாளவத்தின் கூர்ஜரர்களையும், கோசல கலிங்க நாட்டு அரசர்களையும் அடிபணிய வைத்தான். பிறகு நந்திவர்மன் பல்லவ மல்லனுடன் நட்புறவை ஏற்படுத்திக்கொண்டு அவனுக்குத் தன் மகள் ரேவா என்பவளை மணம் முடித்துக்கொடுத்தான். இவ்வாறாகச் சாளுக்கிய அரசன் கீர்த்திவர்மனின் எல்லை மாநிலங்களை எல்லாம் ஒவ்வொன்றாகக் கைப்பற்றி அவனைத் தனித்து நிற்கும்படி செய்து இறுதியில் தக்காணத்தில் தன்னைச் சுதந்திர அரசனாக அறிவித்துக் கொண்டான். படை வலிமை பொருந்திய ராஷ்டிரகூடர்களின் திடீர்ப் போர்த் தாக்குதலுக்கு இலக்காகிச் சாளுக்கிய ஆதிக்கம் அழிந்துபட்டது என்று கூறுவதற்குப் பதிலாகத் தந்திதுர்க்கனின் ஆக்கிரமிப்புக் கொள்கைக்கு ஈடுகொடுத்து நிற்க முடியாத சாளுக்கிய அரசு வேகமாகத் தன் செல்வாக்கை இழந்து இறுதியில் வீழ்ச்சி அடைந்தது என்று கூறுவதுதான் பொருந்தும். தந்திதுர்க்கனின் சாமன்காட் சாஸனம் வெளியிடப்பட்ட கி.பி. 754ம் ஆண்டிற்குப் பிறகு சில ஆண்டுகள்தான் கீர்த்திவர்மனின் ஆட்சி நீடித்திருந்தது. தந்திதுர்க்கனுக்குப் பிறகு பட்டமெய்திய முதலாம் கிருஷ்ணனும் சாளுக்கியர்கள்மீது, தான் வெற்றி பெற்ற

தாகக் கூறிக்கொள்கிறான். கிருஷ்ணனுடைய ஆட்சியில் சாளுக்கிய ஆதிக்கம் வீழ்ச்சி அடைவதைத் தடுத்து நிறுத்தக் கீர்த்திவர்மன் மற்றொரு முயற்சியைச் செய்தான் போலும். ஆனால் அது வெற்றி பெறவில்லை. அவனுடைய பதினோராம் ஆட்சி ஆண்டான கி.பி. 757ஆம் ஆண்டைச் சேர்ந்த வக்கலேரி சாஸனம்தான் மேலைச் சாளுக்கியர்களின் கடைசி சாஸனம். அந்த ஆண்டிற்குப் பிறகு அவர்களைப் பற்றிய செய்தி எதுவும் நமக்குக் கிடைக்கவில்லை. எனவே கி. பி. 757ல் மேலைச் சாளுக்கிய ஆதிக்கம் மறைந்து ராஷ்டிரகூடர்கள் ஆட்சி தக்காணத்தில் தோன்றியிருக்க வேண்டுமென்று கருதலாம். சாளுக்கியப் பேரரசின் வீழ்ச்சிக்கு ஒரு முக்கிய காரணம் அவர்கள் தொடர்ந்து பல்லவர்களுடன் நடத்திய போர்களாகும். இந்த ஓயாத போர்களின் காரணமாகச் சாளுக்கியர் கவனம் முழுவதும் பேரரசின் தென்பகுதி மீது திருப் பப்பட்டது. இதனால் பேரரசின் வட மாநிலங்கள் புறக்கணிக்கப் பட்டு அவற்றின் மீது சாளுக்கியர்கள் பெற்றிருந்த அதிகாரம் சிறிது சிறிதாகத் தளர்த்தப்பட்டது. இதன் விளைவாக வட மாநில ஆளுநர்கள் சுதந்திர அரசர்கள்போல் செயல்பட ஆரம்பித் தார்கள். ஆனால் இப்போக்கைத் தடுத்து நிறுத்துவதற்கான வலிமையையும், ஆற்றலையும், அவகாசத்தையும் அப்பொழுது சாளுக்கியர்கள் பெற்றிருக்கவில்லை. எனவே சாளுக்கியப் பேரர சின் சிதைவு தவிர்க்கமுடியாத ஒன்றாகிவிட்டது. மேலும் பல்லவர் களுடன் நடத்தப்பட்ட இப்போர்கள் சாளுக்கியப் பேரரசின் படை வலிமையையும் வளத்தையும் பெரிதும் பாதித்தது. படை பலத்தையும், பொருள் வளத்தையும் சிறிது சிறிதாக இழந்து கொண்டிருந்த சாளுக்கிய அரசு ராஷ்டிரகூடர்களின் ஆக்கிரமிப் பிற்குள்ளாகியபொழுது தன்னைக் காத்துக்கொள்ள முடியாத அவலநிலையிலிருந்தது. சாளுக்கியப் பேரரசு இவ்வாறாகச் சிதைவுற் றுக் கொண்டிருந்த பொழுது, அப்போக்கைத் துரிதப்படுத்தும் வகையில் ராஷ்டிரகூடர்களின் எழுச்சி அமைந்தது. படை வலிமை மிக்க தந்திதுர்க்கன், முதலாம் கிருஷ்ணன் போன்ற ராஷ்டிரகூட அரசர்களின் ஆக்கிரமிப்புகளைத் தடுத்து நிறுத்தத் தேவையான ஆற்றலும், சக்தியுமில்லாத சாளுக்கியர்கள் எளிதில் ராஷ்டிரகூடர்களின் ஆதிக்கத்திற்கு உட்படுத்தப்பட்டார்கள்.

**சாளுக்கியப் பேரரசின் பரப்பு :**

வாதாபி நகரையும் அதைச் சுற்றியுள்ள பகுதியையும் கருவா கக்கொண்டு தோன்றிய சாளுக்கிய அரசு நாளடைவில் ஒரு பேரரசாக உருவெடுத்தது. முதலாம் கீர்த்திவர்மன், மங்கலேசன் ஆகியவர்கள் ஆட்சியில் கொங்கணப்பகுதி சாளுக்கிய அரசுடன் இணைக்கப்பட்டது. இரண்டாம் புலிகேசி ஆளுபர்கள் மீது பெற்ற

வெற்றியின் விளைவாகக் கரையோரப் பகுதியான தென் கன்னட மாவட்டத்தைச் சாளுக்கிய அரசுக்குப்பெற்றுத்தந்தான். ரேவதித் திவீபம் என்றழைக்கப்பட்ட இரத்தினகிரி சதாராப் பகுதியும் கர்மராஷ்டிரம் என்றழைக்கப்பட்ட குண்டூர் மாவட்டப் பகுதியும் சாளுக்கியர் வசம் வந்தது. வாதாபிச் சாளுக்கியர்கள் பொறிப்புகள் பல குஜராத் மாநிலத்திலும் காணப்படுவதால் அப் பகுதியும் அவர்களுடைய அரசியல்செல்வாக்கு மண்டலத்திற்கு உட்பட்டிருக்கவேண்டும். சாளுக்கியர்களுடைய பொறிப்புகள் நெல்லூர், கர்நூல், அனந்தபூர் மாவட்டங்களிலும் கிடைத்துள்ளன. இப் பகுதிகள் சாளுக்கியர்களுடைய மேலாதிக்கத்தை ஏற்றுக்கொண்டிருந்த சிற்றரசர்களான பாணர்களால் ஆளப்பட்டு வந்தன. இவ்வாருக வடக்கில் நர்மதை ஆறும், மேற்கே கடலும் சாளுக்கியப் பேரரசின் எல்லைகளாக அமைந்திருந்தன. கிழக்கே ஆந்திர மாநிலத்தின் கர்நூல், குண்டூர், நெல்லூர்ப் பகுதிகளையும் தெற்கே காவிரி ஆறுவரை கர்நாடக மாநிலத்தின் எல்லாப் பகுதிகளையும் தன்னுட் கொண்டதாக இருந்தது, சாளுக்கியப் பேரரசு.

இராஷ்டிரகூடர்களின் எழுச்சியின் விளைவாகத் தக்காண வரலாற்று அரங்கிலிருந்து மறைந்த மேலைச் சாளுக்கியர்கள் இரண்டு நூற்றுண்டுகளுக்குத் தங்கள் செல்வாக்கை இழந்து காணப்பட்டார்கள். அதன்பிறகு ராஷ்டிரகூடர்களின் மறைவினுல் ஏற்பட்ட வெற்றிடத்தை மீண்டும் மேலைச் சாளுக்கிய மரபுடன் தொடர்பு கொண்ட மற்றொரு கிளை மரபினர் நிரப்புவதையும், அவர்கள் தக்காண வரலாற்றில் கல்யாணி சாளுக்கியர்கள் என்ற பெயருடன் மீண்டும் தோன்றுவதையும் காண்கிறோம். ஆனுல் இதற்கிடையில் சாளுக்கியர் என்ற பெயரோடு தக்காணத்தில் பல்வேறு பகுதிகளை ஆண்டு கொண்டிருந்த பல சிற்றரசர்களையும் நாம் காண்கிறோம். இவர்களில் சிலர் மேலைச் சாளுக்கிய மரபின் கிளை மரபைச் சேர்ந்தவர்கள். கி. பி. 800 காலப்பகுதியில் தார்வார் பகுதியைச் சாளுக்கிய மரபைச் சேர்ந்த கட்டியாரா என்ற ஒரு சிற்றரசன் ஆண்டு கொண்டிருந்ததாகத் தெரிகிறது. ராஷ்டிரகூட மூன்றும் கிருஷ்ணனின் ஆதிக்கத்திற்கு உட்பட்டு கி.பி. 944-45 ஆண்டுகளில் சாளுக்கியக் குடும்பத்தைச் சேர்ந்த கட்யேரா என்ற மகாசாமந்தன் கொகலி, மசீயவாடி ஆகிய பகுதிகளை ஆண்டு கொண்டிருந்தான். ராஜாதித்யன் என்ற மற்றொரு சிற்றரசனும் துங்கபத்திரை ஆற்றுக்குக் கீழ்ப் பகுதியில் ஆண்டு கொண்டிருந்தான். ராஷ்டிரகூட மூன்றும் கோவிந்தனின் பொறிப்பு ஒன்று விமலாதித்யன் என்ற சாளுக்கிய சிற்றரசனைப் பற்றிக் கூறுகின்றது. கி. பி. ஒன்பது, பத்தாம் நூற்றுண்டுக் கல்வெட்டுகளில் மைசூர்ப் பகுதியில் சாளுக்கிய நரசிம்மன் என்ற ஒரு சிற்றரசன்

இருந்த செய்தி காணப்படுகிறது. இவர்களைக் காட்டிலும் சிறப்பு வாய்ந்த சாளுக்கிய மரபைச் சேர்ந்தவர்கள் தற்கால ஹைதரா பாத் பகுதியிலுள்ள முதுகொண்டா, வெமுலவாடா ஆகிய இடங்களில் (Mudukonda, Vemulavada) ஆண்டு கொண்டிருந்த சாளுக்கிய சிற்றரசர்கள் ஆவர். அவர்கள் ராஷ்டிரகூடர்களுக்கும் கீழைச் •சாளுக்கியர்களுக்குமிடையே நடந்து கொண்டிருந்த ஆதிக்கப் போட்டியில் சில சமயங்களில் ராஷ்டிரகூடர்களுக்கும், மற்றச் சமயங்களில் கீழைச் சாளுக்கியர்களுக்கும் ஆதரவாகக் கலந்துகொண்டு போரில் அவர்களுக்கு உதவிபுரிந்தனர். வெமுல வாடாச் சாளுக்கியர்களைப் பற்றிய சான்றுகள் பல கிடைத்திருப்ப தால் அவர்கள் வரலாற்றைச் சற்று விவரமாக அறிந்துகொள்ளும் நிலையில் நாம் இன்று இருக்கிறோம். மேலே கூறப்பட்டுள்ளவர்களை விட வரலாற்றில் புகழ் பெற்ற மற்றச் சாளுக்கிய மரபினரும் உண்டு. அவர்களுள் குஜராத் பகுதியை ஆண்ட நவசாரி சாளுக் கியர்களும், ஆந்திர மாநிலத்தில் வேங்கிப் பகுதியை ஆண்ட கீழைச் சாளுக்கியர்களும் குறிப்பிடத்தக்கவர் ஆவர். இவர்களுள் கீழைச் சாளுக்கியர்களைப் பற்றி இந் நூலின் மற்றொரு பகுதியில் விரிவாக ஆராயப் போகிறோம்.

## ராஷ்டிரகூட வம்சம் (மான்யகேடம்)

தந்திவர்மன் (கி.பி. 650-665)
|
முதலாம் இந்திரன் (கி.பி. 665-685)
|
முதலாம் கோவிந்தன் (கி.பி. 685-700)
|
முதலாம் கர்க்கன் (கி.பி. 700-715)
|
- இரண்டாம் இந்திரன் (கி.பி. 715-735)
  - (1) தந்திதுர்க்கன் (கி.பி. 735-756)
- (2) முதலாம் கிருஷ்ணன் (கி.பி. 756-772)
  - (3) இரண்டாம் கோவிந்தன் (கி.பி. 773-780)
  - (4) துருவன் (கி.பி. 780-793)
    - ஸ்தம்பன்
    - கர்க்கன்
    - (5) மூன்றும் கோவிந்தன் (கி.பி. 793-814)
      - (6) முதலாம் அமோகவருஷன் (கி.பி. 814-880)
    - இந்திர ராஜன்


(7) இரண்டாம் கிருஷ்ணன்
(கி.பி. 880-914)
சந்திரோபலப்பை
தி. முதலாம் பூதுகன்
சங்கை
தி. மூன்றும் நந்திவர்மன்
சேதி இளவரசி லட்சுமி
தி. ஜகத்துங்கன்
தி. கோவிந்தாம்பா
(8) மூன்றும் இந்திரன்
(கி.பி. 914-928)
(11) மூன்றும் அமோகவருஷன்
(கி.பி. 936-939]
(9) இரண்டாம் அமோகவருஷன்
(கி.பி. 928-929)
(10) நான்காம் கோவிந்தன்
(கி.பி. 930-936)
(12) மூன்றும் கிருஷ்ணன்
(கி.பி. 939-967)
(13) கொட்டிகன்
(கி.பி. 967-972)
நிருபமா
(14) இரண்டாம் கர்க்கன்
(கி.பி. 972-973)
(15) நான்காம் இந்திரன்
குறிப்பு : தி – திருமணம்


ஹர்ஷரின் பேரரசு
நர்மதை ஆறு
தப்தி ஆறு
அஜந்தா
நாசிக்
எல்லோரா
பைதான்
கன்ஹேரி
கார்லே
கோதாவரி
வேங்கி மண்டலம்
வேமுலவாடம்
கொங்கண விஷயம்
கர்ஹாட்
கரஹாட விஷயம்
சங்கிலி
கிருஷ்ணா
கர்மராஷ்டிரம்
பாதாமி
பெல்வோல விஷயம்
லட்சுமேஸ்வரம்
நளவாடி விஷயம்
பனவாசி மண்டலம்
கங்க மண்டலம்
காஞ்சிபுரம்
பல்லவர்
பாதாமி சாளுக்கிய அரசு
கேரளம்
திருச்சிராப்பள்ளி
தஞ்சாவூர்
சோழர்
மதுரை
பாண்டியர்

# 3. ராஷ்டிரகூடர்கள் (கி. பி. 757-973)
## (மான்யகேடம்)

(மேலைச் சாளுக்கியர்களின் வீழ்ச்சிக்குக் காரணமாக இருந்த அரச மரபினர் ராஷ்டிரகூடர்கள் என்றழைக்கப்பட்டனர்.) ராஷ்டிரகூடர் என்ற இப்பெயர் ஓர் இனத்தினரையோ குல மரபினரையோ குறிப்பிடாது. இடைக்காலத்தில் 'தேஷ்முக்' 'தேசாய்' போன்ற பெயர்கள் 'தேசம்' என்றழைக்கப்பட்ட மாவட்டங்களின் தலைமை அதிகாரிகளைக் குறிப்பிட்டது போல ('ராஷ்டிரகூடர்' என்ற பெயர் ஒரு பதவிப் பெயரைக் குறிக்கும்.) கிராமம் என்ற நிர்வாகப் பிரிவின் தலைமை அதிகாரி 'கிராம கூடன்' என்று அழைக்கப்பட்டது போல ('ராஷ்டிரம்' என்னும் பிரிவின் அதிகாரி 'ராஷ்டிரகூடன்' என்றழைக்கப்பட்டான்.) கி. பி. ஏழாம் நூற்றுண்டு, எட்டாம் நூற்றுண்டுத் தக்காணப் பொறிப்புகளில் 'ராஷ்டிரகூடன்', 'கிராம கூடன்' என்ற பதவிப் பெயர்கள் கொண்ட அரசு அலுவலர்கள் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. (ராஷ்டிரகூட அரச மரபைத் தோற்றுவித்த வராகக் கருதப்படும் தந்திதுர்க்கனுடைய சாஸனம் ஒன்று, தன்னல் அளிக்கப்பட்ட தானங்களை அனுபவிக்கும் உரிமையில் எந்த வகையிலும் தலையிடாமலிருக்குமாறு அரசாங்க அதிகாரி களான ராஷ்டிரகூடர்களை அவன் கேட்டுக்கொண்ட செய்தியைக் குறிப்பிடுகின்றது.) மௌரியர்கள் காலத்திலிருந்தே இதுபோன்ற ஓர் அரசாங்கப் பதவி வழக்கிலிருந்திருக்க வேண்டுமென்பது அவர்கள் பொறிப்பில் 'ராஷ்டிரிகன்' என்ற அதிகாரியைப் பற்றிய குறிப்புகளிலிருந்து தெரியவருகிறது. ('பிரதிஹாரர்' 'பேஷ்வா' என்ற பிற்கால அரசமரபுகளின் பெயர்களும் இதே போல ஒரு பதவியின் பெயரிலிருந்துதான் தோன்றியிருக்க வேண்டும்.) இவ்வாருக ஒரு பதவிப்பெயர் ஓர் அரச மரபின் பெய ராகச் சூட்டிக்கொள்ளப்பட்டதற்குக் காரணம், பண்டைக்கால இந்தியாவில் அரசாங்கப் பதவிகளெல்லாம் மரபு வழி அடிப்படை யிலேயே (hereditary) வழங்கப்பட்டதேயாகும். எனவே ஒரு குறிப்பிட்ட அரசாங்கப் பதவியை வகித்த ஒருவருடைய சந்ததி யர்களும் அதே பதவியைத் தொடர்ந்து வகித்து, அப்பதவிப் பெயராலேயே அக்குடும்பமும் அழைக்கப்பட்டது. இந்த அடிப்

படையில்தான் ராஷ்டிரகூட அரச மரபும், அப் பெயரைப் பெற்றது என்று கருதுவது சாலப் பொருந்தும். ராஷ்டிரகூடர் என்ற சொல் ஒரு பதவிப் பெயரைக் குறிப்பிடும் வகையில் மேலைச் சாளுக்கியர்களின் செப்புப் பட்டயங்களில் பல இடங்களில் பயன் படுத்தப்பட்டுள்ளது. எடுத்துக்காட்டாக கி. பி. 630ஆம் ஆண்டு லோஹ்னர் சாஸனத்தைக் கூறலாம்.

ராஷ்டிரகூடன் என்ற அதிகாரியின் ஆளுகைக்குட்பட்டிருந்த ராஷ்டிரம் என்னும் நிர்வாகப் பிரிவு என்ன பரப்பளவைக் கொண்டது என்பதை அறுதியிட்டுக் கூறமுடியாது. வெவ்வேறு காலப் பகுதிகளில் வெவ்வேறு அரச மரபுகளின் ஆட்சியில் ராஷ்டிரம் என்ற பிரிவுகளின் பரப்பெல்லை மாறிக்கொண்டே யிருந்தது. எடுத்துக்காட்டாக மௌரியர்கள் காலத்தில் ராஷ்டிரம் என்பது ஒரு பெரிய மாநிலத்தைக் குறித்தது. அதன் ஆளுநர் ராஷ்டிரியன் என்றழைக்கப்பட்டான். கிறிஸ்துவ சகாப்தத்தின் தொடக்கத்தில் மகாராஷ்டிரம், பீரார் போன்ற பகுதிகளில், ரதிகர்கள், மகாரதிகர்கள் என்றழைக்கப்பட்ட அதிகாரிகள், நாம் இன்று காணும் மாவட்டங்கள் போல, இரண்டு மூன்று மாவட்டங்கள் கொண்ட நிர்வாகப் பிரிவின் தலைமை அதிகாரி களாக இருந்தனர். ஆனால் இந்த அதிகாரிகள் எல்லாரும் மத்திய அரசாங்கத்தின் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டவர்கள். இருப்பினும், மத்திய அரசாங்கம் பலவீனமடையும் பொழுது இவர்கள் மத்திய அரசின் கட்டுப்பாட்டிலிருந்து விடுபட்டுச் சுயேச்சையாக இயங்க ஆரம்பித்தனர்.

கி.பி. ஆறும், ஏழாம் நூற்றுண்டுகளில் இதுபோல், ஒன்றிற்கும் மேலான பல ராஷ்டிரகூட அரச மரபுகள் தக்காணத்தில் இருந் ததை நாம் சாஸனங்கள் மூலமாக அறிகிறோம். மானபுரம் அல்லது மான்யபுரம் என்ற இடத்திலிருந்து ஆண்ட ராஷ்டிரகூட மரபினர் அவர்களுள் ஒருவராவர். மகாராஷ்டிரத்தின் தென் பகுதியிலுள்ள மான் என்ற நகரம்தான் மான்யபுரமாக இருந் திருக்கவேண்டும். எனவே ராஷ்டிரகூடர்கள் மகாராஷ்டிரத்தின் தென் பகுதியிலிருந்து ஆண்டிருக்கவேண்டும். மானங்கன் என்ற அரசன் இவ் வம்சத்தைத் தோற்றுவித்தவன். அவனுடைய மகன் தேவராஜன். தேவராஜன் மகன் பவிஷ்யன். அவன் மகன் அபிமன்யு. மேற்கூறிய அரசர்கள் பற்றி அபிமன்யுவின் தேதி யிடப்படாத ஒரு சாஸனம் கூறுகிறது. அச் சாஸனத்தில் அவ் வரசன் தன்னை ஒரு ராஷ்டிரகூடன் என்று அழைத்துக்கொள் கிறன். இந்த ராஷ்டிரகூடர்களுக்கும், சாளுக்கிய ஆதிக்கத்தை ஒழித்த தந்திதுர்க்கனின் மான்யகேட ராஷ்டிகூட மரபிற்கும்

என்ன உறவு என்பதை நிச்சயமாகக் கூறயியலாது. அபிமன்யுவி னுடைய சாஸனங்களில் காணப்படுவது சிங்க இலச்சினையாகும். மான்யகேடத்து ராஷ்டிரகூடர்களின் இலச்சினை கருடன் ஆகும். இந்த இரு ராஷ்டிரகூட அரசுகளும் அடுத்தடுத்து அமைந்த அரசுக ளாகும். மான்யகேட ராஷ்டிரகூட அரசர்களில் ஒருவரான நன்ன ராஜனுடைய திவார்கேட், மூல்டாய்ச் செப்பேடுகள் (Tivarkhed Multai plates, Mathya Pradash) துர்க்கராஜன், கோவிந்தராஜன், சுவாமிகராஜன், நன்னராஜன் என்ற நான்கு தலைமுறை அரசர் களைப் பற்றிக் குறிப்பிடுகின்றன. இந்த நன்னராஜனும், அபிமன் யுவும் சம காலத்தரசர்களாக இருக்கக்கூடும். இவ்விரு வம்சத் தினரும் ஒருவருக்கொருவர் உறவினராகக் கூட இருக்கலாம். ஆனால் இதை அறுதியிட்டுக் கூறமுடியாது. தந்திதுர்க்கன் நன்ன ராஜனுடைய நேரடியான வழித் தோன்றலாகவோ ஒரு கிளை மரபைச் சேர்ந்த வழித்தோன்றலாகவோ இருக்கக்கூடும். நன்னராஜனுடைய பட்டயங்களிலும், தந்திதுர்க்கன் சாஸனங் களிலும் ஒரே இலச்சினையாகக்—கருடன் காணப்படுகிறது. நன்ன ராஜனுடைய முன்னோர்கள் சூட்டிக் கொண்டிருந்த பெயர்களை, தந்திதுர்க்கனுடைய மரபைச் சார்ந்த ராஷ்டிரகூட மன்னர்களும் சூட்டிக்கொள்வதை நாம் காண்கிறோம். எனவே இவ்விரு மரபினரும் நெருங்கிய உறவினர்களாக இருக்கலாம். நன்னராஜ னுடைய முன்னோர்கள் வாதாபிச் சாளுக்கியர்களின் ஆதிக்கத்திற் குட்பட்ட சிற்றரசர்களாக இருந்துவந்தனர். இரண்டாம் புலிகேசியின் ஆட்சியில் நன்னராஜன் பீரார் பகுதிக்குச் சென்று அங்கு ஒரு சிறிய அரசை நிறுவிச் சாளுக்கியர்களின் சிற்றரசனாக வாழ்ந்து வந்தான். அவனுடைய தலைநகரம் அசலபுரம் என்னும் தற்கால எலிச்பூர் நகரம் ஆகும். இவன் கி.பி. 630-லிருந்து 650 வரை ஆட்சி செய்திருக்கக் கூடும். நன்னராஜனுக்குப் பிறகு தந்திவர்மனும் அவனுடைய மகனும், பேரனுமான முறையே இந்திரனும் கோவிந்தனும் ராஷ்டிரகூட அரசை ஆண்டனர். கோவிந்தனுடைய மகனான கர்க்கராஜனுக்கு இந்திரன், துருவன், கிருஷ்ணன், நன்னராஜன் என்ற நான்கு பிள்ளைகள் இருந்தனர். இவர்களில் இந்திரனுடைய மகன் தந்திதுர்க்கன்தான் வாதாபிச் சாளுக்கியர்கள் அழிவிற்கும் தக்காணத்தில் ராஷ்டிரகூடர்கள் எழுச்சிக்கும் காரணமாக இருந்தவன்.

தக்காண வரலாற்றில் புகழடைந்த ராஷ்டிரகூட வம்சம் இந்தத் தந்திதுர்க்கனின் வம்சமாகும். ராஷ்டிரகூடர்கள் யார்? அவர்களுடைய பூர்வீக இருப்பிடம் எது என்ற கேள்விகளுக்கு நாம் விடை காணவேண்டும். ராஷ்டிரகூடர் என்பது ஒரு குறிப் பிட்ட இனத்தைச் சேர்ந்த மக்களையோ ஒரு தேசீய இனத்தையோ

**(Nationality)** குறிப்பிடாது என்பதையும், அது ஒரு பதவியின் பெயர் என்பதையும், அப்பதவியை வகித்தவர்களும், அவர்களுடைய சந்ததியார்களும் தங்களை அந்தப் பதவியின் பெயரால் அழைத்துக்கொண்டனர் என்பதையும் முன்பே கூறியிருக்கிறோம். ராஷ்டிரகூடர்கள் யாதவ குலத்தைச் சேர்ந்தவர்கள் என்று அவர்களுடைய பிற்காலச் சாஸனங்கள் கூறுகின்றன. சஞ்சன் செப்பேடுகள் வெளியிடப்பட்ட கி. பி. 871-ஆம் ஆண்டிலிருந்துதான் ராஷ்டிரகூடர்கள் தங்களை யது வம்சத்தினர் என்று கூறிக்கொள்ளத் தொடங்கினர் என்பது தெரியவருகிறது. ராஷ்டிரகூட மூன்றும் கோவிந்தனின் செப்பேடு ஒன்று அவனுடைய பிறப்பைப் பற்றிக் கூறும்பொழுது கிருஷ்ணபகவான் யாதவகுலத்தில் பிறந்ததால் அது பெருமையும் வலிமையும் பெற்றதுபோலக் கோவிந்தனின் பிறப்பால் ராஷ்டிரகூட வம்சம் பெருமையும் வலிமையும் எய்தியது என்று கூறுகிறது. இது யாதவ குலத்திற்கும், ராஷ்டிரகூட மரபிற்கும் இடையே—ஓர் ஒப்புமையே ஒழிய, ராஷ்டிரகூடர்கள் யாதவ குலத்திலிருந்து தோன்றியவர்கள் என்று இச்செப்பேடுகள் கூறவில்லை. இந்த ஒப்புமை பிற்காலத்து ராஷ்டிரகூட அரசர்களை யாதவ குலத்தோடு தங்களைத் தொடர்புபடுத்திக்கொள்ளும்படித் தூண்டியிருக்கவேண்டும். கி. பி. 871-ஆம் ஆண்டு சஞ்சன் சாஸனம் ராஷ்டிரகூட அரசமரபைத் தோற்றுவித்தவர் வீரநாராயணனாகிய கிருஷ்ண பகவான் என்று கூறுகிறது. மூன்றும் கிருஷ்ணனின் கர்ஹாட், தியோலி சாஸனங்கள் யது வம்சத்தைச் சேர்ந்த சாத்யகி கிளையின் இரட்டன் என்பவனுடைய வழித்தோன்றல்கள்தான் ராஷ்டிரகூடர்கள் என்று குறிப்பிடுகின்றன. காவியத் தலைவர்களுடன் தங்களைத் தொடர்புபடுத்திக்கொள்ள வேண்டுமென்ற ஆர்வத்தினால் பிற்கால அரசர்களும் அவைக் கவிஞர்களும் இதுபோன்ற கருத்துக்களைப் புகுத்தியிருக்கலாம். பிற்காலத்து இராஜபுத்திர இனங்களான ராதோர், ராதோட் என்ற பெயர்கள் ராஷ்டிரகூடர் என்ற சொல்லின் திரிபு என்ற அடிப்படையில், ராஷ்டிரகூடர்களின் பூர்வீக இருப்பிடம் இராஜபுதனமாக இருக்கலாமென்றும், அவர்கள் ராதோர்கள் வழித்தோன்றல்களாக இருக்கலாமென்றும் ஃபிளீட் (Fleet) என்னும் அறிஞர் கருதுகின்றார். இக்கருத்து ஏற்புடையதன்று. ஏனெனில் தக்காண ராஷ்டிரகூடர்களின் தோற்றத்திற்கு வெகு காலத்திற்குப் பிறகுதான் ராதோர்கள் இந்திய வரலாற்றில் இடம் பெறுகிறார்கள். ராஷ்டிரகூடர்கள் அவர்களுக்கும் முற்பட்டவர்கள். எனவே ராதோர்கள் என்ற இனத்தினர் தக்காணத்தை ஆண்ட ராஷ்டிரகூடர்களின் வழித்தோன்றல்களாக இருக்கலாம் என்று கருதுவதுதான் பொருத்தமுடையதாகும். முதலாம் துருவன், மூன்றும் கோவிந்தன், மூன்றும் இந்திரன், மூன்றும்

கிருஷ்ணன் போன்ற ராஷ்டிரகூட அரசர்களின் வடநாட்டுப் படையெடுப்பிற்குப் பின்பு அங்கேயே தங்கிவிட்ட ராஷ்டிரகூட மரபினர்களின் சந்ததியர்களாக இவர்கள் இருக்கக்கூடும். ராஷ்டிரகூடர்கள் தெலுங்கர்கள் என்றும், ஆந்திர நாட்டு ரெட்டி களின் சந்ததியர்கள் என்றும் ஒரு கருத்துண்டு. ஏனென்றால், பதினன்கு, பதினைந்தாம் நூற்றாண்டுகளில்தான் ரெட்டி மரபினர் இந்திய வரலாற்றில் இடம் பெறுவதைக் காண்கிறோம். மேலும் ராஷ்டிரகூடர்களுக்கும் இவர்களுக்கும் உறவு இருந்தது என்பதை ஏற்றுக்கொண்டால் ராஷ்டிரகூடர்களின் பூர்வீக இருப்பிடம் ஆந்திர நாடாக இருக்கவேண்டும். அவ்வாறெனில் அவர்களுடைய ஆட்சி அப் பகுதியிலிருந்து தொடங்கி, தக்காணத்தின் மற்றப் பகுதிகளுக்குப் பரவியிருக்க வேண்டும். உண்மை என்ன வெனில், ராஷ்டிரகூடர்கள் ஆதிக்கம் ஆந்திரப் பகுதியிலிருந்து தொடங்காதது மட்டுமன்றி ஆந்திரப் பகுதி அவர்களுடைய பேரரசிற்கு உட்பட்டிருக்கவில்லை. ஆந்திரப் பகுதியை ஆண்ட கீழைச் சாளுக்கியர்கள் (வேங்கி) அவர்கள் ஆதிக்கத்தை எதிர்த் துப் போராடிக்கொண்டே யிருந்தனர். ராஷ்டிரகூடர்களின் தாய் மொழி கன்னடம் அவர்கள் கன்னட மொழியையும் கன்னடக் கலாச்சாரத்தையும் ஆதரித்தனரே யன்றி, தெலுங்கையோ ஆந்திரக் கலாச்சாரத்தையோ அல்ல. 'ராஷ்டிரா' என்ற சொல் லின் திரிபுதான் ரட்டா அல்லது ரெட்டி என்ற அடிப்படையில் இவ்விரு குடும்பத்தினருக்குமிடையே தொடர்பு இருந்திருக்கக் கூடும் என்று கருதுவது ஏற்புடையதாகாது. ஏனெனில் தெலுங்கு மொழியில் ராஷ்டிரா என்ற சொல் ரெட்டி என்று திரிபு அடைவது சாத்திய மாகாது என்று கூறப்படுகிறது.[1]

ராஷ்டிரகூடர்கள் மராத்திய மொழி பேசும் ஒரு மரபினர் என்றும், தற்கால மராத்தியர்களின் மூதாதையர்களாக இருக் கலாமென்றும் சி. வி. வைத்தியா கருதுகின்றார். ஆனல் ராஷ்டிர கூடர்களின் தாய் மொழி கன்னடம், அவர்கள் கன்னடக் கலாச் சாரத்தையும், கன்னட மொழியையும் போற்றி வளர்த்தார்கள் என்ற செய்திகளை மனத்தில் கொண்டு பார்க்கும்பொழுது, இக் கருத்து ஏற்புடையதன்று என்பது விளங்கும். அவர்கள் மகாராஷ் டிரத்தைச் சேர்ந்தவர்களா கர்நாடகத்தைச் சேர்ந்தவர்களா என்பதை இன்னும் சற்றுக் கூர்ந்து ஆராயலாம். அசோகருடைய கல்வெட்டுகளில் குறிப்பிடப்பட்டிருக்கும் 'ராஷ்டிரிகர்கள்' 'ரதிகர்கள்' என்ற குடும்பங்களைச் சேர்ந்தவர்கள்தான்

[1] A. S. Altekar, The Rashtrakutas and their Times, P P. 17-18

இந்த ராஷ்டிரகூடர்கள்[1]. மேலே கூறப்பட்ட அதிகாரிகள் மகாராஷ்டிரப் பகுதியில் மட்டும் காணப்பட்டார்கள் என்ற கருத்துத் தவறாகும். கர்நாடகப் பகுதியிலும் இதுபோன்ற அதிகாரிகள் இருந்தனர் என்பதற்குக் கல்வெட்டு, நாணயச் சான்றுகள் உள்ளன. எனவே பிற்காலத்து ராஷ்டிரகூடர்கள் கர்நாடகப் பகுதியில் பணிபுரிந்து வந்த இந்த அதிகாரிகள் குடும்பத்தினரைச் சேர்ந்தவர்களாக இருக்கவேண்டும். மகாராஷ்டிரத்திலிருந்து வந்தவர்கள் என்ற கருத்துத் தவறாகும். அவ்வாறெனில் ராஷ்டிரகூடர்கள் கன்னட மொழியை ஆதரித்ததும் கன்னடக் கலாச்சாரத்தைப் போற்றி வளர்த்ததும், கன்னட மொழியில் தங்கள் பொறிப்புகளை வெளியிட்டதும் எவ்வாறு பொருந்தும்? இவர்கள் கர்நாடகத்தைச் சேர்ந்தவர்களானால், நாம் முன்பு குறிப்பிட்டுள்ளதுபோல, இவர்களை எலிச்பூரிலிருந்து ஆட்சி செய்துகொண்டிருந்த ராஷ்டிரகூட நன்னராஜனுடைய சந்ததியார்கள் என்று எவ்வாறு கூறமுடியும்? இவ்விரு கருத்துக்களிலும் முரண்பாடு ஒன்றுமில்லை. ராஷ்டிரிகர்கள், ரதிகர்கள் போன்ற குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் மூன்றாம் நூற்றாண்டுக்கும் முன்னரே கர்நாடகத்திலும் தென் குஜராத் பகுதியிலும் ஆந்திர நாட்டிலும் குடியேறியிருந்தார்கள் என்பதற்குப் பல சான்றுகள் உள்ளன. அதுபோலத் தந்திதுர்க்கனுடைய மூதாதையர்களும் பீரார் பகுதிக்குச் சென்று எலிச்பூரிலிருந்து ஆட்சி செய்துகொண்டு இருந்திருக்கலாம். அவர்கள் பூர்வீக இருப்பிடம் கர்நாடகம் என்பதற்குச் சான்றுகள் உள்ளன. (ராஷ்டிரகூடர்களை 'லட்டலூராவின் ஆட்சியாளர்கள்' (Lord of Lattalura) 'லட்டலூராவிலிருந்து குடிபெயர்ந்தவர்கள்' (Emigrants from Lattalura) என்று குறிப்பிடும் பல ராஷ்டிரகூட சாஸனங்கள் உள்ளன. இதுவே அவர்களுடைய பூர்வீக இருப்பிடமாகக் கருதப்படுகிறது) ஹைதராபாத் சமஸ்தானத்தின் ஊஸ்மானுபாத் மாவட்டத்தைச் சேர்ந்த லாடூர் (Latur) என்று, இன்று வழங்கப்படும் பகுதிதான் அன்று லாட்டாலூரா என்றழைக்கப்பட்ட பகுதியாகும். மகாராஷ்டிரத்தின் ஒரு பகுதியாக இருப்பினும் அது கன்னட மொழி பேசப்பட்ட ஒரு பகுதியாகும். இங்கிருந்துதான் தந்திதுர்க்கனின் முன்னோர்கள் பீரார் பகுதிக்கு (எலிச்பூருக்கு) குடி பெயர்ந்திருக்க வேண்டும். கன்னடப்பகுதியிலிருந்து வந்தமையால்தான்

[1] 'ராஷ்டிரிகர்கள்', 'ரதிகர்கள்', 'மகாரதிகர்கள்' போன்ற சொற்கள் அசோகருடைய பொறிப்புகளில் மட்டுமின்றிச் சாதவாகனர்களுடைய நானாகத் பொறிப்பிலும் காரவேலருடைய கந்தகிரி பொறிப்பிலும் கன்ஹேரி, கார்லே பொறிப்புகளிலும் காணப்படுகின்றன. ஒரு குறிப்பிட்ட பகுதியை ஆண்டு கொண்டிருந்த சிற்றரசர்கள் அல்லது மாவட்டத் தல அதிகாரிகள் என்ற பொருள்பட இச் சொற்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன.

தந்திதுர்க்கனுடைய மூதாதையர்கள் எலிச்பூரிலிருந்த ஆட்சி செய்துகொண்டிருந்தபொழுதும் கன்னட மொழியிலேயே தங்கள் சாஸனங்களை வெளியிட்டனர். கர்நாடகத்தில் மட்டும் இவர்கள் ஆட்சி செய்துகொண்டிருந்தார்கள் என்ற கருத்தை ஏற்றுக் கொண்டால் தந்திதுர்க்கன், குஜராத், மாளவம், மத்திய இந்தியா, வடக்கு மகாராஷ்டிரம் போன்ற பகுதிகளில் புரிந்த போர்ச் சாதனைகளுக்கு எப்படி விளக்கம் கூறமுடியும்? கர்நாடகப் பகுதியிலிருந்து தந்திதுர்க்கனின் முன்னோர்கள் பீரார் பகுதிக்குக் குடி பெயர்ந்து வந்தார்கள் என்ற கருத்தை ஏற்றுக் கொண்டால்தான் மேற்கூறிய தந்திதுர்க்கனின் நடவடிக்கை களுக்கு எளிதில் விளக்கம் கூறமுடியும்.

மேற்கூறியவற்றிலிருந்து, கன்னடம் ராஷ்டிரகூடர்களின் தாய்மொழி ஆகும். கன்னடக் கலாச்சாரத்தையும் கன்னட மரபுகளையும் அவர்கள் பின்பற்றினார்கள்; கன்னட மொழி, இலக்கிய வளர்ச்சியில் ஈடுபாடு காட்டினார்கள்; கன்னட மொழியிலேயே அவர்கள் சாஸனங்கள் யாவும் இருந்தன; ராஷ்டிரகூட அரசர் களான முதலாம் அமோகவருஷன் போன்றவர்கள் கன்னட மொழியை ஆதரித்ததோடு மட்டுமன்றி அவர்களே கன்னட மொழியில் வல்லுநர்களாகவும் இருந்தனர் — என்ற காரணங் களுக்காக ராஷ்டிரகூடர்கள் கன்னடப்பகுதியைச் சேர்ந்தவர்கள் என்பதை அறுதியிட்டுக் கூறலாம். ராஷ்டிரகூடர்கள் கருடனைத் தங்கள் சின்னமாகப் பயன்படுத்தினார்கள். அவர்களுடைய செப் பேடுகளில் இச் சின்னம் பொறிக்கப்பட்டுள்ளதை நாம் காண லாம். ராஷ்டிகூட அரசர்கள் தங்களை 'வல்லபன்' என்ற பட்டப் பெயரால் அழைத்துக் கொண்டார்கள். அரேபிய வரலாற் றறிஞர்கள் ராஷ்டிரகூட அரசர்களைக் குறிப்பிடப் பயன்படுத்திய 'பல்ஹரா' என்னும் சொல் 'வல்லபராஜா' என்ற சொல்லின் சுருக்கமாகயிருக்கலாம்.

### தந்திதுர்க்கனுக்கு முன் ஆண்ட ராஷ்டிரகூட அரசர்கள்

கி. பி. 753-ல் வாதாபிச் சாளுக்கியர் ஆதிக்கத்திற்கு முடிவு கட்டிய தந்திதுர்க்கன் முன்னோர்கள், தங்கள் பூர்வீக இடமான லட்டலூரிலிருந்து கி. பி. ஏழாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பீரார் பகுதிக்குக் குடியேறிச் சென்று அங்கு மேலைச் சாளுக்கிய ஆதிக்கத்திற்குட்பட்ட சிற்றரசர்களாகப் பல ஆண்டுகள் வாழ்ந்து வந்தனர். தந்திதுர்க்கனின் முன்னோர்களில் ஒருவன் தந்திவர்மன் என்பவனாவான். இவன் ஆட்சிக்காலம் கி. பி. 650 முதல் கி. பி. 665 வரை இருக்கலாம். தசாவதாரக் குகைப் பொறிப்பு மூலமாக இவனுடைய சாதனைகளைப்பற்றி நாம் அறியலாம்.

இவனுக்குப் பிறகு ஆண்ட இந்திரன் (கி. பி. 665-685), முதலாம் கோவிந்தன் (கி. பி. 685-700) ஆகிய அரசர்களைப்பற்றிய செய்திகள் நமக்கு அதிகமாகக் கிடைக்கவில்லை. கோவிந்தன் ஆழ்ந்த சைவசமயப் பற்றுள்ளவன் என்ற செய்தியும் மங்கலேச னுக்கும் புலிகேசிக்குமிடையே நடந்துகொண்டிருந்த வாரிசுரிமைப் போட்டியினால் ஏற்பட்ட குழப்பநிலையைப் பயன்படுத்திக் கொண்டு அவன் சாளுக்கிய நாட்டின் மீது படையெடுத்தான் என்ற செய்தியும் நமக்குக் கிடைத்துள்ளன. இவனுக்குப் பிறகு கர்க்கராஜன் (கி. பி. 700-715) என்பவன் அரியணை யெய்தினான். வைணவ சமயத்தைச் சார்ந்த இவன் ஆட்சியைப்பற்றிய விவரங்கள் ஏதும் நமக்குக் கிடைக்கவில்லை. கர்க்கராஜனுக்கு இந்திரன், துருவன், கிருஷ்ணன், நன்னராஜன் என்ற நான்கு பிள்ளைகள் இருந்தனர். அவர்களில் மூத்தவனான இந்திரன் புகழார்வம் மிக்கவனாக இருந்தான். அவன் கி.பி. 715 முதல் 735 வரை ஆட்சி புரிந்திருக்கக்கூடும். தன்னுடைய சகோதரர்கள் உதவியுடன் ராஷ்டிரகூட ஆதிக்கத்தை இவன் வடதிசையில் பரப்பினான். ஆனால் சாளுக்கிய அரசன் விஜயாதித்தியனுடைய ஆதிக்கத்தை ஏற்றுக்கொண்டு ஒரு சிற்றரசனாக ஆட்சி செய்து வந்தான். அவன் ராஷ்டிரகூட அரியணையேறியபொழுது அரசியல் சூழ்நிலை எவ்வாறு இருந்தது என்பதைச் சற்று ஆராயவேண்டும். வளர்ந்துவரும் ராஷ்டிரகூட அரசிற்குத் தெற்கில் விஜயாதித்ய னுடைய சாளுக்கிய அரசு இருந்தது. பல்லவர்களுடன் நடந்து கொண்டிருந்த ஆதிக்கப் போட்டியால் அவ்வரசின் வலிமை குன்றியிருந்தது. மேற்கே சாளுக்கியர்களால் ஆளப்பட்டு வந்த குஜராத் அரசும் கூர்ஜர அரசும் இருந்தன. குஜராத்தை ஆண்ட சாளுக்கிய அரசன் மங்கலராஜ வினயாதித்யன் என்பவன். கூர்ஜர அரசன் மூன்றாம் ஜயபட்டன். இந்திரன் குஜராத் சாளுக்கிய அரச குடும்பத்தைச் சேர்ந்த பவநாகா (Bhavanaga) என்ற இள வரசியைக் கவர்ந்துவந்து மணம் புரிந்துகொண்ட செய்தியைச் சஞ்சன் செப்பேடுகள் கூறுகின்றன. இந்த இளவரசியின் தகப்பன் மங்கலராஜ வினயாதித்யனாக இருக்கக்கூடும். அவன் விருப்பத் திற்கு மாறாகவும், இந்த இளவரசியைச் சுயம்வரத்தில் மணந்து கொண்டிருக்க வேண்டிய வலபியின் மைத்ரகக் குடும்பத்தைச் சேர்ந்த இளவரசனுக்கு எதிர்ப்பாகவும் இந்திரன் இத் திருமணத்தை முடித்துக்கொண்டது அவன் புகழும் பெருமையும் வளர உதவியது.

**தந்திதுர்க்கன் கி.பி. 735-756**

மேலைச்சாளுக்கிய அரசன் இரண்டாம் கீர்த்திவர்மனைப் போரில் வென்று, சாளுக்கிய ஆதிக்கத்திற்கு முடிவுகட்டி,

ராஷ்டிரகூட வம்சத்தை முன்னணிக்குக் கொண்டுவந்த பெருமை தந்திதுர்க்கனையே சாரும். இவன் இரண்டாம் இந்திரனின் மகன் என்றும், கார்க்கராஜன், கோவிந்தன், முதலாம் இந்திரன், தந்தி வர்மன் ஆகியவர்கள் இவனுடைய மூதாதையர்கள் என்றும் இவனுடைய எல்லோராப் பொறிப்பு கூறுகிறது. கி.பி. 754ஆம் ஆண்டு சாமன்காட் செப்பேடுகளும் (Samangad plates) தேதி யிடப்படாத எல்லோரா தசாவதாரக் குகைப் பொறிப்பும் (Dasavathara cave inscription) தந்திதுர்க்கன் ஆட்சியைப்பற்றித் தெரிந்துகொள்வதற்கு இரண்டு முக்கிய சான்றுகளாகும். இவன் மேலைச்சாளுக்கிய ஆதிக்கத்திலிருந்து விடுபட்டு, ஒரு சுதந்திர ராஷ்டிரகூட அரசை நிறுவிய நிகழ்ச்சி திடீரென்று நடந்ததன்று. படிப்படியாக இவன் இந்தச் சாதனையைப் புரிந்தான். இது கி.பி. 753-54-ல் நிகழ்ந்திருக்கவேண்டும். ஏனெனில் இவனுடைய கி.பி. 742ஆம் ஆண்டு எல்லோரா சாஸனம் இவன் சிற்றரசன் நிலையில் இருந்ததைக் குறிப்பிடும் வகையில் இவனை மகாசாமந் தாதிபதி என்று அழைக்கின்றது. (மகாசாமந்தன்-சிற்றரசன் Feudatory). இவனுடைய 754ஆம் ஆண்டு சாமன்காட் சாஸனம் இவனை மகாராஜாதிராஜன், பரமேஸ்வரன் என்ற பட்டங்களால் அழைப்பதிலிருந்து, அந்த ஆண்டிலோ, அதற்கு சற்று முன்போ இவன் சுயேச்சையடைந்திருக்க வேண்டுமென்று கருதலாம். இவன் கி.பி. 735ஆம் ஆண்டுப் பட்டமெய்தியது முதல், கி.பி. 753-54ல் சாளுக்கிய ஆதிக்கத்தை ஒழிக்கும்வரை தன்னுடைய செல்வாக்கைப் பெருக்கிக்கொள்ள பல நடவடிக்கைகளை எடுத்திருக்கவேண்டும். இவன் பட்டமெய்திய சமயத்தில்தான் குஜராத் கத்தியவார் பகுதி அரேபிய முஸ்லீம்களின் படையெடுப் பிற்குள்ளாகிக் குஜராத்தை ஆண்டுகொண்டிருந்த சாளுக்கி யர்களும் வலபியை ஆண்டுகொண்டிருந்த மைத்ரகர்களும், கூர் ஜரர்களும் பெரும் தொல்லைக்கு உள்ளாக்கப்பட்டார்கள். வாதாபிச்சாளுக்கிய அரசனை இரண்டாம் விக்கிரமாதித்யனின் ஆதிக்கத்திற்குட்பட்ட சிற்றரசனாகக் குஜராத்தை ஆண்டுகொண் டிருந்த சாளுக்கிய அரசன் புலிகேசி அரேபியர்களை நவசாரிக்கு அருகில் தடுத்து நிறுத்தி அவர்கள்மீது ஒரு பெரும் வெற்றியைப் பெற்றான், இந்த வெற்றிக்காக இவனைப் பாராட்டி, இவனுக்கு நன்றி செலுத்தும் வகையில் விக்கிரமாதித்யன் பல பட்டங்களை இவனுக்கு வழங்கினான். இந்தப் பணியில் குஜராத் சாளுக்கிய அரசன் புலிகேசியுடன், வாதாபிச் சாளுக்கியர்களின் ஆதிக்கத் திற்கு உட்பட்டிருந்த சிற்றரசனை தந்திதுர்க்கனும் ஈடுபட்டிருக்க வேண்டும் என்று கருதுவது பொருத்தமுடையதாகும். தந்திதுர்க் கனுடைய கி.பி. 742ஆம் ஆண்டு எல்லோராச் செப்பேடுகளில் இவன் 'பிரிதிவி வல்லபன்' போன்ற புதிய பட்டப் பெயர்களைச்

சூட்டிக்கொள்பவனாகக் காண்கிறோம். இவன் அரேபியர்கள் ஊடுருவலைத் தடுத்து நிறுத்தும் பணியில் ஈடுபட்டதைப் பாராட்டும் வகையில் இப் பட்டப்பெயரை இவன் மேலாளனான விக்கிரமாதித்யன் இவனுக்கு வழங்கியிருக்கக்கூடும்.

தந்திதுர்க்கனுடைய போர்ச் சாதனைகளைப் பற்றிக் கூறும் இவனுடைய பொறிப்புகள் மாஹி, மகாநதி, ரேவா ஆற்றங் கரைகளில் இவன் போரிட்ட செய்தியையும், காஞ்சி, கலிங்கம், கோசலம், ஸ்ரீசைலம், மாளவம், லாடம், சிந்து ஆகிய நாடுகள் மீது இவன் வெற்றி பெற்ற செய்தியையும், எல்லாவற்றிற்கும் மேலாக இவன் சாளுக்கிய ஆதிக்கத்தைத் தகர்த்தெறிந்த செய்தியையும் குறிப்பிடுகின்றன. இவனுடைய முதல் சாதனை அரேபியருடைய ஆக்ரமிப்பைத் தடுத்து நிறுத்த இவன் செய்த போர்களாகும். பாதாமிச் சாளுக்கிய அரசன் இரண்டாம் விக்கிர மாதித்யனின் ஆணைப்படி குஜராத் சாளுக்கிய அரசன் புலிகேசி யுடன் ராஷ்டிரகூடத் தந்திதுர்க்கனும் ஒத்துழைத்து நடத்திய இப் போர்பற்றி முன்பே குறிப்பிட்டுள்ளோம். இரண்டாம் விக்கிர மாதித்யனின் ஆதிக்கத்திற்கு மேலும் சில ஆண்டுகள் உட்பட் டிருந்த தந்திதுர்க்கன் கி.பி. 743ல் சாளுக்கிய இளவரசன் கீர்த்தி வர்மனுடைய பல்லவ நாட்டுப் படையெடுப்பில் பங்குகொண்டு பல்லவர்கள்மீது அவ்வரசன் பெற்ற வெற்றிக்குப் பேருதவியாக இருந்தான். பல்லவநாட்டுப் படையெடுப்பிலிருந்து திரும்புகையில் கர்நூல் மாவட்டத்திலுள்ள ஸ்ரீ சைலத்தின்மீது படையெடுத்து வெற்றி பெற்றான். இவ்வாறாக இவனுடைய ஆட்சியின் தொடக்க ஆண்டுகளில் இவன் பெற்ற பல வெற்றிகளும், போர் அனுபவமும் இவனுடைய புகழ் ஆர்வத்தைத் தூண்டியிருக்கவேண்டும். எனவே காஞ்சிப் படையெடுப்பிலிருந்து திரும்பியவுடன் தந்திதுர்க்கன் தன் செல்வாக்கைப் பெருக்கிக்கொள்ளும் நோக்கத்துடன் மேலும் பல போர்களில் ஈடுபட்டான். கி.பி. 747-ல் சாளுக்கிய அரசன் இரண்டாம் விக்கிரமாதித்யனின் இறப்பு, இவனுடைய படை யெடுப்புத் திட்டத்திற்கு ஊக்கமளிப்பதாக அமைந்தது. தன்னுடைய மேலாளர்களான சாளுக்கியர்களின் நலனைப் பாதிக்காத வகையில் இவன் தன்னுடைய ஆக்கிரமிப்புத் திட்டங் களைச் செயல்படுத்திப் பல அரசுகளைக் கைப்பற்றினான். பீரார் பகுதியை மையமாகக் கொண்டு ஆட்சிபுரிந்து கொண்டிருந்த தந்திதுர்க்கன் கிழக்கிலும் மேற்கிலும் தன் ஆதிக்கத்தைப் பரப்பும் முயற்சியில் ஈடுபட்டான். அரேபியப் படையெடுப்பினால் பாதிக்கப் பட்டுப் பலவீனமடைந்திருந்த கூர்ஜர அரசும் குஜராத் சாளுக்கிய அரசும் இவனுடைய தாக்குதலுக்கு இலக்காயின. நந்திவர்மன் பல்லவமல்லனுடைய ஒத்துழைப்போடு கூர்ஜரர்களின்

தலைநகரமான நந்திபுரத்தையும், குஜராத் சாளுக்கியர்களின் தலைநகரான நவசாரியையும் கைப்பற்றி அவர்கள் அரசை ராஷ்டிரகூட அரசுடன் இணைத்துக்கொண்டான். இப்பணியில் தந்திதுர்க்கனுடைய ஒன்றுவிட்ட சகோதரன் கோவிந்தன் இவனுக்குப் பேருதவி புரிந்தான். இதற்கு நன்றி செலுத்தும் வகையில் தென் குஜராத் பகுதியைத் தந்திதுர்க்கன் கோவிந்தனுக்குக் கொடுத்தான். மத்தியக் குஜராத் ராஷ்டிரகூட அரசுடன் இணைக்கப்பட்டது. அடுத்துக் கூர்ஜரப் பிரதிகாரர்களின் ஆளுகைக்குட்பட்டிருந்த மாளவத்தின்மீது ஒரு படையெடுப்பை மேற்கொண்டான். அவ் வம்சத்தின் இரு கிளைகளைச் சேர்ந்த சிலுகன் (Siluka) தேவராஜன் (Devaraja) என்பவர்களுக்கிடையே நடந்துகொண்டிருந்த பூசலைப் பயன்படுத்திக்கொண்டு, உஜ்ஜயினிமீது படையெடுத்துச்சென்று, தந்திதுர்க்கன் மாளவத்தை வென்றான். இவ் வெற்றியை முன்னிட்டுத் தந்திதுர்க்கன் உஜ்ஜயினி நகரத்தில் ஹிரண்யகர்ப்பதானம் என்னும் சடங்கைச் செய்து முடித்தான். மாளவம் வெல்லப்பட்டபோதிலும் அது ராஷ்டிரகூடப் பேரரசுடன் இணைக்கப்படவில்லை. ஆனால் அவ்வரசு ராஷ்டிரகூடச் செல்வாக்கு மண்டலத்திற்குட்படுத்தப்பட்டது. மாளவத்திலிருந்து மகாகோசலம் என்ற அரசின்மீது படையெடுத்துச் சென்று வெற்றி பெற்றான். தந்திதுர்க்கனை எதிர்த்துப் போராடிய அரசன் யார் என்பது தெரியவில்லை. இப்படையெடுப்பிலிருந்து திரும்பி வரும்பொழுது கலிங்கத்து அரசர்களைப் போரில் வென்றான். இவ்வாறாகக் கி.பி. 750ஆம் ஆண்டிற்கு முன் தந்திதுர்க்கன், பீரார், மத்தியப் பிரதேசம், மத்திய குஜராத், தெற்கு குஜராத் பகுதிகளைத் தன்னுடைய நேரடி ஆதிக்கத்திற்கோ செல்வாக்கு மண்டலத்திற்கோ உள்ளடக்கிக் கொண்டான். தெற்குக் குஜராத்தைத் தவிர இவனால் வெல்லப்பட்ட வேறு எந்தப் பகுதியும், மேலைச் சாளுக்கிய அரசனுக்குச் சொந்தமானதன்று என்ற போதிலும், தன்னாதிக்கத்திற்கு உட்பட்ட சிற்றரசனான தந்திதுர்க்கனின் இந்த வேகமான வளர்ச்சி சாளுக்கிய அரசன் இரண்டாம் கீர்த்திவர்மனின் உள்ளத்தில் அச்சத்தை ஏற்படுத்தியது. இவர்களிடையே போர் தவிர்க்கமுடியாததொன்றாகிவிட்டது.

தன் ஆதிக்கத்திற்குட்பட்ட சிற்றரசனான தந்திதுர்க்கனின் செல்வாக்கு மிகவும் வேகமாக வளருவதை இனிமேலும் இரண்டாம் கீர்த்திவர்மன் அசட்டை செய்ய முடியவில்லை. உடனே இதைத் தடுக்கத் தக்க நடவடிக்கைகளை மேற்கொள்ள முடிவு செய்தான். அண்மையில் தந்திதுர்க்கனால் கைப்பற்றப்பட்ட குஜராத் அரசை அவனிடமிருந்து மீட்டு, மீண்டும் சாளுக்கிய

மரபின் ஆட்சியை அங்கு ஏற்படுத்த இரண்டாம் கீர்த்திவர்மன் முயன்றிருக்கவேண்டும். மத்திய மகாராஷ்டிரத்தில் நடந்த இப்போரில் தந்திதுர்க்கன் இறுதி வெற்றி பெற்முன். போர்க் கருவிகளைப் பயன்படுத்தாமலேயே தன்னுடைய கோபப்பார்வை யாலேயே தந்திதுர்க்கன் இப்போரில் வெற்றி பெற்முன் என்ற பொறிப்புகள் கூறும் செய்தி மிகைக்கூற்முகக் கருதப்படவேண் டும். ஒருவேளை தந்திரத்தின் மூலமோ வஞ்சகத்தின் மூலமோ இவ்வெற்றியை அவன் பெற்றிருக்கக்கூடும் என்றும் கருத இடமுள்ளது. சாமன்காட் செப்பேடுகள் வெளியிடப்பட்ட கி.பி. 754ஆம் ஆண்டிற்கு முன் இந்நிகழ்ச்சி நடந்திருக்க வேண்டும். எனவே கி.பி. 753ஆம் ஆண்டு இறுதியில் இப்போர் நடந்திருக்கக்கூடும். இவ்வெற்றியினுல் மேலைச் சாளுக்கியர் ஆதிக்கம் முழுவதும் ஒழிக்கப்படவில்லையாயினும், காந்தேஷ், நாசிக், பூனு, சதாரா, கோலப்பூர் ஆகிய பகுதிகளை உள்ளிட்ட மகாராஷ்டிரம் தந்திதுர்க்கனின் ஆதிக்கத்திற்குட்படுத்தப்பட் டது. எனினும் இப்போருக்குப் பிறகும்கூட ஷோலாப்பூர் வரையி லான கர்நாடகத்தின் மீது சாளுக்கிய அரசன் இரண்டாம் கீர்த்தி வர்மனுடைய ஆதிக்கம் தொடர்ந்து நீடித்தது என்பதை நாம் இங்கு நோக்கவேண்டும். ஏனெனில் கி.பி. 757ஆம் ஆண்டில் ஷோலாப்பூர் மாவட்டத்திலுள்ள பீமா நதிக்கரையிலுள்ள ஒரு கிராமத்தில் கீர்த்திவர்மன் தன் படைகளுடன் தங்கியிருந்த செய்தி நமக்குச் சாஸனங்கள் மூலம் கிடைத்துள்ளது. எனவே மேற்கூறிய போரின் விளைவாகத் தந்திதுர்க்கன் சாளுக்கியப் பேரரசின் ஒரு பகுதியைத்தான் கைப்பற்ற முடிந்தது என்பதும் மற்றப் பகுதியில் சாளுக்கிய ஆதிக்கம் தொடர்ந்து நீடித்தது என்பதும் தெளிவாகப் புலப்படும். இவ்வெற்றிக்குப் பிறகு தந்திதுர்க்கன் மகாராஜாதிராஜன், பரமேஸ்வரன், பரமபட் டாரகன் போன்ற பட்டப் பெயர்களைச் சூட்டிக்கொண்டான். சாளுக்கிய அரசன் இரண்டாம் கீர்த்திவர்மனுடன் மற்முெரு போரைத் துவக்கிச் சாளுக்கிய ஆதிக்கத்திற்கு முடிவுகட்டித் தான் தொடங்கிய பணியை முற்றுப்பெறச் செய்யவேண்டுமென்பது தந்திதுர்க்கனுடைய திட்டம். ஆனல் அத்திட்டம் நிறைவேறு வதற்கு முன்பே கி.பி. 756ல் தந்திதுர்க்கன் இறந்துவிட்டான். ராஷ்டிரகூடச் சாஸனம் ஒன்று இவன் இளம் வயதிலேயே இறந்து விட்டான் என்று கூறுவதால் இறக்கும்பொழுது இவனுக்கு முப்பத்தேழு அல்லது முப்பத்தெட்டு வயது இருக்கலாம்.

இவன் ஆட்சி பற்றிய குறிப்பை முடிப்பதற்கு முன் வாதாபிச் சாளுக்கிய ஆதிக்கத்திற்கு முடிவுகட்டியவன் தந்திதுர்க்கனு, முதலாம் கிருஷ்ணனு என்ற வரலாற்முசிரியர்களுக்கிடையே

காணப்படும் கருத்து வேற்றுமை பற்றிய சில செய்திகளை ஆராய லாம். இந்தக் கருத்து வேற்றுமைக்கு அடிப்படைக் காரணம் சாளுக்கிய ஆதிக்கத்தை ஒழிக்கும் பணியைத் தந்திதுர்க்கன் முற் றுப் பெறச் செய்யவில்லை என்பதாகும். இவனுக்குப் பிறகு பட்ட மெய்திய முதலாம் கிருஷ்ணன் அப் பணியைத் தொடர்ந்து மேற்கொண்டு முற்றுப்பெறச் செய்தான். அப் பணி தந்தி துர்க்கனால்தொடங்கப்பட்டது; முதலாம் கிருஷ்ணனின் ஆட்சியில் முற்றுப்பெற்றது. எனவே இச் சாதனையில் இருவருக்கும் பங்கு உண்டு. மூன்றும் கோவிந்தனுடைய கி.பி. 808-809ஆம் ஆண்டு வானி-திந்தோரி, ரதன்பூர் செப்பேடுகளும், இரண்டாம் கிருஷ்ணனின் கி.பி. 910ஆம் ஆண்டு காபத்வானி செப்பேடுகளும் சாளுக்கிய ஆதிக்கத்தை ஒழித்த பெருமையை முதலாம் கிருஷ்ண னுக்கு அளிக்கின்றன. தந்திதுர்க்கனைப் பற்றி இச் செப்பேடுகள் ஒன்றுமே கூறவில்லை. முதலாம் அமோகவருஷனின் கி.பி.871ஆம் ஆண்டு சஞ்சன் செப்பேடுகளும், நான்காம் கோவிந்தனின் காம்பே, சங்கிலிச் செப்பேடுகளும், தந்திதுர்க்கனைப் பற்றிய செய்திகளைக் கூறியபோதிலும், சாளுக்கிய ஆதிக்கத்திற்கு முடிவு கட்டியது முதலாம் கிருஷ்ணன்தான் என்று கூறுகின்றன. ஆனால், முதலாம் கிருஷ்ணனின் தலேகான், பந்தூக் செப்பேடுகள் அப் பணியை அவன் செய்ததாகக் கூறாததுமட்டுமன்றி, தந்தி துர்க்கன்தான் அதைச் செய்துமுடித்தான் என்று குறிப்பிட்டுக் கூறுகின்றன. முதலாம் கிருஷ்ணனின் இச் செப்பேடுகள் நமக்கு இன்றியமையாத சான்றுகளாகும். இவ்வளவு பெரிய ஒரு சாதனையை அவன் புரிந்திருந்தால் எப்படி அதைப்பற்றி அவன் தன் சாஸனங்களில் கூறிக்கொள்ளாமல் இருக்கமுடியும்? எனவே சாளுக்கிய ஆதிக்கத்தை முடிக்கும் பணியைத் தந்திதுர்க்கன்தான் தொடங்கினான் என்பதுபற்றி ஐயப்பாடு இருக்கமுடியாது. ஆனால் அவன் ஆட்சியில் அப்பணி முற்றுப் பெறாததாலும், முதலாம் கிருஷ்ணன் அப் பணியைத் தொடரவேண்டி யிருந்ததாலும் கர்நாடகப் பகுதியில் மேலைச் சாளுக்கியர்கள் ஆதிக்கம் அவனால் ஒழிக்கப்பட்டதாலும் வேங்கி, கீழைச் சாளுக்கியர்களையும் அவன் போரில் வென்றதாலும் முதலாம் கிருஷ்ணனுக்கும் இச் சாதனையில் பங்கு உண்டு என்று நாம் கருதலாம்.

பிற்கால ராஷ்டிரகூடப் பேரரசின் கருவை உருவாக்கிய தந்தி துர்க்கன் ஒரு திறமைமிக்க படைத் தலைவனாகவும், தலைசிறந்த நிர்வாகியாகவும் அரசியல் தந்திரத்தில் வல்லுநனாகவும் விளங்கி னான். நல்ல ஆற்றலும், தீர்க்கதரிசனமும் பெற்றிருந்த இவன் தன் பகைவர்களின் பலவீனங்களைப் புரிந்துகொண்டு அதற்கேற்பத் தன் னுடைய சக்தியைப் பயன்படுத்தித் தன் குறிக்கோள்களை நிறை

வேற்றிக்கொள்வதில் வல்லவனாக இருந்தான். சாளுக்கிய அரசு பல்லவர்களுடன் நடத்திக்கொண்டிருந்த ஓயாத போர்களினாலும் வடபகுதியில் அரேபியர் படையெடுப்புகளினாலும் தன் வலிமையை இழந்து காணப்பட்ட சூழ்நிலையைப் பயன்படுத்திக்கொண்டு சாளுக்கியர் வீழ்ச்சிக்கு வழிவகுத்தான். பல்லவர்களுக்கும் அரேபியர்களுக்கும் எதிராக இவன் செய்த போர்களினால் இவன் போர்த்துறையில் நல்ல அனுபவத்தைப் பெற்றான். சாளுக்கிய அரசன் இரண்டாம் விக்கிரமாதித்யனின் இறப்பு இவனுக்கு ஒரு நல்ல வாய்ப்பை அளித்தபோதிலும் அதனைப் பயன்படுத்திக் கொண்டு இவன் சாளுக்கியர் நலனைப் பாதிக்கும் வகையில் எச் செயலிலும் உடனடியாக ஈடுபடவில்லை. மற்ற ஆக்கிரமிப்புகள் மூலம் தன் வலிமையையும், செல்வத்தையும் பெருக்கிக்கொண்ட பிறகுதான் மேலைச் சாளுக்கியர்களுடன் நேரடியாக மோதுவ தற்குத் தயாரானான்; அப்போரில் பெரும் வெற்றியையும் பெற்றான். ஆனால் மேலைச் சாளுக்கியர்கள் ஆதிக்கத்தை ஒழிக்கும் பணி இவன் ஆட்சியில் முற்றுப் பெறவில்லை. எனவே இவனுக்குப் பிறகு பட்டத்துக்கு வந்த இவன் மாமன் முதலாம் கிருஷ்ணனும் அப் பணியைத் தொடரவேண்டியிருந்தது. இருப்பினும் அப் பணியின் பெரும்பகுதி தந்திதுர்க்கனாலேயே முடிக்கப்பட்டது. தந்திதுர்க்கன் இந்து சமயத்தை ஆர்வத்தோடு பின்பற்றியவன். பல புனித நாட்களில் புனித இடங்களில் இந்து சமயத்திற்கும் அற நிலையங்களுக்கும் ஏராளமான தானங்களை வழங்கினான். சமயச் சடங்குகளை ஆர்வத்துடனும் தவறாமலும் பின்பற்றினான். உஜ்ஜயினி நகரத்திலிருந்தபொழுது ஹிரண்ய கர்ப்பமஹாதானம் என்னும் ஒரு சடங்கைச் செய்து முடித்தான். கி.பி. 754ல் துலாபாரம் என்னும் சடங்கைச் செய்து தன்னுடைய எடைக்குச் சமமான தங்கத்தைப் பிராமணர்களுக்கு வழங்கினான். தந்தி துர்க்கன் இளம் வயதிலேயே இறந்துவிட்டான் என்பதை நோக்கும் பொழுது இவனுடைய குறுகிய வாழ்க்கையில் இவன் இவ்வளவு பெரிய சாதனைகளைப் புரிந்தது வியப்பிற்குரிய ஒரு செய்தியாகும்.

முதலாம் அமோகவருஷன் ஆட்சியில்தான் (கி.பி. 814-880) மான்யகேடம் என்னும் தற்கால மால்கேட் ராஷ்டிரகூடர்கள் தலைநகரமாக விளங்கியது. இரண்டாம் கார்க்கனின் செப்பேடு ஒன்று மான்யகேடத்தை நிறுவியவன் அமோகவருஷன் என்று கூறுகிறது. மேலும் முதலாம் அமோகவருஷனுக்கு முற்பட்ட சாஸனங்கள் எதிலும் மான்யகேடம் தலைநகராக விளங்கியது என்ற செய்தி காணப்படவில்லை. அதற்குமுன் அவர்கள் தலைநகரம் எது? கார்க்கன், இந்திரன் போன்றோர் ஆட்சியில் அசலபுரம் என்னும் எலிச்பூர் தலைநகரமாக இருந்திருக்கலாம். தந்திதுர்க்கன்

ஆட்சியில் மகாராஷ்டிரம் முழுவதும் வெல்லப்பட்டவுடன் எல்லோரா தலைநகரமாக இருந்திருக்கக்கூடும். அவனுடைய சாதனைகள் தசாவதாரக் குகையில் (குகை XV) ஒரு சுவரில் பொறிக்கப்பட்டுள்ளன. அவனுடைய ஆட்சியின் தொடக்கத்தில் வெளியிடப்பட்ட செப்புப் பட்டயங்கள் அந்த நகரத்தி லிருந்துதான் வெளியிடப்பட்டன. முதலாம் கிருஷ்ணனும் ஒரு பெரியகுகைக் கோயிலை எல்லோராவில்தான் குடைவித்தான். எனவே இவ்விரு அரசர்கள் ஆட்சியிலும் எல்லோரா தலைநகரமாக இருந்திருக்கக்கூடும் என்று கருதுவது பொருத்தமுடையதாகும். மேலும் அந் நகரம் வளர்ந்துவந்த ராஷ்டிரகூடப் பேரரசின் மையப் பகுதியில் அமைந்திருந்தது. மூன்றும் கோவிந்தன் ஆட்சியில் தலைநகரம் மயூரகிண்டி என்ற இடத்திற்கு மாற்றப்பட்டது. ஏனெனில் அவனுடைய சாஸனங்களில் ஐந்து, அந் நகரிலிருந்து வழங்கப்பட்டவை. ஆனால் எந்தச் சாஸனத்திலும் அது தலைநகரம் என்று குறிப்பிடப்படவில்லை. இந் நகரம் எதுவாக இருக்கக்கூடும் என்பதைப்பற்றித் திட்டவட்டமாகக் கூற இயல வில்லை. நாசிக் மாவட்டத்திலுள்ள போர்கண்ட் என்ற நகரந்தான் இந் நகரம் என்று சிலரும், ராஷ்டிரகூடப் பேரரசின் வடகிழக்கு எல்லையில் அமைந்திருக்கும் மர்கண்டி என்ற நகரமாக இருக்க லாம் என்று வேறு சிலரும் கருதுகின்றனர். ராஷ்டிரகூடர்களின் பூர்வீக இருப்பிடமான லாடூர் என்ற இடமே அவர்கள் ஆட்சியின் தொடக்கத்தில் தலைநகராக இருந்திருக்கக்கூடும் என்ற ஒரு கருத்தும் உண்டு. சாதவாகனர்களின் தலைநகராக விளங்கிய பைதான் (பிரதிஷ்டானு) என்ற இடமும் அவர்களின் தலைநகராக இருந்திருக்கக்கூடும் என்பது மற்றொரு கருத்து. மேலே கூறியவற் றிலிருந்து, மான்யகேடத்திற்கு ராஷ்டிரகூடர்களின் தலைநகரம் மாற்றப்படுவதற்கு முன்பு, அவர்கள் தலைநகரம் எது என்பதைப் பற்றித் திட்டவட்டமாக எதையும் கூறமுடியாத நிலையிலிருக் கிறோம்.

### முதலாம் கிருஷ்ணன் (கி. பி. 756-772)

தந்திதுர்க்கன் வாரிசு யாருமின்றி இளமையிலேயே இறந்து விட்டதால், அவனுடைய சிற்றப்பனான முதலாம் கிருஷ்ணன் பட்டமெய்தினான். இரண்டாம் கார்க்கனின் ஆட்சியில் வெளி யிடப்பட்ட கட்பா செப்பேடுகள் (Kadba plates) இச் செய்தியைக் கூறுகின்றன. சித்தல்துர்க் சாஸனம் ஒன்று இதை உறுதிப்படுத்து கிறது. தந்திதுர்க்கன் ராஷ்டிரகூட அரசை உருவாக்கியதில் அவன் சிற்றப்பன் முதலாம் கிருஷ்ணன் பேருதவி புரிந்திருக்கவேண்டும். எனவே தந்திதுர்க்கன் தன்னுடைய வாரிசாகக் கிருஷ்ணனை நியமித்தான் போலும்.

கிருஷ்ணன் பட்டமெய்தியவுடனேயே அவனுக்குப் போட்டியாக அவனுடைய உறவினன் ஒருவன் தோன்றித் தொல்லைகள் கொடுக்கத் தொடங்கினான். அவனை ஒழிப்பது கிருஷ்ணனின் முதல் பணியாயிருந்தது. அவன் தென் குஜராத்தை ஆண்டுகொண்டிருந்த இரண்டாம் கார்க்கனாக (Karka II) இருக்கலாம் என்று சிலர் கருதுகின்றனர். கிருஷ்ணன் அவனை எளிதில் போரில் வென்று, அவனைப் பதவியிலிருந்து நீக்கி, குஜராத்தைத் தன்னுடைய நேரடிக் கண்காணிப்பில் ஆளும் அதிகாரியிடம் ஒப்படைத்தான்.[1] கிருஷ்ணனால் பதவியிலிருந்து நீக்கப்பட்ட அவனுடைய உறவினன் தந்திதுர்க்கனாகவே இருக்கக் கூடும் என்பது ஒரு சிலருடைய கருத்து. இக்கருத்து ஏற்புடையதன்று. ஏனெனில் கிருஷ்ணனுடைய தலேகான், பந்தூக் செப்பேடுகள் தந்திதுர்க்கனைப் பற்றி உயர்வாகவும் தந்திதுர்க்கன் சாதனைகளைப் பாராட்டியும் பேசுகின்றன. தந்திதுர்க்கன் கிருஷ்ணனுக்குத் தொல்லை கொடுத்த பகைவனாக இருந்தால் அவனைப்பற்றிக் கிருஷ்ணனுடைய சாஸனங்கள் எவ்வாறு இவ்வளவு உயர்வாகப் பேச முடியும்? எனவே கிருஷ்ணனால் பதவியிலிருந்து விலக்கப்பட்ட உறவினன் தந்திதுர்க்கனாக இருக்க முடியாது. இரண்டாம் கிருஷ்ணனின் பெகும்ரா சாஸனத்தின் வாசகத்திற்குத் தவறான பொருள் கற்பித்ததால் ஏற்பட்ட குழப்பம்தான் இது.[2]

குஜராத் சாளுக்கிய மரபின் சாஸனங்கள் (கவி, பெகும்ரா, சூரத் செப்பேடுகள்) ராகப்பன் என்பவனைப் போரில் வென்று கிருஷ்ணன், ராஜாதிராஜ பரமேஸ்வரன் என்ற பட்டத்தைச் சூட்டிக் கொண்டான் என்று கூறுகின்றன. கிருஷ்ணனால் பதவியிலிருந்து நீக்கப்பட்ட உறவினன் இந்த ராகப்பனாக இருக்க முடியாது. ஏனெனில் இந்தச் சாஸனங்கள் ராகப்பனைக் கிருஷ்ணனின் உறவினன் என்று எங்கும் குறிப்பிடவில்லை. இதுபோன்ற பெயரைக் கொண்ட அரசர்கள் மேவார் பகுதியில் ஆட்சி செய்ததால் அப் பகுதியில் கிடைத்த சில சாஸனங்களிலிருந்து தெரிய வருகின்றது. எடுத்துக்காட்டாகக் கி. பி. 725ஆம் ஆண்டுச் சாஸனம் ஒன்று மகாராஜாதிராஜ பரமேஸ்வர ஸ்ரீ தவலப்பதேவர் என்ற அரசரைக் குறிப்பிடுகிறது. இந்த ராகப்பன், மேவார்

[1] கிருஷ்ணன் ராகப்பன் (Rahappan) என்ற மற்றொரு அரசனை வென்றதாகக் கூறப்படுகிறது. இந்த ராகப்பன் ஒரு சாளுக்கியப் படைத் தலைவனாக இருக்கக்கூடும் என்று சிலர் கருதுகின்றனர். ராகப்பன் என்பது கார்க்கனின் மற்றொரு பெயராக இருக்கலாமென்றும் எனவே இவ்விரு போர்களும் ஒரே நிகழ்ச்சியைத்தான் குறிப்பிடுமென்றும் வேறொரு கருத்து உண்டு. ஆனால் இது பற்றி நாம் திட்டவட்டமாக ஒன்றும் கூற இயலாது.

[2]. A. S. Altekar - Rashtrakutas and their Times P. 41-42.

நாட்டைச் சேர்ந்த அரசனாக இருக்கலாம். ராகப்பன் என்பது கன்னடச் சொல்லை ஒத்ததாக இருப்பதால் இது கீர்த்திவர்மனுடைய மற்றொரு பெயராக இருக்கக்கூடும்; அல்லது கிருஷ்ணனின் சமகாலத்தவனான வேங்கிச் சாளுக்கிய அரசனான விஷ்ணுவர்த்தனின் மற்றொரு பெயராக இருக்கக்கூடும்.[2]

முதலாம் கிருஷ்ணனுடைய அடுத்த சாதனை இரண்டாம் கீர்த்திவர்மனைப் போரில் வென்று, சாளுக்கிய ஆக்கத்திற்கு முடிவு கட்டி, தந்திதுர்க்கனால் தொடங்கப்பட்ட பணியை முற்றுப் பெறச் செய்ததாகும். கி. பி. 757 வரை கீர்த்திவர்மனின் ஆதிக்கம் கர்நாடகப் பகுதியில் தொடர்ந்தது என்று கருதலாம். தந்திதுர்க்கனுடைய இறப்பையும், கிருஷ்ணனின் ஆட்சித் தொடக்கத்தில் நிலவிய குழப்பத்தையும் பயன்படுத்திக்கொண்டு கீர்த்தி வர்மன் தன்னுடைய படைகளைச் சீர்படுத்திக்கொண்டு ராஷ்டிர கூடர்களால் ஏற்பட்ட அபாயத்தை நீக்க முன் வந்தான். செப்டம்பர் 757ஆம் ஆண்டிற்குப் பிறகு நடந்த சண்டையில் கீர்த்திவர்மன் தோற்கடிக்கப்பட்டுப் போரில் உயிரிழந்திருக்கக் கூடும். இத்துடன் வாதாபிச் சாளுக்கியப் பேரரசின் வரலாறு முற்றுப் பெறுகிறது. இவ் வெற்றியின் விளைவாகச் சாளுக்கியர்கள் ஆட்சிக்குட்பட்டிருந்த வடக்குக் கர்நாடகம் முழுவதும் கிருஷ்ணன் வசம் வந்தது.

தன் நிலைமையை மேலும் வலுப்படுத்திக் கொள்ளும் நோக்கத்துடன் மேற்கே கொங்கணப் பகுதியின்மீது ஒரு படை யெடுப்பைக் கிருஷ்ணன் மேற்கொண்டான். மேலைச் சாளுக்கியப் பேரரசிற்குட்பட்டிருந்த கொங்கணம் இரண்டாம் விக்கிரமாதித்யன் ஆட்சியில் விடுதலை பெற்றிருக்க வேண்டும். அதை மீண்டும் தன் ஆதிக்கத்திற்குட்படுத்த இப் படையெடுப்பை கிருஷ்ணன் மேற்கொண்டிருக்க வேண்டும். கொங்கணம் கைப்பற்றப்பட்டுச் சணபுல்லன் (Sanaphulla) என்பவன் அப் பகுதியை ஆள நியமிக்கப்பட்டான். ராஷ்டிரகூடர்களின் ஆதிக்கம் நிலவிய காலப்பகுதியில் அவர்க்கு இதுவரையில் உண்மையாக உழைத்த சிற்றரசர்கள் குடும்பமான சீலாஹார குடும்பத்தைத் தோற்றுவித்தவன் இவன்தான். புகழ் ஆர்வமிக்க கிருஷ்ணன் சாளுக்கியப் பேரரசை வென்றதோடு திருப்தி அடையவில்லை. மேலும் தன் அரசை விரிவுபடுத்தும் நோக்கத்துடன் மைசூர்ப் பகுதியை ஆண்டுகொண்டிருந்த சங்கர்கள்மீது ஒரு ஆக்கிர

[1]. Ibid P. 43

[2]. Ibid

மிப்புப் போரைத் தொடங்கினன். அப்பொழுது கங்கநாட்டை ஆண்ட அரசன் ஸ்ரீ புருஷன் என்பவன். இச்செய்திகளை முதலாம் கிருஷ்ணனுடைய தலேகான் செப்பேடுகளிலிருந்து நாம் அறிகிறோம். கி. பி. 768-ல் கிருஷ்ணன் கங்கர்களின் தலைநகரமான மான்யபுரம் (மன்னே) என்ற இடத்தில் பாசறை அமைத்திருந்த செய்தியை அச் செப்பேடு குறிப்பிடுகிறது. தும்கூர் மாவட்டத்தில் கண்டுபிடிக்கப்பட்ட மற்றொரு கல்வெட்டும் இந் நிகழ்ச்சியைப் பற்றிக் குறிப்பிடுகிறது. கங்கநாட்டின் மீது ரட்டர்கள் (ராஷ்டிரகூடர்கள்) படையெடுப்பின்போது நடந்த போரில் உயிரிழந்த ஒருவனின் நினைவாக இக்கல்வெட்டு பொறிக்கப் பட்டது என்ற செய்தி அதில் காணப்படுகிறது. இக் கல்வெட்டு ஸ்ரீ புருஷன் காலத்தில் பொறிக்கப்பட்டதாகையால் இப் போர் அவன் ஆட்சியில் நடந்திருக்க வேண்டும் என்று கருதலாம். ராஷ்டிரகூடப் படைகளைக் கங்கர்கள் தீவிரமாக எதிர்த்துப் போரிட்டார்கள் என்பதையும், ஸ்ரீ புருஷனுடைய பிள்ளைகளில் ஒருவன் நாட்டைப் பகைவர்களிடமிருந்து காக்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்டிருந்தான் என்பதையும், கங்கநாட்டின் அறிஞர் களும், எழுத்தாளர்களும் பலர் தங்கள் எழுதுகோல்களுக்குப் பதிலாக வாளேந்திப் போரிட்டு நாட்டைக் காப்பாற்ற முயன் றார்கள் என்பதையும் நாம் சாஸனங்கள் மூலம் அறிகிறோம்.[1] தங்கநாட்டில் காணப்படும் ஏராளமான வீரக்கற்களிலிருந்து இப் போர் நீடித்து நடந்திருக்குமென்றும் வெற்றி அவ்வளவு எளிதாக இருக்கவில்லை என்பதையும் நாம் ஊகிக்கலாம். இறுதியில் கிருஷ்ணன் போரில் பெரும் வெற்றி அடைந்து கங்கத் தலை நகரான மான்யபுரத்தைக் கைப்பற்றினன். தான் அந்தத் தலைநகரிலிருந்து கைப்பற்றிய செல்வத்தைப் பல்வேறு அறப்பணி களுக்காகச் செலவழித்தான் என்று ஒரு செப்பேடு கூறுகிறது. கங்கநாடு முழுவதும் கிருஷ்ணனுல் கைப்பற்றப்படவில்லை. ஒரு பகுதி மட்டும் ராஷ்டிரகூடப் பேரரசிற்குட்படுத்தப்பட்டு மற்றொரு பகுதியில் ஸ்ரீ புருஷனே, ராஷ்டிரகூட அதிகாரத்தை ஏற்றுக்கொண்டு ஒரு சிற்றரசனுக ஆள அனுமதிக்கப்பட்டான். இப் போர் கி. பி. 768-69-ல் முடிவடைந்திருக்க வேண்டும். கிருஷ்ணனின் மகன் இரண்டாம் கோவிந்தன் இப் படை யெடுப்பில் ஒரு முக்கிய பங்கேற்றான். இப் போர் முடிந்தவுடன் கோவிந்தன் பட்டத்து இளவரசனுக (Heir-apparent) நியமிக்கப் பட்டான்.

1. G. Yazdani (Ed) - The Early History of the Deccan P. 259.

கிருஷ்ணனுடைய ஆட்சியில் நடந்த அடுத்த முக்கிய நிகழ்ச்சி அவனுடைய வேங்கிச் சாளுக்கியப் போராகும் வாதாபிச் சாளுக்கிய மரபின் ஒரு கிளையினர்தான் வேங்கிச் சாளுக்கியர் என்பது நாம் அறிந்ததே. வாதாபிச் சாளுக்கியர்களின் வீழ்ச்சிக்கு ராஷ்டிரகூடர்கள் காரணமாக இருந்ததால், அவர்கள் மீது பழிவாங்கும் எண்ணம் கீழைச்சாளுக்கியர்கள் மனத்தில் வேரூன்றி இருந்தது. மேலும் தன்னுடைய வலிமையையும், ஆற்றலையும் வேங்கிச் சாளுக்கியர்கள் புரிந்துகொள்ளும்படிச் செய்தால்தான் அவர்களால் தன் அரசுக்கு ஓர் ஆபத்தும் நேரிடாது என்பதை கிருஷ்ணன் உணர்ந்தான். எனவே குதிரைப்படைத் துறையில் நல்ல தேர்ச்சி பெற்ற இளவரசன் கோவிந்தன் தலைமையில் கி. பி. 768ல் ராஷ்டிரகூடப் படையெடுப்பு வேங்கி நாட்டின் மீது மேற்கொள்ளப்பட்டது. கி. பி. 769ல் சாளுக்கியத்தலை நகரமான வேங்கிக்கு நூறுமைல் தொலைவில் ராஷ்டிரகூடப் படைகள் முகாமிட்டிருந்தன. அடுத்து வேங்கியின் மீது தாக்குதலைத் தொடங்கி அந் நகரைக் கைப்பற்ற வேண்டுமென்பது ராஷ்டிரகூடர்களின் திட்டம். ஆனால் அதைச் செயல் படுத்துவதற்கு முன்பே வேங்கி அரசன் நான்காம் விஷ்ணுவர்த்தனன் ராஷ்டிரகூடர்களுக்கு அடிபணிந்து அவர்களுக்குத் தன் நாட்டின் சில பகுதிகளையும், போர்ச் செலவுகள் இழப்பீடாக ஒரு பெருந்தொகையையும் கொடுக்கச் சம்மதித்துச் சமாதான உடன்படிக்கை செய்துகொண்டான். இந்த உடன்படிக்கை ஒரு திருமண உறவினால் மேலும் வலுப்படுத்தப்பட்டது. விஷ்ணுவர்த்தனனுடைய மகள் சீலபத்ரிகா என்பவளை இளவரசன் கோவிந்தனின் தம்பி துருவன் மணந்துகொண்டான். இந்தப் போரின் விளைவாகத் தற்கால ஆந்திரப் பிரதேசத்தின் ஹைதராபாத் பகுதி முழுவதையும் (பழைய ஹைதராபாத் சுதேச சமஸ்தானம்) ராஷ்டிரகூடர்கள் பெற்றனர். சுமார் கி.பி. 772ல் இப் போர் முடிவடைந்திருக்க வேண்டும்.

ராஷ்டிரகூட முதலாம் கிருஷ்ணனின் ஆட்சி எப்பொழுது முடிந்தது என்பதை அறுதியிட்டுக் கூறமுடியாது. ஜூன் 772ல் அவருடைய தலேகான் செப்பேடுகள் வெளியிடப்பட்டன. அக்டோபர் 775-ல் வெளியிடப்பட்ட அவனுடைய மகன் துருவனின் பிம்பேரி சாஸனத்திலிருந்து கிருஷ்ணனின் ஆட்சி அப்பொழுது முடிந்திருக்கவேண்டும் என்று நாம் ஊகிக்கலாம் எனவே கி.பி. 772-க்கும் கி.பி. 775-க்கும் இடைப்பட்ட காலத்தில் அவன் இறந்திருக்க வேண்டும்.

முதலாம் கிருஷ்ணன் போராற்றல் மிக்க ஒரு சிறந்த தளபதி, திறமை வாய்ந்த அரசன் என்பது பற்றி ஐயப்பாடு இருக்கமுடியாது. பதினெட்டு ஆண்டுக்கால அவனுடைய குறுகிய ஆட்சியில் கொங்கணம், மைசூர், ஹைதராபாத் பகுதிகளை வென்றதன் மூலம் தன் முன்னோர்களிடமிருந்து பெற்ற அரசின் பரப்பை மூன்று மடங்கு விரிவாக்கினான். அப்பொழுது தக்காணத்தில் முக்கிய அரசுகளாக விளங்கிய கங்கர்கள் மீதும் கீழைச்சாளுக்கியர்கள் மீதும் அவன் பெற்ற வெற்றியின் மூலம் ராஷ்டிரகூட அரசின் பெருமையை உயர்த்தினான். 'காஞ்சிகுணாலங்கிரிதா' (Kanchigunalankrita) என்றும் அவனுடைய தலேகான் செப்பேடுகளில் காணப்படும் சொற்றொடரிலிருந்து அவன் பல்லவ அரசனையும் போரில் வென்றிருக்கக்கூடும் என்று எண்ணத் தோன்றுகிறது. ஆனால் இதற்கு வேறு எந்த ஆதாரமும் இல்லை. மேற்கூறிய வெற்றிகளின் மூலம், முதலாம் கிருஷ்ணன் ராஷ்டிரகூட அரசிற்குத் தக்காணத்தில் ஒரு முதன்மை நிலையைப் பெற்றுத் தந்தான். இதன் மூலம் அவனுடைய சந்ததியார்கள் விந்தியமலைக்கும் அப்பால் சென்று வட இந்திய அரசியலில் பங்கு கொள்ளும் வாய்ப்பைக் கிருஷ்ணன் ஏற்படுத்திக் கொடுத்தான். தக்காண அரசாகத் தோன்றிய ராஷ்டிரகூட அரசின் பெருமை இந்தியத் துணைக்கண்டம் முழுவதும் பரவுவதற்கு அவன் வழிவகுத்தான். அவன் 'சுபதுங்கன்' 'அகாலவர்ஷன்' போன்ற பட்டங்களைச் சூட்டிக் கொண்டான்.

ஒரு பெரிய வெற்றிவீரன் என்ற பெருமை மட்டுமின்றிக் கட்டடக்கலையில் பேரார்வம் கொண்டிருந்த முதலாம் கிருஷ்ணன் பல கோயில்களை எழுப்பி அரிய கலைப்படைப்புகள் உருவாவதற்குக் காரணமாகயிருந்தான். இந்து சமயத்தில் ஆழ்ந்த பற்றுக்கொண்ட கிருஷ்ணன், எல்லோராவில் கைலாசநாதர் குகைக் கோயிலைக் குடைவித்தான்.[1] தக்காணத்தில் ராஷ்டிரகூடக் கட்டடக்கலையின் அழியாச் சின்னமாக இன்றும் அது பொலிவுடன் விளங்குகிறது. எட்டாம் நூற்றாண்டுத் தக்காணத்தின் கட்டட, சிற்பக் கலைஞர்களின் கைவண்ணத்தைப் பறைசாற்றும் கலைக் கருவூலமாக அது இன்றும் திகழ்வதை நாம் காண்கிறோம்.[2]

[1]. இக்கோயில் கிருஷ்ணனால் கட்டப்பட்ட சமயத்தில் கிருஷ்ணேஸ்வரர் அல்லது கண்ணேஸ்வரர் கோயில் என்றழைக்கப்பட்டது. இக் கோயிலின் கட்டட, சிற்பக் கலை நுணுக்கங்களைப் பற்றி இந்நூலின் மற்றொரு பகுதியில் காணலாம்.

[2]. இந்த எல்லோராக் குகைக் கோயிலின் கலைப் பெருமையைப்பற்றி வின்சென்ட் ஸ்மித் பின்வருமாறு கூறுகிறார். "the most marvellous architectural freak in India .... by far the most extensive and sumptuous of the rockcut shrines .... one of the wonders of the world, a work of which any nation might be proud and an honour to the king under whose patronage it was executed (Vincent Smith - The Early History of India Pp. 445-447.)

இக் கோயில் கட்டி முடிக்கப்பட்ட பிறகு அதைக் கட்டிய கட்டடக் கலைஞன் அதன் அழகையும் கம்பீரத்தையும் கண்டு 'எப்படி இது போல ஒரு கோயில் என்னால் கட்டமுடிந்தது' என்று வியப்படைந்தானும். இவ்வளவு சிறந்த ஒரு மாபெரும் கலைப்படைப்பை உருவாக்கிய கலைஞனின் பெயர் ஓர் இடத்திலும் பொறிக்கப்படவில்லை என்பதிலிருந்து அக் கலைஞனின் தன்னடக்கத்தையும் தன்னலமின்மையையும் நாம் உணரமுடிகிறது.

**இரண்டாம் கோவிந்தன் (கி. பி. 773-780)**

கி. பி. 773ல் இரண்டாம் கோவிந்தன் ராஷ்டிரகூட அரியணையெய்தினன்.[1] கிருஷ்ணனுடைய ஆட்சியின் இறுதியில் சுமார் கி. பி. 770-க்கும் 772க்கும் இடைப்பட்ட காலப் பகுதியில் அவன் இளவரசனாக முடிசூட்டப்பட்டிருக்க வேண்டும். மூன்றும் கோவிந்தனின் கட்பா செப்பேடுகளிலிருந்து அவன் குதிரைப்படையை நடத்திச் செல்வதில் வல்லவன் என்பது தெரியவருகிறது. வேங்கி அரசன் நான்காம் விஷ்ணுவர்த்தனனைப் போரில் வென்று அவனை அடிபணிய வைத்தது அவனுடைய பெரும் சாதனை என்பதையும் தன் தந்தை முதலாம் கிருஷ்ணனின் கங்கநாட்டுப் படையெடுப்பில் இளவரசன் கோவிந்தனும் பங்கு கொண்டான் என்பதையும் முன்பே கூறியுள்ளோம்.

துருவனுடைய தௌலதாபாத் செப்பேடுகள், நாசிக் மாவட்டத்தில் கோவர்த்தனம் என்னுமிடத்திற்குப் படையனுப்பி யுதவி பாரிஜாதன் என்ற அரசனைக் கோவிந்தன் தோற்கடித்தச் செய்தியைக் கூறுகின்றன. கோவர்த்தனத்திற்குப் படை அனுப்பப்படவேண்டியதின் அவசியம் என்ன? பாரிஜாதன் என்ற அரசன் யார்? போன்ற வினக்களுக்குச் சரியான விடை அளிப்பது இயலாது. இந்த இடம் நாசிக் மாவட்டத்தில் இருப்பதாகக் கூறப்படுவதால், அப் போர் கோவிந்தனுடைய சகோதரனை துருவனை எதிர்த்துத் தொடுக்கப்பட்ட போராக இருக்கலாம். கோவிந்தனுக்கு எதிராகத் துருவன் கிளர்ச்சி செய்திருக்கக் கூடும்.

[1]. முதலாம் கிருஷ்ணனுக்குப் பிறகு இரண்டாம் கோவிந்தன் அரியணையில் அமரவேயில்லை என்று ஃபிளீட் (Fleet) என்ற அறிஞரின் கருத்து ஏற்புடையதன்று. கார்க்கனுடைய பரோடா செப்பேடுகள், இரண்டாம் கிருஷ்ணனுடைய கபட்வஞ்ச் (Kapad Wanj) சாஸனம், மூன்றும் இந்திரனின் பெகும்ரா செப்பேடுகள் போன்ற சாஸனங்களில் காணப்படும் ராஷ்டிரகூட வம்ச வழியில் கோவிந்தனுக்கு இடமில்லை. அவன் ராஷ்டிரகூடமரபின் ஒரு கிளை மரபைச் சேர்ந்தவன் என்ற காரணத்தினுல் அச் சாஸனங்கள் அவன் பெயரைக் கூருமல் விட்டிருக்கக்கூடும். இரண்டாம் கோவிந்தனின் கட்பா செப்பேடுகள் அவன் முடிசூட்டு விழாவையே வருணிக்கின்றது. துருவனுடைய தௌலதாபாத் செப்பேடுகள், இரண்டாம் கோவிந்தன் அரச பதவியிலிருந்து விலக்கப்பட்ட நிகழ்ச்சியைக் கூறுகின்றது. எனவே அவன் ஒரு குறுகிய காலத்திற்கேனும் அரச பதவியிலிருந்திருக்க வேண்டும்.

அதை அடக்குவதற்காகக் கோவிந்தன் இந்தப் போரை மேற்கொண்டு, துருவன்மீது வெற்றி பெற்றிருக்கக் கூடும். இந்த நிகழ்ச்சியைத்தான் தௌலதாபாத் செப்பேடுகள் குறிப்பிடுகின்றன போலும். துருவன் நாசிக் பகுதியின் ஆளுநனாக இருந்தான் என்று துலியா (Dhulia) பிம்பேரி (Pimperi) செப்பேடுகள் கூறுகின்றன. பட்டமெய்தியவுடன் கோவிந்தன் சிற்றின்பங்களில் நாட்டங்கொண்டு, அரசகாரியங்களைத் துருவனிடம் ஒப்படைத்தான் என்று மூன்றாம் கிருஷ்ணனின் கர்ஹட் செப்பேடுகள் (Karhad plates) கூறுகின்றன. இவ் வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு துருவன் தன் சகோதரனிடமிருந்து பதவியைப் பறிக்கத் திட்டம் வகுத்துக் கொண்டிருந்தான். சாஸனங்களைத் தன் பெயரிலேயே வெளியிடுதல், சிற்றரசர்களின் ஆதரவை நாடுதல் போன்ற துருவனின் செயல்கள் கோவிந்தனின் மனத்தில் அச்சத்தையும் ஐயப்பாட்டையும் எழுப்பின. உடனே கோவிந்தன் அரசாங்கப் பொறுப்பைத் துருவனிடமிருந்து கைப்பற்றித் தானே நேரடியாக ஆளும் பொறுப்பை ஏற்றுக்கொண்டான். துருவன் கோவிந்தனுக்கு அடங்கி நடக்கச் சம்மதித்த போதிலும் அவனைப் பதவியிலிருந்து இறக்கித் தான் அப் பதவியை அடைய சூழ்ச்சிகள் செய்துகொண்டிருந்தான். கோவிந்தன் தன் நிலைமையை வலுப்படுத்திக்கொள்ள கங்கர்களுடனும், பல்லவர்களுடனும், வேங்கிச் சாளுக்கியர்களுடனும், மாளவ அரசுகளுடனும் ஒப்பந்தம் செய்துகொண்டு அவர்களுக்கு நாடும், பொருளும் தருவதாக ஒப்புக்கொண்டு அவர்கள் உதவியைப் பெற்றான். இது அவன் செய்த மாபெருந்தவறாகும். ராஷ்டிரகூட வம்சத்தினரிடம் தீராப் பகைகொண்டிருந்த கங்கர்கள், பல்லவர்கள், போன்றோரின் உதவியைக் கோவிந்தன் பெற்றதை அவனுடைய அமைச்சர்கள் விரும்பாமல் அவர்கள் துருவன் பக்கம் சேர்ந்துகொண்டார்கள். அது மட்டுமன்றித் துருவன் கோவிந்தனுக்கு எதிராக வெளிப்படையாகவே புரட்சி செய்ய இது ஒரு காரணமாக அமைந்தது. ராஷ்டிரகூட வம்சத்திற்கு அதன் பரம்பரைப் பகைவர்கள் மூலம் பேராபத்து ஏற்பட்டிருக்கிறதென்றும் அதிலிருந்து ராஷ்டிரகூட அரசைக் காப்பாற்றவே தான் புரட்சியில் ஈடுபடுவதாகவும் அவன் கூறிக்கொண்டான். கோவிந்தனை அரசப் பதவியைத் துறக்கும்படி கேட்டுக்கொண்டு, அதற்கு அவன் இணங்காததால் அவனைப் பதவியிலிருந்து விலக்கப் புரட்சி ஒன்றுதான் வழி என்பதைத் துருவன் உணர்ந்தான்.

தன்னுடைய முறைகேடான நடத்தைமூலம் ஏற்கெனவே மக்களின் ஆதரவையும், சிற்றரசர்கள் ஆதரவையும் இழந்திருந்த கோவிந்தனுக்கு எதிர்பார்த்தபடி அயல் நாட்டவர் உதவி

கிடைக்கவில்லை. அந்த உதவி வந்து சேருவதற்கு முன்பே துருவன் கோவிந்தனைப் போரில் தோற்கடித்தான். கோவிந்தன் இப் போரில் உயிரிழந்திருக்கக்கூடும்; அல்லது துருவனுல் சிறை படுத்தப்பட்டிருக்க வேண்டும். பிறகு துருவன் இந்தக் கூட்டணிப்படைகளையும் போரில் வென்றான். இந் நிகழ்ச்சி சுமார் கி. பி. 780 ஆம் ஆண்டில் நடந்திருக்க வேண்டும். இவ்விரு வெற்றிகளுக்குப் பிறகு துருவன் ராஷ்டிரகூட அரியணையைப் பெறுவதில் எந்தத் தடையும் இருக்கவில்லை.[1]

**துருவன்—தாராவருஷன் (கி. பி. 780-793.)**

**ராஷ்டிரகூட ஆதிக்கத்தின் உயர் கட்டம்.**

அவன் அரியணை எய்தியபொழுது அவனுக்கு ஐம்பது வயதாகி இருந்தது. அண்மையில் நடந்த வாரிசுரிமைப் போட்டியின் விளைவாக ராஷ்டிரகூட மேலாண்மையைச் சிற்றரசர்கள் மதிக்காமல் நடந்தனர். எனவே சிற்றரசர்களை அடக்கித் தன் மேலா திக்கத்தை ஏற்றுக் கொள்ளும்படிச் செய்தது துருவனுடைய முதல் பணியாகும். அடுத்து வாரிசுரிமைப் போரில் தனக்கு எதிராகக் கோவிந்தனுக்கு உதவிசெய்த அரசர்களை ஒழிப்பது அவனுடைய அடுத்த வேலையாக அமைந்தது. கங்க, பல்லவ, மாளவ அரசர்கள் அவனுடன் போரிட்டனர் என்பதை மேலே கூறியுள்ளோம். முதலில் அவனுடைய கவனத்தைக் கவர்ந்தவன் கங்க அரசனுன இரண்டாம் சிவமாரன். அறிவாற்றல் மிக்கவனுக விளங்கிய சிவமாரன் போராற்றல் சிறிதுகூட இல்லாதவன். யானைப்படையைப் பற்றி ஒரு சிறந்த நூலை எழுதிய சிவமாரனுக்கு யானைப்படைபற்றிய அறிவு ஏட்டறிவாகவேயிருந்தது. அது நடைமுறையில் பயன்படவில்லை. ஏனெனில் ராஷ்டிரகூட துருவன் ஒரு பெரும் யானைப் படையுடன் கங்க நாட்டின்மீது படையெடுத்த பொழுது சிவமாரனுக்குத் தன்நாட்டை இப் படையிடமிருந்து காப்பாற்ற முடியவில்லை. துருவன் போராற்றல் மிக்கவனுகையால் எளிதில் கங்கப் படைகளை முறியடித்துச் சிவமாரனையும் சிறை பிடித்தான். கங்கபாடி நாடு கைப்பற்றப்பட்டு ராஷ்டிரகூட அரசுடன் இணைக்கப்பட்டது. கங்க அரசன் சிறை பிடிக்கப்பட்ட செய்தியை ராஷ்டிரகூடச்

[1] துருவன் மேற்கூறப்பட்டவாறு புரட்சி செய்து அரியணையைப் பெற்றான் என்பதற்குத் தகுந்த ஆதாரமில்லை என்றும் கோவிந்தன் தன் பலவீனத்தையும் தன் சகோதரன் துருவன் வலிமையையும் ஆற்றலையும் புரிந்துகொண்டு தானுகவே விருப்பப்பட்டுத் தன் பதவியை விட்டுக் கொடுத்து அரசாங்கப் பொறுப்பு முழுவதையும் துருவனிடம் ஒப்படைத்தான் என்றும் இவ்விரு சகோதரர்களிடையே எந்தவிதப் பகைமையோ, காழ்ப்புணர்ச்சியோ இருக்கவில்லை என்றும் ஒரு கருத்து உண்டு. P. B. Desai (Ed.) - A History of Karnataka, P. 117.

சாஸனங்கள் கூறுவதோடு மட்டுமன்றிச் சில கங்க அரசர்கள் சாஸனங்களும் இதை உறுதிப்படுத்துகின்றன. கங்க நாட்டை ஆளத் துருவன் தன் மகன் ஸ்தம்பன் என்பவனை ஆளுநனுக நியமித்தான்.

அடுத்து வாரிசுரிமைப் போரில் கோவிந்தனுக்கு ஆதரவாகத் தன்னை எதிர்த்துப் போரிட்ட நந்திவர்மபல்லவன் மீது துருவன் போர்தொடுத்தான். ராஷ்டிரகூடர்களின் ரதன்பூர் செப்பேடுகள் இப் போரைப் பற்றியும் துருவன் பெற்ற வெற்றியையும் பல்லவ அரசனிடமிருந்து பல யானைகளைத் திரையாகப் பெற்ற செய்தியையும் குறிப்பிடுகின்றன. பல்லவத் தலைநகரமான காஞ்சிபுரம் கைப்பற்றப்பட்டதாக எந்த ராஷ்டிரகூட சாஸனமும் கூறவில்லை. எனவே துருவன் போரில் வெற்றிபெற்றதோடு திருப்தியடைந்து ஒரு சமாதான உடன்படிக்கை செய்து கொண்டு திரும்பிவிட்டான் போலும். வட ஆர்க்காடு மாவட்டம் பாலாற்றிற்கருகில் கண்டு பிடிக்கப்பட்ட நந்திவர்மனின் ஐம்பத்திரண்டாம் ஆட்சி ஆண்டு வீரக்கல் பொறிப்பு ஒன்று (கி.பி. 783) இந்த ராஷ்டிரகூடப் படையெடுப்பைப் பற்றிக் கூறுகின்றது.[1] துருவனுடைய மனைவி சீலமகாதேவியின் கி.பி. 786 ஆம் ஆண்டு ஜெத்வாய்ச் செப்பேடுகளும் (Jetwai plates) துருவனுடைய வெற்றிகரமான கங்க பல்லவ படையெடுப்புகளைக் குறிப்பிடுகின்றது. எனவே சுமார் கி.பி. 783-84ல் இப்படையெடுப்புகள் முடிவடைந்திருக்கவேண்டும். இப் படையெடுப்புகளின் விளைவாகத் துருவன் தக்காணத்தின் தனிப்பெரும் தலைவனுக விளங்கினுன். வேங்கியின் அரசன் நான்காம் விஷ்ணுவர்த்தனன் இவனுடன் நட்பு கொண்டு தன் மகள் சீலமகாதேவியை (சீலபட்டாரிகா) துருவனுக்கு மண முடித்தான்.

இச் சாதனைகளால் திருப்தி அடையாத துருவன் வட இந்திய அரசியலிலும் தன் செல்வாக்கை ஏற்படுத்த ஆர்வம் கொண்டான். துருவனின் வட இந்தியப் போர் நடவடிக்கைகளை ஆராய்வதற்கு முன்பு அப்பொழுது வட இந்தியாவின் அரசியல் நிலைமையைப் பற்றி அறிந்துகொள்ள வேண்டியது இன்றியமையாததாகும். ராஜபுதனமும் மாளவமும் கூர்ஜரப் பிரதிஹார மன்னன் வத்ஸராஜனுல் ஆளப்பட்டு வந்தன. வங்காளத்தில் பாலவம்சத்து

1. "பெருமானடிகளுக்கு எதிராக (பல்லவ அரசன்) வல்லவரையன் (ராஷ்டிரகூடர்கள்) படையெடுத்து வந்து வெண்குளிக் கோட்டையை முற்றுகையிட்டபோது கர்க்காட்டூர் சிற்றரசரான கங்காதியரையர் போரிட்டு இறந்தார்" என்ற வாசகம் அந்த வீரக்கல்லில் பொறிக்கப்பட்டுள்ளது. T. V. Mahalingam - Kanchipuram in Early South Indian History P. 181.

அரசன் தர்மபாலன்) ஆண்டுகொண்டிருந்தான். ஹர்ஷருடைய காலத்திலிருந்தே வட இந்தியாவின் புகழ்பெற்ற முன்னணி அரசாக விளங்கிய கன்னோசி இந்திராயுதன் என்ற அரசனால் ஆளப்பட்டு வந்தது. வலுவற்ற, திறமையற்ற இவன் ஆட்சி வட இந்தியாவில் மற்ற இரு அரசர்களின் போரார்வத்தைத் தூண்டியது. (வத்ஸராஜனும் தர்மபாலனும் கன்னோசியை வென்று இந்திராயுதனைத் தங்கள் செல்வாக்கிற்கு உட்படுத்த வேண்டுமென்று தனித்தனியாக முயன்று கொண்டிருந்தனர்.) இவ்விரு அரசர்களிடையே வட இந்தியத் தலைமைப் பதவிக்குப் பலத்த போட்டி ஏற்பட்டது. கி. பி. 784-ல் வத்ஸராஜன் கன்னோசியின்மீது படையெடுத்து இந்திராயுதனைப் போரில் தோற்கடித்தான். அவனை மீண்டும் கன்னோசிக்கு உரிய அரியணையில் அமர்த்தித் தன்னுடைய கைப்பாவையாக ஆக்கிக் கொண்டான். இவ்வாறு கன்னோசிமீது தன் ஆதிக்கத்தை ஏற்படுத்துவதில் வத்ஸராஜன் வெற்றிகண்டான்.[1] வட இந்தியத் தலைமைப் பதவியை அடைவதில் பேரார்வம் கொண்டிருந்த தர்மபாலன் உள்ளத்தில் வத்ஸராஜனின் இவ்வெற்றி பொறாமையைத் தூண்டியிருக்க வேண்டும். எனவே தர்மபாலன், சக்ராயுதன் என்பவனை கன்னோசி அரசனாக ஆக்கும் நோக்கத்துடன் இந்திராயுதனோடும், அவன் ஆதரவாளர்களான வத்ஸராஜனோடும் ஒரு போரில் ஈடுபடத் தீர்மானித்தான். கங்கை, யமுனை ஆற்றிடைப் பகுதியில் (Doab) நடந்த இப்போரில் தர்மபாலன் படுதோல்வி அடைந்தான். ஆனால் இத் தோல்வியினால் சிறிதும் மனந்தளராத தர்மபாலன் மீண்டும் தன் படைகளைச் சீர்படுத்திக்கொண்டு அதே கங்கை-யமுனை ஆற்றிடைப் பகுதிக்குச் சென்று மற்றொரு போருக்கு ஆயத்தமானான். இவ்வாறு வத்ஸராஜனுக்கும் தர்மராஜனுக்கும் இடையே வடஇந்தியத் தலைமைப் பதவிக்காக நடக்கவிருக்கும் இந்த இரண்டாவது போரின் பொழுதுதான் (கி. பி. சுமார் 786) ராஷ்டிரகூட துருவன் வட இந்திய அரசியலில் தலையிட முடிவு செய்தான்.

தர்மபாலனைச் சந்திப்பதற்காகக் காத்துக்கொண்டிருந்த வத்ஸராஜன் மீது துருவன் தன் கவனத்தைத் திருப்பினான். மிக்க சாமர்த்தியத்துடனும் விழிப்புடனும் இப்போர்த் திட்டத்தைத்

1. வத்ஸராஜனுடைய சந்ததிகளுள் ஒருவனான முதலாம் போஜனின் குவாலியர் பொறிப்பு வத்ஸராஜன் தன்னுடைய பேரரசைப் பண்டி குலத்தினரிடமிருந்து (Bandi Family) பறித்தான் என்று கூறுகிறது. பண்டி என்பவன் ஹர்ஷருடைய தாய்வழி மாமன் என்று நாம் ஹர்ஷ சரித்திரத்திலிருந்து அறிகிறோம். கன்னோசியை ஆண்டு கொண்டிருந்த இந்திராயுதன் இந்தப் பண்டி என்பவனின் வழித்தோன்றல்களில் ஒருவனாக யிருக்கலாம். இந்திராயுதனைத் தோற்கடித்துக் கன்னோசிமீது தன் ஆதிக்கத்தை வத்ஸராஜன் ஏற்படுத்திய செய்தியைத்தான் குவாலியர் பொறிப்பு கூறுகிறது போலும்.

துருவன் செயல்படுத்தினுன். நர்மதை ஆற்றங்கரையில் துருவனுடைய வலிமை மிக்க படை கூடியது. படைத் தலைமை அவனுடைய இரு பிள்ளைகளான கோவிந்தனிடமும் இந்திரனிடமும் ஒப்படைக்கப்பட்டது. வத்ஸராஜன் தன் படைகளுடன் தர்மபாலனுடைய படையை எதிர்நோக்கிக் கங்கை யமுனை ஆற்றிடைப் பகுதியில் முகாமிட்டிருந்ததால், துருவன் நர்மதையைக் கடந்து மாளவத்தைக் கைப்பற்றுவது எளிதாயிற்று. துருவனுடைய படைகள் கன்னேசியை நோக்கி முன்னேறிக் கொண்டிருந்தன. தன்னை நோக்கிவரும் ராஷ்டிரகூடப் படைகளைச் சந்திக்க வேண்டிய கட்டாயம் ஏற்படவே வத்ஸராஜன் கங்கை யமுனை ஆற்றிடைப் பகுதியிலிருந்து தன் படைகளைத் திருப்பி அழைக்க வேண்டியதாயிற்று. ஜான்சிக்கு அருகே இருபடைகளும் சந்தித்து நடத்திய போரில் ராஷ்டிரகூடப்படைகள் பெரும் வெற்றி அடைந்தன. வத்ஸராஜன் போர்க்களத்திலிருந்து தப்பியோடி ரஜபுதனப் பாலைவனத்தில் ஒளிந்து கொண்டான்.[1] துருவனுக்கு இப்போரின் இறுதியில் ஏராளமான கொள்ளைப் பொருள்கள் கிடைத்தன. வத்ஸராஜனுல் முன்பு நடந்த ஒரு போரில் தர்மபாலனிடமிருந்து கைப்பற்றப்பட்ட இரண்டு வெண் கொற்றக் குடைகள், கொள்ளைப் பொருள்களில் குறிப்பிடத் தக்கவையாகும்.

இவ்வெற்றியினுல் பெருமிதங் கொண்ட துருவன், அடுத்துத் தர்மபாலனுடனும் போரிடத் தீர்மானித்தான். கங்கை-யமுனை ஆற்றிடைப் பகுதியில் முகாமிட்டிருந்த தர்மபாலனை நோக்கி ராஷ்டிரகூடப்படைகள் முன்னேறத் தொடங்கின. தர்மபாலனைப் போரில் முறியடித்து அவன் ஆதிக்கத்தை ஒடுக்காவிடில் வத்ஸராஜன் ஆதிக்கத்தை ஒடுக்கியது பயனற்றதாக்கிவிடும். அது ஒரு வகையில் தர்மபாலனின் ஆதிக்கத் திட்டத்திற்கு மறைமுகமாக உதவி செய்வதாகும். எனவேதான் தர்மபாலனுடனும் உடனடியாகப் போர் தொடுக்கத் துருவன் முடிவு செய்தான். இப்போர்த் தொடர்பான நிகழ்ச்சிகள் பற்றி நமக்கு விவரங்கள் ஏதும் கிடைக்கவில்லை. கங்கை-யமுனை ஆற்றிடைப் பகுதியிலோ, அதற்கருகாமையிலோ (சுமார் கி. பி. 787)ல் இப் போர் நடந்திருக்க வேண்டும். ஏனெனில் முதலாம் அமோக

[1]. ராஷ்டிரகூட இளவரசியான ரண்ணுதேவி என்பவளை தர்மபாலன் மணந்து கொண்டிருந்தான் என்ற செய்தியின் அடிப்படையில் துருவனின் வடஇந்தியப் படையெடுப்பு தர்மபாலனுக்கு ஆதரவாக, வத்ஸராஜனுக்கெதிராக மேற்கொள்ளப்பட்டது என்ற ஒரு கருத்தும் உண்டு. ஆனுல் முதலாம் அமோகவர்ஷனின் செப்பேடுகள் துருவன் தன் வடஇந்தியப் படையெடுப்பின் பொழுது கௌட அரசனுடனும் போர் செய்தான் என்று திட்டவட்டமாகக் கூறுவதால் மேற்கூறிய கருத்து ஏற்புடையதாகாது. A. S. Altekar The Rashtrakutas and their Times - p. 55.

வருஷனனின் சஞ்சன் செப்பேடுகள் கௌட அரசன் (தர்மபாலன்) கங்கை-யமுனை ஆற்றிடைப் பகுதியில் தோற்கடிக்கப்பட்டான் என்று கூறுகின்றன. இச் செய்தி கார்க்கனின் சூரத் செப்பேடு களால் உறுதி செய்யப்படுகிறது. அச் சாஸனத்தில், துருவன் சிவபெருமானுடன் ஒப்பிடப்பட்டு, அவன் கங்க அரசனை வென்று சிறைப்படுத்தியதாகவும், கங்கைப் பள்ளத்தாக்கில் போரில் வென்றதாகவும் இருபொருள்படும்படி அவனுடைய சாதனைகள் வருணிக்கப்பட்டுள்ளன. இப் போரில் தர்மபாலன் படுதோல்வி அடைந்து புறமுதுகு காட்டி ஓடினான். இவ்வெற்றிக்குப் பிறகு துருவனின் படைகள் கங்கை யமுனை ஆற்றிடைப் பகுதியில் சிறிது காலம் ஓய்வு எடுத்துக்கொண்டு, ஏராளமான கொள்ளைப் பொருள்களுடன் நாடு திரும்பியிருக்க வேண்டும். தன்னுடைய படைத்தளம் வெகுதூரத்திற்கப்பால் இருந்ததாலும் வாரி சுரிமைப் பிரச்சினையைத் தீர்க்க வேண்டியிருந்ததாலும் துருவன் இவ்வெற்றியைத் தொடர்ந்து கன்னோசி வரையில் சென்று அந் நகரைக் கைப்பற்ற எந்த முயற்சியும் மேற்கொள்ளவில்லை.

துருவனின் வட இந்தியப் படையெடுப்பின் விளைவு பற்றி இங்கு ஆராயலாம். இப் படையெடுப்பை ஒரு திக்விஜயமாகக் கருத வேண்டுமேயன்றி, நாடுபிடிக்கும் ஒரு முயற்சியாகக் கருத முடியாது. ஏராளமான கொள்ளைப் பொருள்கள் கிடைத்தன; ராஷ்டிரகூடர்களின் புகழ் ஓங்கியது என்பதைத் தவிர வேறெந்த விளைவும் இப் படையெடுப்பினால் ஏற்படவில்லை. வத்ஸராஜன் மீதும், தர்மபாலன்மீதும் பெற்ற வெற்றியின் விளைவாக ராஷ்டிரகூடப் பேரரசின் எல்லை விரிவடையவில்லை. ஏனெனில் இப் போரில் எந்த அரசும் கைப்பற்றப்பட்டு ராஷ்டிரகூட அரசுடன் இணைக்கப்படவில்லை. துருவன் வட இந்தியாவில் பெற்ற இரு வெற்றிகளைத் தொடர்ந்து, கன்னோசி நகரத்தைக் கைப்பற்ற எந்த முயற்சியும் மேற்கொள்ளவில்லை என்பதை முன்பே கூறியுள்ளோம். தக்காணத்தில் மட்டுமின்றி வட இந்தியாவிலும் ராஷ்டிரகூடர்கள் ஆதிக்கத்தை எதிர்க்கும் துணிவுபெற்ற அரசன் யாருமில்லை என்பதை இப்படையெடுப்பு எடுத்துக் காட்டியது.

மேலே விளக்கப்பட்டுள்ள தக்காண வடஇந்தியப் போருக் குப் பிறகு ராஷ்டிரகூட ஆதிக்கம் உயர்நிலை அடைவதை நாம் காணுகிறோம். கங்க இளவரசன் ராஷ்டிரகூடர்களின் கைதியாக இருந்தும், பல்லவ அரசன் போரில் தோற்றுத் திறை செலுத்த ஒப்புக்கொண்டதும், வத்ஸராஜன் போரிட இயலாமல் ராஜ புதனப் பாலைவனத்தில் ஓடி ஒளிந்து கொண்டதும், வேங்கி

அரசன் ராஷ்டிரகூடர்களுடன் நெருங்கிய உறவு ஏற்படுத்திக் கொண்டதும் துருவனை மிஞ்சக்கூடிய அல்லது துருவனை ஒத்த அரசன் இந்தியாவிலேயே அப்பொழுது யாருமில்லை என்ற நிலையை உருவாக்கியது. எனவே தனது ஆட்சியின் எஞ்சிய நான்கு ஐந்து ஆண்டுகளைத் துருவன் அமைதியாகவே கழித்தான். அந்தக் காலப்பகுதியில் நாட்டின் வருங்கால நலனுக்காக அவன் வாரிசுரிமைப் பிரச்சினையில் எழுந்த சிக்கல்களைப் போக்கி, தன் இளையமகன் கோவிந்தனைத் தன் வாரிசாக நியமித்தான். துருவனுக்குக் கார்க்கன், ஸ்தம்பன், கோவிந்தன், இந்திரன் என்ற நான்கு பிள்ளைகள் இருந்தனர். மூத்தவன் இளம்வயதிலேயே இறந்துவிட்டான். எஞ்சி இருந்தவர்களில் ஸ்தம்பன் மூத்தவன் என்ற முறையில் அரியணையுரிமை அவனுக்குத்தான் என்றாலும், கோவிந்தனுடைய திறமை, அறிவுக் கூர்மை, படைத்துறை ஆற்றல் காரணமாக அவன்தான் தன்னுடைய வாரிசாவதற்குத் தகுதி பெற்றவன் என்று துருவன் கருதினான். எனவே அவனைத் தன் வாரிசாக அறிவித்தான். மூத்தவனான ஸ்தம்பனின் இழப்பிற்கு ஈடு செய்யும் வகையில் அவனைக் கங்க நாட்டின் ஆளுநனாக நியமித்தான். இளையவனாகிய இந்திரன் குஜராத்-மாளவத்தின் ஆளுநனாக நியமிக்கப்பட்டான். இளவரசனாக முடிசூட்டியதோடு மட்டுமன்றி வாரிசுரிமைப் போரைத் தவிர்ப்பதற்காகத் தானே அரச பதவியைத் துறந்து, துருவன் தன் மகன் கோவிந்தனை அரியணையிலமர்த்தினான் என்று ஒரு சிலர் கருதுவர். கோவிந்தனுடைய ஆட்சியின் சாதனைகளின் அடிப்படையில் நோக்கும் பொழுது துருவன் கோவிந்தனைத் தன்னுடைய வாரிசாகத் தேர்ந்தெடுத்தது எவ்வளவு பொருத்தமுடையது என்பதும் அவனுடைய தீர்க்கதரிசனமும் நன்கு விளங்கும்.

திறமை மிக்க ராஷ்டிரகூட அரசர்களில் ஒருவன் துருவன் என்பதை எவரும் மறுக்கமுடியாது. பதின்மூன்று ஆண்டுக் காலக் குறுகிய ஆட்சியில் தனக்குமுன் ஆண்டு கொண்டிருந்த அரசர்களின் திறமையின்மையால் பலவீனம் அடைந்திருந்த ராஷ்டிரகூட அரசை வலுப்படுத்தித் தென்னிந்தியாவில் அதன் ஆதிக்கத்தை மீண்டும் நிலைநாட்டியதோடு மட்டுமன்றி அதை ஓர் அனைத்து இந்தியச் சக்தியாக உருவாக்கியது இவனுடைய மகத்தான சாதனையாகும். ஒரு தக்காண அரசின் ஆதிக்கம் வட இந்தியாவில் ஊடுருவிப் பரவும் சாதனையை முதன் முதல் புரிந்தவர்கள் சாதவாகன அரசர்கள். பல நூற்றாண்டுகளுக்குப் பிறகு இரண்டாம் முறையாக அதே சாதனையை ராஷ்டிரகூடர்கள் துருவன் ஆட்சியில் புரிந்ததை நாம் காண்கிறோம். வட இந்தியாவின் தலைமைக்குப் போட்டியிட்டுக் கொண்டிருந்த இரு

அரசர்களையும் முறியடித்து அவ்விடத்தைத் துருவன் தானே பெற்று ராஷ்டிரகூடச் செல்வாக்கை வட இந்தியாவில் ஊடுருவச் செய்தான். வட இந்தியப் படையெடுப்பினால் துருவனுக்கு எந்த நிரந்தரப் பயனும் ஏற்படவில்லையாயினும் தென்னிந்தியாவில் அவன் கங்கர்கள் மீதும் பல்லவர்கள் மீதும் பெற்ற வெற்றியின் விளைவாக ராஷ்டிரகூடப் பேரரசின் தெற்கெல்லை, காவிரி ஆறு வரை விரிவாக்கப்பட்டது. தனது மூத்த சகோதரனான கோவிந்தனைப் பதவியிலிருந்து விலக்கித் தான் அரச பதவியைக் கைப்பற்றிய செயல் துருவன் பெருமைக்கு இழுக்காக அமைந்தபோதிலும் கோவிந்தனின் திறமையின்மையை நோக்கும்பொழுது அரசியல் ரீதியாக துருவன் செய்தது சரியென்றே தோன்றுகிறது. கி.பி. 793ல் துருவன் இறந்தபொழுது ராஷ்டிரகூடப் பேரரசு ஓர் உயர் நிலையை அடைந்து, அதன் ஆதிக்கத்தை ஏற்றுக்கொள்ள மறுக்கும் துணிவு பெற்ற எந்த அரசும் இந்தியாவில் இல்லை என்ற சூழ்நிலை உருவாக்கப்பட்டது. இதுவே துருவன் ஆட்சியின் தனிப் பெருமையாகும். துருவன். நிருபமா (நிகரற்றவன்) கலிவல்லபன் (போர் வீரர்களின் மனத்திற்குகந்தவன்), தாராவர்ஷன் (மழை பொழிவதுபோல் உதவிகளைச் செய்பவன்) போன்ற பட்டங்களைச் சூட்டிக்கொண்டான். துருவனுடைய மனைவியான சீல மகாதேவி பல்கலையிலும் தேர்ச்சி பெற்ற ஒரு திறமைமிக்க அரசியாவாள். அவளுடைய பெயரால் பல சாஸனங்கள் வெளியிடப்பட்டிருப்பதால் அவளும் அரசனை ஒத்த அதிகாரத்தையும் அந்தஸ்தையும் பெற்றிருந்தாள் என்று கருதலாம். நாட்டின் நிர்வாகத்திலும் அவள் ஒரு முக்கிய பங்கேற்றாள் என்று கருதப்படுகிறது.

### மூன்றும் கோவிந்தன் (கி. பி. 793-814)

துருவன் தன்னுடைய பிள்ளைகளில் இளையவனான கோவிந்தனைத் தன் வாரிசாக நியமித்தான் என்ற செய்தியையும் அதற்கான காரணங்களையும் முன்பே குறிப்பிட்டுள்ளோம். வாரிசாக நியமித்து இளவரசுப் பட்டத்தைக் கட்டிவிடுவதால் மட்டும் வாரிசுரிமைப் போட்டியைத் தவிர்த்துவிட முடியாது என்பதை உணர்ந்த துருவன் தன் பதவியைத் துறந்து, கோவிந்தனைத் தன் வாழ்நாளிலேயே அரசனாக அரியணையில் அமர்த்திவிடவேண்டும் என்ற எண்ணம் கொண்டிருந்தான். கோவிந்தன் இதற்கு இசையவில்லை. திட்டமிட்டபடி துருவனுடைய பதவித்துறப்பு நடந்ததா என்பதை நம்மால் நிச்சயமாகக் கூறமுடியவில்லை. கோவிந்தன் முடிசூட்டு விழா ஒன்றில் அரசைத் தன் தகப்பனிடமிருந்து பெற்றான் என்ற பைதான் செப்பேடுகள் கூறுகின்றன. கோவிந்தன் தன் தகப்பனிடமிருந்து பெற்றது இளவரசுப்

பதவியை அன்று ; அரசப் பதவியைத்தான் பெற்றான் என்று கார்க்கனுடைய சூரத் செப்பேடுகள் குறிப்பிடுகின்றன. 'ராஜ்யாபிஷேகம்' என்று இச் செப்பேடுகளில் பயன்படுத்தப்பட்டிருக்கும் சொல் இளவரசுப்பட்டம் சூட்டு விழாவையும், முடிசூட்டு விழாவையும் குறிப்பிடுவதாக உள்ளது. எனவே வாரிசுரிமைச் சிக்கல்களைத் தவிர்ப்பதற்காக வேறு வழியின்றித் துருவன் அரச பதவியைத் துறந்திருக்கக்கூடும். துருவன் அரச பதவியைத் துறந்தானா இல்லையா என்பது பற்றி நமக்கு நிச்சயமாகத் தெரியாவிட்டாலும், அவன் ஆட்சியின் இறுதி ஆண்டுகளில் கோவிந்தன் நடைமுறையில் அரசனாகவே செயல்பட்டான். அதிகாரம் முழுவதும் அவன் கையில் இருந்தது.

கி.பி. 793ல் கோவிந்தன் எந்தக் குழப்பமும் இன்றி அரியணை எய்தினான் என்பதை நாம் அவனுடைய பைதான் செப்பேடுகளிலிருந்து அறிகிறோம். அதற்குப் பிறகும் ஓரிரு ஆண்டுகள் தொல்லைகள் ஒன்றுமிருக்கவில்லை. எந்தச் சமயத்திலும் வாரிசுரிமைப் பிரச்சினை எழக்கூடும் என்பதை உணர்ந்த கோவிந்தன் சிற்றரசர்களுடனும், அமைச்சர்களுடனும், உயரதிகாரிகளுடனும், அன்புடனும், நயமாகவும் நடந்துகொண்டு, அவர்களுடைய நல்லெண்ணத்தையும், ஆதரவையும் பெற முயன்றான். கோவிந்தன் ஒரு சிறந்த படைத்தலைவனாகையால் அமைச்சர்கள், அதிகாரிகள் ஆதரவைமட்டும் நம்பியிராமல் எந்த ஓர் அவசர நிலைமையையும் சமாளிக்கத் தேவையான படைகளையும் ஆயத்தமாக வைத்துக்கொண்டிருந்தான். அரசுரிமையையிழந்த அவன் உடன் பிறந்தோர்கள் அவனுக்குத் தொல்லை கொடுக்கத் தொடங்கினார்கள். மூத்த சகோதரனான ஸ்தம்பன், சட்டப்படி தனக்குக் கிடைக்கவேண்டிய அரச பதவியைப் பெறும் நோக்கத்துடன் பன்னிரு அரசர்களைக் கொண்ட கூட்டணி ஒன்றை நிறுவினான். காஞ்சிபுரத்துப் பல்லவத் தந்திகன் (தந்திவர்மன்) நொளம்பவாடி அரசனான சாருபொன்னேரன், வனவாசி சிற்றரசனான கத்தியிரன், தார்வார் பகுதியின் சிற்றரசனான மாராசர்வன் ஆகியோர் கூட்டணிகளின் சில முக்கிய உறுப்பினர்கள். சில அரசாங்க உயரதிகாரிகளும் இக் கூட்டணியை ஆதரித்தார்கள் என்பது சஞ்சன் செப்பேடுகளிலிருந்து தெரியவருகிறது. ஸ்தம்பன் தன்னைக் கவிழ்ப்பதற்காகச் சூழ்ச்சி செய்துகொண்டிருக்கிறான் என்பதைத் தன் ஒற்றர்கள் மூலம் அறிந்த கோவிந்தன், உடனடியாகத் தகுந்த நடவடிக்கைகளைமேற்கொண்டான். ராஷ்டிரகூடச் சிறையில் வாடிக்கொண்டிருந்த இரண்டாம் சிவமாரனை விடுதலை செய்து அவனைக் கங்க நாட்டின் அரசனாக்கி அதன் மூலம் ஸ்தம்பனுக் கெதிராக அவன் உதவியைப் பெறமுடியும் என்று கோவிந்தன்

நினைத்தான். விடுதலை பெற்ற சிவமாரன், கோவிந்தன் எதிர் பார்த்ததற்கு மாருக, தன் நாடு திரும்பியவுடன் ஸ்தம்பனுடன் சேர்ந்துகொண்டான். கோவிந்தனைவிட ஸ்தம்பனுக்குத்தான் சிவமாரனின் நட்புறவைப் பெற அதிக வாய்ப்புகள் இருந்தன. ஏனெனில் சிவமாரன் விடுதலை அடைந்து சென்றபொழுது கங்க நாட்டின் ஆளுநனுகயிருந்தவன் ஸ்தம்பன். எனவே சிவமாரனை மீண்டும் கங்க அரியணையில் அமர்த்தவும், அவனுக்குப் பாதுகாப் பளிக்கவும் கோவிந்தனைவிட ஸ்தம்பனுக்கு அதிகத் தகுதியும் வாய்ப்புகளும் இருந்தன. ஆகையால் சிவமாரன் உதவியைப் பெறுவது ஸ்தம்பனுக்கு மிக எளிதாயிற்று. ஸ்தம்பனை ராஷ்டிர கூட அரசனுக்க உறுதிகொண்ட பன்னிரு அரசர்கள் கூட்டணியில் சிவமாரனும் சேர்ந்துகொண்டான். தான் ராஷ்டிரகூட அரச னுக்கப்பட்டால் சிவமாரனைக் கங்க நாட்டின் அரசனுக ஆக்குவ தாக ஸ்தம்பன் உறுதியளித்திருக்கக்கூடும்.

ஸ்தம்பனுடைய சூழ்ச்சி, சிற்றரசர்களும், உயர் அதிகாரிகள் பலரும் அவனுடன் சேர்ந்துகொண்டது, கங்க அரசன் சிவமாரனின் நடத்தை முதலியவற்றுல் சற்றும் மனந்தளராத கோவிந்தன், நிர்வாகப் பொறுப்பைத் தன் தம்பி இந்திரனிடம் ஒப்படைத்துவிட்டு, ஒரு பெரும் படையைத் திரட்டிக்கொண்டு ஸ்தம்பனுடைய திட்டத்தை முறியடிக்கப் புறப்பட்டான். ஸ்தம்ப னுக்குக் கூட்டணி உறுப்பினர்கள் உதவி கிட்டுவதற்கு முன்பே, அவனைப் போரில் தோற்கடித்துச் சிறைபிடித்தான். கர்நாட கத்தின் தென்பகுதியில் இப்போர் நிகழ்ந்திருக்கக்கூடும். தன்னிடம் கைதியாக இருந்த ஸ்தம்பனை அன்போடும் கருணையோடும் நடத் தியதோடுமட்டுமல்லாமல் அவனுக்கு விடுதலையும் அளித்து அவன் முன்னர் வகித்த பதவியாகிய கங்கவாடியின் அரசப் பிரதிநிதிப் பதவியை மீண்டும் அவனுக்கு அளித்தான். வாரிசுரிமைபற்றித் தந்தை செய்த ஏற்பாட்டை ஏற்று நடப்பதுதான் ஒரு மகனுடைய கடமை என்பதை கோவிந்தன் ஸ்தம்பனுக்குச் சுட்டிக்காட்டினுன். மேலும் கோவிந்தனுக்கெதிராகப் போர் செய்வதனுல் பயன் ஒன்றும் கிட்டாது என்பதை ஸ்தம்பன் உணர்ந்துகொண்டான். எனவே இவ்விரு சகோதரர்களுக்கிடையே இதற்குப் பிறகு எந்தச் சச்சரவும், கருத்து வேற்றுமையும் இல்லாமல் ஒருவருடன் ஒருவர் நட்புறவு கொண்டு வாழ்ந்து வந்தனர். இவ்விருவர்களுக் கிடையே இந்தச் சுமுகமான உறவு ஏற்படுவதற்கு இவர்களுடைய தம்பி இந்திரன் காரணமாக இருந்தான். ஸ்தம்பன் அதற்குப் பிறகு அரியணையைக் கைப்பற்றும் எண்ணத்தைக் கைவிட்டான். அவர்களுக்கிடையே நிலவிய உறவு எவ்வளவு சுமுகமானதாக இருந்தது என்பதை அவர்களுடைய சாஸனங்களிலிருந்து நாம்

அறிகிறோம். உதாரணமாக மூன்றும் கோவிந்தன் ஆட்சியின் தொடக்கத்தில் தோன்றிய வாரிசுரிமைக் குழப்பங்களைப் பற்றிக் கூறும் அவனுடைய பொறிப்புகளில் ஸ்தம்பன் பெயர் எங்கும் குறிப்பிடப்படவில்லை என்பதை நாம் நோக்கவேண்டும். அதே போல ஸ்தம்பனால் வெளியிடப்பட்ட சாஸனங்களிலும் அவன் தன் தம்பி கோவிந்தனின் மேலாதிக்கத்தை ஏற்றுக்கொண்டு செயல்பட்டான் என்று குறிப்பிடப்படுவதும் நோக்கற்பாலது.

ஸ்தம்பனைப் போரில் வென்ற பிறகு கோவிந்தன் தன் கவனத்தைக் கங்க அரசன் சிவமாரன் மீது திருப்பினான். இரு சகோதரர்களும் ஒன்றிணைந்து தம் படைகளுடன் கங்க நாட்டை நோக்கி முன்னேறிக்கொண்டிருந்தனர். சுமார் கி.பி. 795-ல் மீண்டும் நன்றிகெட்ட சிவமாரன் போரில் தோற்கடிக்கப்பட்டுச் சிறை பிடிக்கப்பட்டான் என்ற செய்தியை ரதன்பூர் செப்பேடுகள் கூறுகின்றன. அவன் இளவல் விஜயாதித்யன் தொடர்ந்து போரை நடத்த மேற்கொண்ட முயற்சிகள் வெற்றிபெறவில்லை. கங்கநாடு மீண்டும் ராஷ்டிரகூடப் பேரரசின் ஆட்சிக்கு உட்படுத்தப்பட்டு நாம் முன்பு குறிப்பிட்டுள்ளது போல ஸ்தம்பன் அதன் அரசப்பிரதிநிதியாக நியமிக்கப்பட்டான்.[1] கங்க அரசனுக்கு ஏற்பட்ட கதியைக் கண்டு அஞ்சிய நொளம்பவாடி அரசன் போர் செய்யத்துணிவின்றிக் கோவிந்தனுக்கு அடிபணிந்தான். ராஷ்டிரகூட மேலாண்மையை ஏற்றுக் கொள்ள இசைந்ததின் பேரில் அவன் மீண்டும் நொளம்பவாடி அரசனாக நியமிக்கப்பட்டான்.

அடுத்து ராஷ்டிரகூடப் படைகள் காஞ்சிபுரத்தை நோக்கிச் சென்றன. அப்பொழுது பல்லவ அரசன் தந்திவர்மன் என்பவன் கோவிந்தனைப் பதவியிலிருந்து இறக்க ஸ்தம்பனால் நிறுவப்பட்ட கூட்டணியின் உறுப்பினர்களில் அவனும் ஒருவன். அவனை ஒழிப்பதுதான் இப் படையெடுப்பின் நோக்கமாகும். இப் படையெடுப்பு சுமார் கி.பி. 795-96-ல் நடந்திருக்கவேண்டும். மூன்றும் கோவிந்தனின் கி.பி. 804-ஆம் ஆண்டு பிரிட்டிஷ் மியூசியம் செப்பேடுகள் அவன் காஞ்சி அரசன் தந்திவர்மனை வென்ற செய்தியைக் கூறுகின்றது. பல்லவ அரசனுடன் போர் செய்து அவனை வென்று திரும்புகையில் துங்கபத்திரை ஆற்றங்கரையில் இராமேஸ்வர தீர்த்தம் என்ற இடத்தில் கோவிந்தன்

[1] கி. பி. 802ஆம் ஆண்டு ஸ்தம்பனால் வெளியிடப்பட்ட மன்னே சாஸனம் (Manne Copper Plates), இச்செப்பேடுகளை அவன் கோவிந்தன் அனுமதியுடன் வெளியிட்டான் என்ற செய்தியையும் ஸ்தம்பனுடைய கடந்தகால தவறான நடவடிக்கைகளை கோவிந்தன் மன்னித்து அவனைக் கங்க நாட்டின் அரசப்பிரதிநிதியாக ஆக்கிய செய்தியையும் குறிப்பிடுகின்றன.

தங்கியிருந்தான் என்று இச் செப்பேடுகள் கூறுகின்றன. கோவிந்தனின் இந்தப் பல்லவப் படையெடுப்பும், அவன் அதில் பெற்ற வெற்றிபற்றிய செய்திகளும் வேறுசில ராஷ்டிரகூட சாஸனங்களினால் உறுதி செய்யப்படுகிறது. முதலாம் அமோக வருஷனின் சஞ்சன் செப்பேடுகள், கேரள, பாண்டிய சாளுக்கிய அரசர்களைத் திகிலடையச் செய்த கோவிந்தன், முளைத்தெழுந்த பல்லவ அரசை வாடிவதங்கச் செய்தான் என்று குறிப்பிடுகின்றன, அண்மையில் வெளியிடப்பட்ட மூன்றாம் கோவிந்தனின் நேசரிகா சாஸனம் (கி.பி. 805) அவனுடைய தென்னிந்தியப் போர்ச் சாதனைகளைப்பற்றிக் குறிப்பிடும்பொழுது, அவன் பல்லவர்கள், சோழர்கள், பாண்டியர்கள், சேரர்கள், கங்கர்கள் ஆகியவர்கள் மீது பெற்றவெற்றியைக் கூறுகின்றது. கர்நூல் மாவட்டத்திலுள்ள ஹூலிவிடு (Hulividu) என்ற இடத்தில் கண்டுபிடிக்கப்பட்ட பொறிப்பு ஒன்று, ராஷ்டிரகூடர்கள் ஆதிக்கத்திற்குட்பட்ட ரட்டர்களின் சார்பில், தந்திகனோடு போரிட்டு ஒருவன் உயிரிழந்த செய்தியைக் கூறுகிறது. இந்தத் தந்திகன், பல்லவத் தந்திவர்மன் என்பது பற்றியும் இப்போர் பல்லவர்களுக்கும் ராஷ்டிரகூடர்களுக்கும் இடையே நடந்த போர் என்பது பற்றியும் ஐயப்பாடு இருக்க முடியாது. இப் படையெடுப்பின் விளைவாகத் தந்திவர்மன் தோல்வியடைந்து, ராஷ்டிரகூட ஆதிக்கத்திற்குட்பட்ட சிற்றரசன் நிலையை ஏற்கவேண்டியிருந்தது என்பது மூன்றாம் கோவிந்தனின் கி.பி. 810-ஆம் ஆண்டு மன்னே சாஸனத்திலிருந்து நாம் அறிகிறோம். தந்திவர்மனின் வேண்டுகோளுக்கிணங்க சங்கமி என்ற கிராமம் பிரம்மதேயமாக அந்தணன் ஒருவனுக்குத் தானமாக வழங்கப்பட்ட செய்தி இச் சாஸனத்தில் கூறப்படுகிறது. அதில் தந்திவர்மன் மகா சாமந்தாதிபதி (சிற்றரசன் — Feudatory) என்று குறிப்பிடப்படுகிறான்.[1] ஆனால் தந்திவர்மன்மீது கோவிந்தன் பெற்ற இவ்வெற்றி உறுதியான வெற்றியாகத் தெரியவில்லை. ஏனெனில் கோவிந்தன் ஆட்சியின் இறுதியில் மற்றொரு முறையும் அவன் பல்லவ நாட்டின்மீது படையெடுத்துச் செல்லவேண்டிய அவசியம் ஏற்பட்டது.

கீழைச்சாளுக்கிய அரசனான நான்காம் விஷ்ணுவர்த்தனன் கோவிந்தனுக்கு நெருங்கிய உறவினன்.[2] எனவே அவன்

[1] "Svasti samdigata panchama hāsabda mahāsamantādhipathi Srimad Dantivarma"

[2] நான்காம் விஷ்ணுவர்த்தனின் மகள் சீல மகா தேவி ராஷ்டிரகூட துருவனை மணந்திருந்தாள். எனவே மூன்றாம் கோவிந்தனுக்கு நான்காம் விஷ்ணு வர்த்தனன் மகள் வழிப் பாட்டனாக வேண்டும்.

கோவிந்தனின் ஆதிக்கத்தை எதிர்க்க விரும்பவில்லை. ரதன்பூர் சஞ்சன் செப்பேடுகளில் கூறப்பட்டிருக்கும் செய்தியின் அடிப்படையில் கோவிந்தனுக்கும் நான்காம் விஷ்ணு வர்த்தனனுக்கும் போர் நடந்ததென்றும், அதில் கோவிந்தன் வெற்றிபெற்றான் என்றும் சிலர் கருதுகின்றனர். எவ்வாறாயினும் தக்காணத்தின் முக்கிய அரசுகள் யாவும் கோவிந்தனுக்கு அடிபணிந்து விட்டன.

இவ்வாறு தக்காணத்தில் தன் ஆதிக்கத்தை நிலைநாட்டிய பிறகு, கோவிந்தன் வடஇந்திய அரசியலில் தலையிட முடிவு செய்தான். தன் தந்தை துருவன் வடஇந்திய அரசர்கள்மீது வெற்றிபெற்று அங்கிருந்து புறப்பட்டபிறகு, கடந்த பத்து ஆண்டுகளில் வடஇந்திய அரசியலில் பல மாறுதல்கள் ஏற்பட்டிருந்தன. குர்ஜரப் பிரதிஹார அரசன், வத்ஸராஜனும் வங்காள அரசன் தர்மபாலனும் துருவனால் போரில் தோற்கடிக்கப் பட்டார்கள் என்பதை முன்பே குறிப்பிட்டுள்ளோம். துருவனிடம் அடைந்த தோல்வியினால் வத்ஸராஜன் பலவீனம் அடைந்ததை யும் கோவிந்தன் தென்னிந்தியப் போர்களில் ஈடுபட்டிருந்ததையும் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொண்டு, தர்மபாலன் கன்னோசிமீது படையெடுத்துச் சென்று, அந் நகரைக் கைப்பற்றி இந்திராயுதனையும் பதவியிலிருந்து நீக்கித் தன்னுடைய ஆதர வாளனான சக்ராயுதனைக் கன்னோசியின் அரசனாக நியமித்தான். இந் நிகழ்ச்சி குர்ஜரப் பிரதிஹாரர்களின் அதிகார வளர்ச்சியைத் தற்காலிகமாகத் தடைசெய்தது. விரைவில் வத்ஸராஜனுக்குப் பிறகு பட்டமெய்திய இரண்டாம் நாகபட்டன் தன் குலப் பெருமையைக் காக்கும் நோக்கத்துடன் சிந்துவை ஆண்டு கொண்டிருந்த முகமதியர்களுடனும், வேங்கிச் சாளுக்கியர் களுடனும், மற்ற அண்டை நாட்டரசர்களுடனும் ஒப்பந்தங்கள் செய்துகொண்டு அவர்கள் உதவி பெற்று ஒரு பெரும்படையுடன் கன்னோசிமீது படையெடுத்துச் சென்றான். கன்னோசி அரசன் சக்ராயுதனையும் அவனுக்கு ஆதரவாயிருந்த தர்மபாலனையும் நாகபட்டன் படுதோல்வியடையச் செய்தான். "பாலர்களுடைய படைகள் என்ற மேகங்கள் கலைக்கப்பட்டதன் விளைவாக, பிரதிஹாரர் பெருமை என்னும் சூரியன் மீண்டும் பிரகாசிக்கத் தொடங்கியது" என்று இந் நிகழ்ச்சியைச் சமகாலத்துக் கவிஞன் ஒருவன் வருணிக்கின்றான். இவ்வாறு பிரதிஹாரர்களின் பெருமை மீட்கப்பட்டு, நாகபட்டன் புகழ் உயர்நிலையை அடைந்திருந்த இத்தருணத்தில்தான் கோவிந்தன் வட இந்திய அரசியல் விவகாரங்களில் தலையிட முடிவு செய்தான்.

கோவிந்தன் வட இந்திய அரசியலில் தலையிட்டதின் நோக்கம் என்ன என்ற கேள்வி எழுதுவது இயற்கையே. தான் அண்மையில் பெற்ற வெற்றிகளினால் பூரிப்படைந்திருந்த நாகபட்டன், ராஷ்டிரகூடச் செல்வாக்கு மண்டலத்திற்கு உட்பட்டிருந்த குஜராத், மாளவ அரசுகளைக் கவர எண்ணங்கொண்டிருந்தான் போலும். கோவிந்தன் இப் பேராபத்தைப் புரிந்துகொண்டு, நாகபட்டன் செல்வாக்கு மேலும் வளருவதற்குமுன் அதை முளையிலேயே கிள்ளியெறிந்துவிட வேண்டுமென்று நினைத்திருக்கலாம். இது தவிர நாகபட்டன் ஆதிக்க வளர்ச்சியினால் பாதிக்கப்பட்ட தர்மபாலன் இருவருக்கும் பொது எதிரியான நாகபட்டனை ஒழிக்குமாறு கோவிந்தனை வேண்டிக்கொண்டிருக்கலாம். அந்த வேண்டுகோளுக்குச் செவிசாய்த்த கோவிந்தன் இந்த வட இந்தியப் படையெடுப்பை மேற்கொண்டிருக்கலாம் என்று கருதுவதற்கு இடமிருக்கிறது.

இப் படையெடுப்புப் பற்றிய விவரங்கள் கோவிந்தனுடைய சாஸனங்கள் எதிலும் காணப்படாதது வியப்பிற்குரியது. ஆனால் அவனுடைய மகன் அமோகவருஷனின் சஞ்சன் சாஸனத்திலிருந்து இப் படையெடுப்பு பற்றிய பல விவரங்கள் கிடைத்துள்ளன. இதன் உதவியுடன்தான் இன்றைய வரலாற்றறிஞர்கள் இப் படையெடுப்புத் தொடர்பான பல்வேறு நிகழ்ச்சிகளைப் பற்றி அறியமுடிகின்றது. இப் படையெடுப்பு கி. பி. 806-807க்கும் இடைப்பட்டக் காலப்பகுதியில் நடந்திருக்க வேண்டும் என்று ஒரு காலத்தில் கருதப்பட்டது. ஆனால் அண்மையில் கிடைத்த பொறிப்புகளில் காணப்படும் செய்திகளிலிருந்து இந் நிகழ்ச்சி சுமார் கி. பி. 798-க்கும் 800-க்கும் இடைப்பட்ட காலப் பகுதியில் நடந்திருக்க வேண்டுமென்று கருதுவது பொருத்தமுடையதாகும்.[1] இப் படையெடுப்பை மேற்கொள்ளுவதற்கு முன் முன்னெச்சரிக்கையாகக் கோவிந்தன் பல ஏற்பாடுகளைச் செய்து கொண்டான். ராஷ்டிரகூட அரசின்மீது நாகபட்டன் படையெடுக்கக்கூடும் என்பதை உணர்ந்த கோவிந்தன், நாகபட்டன் படைகள் தெற்கே வராவண்ணம் தடுக்கும் பொறுப்பைத் தன் தம்பியும் குஜராத் மாளவத்தின் அரசப் பிரதிநிதியுமான இந்திரனிடம் ஒப்படைத்தான். மத்திய இந்தியப் பகுதியில் ஆண்டுகொண்டிருந்த சிற்றரசர்களை அடக்கி வைக்கவும், தன்னாட்டுடன் தொடர்பு துண்டித்துப் போகாமல் பாதுகாக்கவும் மத்திய இந்தியாவின் பல்வேறு பகுதிகளில்

[1] G. Yazdani (Ed.) op. cit. P' 268 F. N. 4.

ராஷ்டிரகூடப் படைகள் நிறுத்திவைக்கப்பட்டன. இந்த முன்னேற்பாடுகளை முடித்துக்கொண்டு கோவிந்தன், தன் படைகளுடன் போபால் ஜான்சி வழியாகக் கன்னோசியை நோக்கி முன்னேறினான். கன்னோசியிலிருந்து நாகபட்டனுடைய படைகள் கோவிந்தனை எதிர்க்கப் புறப்பட்டன. இப்போர் எந்த இடத்தில் நடந்தது என்பதை அறுதியிட்டுக் கூறமுடியாவிட்டாலும் ஜான்சிக்கும் குவாலியருக்குமிடைப்பட்ட பகுதியில் நடந்திருக்கக் கூடும் என்று ஊகிக்கலாம். மீண்டும் வெற்றி ராஷ்டிரகூட அரசனுக்கே கிடைத்தது. கங்கை-யமுனை ஆற்றிடைப் பகுதியை ராஷ்டிரகூடர்களின் தாக்குதலுக்கு இலக்காகி, நாகபட்டன் இராஜபுதனத்தில் ஓடி ஒளிந்துகொண்டான். நாகபட்டனுடைய உதவியும் ஆதரவும் இல்லாமல் தனித்துப் போராடுவது மதியீனம் என்பதை உணர்ந்த கன்னோசியின் அரசன் சக்ராயுதன் கோவிந்தனிடம் சரணடைந்தான். இதற்குப் பிறகு கன்னோசிமீது படையெடுத்துச் செல்லவேண்டிய அவசியமில்லை என்பதைக் கோவிந்தன் உணர்ந்தான். தர்மபாலனும் ஒரு போரில் தோற்கடிக்கப்பட்ட பின்னரோ, கோவிந்தனுடன் போரிடுவது அறிவுடைமையன்று என்பதை உணர்ந்தோ கோவிந்தனிடம் சரணடைந்தான் போலும். தன்னுடைய தீராப் பகைவனை நாகபட்டனின் ஆதிக்கத்தை ஒடுக்கியதற்காக, கோவிந்தனுக்கு நன்றிக்கடன் செலுத்தும் வகையில் அவனோடு சமாதானம் செய்து கொள்வதுதான் உசிதம் என்பதைத் தர்மபாலன் உணர்ந்திருக்க வேண்டும். தக்காணப்படைகளின் போர் முரசொலி இமயமலைக் குகைககளில் எதிரொலித்தது என்ற சஞ்சன் செப்பேட்டின் கூற்று ராஷ்டிரகூட அவைக் கவிஞரின் கற்பனையில் எழுந்த மிகைப்படுத்தப்பட்ட கூற்று என்று நாம் கருதவேண்டுமேயன்றிக் கோவிந்தன் இமயமலைப் பகுதிவரை தன் படைகளை நடத்திச் சென்றான் என்று கருதுவது பொருத்தமுடையதாகாது.[1] கங்கை-யமுனை ஆற்றிடைப் பகுதியைக் கடந்து கோவிந்தன் சென்றிருக்க முடியாது. சக்ராயுதன் சரணடைந்த பிறகு கன்னோசியைக் கைப்பற்றவேண்டிய அவசியம்கூட இல்லை என்பதை உணர்ந்த கோவிந்தன் கன்னோசியின் மீதே படையெடுத்துச் செல்லவில்லை. இந்து சமயத்தில் ஆழ்ந்த பற்றுக்கொண்ட கோவிந்தன், ஒருவேளை கங்கையாற்றின் கரையோரமாகத் தன் படைகளுடன் அலகாபாத், காசி, கயாபோன்ற புண்ணியத் தலங்களுக்கு ஒரு புனித யாத்திரை

[1] ''கோவிந்தனுடைய குதிரைகள் இமயமலையின் சிற்றாறுகளின் குளிர்ந்த நீரைப் பருகின; அவனுடைய போர் யானைகள் கங்கை ஆற்றின் புனித நீரைச் சுவைத்தன; அவனுடைய இசைக் கருவிகளின் முழக்கம் இமயமலைப் பள்ளத் தாக்குகளில் எதிரொலித்தது'' என்று சஞ்சன் செப்பேடுகள் கூறுகின்றன.

மேற்கொண்டிருக்கலாம். இதைத்தான் சஞ்சன் செப்பேடுகள் மிகைப்படுத்திக் கோவிந்தன் இமயமலைவரை படையெடுத்துச் சென்றதாகக் கூறுகின்றன போலும்.

கோவிந்தன் வட இந்தியப் படையெடுப்பின்போது வேறு சில அரசர்களுடனும் போர் புரிந்தான் என்ற செய்தி சஞ்சன் செப்பேடுகளில் காணப்படுகிறது. நாகபட்டனைப் போரில் வென்ற பிறகு சந்திரகுப்தன் என்ற மற்ெருரு அரசனுடன் போர் புரிந்து அவனைத் தோற்கடித்ததாக அச் செப்பேடு கூறுகிறது. இந்தச் சந்திரகுப்தன் எந்த நாட்டு அரசன் என்பதை நிச்சயமாகக் கூறமுடியவில்லை. மத்திய இந்தியாவில் ஆண்டு கொண்டிருந்த அரசர்களுள் ஒருவனுக இவன் இருக்கக்கூடும். அடுத்து மாளவ அரசன் ஒருவன் கோவிந்தனுக்கு அடிபணிந்ததாகக் கூறப்படு கிறது. இவன் நாகபட்டனுடைய ஆதிக்கத்தை ஏற்றுக்கொண்டு மாளவத்தை ஆண்ட ஒரு சிற்றரசனுக இருக்கலாம். இப் போருக் குப் பிறகு கி.பி. 799-800ல் ராஷ்டிரகூடப் படைகள் வட இந்தி யாவிலிருந்து தக்காணத்தை நோக்கிப் புறப்பட்டன. திரும்பி வரும் வழியில் கோவிந்தன் ஸ்ரீபுவனம் எனும் விந்திய மலைப்பகுதி அரசு ஒன்றில் மாராசர்வன் என்ற அப் பகுதிச் சிற்றரசனின் விருந்தினனுகச் சிலகாலம் தங்கியிருந்தான். இங்குத் தங்கி யிருக்கும் பொழுதுதான் கோவிந்தனுடைய வாரிசான அமோகவர்ஷன் பிறந்தான்.

கோவிந்தனுடைய வட இந்தியப் படையெடுப்பை ஒரு திக் விஜயமாகத்தான் கருதவேண்டும். ராஷ்டிரகூட வம்சத்தின் பெருமையை உயர்த்துவதற்காக இப் படையெடுப்பு மேற் கொள்ளப்பட்டதேயன்றி, நாடு பிடிப்பதற்காக அன்று. கங்கை, யமுனை ஆற்றிடைப் பகுதியிலோ வட இந்தியாவின் வேறு எந்தப் பகுதியிலோ தன் ஆதிக்கத்தைப் பரப்ப வேண்டுமென்பது கோவிந்தனின் நோக்கமன்று. ராஷ்டிரகூடப் பேரரசின் எல்லைகளை விரிவாக்கும் நோக்கத்துடனும் இப் படையெடுப்பு மேற்கொள்ளப் படவில்லை. வட இந்திய அரசர்களைப் போரில் வென்று தன் மேலாண்மையை அங்கு நிலைநாட்ட வேண்டுமென்பதற்காகவே மேற்கொள்ளப்பட்ட இப் படையெடுப்பு எதிர்பார்த்த பயனை அளித்ததால் கோவிந்தன் மன நிறைவுடன் தன் நாடு திரும் பினுன். வட இந்தியாவின் எந்த அரசையும் கைப்பற்றித் தன் பேரரசுடன் இணைத்துக்கொள்ளவில்லை.

இந்த வட இந்தியப் படையெடுப்பு எப்பொழுதுமேற்கொள்ளப் பட்டது என்பதுபற்றிக் கருத்து வேறுபாடுகள் உண்டு. அல்டேகர்

என்ற வரலாற்றறிஞர் இது கி.பி. 806-807ல் நடந்திருக்கக்கூடும் என்று முதலில் கருதினர். அண்மையில் கண்டுபிடிக்கப்பட்ட ராஷ்டிரகூடச் சாஸனங்கள் தரும் செய்திகளின் அடிப்படையில் அவர் தம் கருத்தை மாற்றிக்கொண்டு, அப் படையெடுப்பு கி.பி. 798-800 காலப் பகுதியில் நடந்திருக்கவேண்டும் என்று கருது கிறார். ஸ்தம்பனின் கி.பி. 802ஆம் ஆண்டு மன்னே சாஸனம் இப் படையெடுப்பைப் பற்றிக் குறிப்பிடுவதால், இந்த ஆண்டிற்கு முன்னரே இப் படையெடுப்பு முடிந்திருக்கவேண்டும். கி.பி. 808ல் வெளியிடப்பட்ட ரதன்பூர் செப்பேடுகளில் நாகபட்டனும் தர்ம பாலனும் கோவிந்தனிடம் அடிபணிந்த செய்தி கூறப்படாததா லும், கி.பி. 867ஆம் ஆண்டு சஞ்சன் செப்பேடுகள் அதைக் குறிப் பிட்டுக் கூறுவதாலும் கி. பி. 805க்கு முன்பு ஒரு வட இந்தியப் படையெடுப்பும் அதற்குப் பிறகு மற்றொரு படையெடுப்பும் நடந் திருக்க வேண்டுமென்று கருதப்பட்டது. கோவிந்தனுடைய ஆட்சி யின் இறுதியில் வெளியிடப்பட்ட செப்பேடுகள் அவனுடைய வட இந்தியப் படையெடுப்பைக் குறிப்பிடுகின்றன. நாகபட்டனும் தர்மபாலனும் தோற்ற செய்தி அப் பொறிப்புகளில் காணப் படவில்லை. ஆனால் அப் படை யெடுப்புப் பற்றியும் அவன் பெற்ற வெற்றிகள் பற்றியும் பொதுப்படையாகப் பல செய்திகளை அப் பொறிப்புகள் கூறுகின்றன. அப் பொறிப்புகள் வாசகத்தை எழுதிய அவைப்புலவர்கள் அப் படையெடுப்புத் தொடர்பான தோற்கடிக்கப்பட்ட அரசர்களின் பெயர், போர் நடந்த இடம் போன்ற விவரங்கள் தேவையற்றவை என்று கருதினார்கள் போலும்.

கோவிந்தன் வட இந்தியப் படையெடுப்பையொட்டி நீண்ட காலம் தன் நாட்டை விட்டு வெளியேறியிருந்ததைப் பயன் படுத்திக்கொண்டு கோவிந்தனுடைய தென்னிந்தியத் தலைமைக்கு ஒரு முடிவுகட்டும் நோக்கத்துடன் திராவிட அரசர்கள் ஒரு கூட்டணியை அமைத்தார்கள். பல்லவ, பாண்டிய, கேரள, கங்க அரசர்கள் இக் கூட்டணியில் சேர்ந்து தங்கள் படைகளைத் திரட்டிக்கொண்டு ராஷ்டிரகூட ஆதிக்கத்திற்குட்பட்ட பகுதியைத் தாக்கினர். இதைக் கேள்வியுற்ற கோவிந்தன் தன் படையுடன் துங்கபத்திரை ஆற்றுப்பகுதிக்கு விரைந்தான். கி.பி.802-803ஆம் ஆண்டில் கூட்டணிப் படைகளை முறியடித்த இந்த வெற்றிக்குப் பிறகு கி.பி. 804-ல் அவன் துங்கபத்திரை ஆற்றங்கரையிலுள்ள ராமேஸ்வரம் என்னும் புனித ஸ்தலத்தில் முகாமிட்டிருந்தான் என்ற செய்தியை சஞ்சன் செப்பேடுகள் மூலம் அறிகிறோம். கங்கப் படைகள் முறியடிக்கப்பட்டு, படைவீரர்கள் பலரும், கங்க அரச வம்சத்தினர் பலரும் கொல்லப்பட்டனர். அங்கிருந்து

கோவிந்தனின் படைகள் காஞ்சிபுரம் நோக்கிச் சென்று, பல்லவப் படைகள் முறியடிக்கப்பட்டு காஞ்சிபுரமும் கைப்பற்றப்பட்டது. பாண்டிய, கேரள அரசர்களும் கோவிந்தனுக்குப் பணிந்தனர். எருதுச் சின்னத்தைத் தாங்கிய பல்லவர் கொடியும், மீன் சின்னத்தைத் தாங்கிய பாண்டியக் கொடியும், சோழர்களின் புலிக்கொடியும், கேரளர்களின் விற்கொடியும், யானைச் சின்னம் தாங்கிய கங்கர்கள் கொடியும் கைப்பற்றப்பட்டன. தென்புல அரசர்கள் மீது கோவிந்தன் பெற்ற வெற்றி இலங்கை அரசன் மனத்தில் அச்சத்தை ஏற்படுத்தியது என்றும், கோவிந்தனை எதிர்த்துப் போரிடுவது இயலாது என்று உணர்ந்த இலங்கை அரசன் தானுகவே கோவிந்தனின் நட்பை நாடினுனென்றும், அவனுக்கு உவ்கையளிக்கும் வகையில் தன்னுடைய சிலை ஒன்றையும், தன் முதலமைச்சன் சிலை ஒன்றையும் கோவிந்த னுக்குப் பரிசாக அளித்தான் என்றும் சஞ்சன் செப்பேடுகள் கூறுகின்றன. தன்னுடைய பரந்த செல்வாக்கைத் தன் மக்களுக்கு உணர்த்தும் வகையில் இச் சிலைகளைக் கோவிந்தன் மான்யகேட நகரத்துச் சிவன் கோயில் ஒன்றில் வெற்றிச் சின்னமாக அமைத் தான்.

வேங்கிச்சாளுக்கியர்களுக்கும் கோவிந்தனுக்குமிடையே நில விய உறவை அடுத்து ஆராயலாம். நான்காம் விஷ்ணுவர்த் தனன் உயிருடன் இருந்தவரையில் இவ்விரு அரசுகளிடையே நட்புறவு நீடித்தது. கி.பி. 799-ல் விஷ்ணுவர்த்தனன் இறக்கவே அவனுடைய மகன் இரண்டாம் விஜயாதித்தன் வேங்கி அரியணை யிலமர்ந்தான். இந்த அரசன் ராஷ்டிரகூட மேலாண்மையை ஏற்றுக்கொள்ள மறுத்து, கோவிந்தனுக்கு எதிராகக் கிளர்ச்சி களில் ஈடுபட்டான். வேங்கிச் சாளுக்கிய விவகாரங்களில் தலையிட கோவிந்தனுக்கு ஒரு நல்ல வாய்ப்பு கிடைத்தது. விஜயாதித்யன் உடன் பிறந்தவனுன பீமசாலுக்கி என்பவன் வேங்கி அரியணைக்கு உரிமை கொண்டாடினுன். அவன் கோவிந்தனுடைய உதவியை நாடினுன். இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு பீம சாலுக்கிக்கு ஆதரவாக ஒரு பெரும் படையுடன் கோவிந்தன் வேங்கிமீது படையெடுத்துச் சென்றுன். விஜயாதித்யன் போரில் தோற்கடிக்கப்பட்டு, பீமசாலுக்கி வேங்கி அரியணையிலமர்த்தப் பட்டான். பீமசாலுக்கி கோவிந்தனுக்கு அடங்கிய பற்றுறுதி மாறுத சிற்றரசனுக ஆட்சி புரிந்தான்.

கோவிந்தனின் ஆட்சியின் இறுதி ஆண்டுகள் அமைதியாகக் கழிந்தன. அவன் ஆதிக்கத்தை எதிர்க்கும் ஆற்றல் பெற்ற அரசன் இந்தியாவிலேயே எவரும் இல்லை என்ற நிலை உருவாக்கப்

பட்டதால் மேலும் போர்கள் புரிவதற்கான அவசியம் ஏற்பட வில்லை. வாரிசுரிமைச் சிக்கல்கள் ஏற்படாமல் இருப்பதற்கான நடவடிக்கைகளையும், தன் மகன் அமோகவருஷனுக்கு அரச பதவிக்குத் தேவையான பயிற்சியை அளிக்கும் பொறுப்பையும் கோவிந்தன் இக் காலப் பகுதியில் மேற்கொண்டான். குஜராத்-மாளவ மாநிலத்தின் அரசப் பிரதிநிதியாக இருந்த கோவிந்தன் தம்பி இந்திரன் இறந்துவிடவே அப் பதவிக்கு அவனுடைய மகன் கார்க்கன் அமர்த்தப்பட்டான். அமோகவருஷன் இளைஞன் ஆனதால், அவன் பட்டம் எய்தினால் காப்பாளன் தேவை என்பதை உணர்ந்த கோவிந்தன் கார்க்கனைக் குஜராத்திலிருந்து திருப்பி அழைத்து அவனிடம் இப் பொறுப்பை ஒப்படைத்தான். இந்த ஏற்பாடுகளையெல்லாம் முன்னெச்சரிக்கையாகச் செய்து முடித்தவுடன் கி.பி. 814ல் கோவிந்தன் இறந்தான்.

## மதிப்பீடு

ராஷ்டிரகூட அரசர்களில் திறமைமிக்க அரசன் மூன்றும் கோவிந்தன் ஆவான், தன் தந்தை துருவனை முன் மாதிரியாக வைத்துக்கொண்டு அவனைப் பின்பற்றியதோடு மட்டுமல்லாமல் அவனை மிஞ்சும் வகையில் பல அரிய சாதனைகளைக் கோவிந்தன் புரிந்தான். அரசியல் முன்னோக்கிலும், அரசியல் தந்திரத்திலும். போர்த்திறமையிலும், செயலாற்றும் திறனிலும் அவன் தன் தந்தை துருவனை விட உயர்ந்தவனாகக் காணப்பட்டான். தன் சாதனைகள் பலவற்றின் மூலம் ராஷ்டிரகூட வம்சத்தின் பெருமையை உயர்த்தினான். கன்னோசி முதல் கன்யாகுமரி வரையிலும், சௌராஷ்டிரம் முதல் வங்காளம் வரையிலும் எல்லா நாடுகளும் அவன் படை வலிமையைக் கண்டு அஞ்சி, அடி பணிந்தன. வட இந்தியாவின் தலைமைக்குப் போட்டியிட்டுக்கொண்டு இருந்த நாகபட்டன், தருமபாலன் ஆகிய இருவரின் செருக்கையும் குலைத்துத் தன் செல்வாக்கை வட இந்தியாவில் ஏற்படுத்தினான். வேங்கி அரசும் தெற்கே திராவிட அரசும் அவன் படைவலிமையைக் கண்டு அஞ்சி அடிபணிந்தன. தெற்கில் கங்க நாட்டினையும் வடக்கில் மாளவத்தையும் கைப்பற்றி ராஷ்டிரகூடப் பேரரசுடன் இணைத்ததன் மூலம் ராஷ்டிரகூடப் பேரரசின் பரப்பைக் கோவிந்தன் விரிவுபடுத்தினான். கோவிந்தன் அரியணை எய்தியபின் ராஷ்டிரகூடர்களின் வலிமை எவராலும் வெல்லமுடியாத நிலையை அடைந்தது என்ற கோவிந்தனின் சாஸனங்களின் கூற்று கவிஞர்களின் கற்பனையில் எழுந்த எண்ணங்கள் அல்ல, நூற்றுக்கு நூறு உண்மை என்பது அவனுடைய மேலே கூறப்பட்ட அருஞ் செயல் களிலிருந்து நன்கு புலப்படும். ராஷ்டிரகூட ஆட்சியின்

பெருமை அவன் காலத்தில் உயர் நிலையை அடைந்தது. ராஷ்டிர கூடப் பேரரசின் வடக்கு எல்லையைப் பாதுகாக்கும் நோக்கத்துடன் அவன் குஜராத் மாநிலத்தை உருவாக்கி அதைத் திறமை மிக்க அரசப் பிரதிநிதிகளின் ஆட்சிக்குட்படுத்தி, பிற்காலக் குஜராத் ராஷ்டிரகூடக் கிளை மரபு தோன்ற வழிவகுத்தது, அவனுடைய அரசியல் அறிவுக் கூர்மையைப் புலப்படுத்துகிறது. அவனுடைய மேலே கூறப்பட்டுள்ள சாதனைகள் அவன் வீரத்தையும், மன உரத்தையும், செயலாற்றும் திறனையும் வெளிப்படுத்துகின்றன. தன் பகைவர்கள் பலரா, சிலரா, அவர்கள் வலிமைமிக்கவர்களா, வலிமையற்றவர்களா, என்பதைப்பற்றியெல்லாம் கவலைப் படாமல் போரில் நேரிடையாக ஈடுபடும் பண்புடைய கோவிந்தனை அவனுடைய சாஸனங்கள் அர்ஜுனனுடன் ஒப்பிடுவது பொருத்த முடையது ஆகும். 'கீர்த்தி நாராயணன்' என்று அவன் சூட்டிக் கொண்ட பட்டம் முற்றிலும் பொருத்தமுடையதாகவே இருக்கின்றது என்பதில் ஐயப்பாடு இருக்க முடியாது. ஜெகத்துங்கன் 'ஜெகத்ருத்ரன்' 'பிரபூதவர்ஷன்' 'ஸ்ரீவல்லபன்' போன்ற பல பட்டங்களையும் அவன் சூட்டிக்கொண்டான்.

## முதலாம் அமோகவருஷன்[1] (கி.பி. 814-880)

மூன்றும் கோவிந்தனின் மகன் அமோகவருஷன் பட்டமெய்தியபோது அவனுக்குப் பதினான்கு வயதே நிரம்பியிருந்தது.[2] நிருபதுங்கன் என்ற மற்றொரு பெயரும் அவனுக்கு இருந்தது. இளைஞன் ஆனதால், அரச காரியங்களைக் கவனிக்க குஜராத்தில் அரசப் பிரதிநிதியாக இருந்த கார்க்கனைக் காப்பாளனாக நியமித்து அவனை அரசுப் பொறுப்புகளை ஏற்றுக்கொள்ளும்படி கோவிந்தன் ஏற்பாடுகள் செய்திருந்தான் என்பதை முன்னரே குறிப்பிட்டுள்ளோம். அவன் ஆட்சியின் முதலிரண்டு ஆண்டுகள் தொல்லைகள் ஏதுமின்றிக் கழிந்தன. ஏனெனில், கார்க்கனின் 816-ஆம் ஆண்டு நவசாரி சாஸனம் நாட்டில் எந்தவிதக் குழப்பமும் இருந்ததாகக் குறிப்பிடவில்லை. கி.பி. 817ஆம் ஆண்டிலிருந்து தொடர்ந்து பல இன்னல்கள் தோன்றின. ஒரு பரந்த பேரரசை ஆளும் பொறுப்பு ஓர் இளைஞனிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது என்ற

[1] சர்வன் என்பது அவனுடைய இயற்பெயர். அமோக வருஷன் என்ற பெயர் எல்லாரும் நன்கு அறிந்த பெயராகையால், அவனுடைய பட்டப் பெயராலேயே அவனை நாம் குறிப்பிடலாம்.

[2] மூன்று உலகங்களையும் ஆளும் பொறுப்பை ஏற்கக்கூடிய மகனைக் கோவிந்தன் பெற்றிருந்தான் என்று சஞ்சன் செப்பேடுகள் கூறுவதிலிருந்து அமோக வருஷன் ஆளும் பொறுப்பை ஏற்கும் வயது நிரம்பியவனாக இருக்கவேண்டுமென்று கருதலாம். ஆனால், இக்கூற்று உண்மை நிலையைப் பிரதிபலிப்பதாக இல்லை. அதே சாஸனத்தின் மற்றொரு பகுதியில் அவன் இளைஞன் என்பதைக் குறிக்கும் செய்திகள் உள்ளன.

சூழ்நிலையும், அப்பேரரசின் அலுவல்களைக் கவனிக்கவும், கட்டுப் படுத்தவும் தகுதியும், ஆற்றலும் பெற்ற எவரும் இல்லை என்ற ஒரு சூழ்நிலையும் இதுவரையில் அடங்கியிருந்த பகைவர்களுக்குக் கிளர்ச்சிகளில் ஈடுபடும் துணிவைக்கொடுத்தது. தங்கள் உரிமைகள் புறக்கணிக்கப்பட்டதால் அதிருப்தி அடைந்த அரச குடும்பத் தினரும், சிற்றரசர்களும், அரசாங்க அதிகாரிகளும், ராஷ்டிரகூட மேலாதிக்கத்தை ஏற்க விருப்பம் இல்லாத கங்கர்களும், ராஷ்டிர கூட அரசர்களின் தலையீட்டை வெறுத்த வேங்கிச் சாளுக்கியர் களும் இப்பகைவர்கள் ஆவர். இவர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து அமோகவருஷனின் ஆதிக்கத்தைக் குலைக்க ஒரு சதித்திட் டத்தைத் தீட்டினர். இப் பேராபத்திலிருந்து ராஷ்டிரகூட அரசைக் காப்பாற்றுவதில் கார்க்கன் அமோகவருஷனுக்கு உறு துணையாகவிருந்தான். குஜராத் ராஷ்டிரகூடக் கிளை மரபைச் சேர்ந்த சாஸனங்கள் யாவும் கார்க்கனுக்கு இந்தப் பெருமையை அளிக்கின்றன. அமோக வருஷனின் சஞ்சன் செப்பேடுகள் இப் பெருமைக்குரியவன் பாதாள மல்லன் என்பவன் என்று கூறு கின்றன. கார்க்கனின் சூரத் செப்பேடுகளும் கார்க்கன்தான் இதற்குக் காரணம் என்று கூறுகின்றன. ராஷ்டிரகூடச் சாஸனங் களில் ஏன் இந்த முரண்பாடு காணப்படுகின்றது? உண்மை யிலேயே இது முரண்பாடு அன்று. ஏனெனில் பாதாள மல்லன் என்பவன் ராஷ்டிரகூட ஆதிக்கத்துக்குட்பட்ட ஒரு சிற்றரசனாக இருக்கலாம். அவன் அமோகவருஷனுக்கு உதவுவதில் கார்க்க னுடன் ஒத்துழைத்திருக்கக்கூடும். அல்லது பாதாள மல்லன் என்பது கார்க்கனுடைய பட்டப்பெயராக இருக்கலாம். அவ் வாறெனில் கார்க்கன், பாதாளமல்லன் என்ற இரு பெயர்களும் ஒருவனையே குறிக்கும்.

அமோக வருஷனின் ஆட்சியின் தொடக்கத்தில் உருவாகிய இந்தக் குழப்பநிலையைச் சிறிது விரிவாக ஆராயலாம். இக் குழப் பத்தை விளைவித்தவர்களின் பெயர்கள் எங்கும் குறிப்பிடப்படா விட்டாலும், அரசன் உறவினர்களும், அரசாங்க அதிகாரிகளும், சிற்றரசர்களும், பரம்பரைப் பகைவர்களான கங்கர்கள், வேங்கிச் சாளுக்கியர்கள் போன்றவர்களுந்தான் இந்த நிலைக்குக் காரணம் என்பதை நாம் ராஷ்டிரகூடச் செப்பேடுகளிலிருந்து அறிய முடி கின்றது. அரசனுக்கெதிராகக் கிளர்ச்சி செய்த கலகக்காரர்கள் தற்காலிக வெற்றி பெற்று, அமோகவருஷன் நிலைமையைச் சமாளிக்க முடியாமல் நாட்டைவிட்டு ஓடிவிடவே, ராஷ்டிரகூடர் களின் பெருமை ஒரு குறுகிய காலத்திற்கு ஒளிமங்கிக்கிடப்பதை நாம் காணப்போகிறோம். இந்த அவல நிலைக்கு முடிவு கட்டிக்

கலகக்காரர்களை ஒடுக்கி மீண்டும் அமோகவருஷனை அரியணையி லமர்த்திய பெருமை கார்க்கனைச் சாரும். இந்த நிகழ்ச்சிகள் எப் பொழுது நிகழ்ந்திருக்கக் கூடும்? கி.பி. 816ல் வெளியிடப்பட்ட நவசாரிச் செப்பேடுகளில் இந் நிகழ்ச்சிகள் பற்றி ஒன்றுமே கூறப் படவில்லை என்பதனால் அந்த ஆண்டிற்குப் பிறகுதான் இந் நிகழ்ச் சிகள் நடந்திருக்க வேண்டும். கார்க்கனின் மகன் துருவனின் கி.பி. 835ஆம் ஆண்டு பரோடாச் செப்பேடுகள் இக் குழப்பங்கள் ஒடுக்கப்பட்ட செய்தியைக் குறிப்பிடுகின்றன. கி. பி. 821-ஆம் ஆண்டில் வெளியிடப்பட்ட கார்க்கனின் சூரத் சாஸனம் இந் நிகழ்ச்சிகள் நடந்த காலத்தை நிர்ணயிப்பதற்கு உதவியாக உள்ளது. கார்க்கனுடைய முயற்சியால் அமோகவருஷன் ராஷ்டிரகூட அரியணைக்கு மீட்கப்பட்ட செய்தியை இச் சாஸனம் கூறுகிறது. எனவே கி.பி. 816-க்கும் கி.பி. 821-க்கும் இடைப் பட்ட காலப்பகுதியில் இக் குழப்பங்கள் நிகழ்ந்திருக்க வேண்டும், அவை மூன்று அல்லது நான்கு ஆண்டுகள் நீடித்திருக்கலாம். சஞ்சன் செப்பேடுகள் இந் நிகழ்ச்சிகளை வருணிக்கும் விதத்தி லிருந்து அவை ஒரு சில ஆண்டுகளுக்கு நீடித்திருந்தன என்று ஊகிக்கலாம்.

அமோகவருஷனுக்குத் தொல்லையை விளைவித்தவர்கள் ராஷ்டிரகூடர்கள் என்று சாஸனங்கள் குறிப்பிடுவதால், அரச குலத்தைச் சேர்ந்தவர்களே இக் கலகங்களுக்குக் காரணமாக இருந்தனர் என்று நாம் கருதலாம். அரசகுலத்தில் தொல்லை கொடுத்தவர்கள் யார்? ஸ்தம்பனுடைய பிள்ளையும், அமோக வருஷனுடைய ஒன்று விட்ட சகோதரனுமான சங்கரகணன் என்பவன் இவர்களுள் ஒருவனாக இருக்கலாம். தன் தந்தைக்குப் பிறகு கங்க நாட்டின் அரசப் பிரதிநிதியாக அவன் நியமிக்கப் படாததால் அதிருப்தி அடைந்த சங்கரகணன் இக் கலகங் களுக்குக் காரணமாக இருந்திருக்கவேண்டும். ராஷ்டிரகூட வம்சத்து மூத்த கிளையைச் சேர்ந்தவன் என்பதால் அமோக வருஷனைவிட அவனுக்குத்தான் ராஷ்டிரகூட அரியணை மீது உரிமை அதிகம் என்று கருதிய சில அதிகாரிகள் அவனுக்கு உதவி யிருக்கக்கூடும். மேலும் அமோகவருஷனின் இளமைப் பரு வத்தில் அரசாங்கப் பொறுப்பை ஏற்றுக் காப்பாளராகப் பணி யாற்ற குஜராத்திலிருந்து கார்க்கன் வரவழைக்கப்பட்டது, மான்யகேட்த்திலேயே இருந்த அரசனின் நெருங்கிய உறவினர் களுக்கு அதிருப்தியையும் ஏமாற்றத்தையும் அளித்திருக்கலாம். அவர்களும் இக் கலகத்தில் பங்கு பெற்றிருக்கக் கூடும். இது போலப் பல்வேறு காரணங்களினால் அதிருப்தி அடைந்திருந்த பல்வேறு சக்திகளும், இக் குழப்பங்களுக்குக் காரணமாக இருந்

திருக்க வேண்டும். அவர்களுள் வேங்கி அரசன் இரண்டாம் விஜயாதித்தியன் குறிப்பிடத்தக்கவன். சில ஆண்டுகளுக்கு முன்பு கோவிந்தன் வேங்கி நாட்டின் மீது படையெடுத்துச் சென்று விஜயாதித்யனைப் பதவியிலிருந்து நீக்கி அவன் தம்பி பீமனை வேங்கி அரியணையிலமர்த்தினன் என்பதை முன்பு கூறியுள்ளோம். ராஷ்டிரகூட ஆதரவை நம்பியே ஆண்டுகொண்டிருந்த பீமனுக்கு, அமோகவருஷன் ஆட்சியில் அவ் வுதவி கிடைக்காததால், விஜயாதித்யன் அவனை எளிதில் பதவியிலிருந்து அகற்றிவிட்டு வேங்கி அரியணையைக் கைப்பற்றினன். வேங்கியில் தன்நிலைமையை உறுதிப்படுத்திக்கொண்டு, தன் துயருக்கெல்லாம் காரணமான ராஷ்டிரகூடர்களுக்கு எதிராகக் கலகங்கள் விளைவிப்பதில் விஜயாதித்யன் ஒரு முக்கியப் பங்கேற்றான். பன்னிரண்டு ஆண்டுகள் அவன் ராஷ்டிரகூடர்களுடன் போரிட்டான் என்று சாளுக்கியப் பொறிப்புகள் கூறுகின்றன. ராஷ்டிரகூடச் சாஸனங்களும் வேங்கிச் சாளுக்கியர்களால் அமோகவருஷனுக்குத் தொல்லைகள் ஏற்பட்டன என்பதைக் கூறுகின்றன. எனவே அமோகவருஷனுக்கு எதிராக நடந்த கலகங்களில் விஜயாதித்யனுக்கு ஒரு முக்கியப் பங்கு உண்டு என்பது நன்கு விளங்கும். கலகக்காரர்கள் எல்லாரும் ஒன்று சேர்ந்து, அரசனுக்கு உண்மையாக ஊழியம் செய்த அதிகாரிகளைக் கொன்றும், நாட்டு மக்களைத் துன்புறுத்தியும் நாட்டில் படுகள ஆட்சியை ஏற்படுத்தினர். நிலைமையைச் சமாளிக்க முடியாமல் அமோகவருஷன் நாட்டை விட்டே ஓடிவிட்டான். ஆனல் கலகக்காரர்களின் இந்த வெற்றி நிரந்தர வெற்றியன்று. ஏனெனில் விரைவிலேயே கி.பி. 821-ல் கார்க்கன் கலகக்காரர்களை அடக்கி அமோகவருஷனை ராஷ்டிரகூட அரியணையில் மீண்டும் அமர்த்தினன்.

### அமோகவருஷனும் வேங்கிச் சாளுக்கியர்களும்

கலகங்கள் ஒடுக்கப்பட்ட போதிலும், வேங்கி, கங்க நாடுகளில் இன்னும் சகஜ நிலை மீட்கப்படவில்லை. அந் நாட்டவர் ராஷ்டிரகூடர்களுக்கு இன்னும் தொல்லைகள் கொடுக்கத் தயாராக இருந்தனர். எனவே அமோகவருஷன் விழிப்புடன் செயல்பட வேண்டியிருந்தது. வேங்கிஅரசன் இரண்டாம் விஜயாதித்யன் ராஷ்டிரகூடர்களோடு பன்னிரண்டாண்டுகள் போரிட்டு, நூற்றெட்டுப் போர்களில் அவர்களைத் தோற்கடித்தான் என்று சாளுக்கிய சாஸனம் ஒன்று குறிப்பிடுகின்றது. இப் போரின் முற்பகுதி கோவிந்தன் காலத்தில் நடந்தது. அமோகவருஷனுக்கும் விஜயாதித்யனுக்கும் நடந்த போர் பிற்பகுதியைச் சார்ந்தது. இப் போரில் விஜயாதித்யன் வெற்றி

பெற்றிருக்க வேண்டும். ஆனால் இப் போரின் இறுதிக் கட்டத்தில் அமோகவருஷன் வேங்கிச் சாளுக்கியர்களை வென்றிருக்க வேண்டும் என்பது பிற்கால ராஷ்டிரகூடச் சாஸனங்களின் மூலம் தெரிய வருகின்றது. அமோகவருஷன் வேங்கி அரசனின் வழிபாட்டிற் குரியவனானான் என்று அவனுடைய சிரூர் சாஸனம் கூறுகின்றது. நான்காம் கோவிந்தனின் சங்கிலிச் செப்பேடுகளில் விங்கவல்லி என்ற போர்க்களத்தில் அமோகவருஷன் சாளுக்கியர் மீதுபெரும் வெற்றி பெற்றான் என்ற செய்தி காணப்படுகின்றது. ஆனால் அமோகவருஷனால் தோற்கடிக்கப்பட்ட சாளுக்கிய அரசன் யார் என்பதை நிச்சயமாகக் கூற முடியாது. அமோகவருஷன் ஆட்சி செய்த அறுபத்து ஆறு ஆண்டுகளில் நான்கு சாளுக்கிய அரசர்கள் ஒருவர் பின் ஒருவராக அரியணையிலமர்ந்தனர். அவர்களில் எந்த அரசன் விங்கவல்லிப் போரில் தோற்றவன் என்பதைக் கூற இயலாவிட்டாலும், அவ் வரசன் இரண்டாம் விஜயாதித்யனாகவே இருக்கக்கூடும். சுமார் கி.பி. 830-ல் இப் போர் நடந்திருக்கக் கூடும். மூன்றாம் கிருஷ்ணனுடைய கர்ஹட் செப்பேடுகளும், இரண்டாம் கார்க்கனின் கர்தா செப்பேடுகளும் அமோகவருஷன் வேங்கிச் சாளுக்கியர் மீது பெற்ற வெற்றியைப் பற்றிக் குறிப்பிடு பிடுகின்றன. இவ் வெற்றியின் விளைவாக அமோகவருஷன் வேங்கிச் சாளுக்கிய அரசை மீண்டும் தன் ஆதிக்கத்திற்கு உட் படுத்தியிருக்க வேண்டும். இந் நிலை வெகுநாட்களுக்கு நீடிக்க வில்லை. ஏனெனில் சுமார் கி.பி. 844-ல் இரண்டாம் விஜயாதித்யனின் பேரன் குணக விஜயாதித்யன் சாளுக்கிய அரசை ராஷ்டிர கூடர்கள் ஆதிக்கத்திலிருந்து மீட்டதாகச் சாளுக்கியச் சாஸனங்கள் குறிப்பிடுகின்றன. அப்பொழுது அமோகவருஷன் குஜராத்தை ஆண்டு கொண்டிருந்த ராஷ்டிரகூடக் கிளை மரபைச் சேர்ந்தவர்களுடன் ஒரு போரில் ஈடுபட்டிருந்ததால் வேங்கி தன் பிடியிலிருந்து நழுவிப் போவதை, அவனால் தடுக்க இயலவில்லை போலும்.

### அமோகவருஷனும் கங்கர்களும்

கோவிந்தனுடைய ஆட்சியில் இரண்டாம் சிவமாரன் மீண்டும் கங்க நாட்டு அரசனாக ஆக்கப்பட்டான் என்பதைப் பார்த்தோம். அமோகவருஷனுடைய ஆட்சியின் தொடக்க ஆண்டுகளில் சிவமாரன் ராஷ்டிரகூட ஆதிக்கத்தை ஏற்றுக் கொண்டு அவர் களிடம் உண்மையாக நடந்து கொண்டான். ஆனால் சுமார் கி.பி. 816-ல் அவன் ராஷ்டிரகூட ஆதிக்கத்தை எதிர்த்துக் கலகம் செய்தான். இருப்பினும் இக் கலகம் ஒடுக்கப்பட்டது.

சிவமாரனுக்குப் பிறகு பட்டமெய்திய ராஜமல்லன் கங்க நாட்டை ராஷ்டிரகூடர்களின் பிடியிலிருந்து விடுவிக்க முயற்சி செய்தானென்றும், அதில் வெற்றி பெற்ருனென்றும், வராஹ அவதாரம் எடுத்து விஷ்ணு பகவான் இந்த உலகத்தை மீட்டது போலக் கங்க அரசன் தன் நாட்டை ராஷ்டிரகூடர்களிடமிருந்து மீட்டான் என்றும் கங்க சாஸனங்கள் கூறுகின்றன. ராஜமல்லன் நொளம்பர்களுடன் திருமண உறவுகளை ஏற்படுத்திக் கொண்டு அவர்கள் உதவியுடன் கங்க நாட்டை ராஷ்டிரகூட ஆதிக்கத்தி லிருந்து மீட்டான். ஆனுல் அவனுல் கங்க நாடு முழுவதையும் விடுவிக்க முடியவில்லை, தென்பகுதியை மட்டும் விடுவித்துத் தன் ஆட்சிக்கு உட்படுத்திக் கொண்டான். கங்க நாட்டின் வடபகுதி தொடர்ந்து ராஷ்டிரகூட ஆட்சியின் கீழ் இருந்தது. அமோக வருஷனின் திறமை மிக்க படைத்தலைவனுன பங்கேசன் அப் பகுதியை ஆண்டு வந்தான். வடபகுதியையும் ராஷ்டிரகூடர் களிடமிருந்து மீட்க ராஜமல்லனுல் மேற்கொள்ளப்பட்ட முயற்சிகள் வெற்றி பெறவில்லை. இதற்கிடையில் அமோக வருஷனுக்கு அவன் உறவினர்களான குஜராத் சாளுக்கியர்களால் தொல்லை ஏற்பட்டதால் அதை ஒடுக்க அமோகவருஷன் பங்கேசனைக் கங்க நாட்டிலிருந்து அழைத்துக் கொண்டான். பங்கேசன் கங்க நாட்டை விட்டுச் சென்றவுடன் ராஜமல்லனின் மகன் நீதிமார்க்கன் கங்க நாடு முழுவதையும் மீட்கும் முயற்சியை மேற்கொண்டான். வடபகுதிகளையும் மீட்டுத் தன் ஆட்சிக்கு உட்படுத்திக் கொண்டான். இதைக் கண்டு மனம் பொருத அமோகவருஷன் கங்க அரசனை ''அடக்கும் பணியைக்'' குணக விஜயாதித்யனிடம் ஒப்படைத்தான். கங்க மன்னனேடு நொளம்ப நாட்டு அரசன் முதலாம் நொளம்பாதிராஜனும் சேர்ந்து கொண்டதால், குணக விஜயாதித்யன் முதலில் நொளம்ப நாட்டின் மீது படையெடுத்துச் சென்று, அவ் வரசனைப் போரில் வென்ருன். இவ் வெற்றி கங்கவாடிக்குச் செல்லும் வழியைத் திறந்து விட்டது. குணக விஜயாதித்யன் எளிதில் கங்க நாட்டில் நுழைந்து கங்கப் படைகளைத் தோல்வியுறச் செய்தான். வேறு வழியின்றி நீதி மார்க்கனுடன் சமாதானம் செய்து கொண்டான். இந்த அரசியல் உறவு ஒரு திருமண உறவின் மூலம் உறுதிப் படுத்தப்பட்டது. அமோகவருஷன் தன் மகள் சந்திரோ பலப்பா (Chand ro bhalabba) வை நீதிமார்க்கன் மகன் பூது கனுக்குத் திருமணம் செய்வித்தான். இதற்குப் பிறகு இவ்விரு நாடுகளின் உறவில் ஒரு புதிய சகாப்தம் தொடங்கியது. இவ்விரு நாடுகளிடையே நெருங்கிய நட்புறவு வளரத் தொடங்கியது.

## அமோகவருஷனும் பல்லவர்களும்

அமோகவருஷனின் சமகாலத்துப் பல்லவ அரசன் தெள்ளாறெறிந்த நந்திவர்மன் என்ற புகழ் பெற்ற மூன்றும் நந்திவர்மன் என்பவன். இவன் தன் ஆட்சில் ஸ்ரீமாற பாண்டியனோடு போரிட நேர்ந்தது. வடஆர்க்காடு மாவட்டத்தில் தெள்ளாறு என்னுமிடத்தில் நடந்த போரில் நந்திவர்மன் அவனைத் தோல்வியடையச் செய்தான். இச் சூழ்நிலையில் அவன் ராஷ்டிரகூடர்களுடன் பகைமையை வளர்த்துக் கொள்ள விரும்பவில்லை. எனவே அவன் அமோகவருஷனின் நட்புறவை நாடினான். தெள்ளாற்றுப் போரில் நந்திவர்மனுக்கு அமோகவருஷன் பேருதவியாக இருந்தான். இந்த நட்புறவு ஒரு திருமண உறவின் மூலம் உறுதிபடுத்தப்பட்டது. அமோகவருஷனின் மகள் சங்கை என்பவள் நந்திவர்மனை மணந்து கொண்டாள்.

## அமோகவருஷனும் குஜராத் சாளுக்கியர்களும்

சாளுக்கியர்களாலும், கங்கர்களாலும் ஏற்பட்ட தொல்லைகள் தீர்ந்தபிறகும் அமோகவருஷனின் ஆட்சியின் இறுதி ஆண்டுகள் அமைதியில்லாமல் கழிந்தன. புதிய தொல்லைகள் உருவாயின. அவைகளுள் ஒன்று சற்றும் எதிர்பாராத இடத்திலிருந்து தோன்றியது. குஜராத்தை ஆண்டு கொண்டிருந்த ராஷ்டிரகூட மரபின் மற்றொரு கிளையினர் அமோகவருஷனுக்கு எதிராகக் கலகங்கள் செய்து, அடுத்த இருபத்தைந்து ஆண்டுகளுக்கு இவ்விரு கிளையினரிடையே ஓயாத போர் நடந்தது. இந்தக் குஜராத் ராஷ்டிரகூடக் கிளையின் வரலாற்றை இங்குச் சுருக்கமாக ஆராய்வது பயனுடையதாகும். மூன்றும் கோவிந்தன் ஆட்சியில், குஜராத் கிளை மரபு கோவிந்தன் தம்பி இந்திரனால் தோற்றுவிக்கப்பட்டது. இந்திரன் குஜராத் மாளவத்தின் அரசப் பிரதிநிதியாக நியமிக்கப்பட்டான். மூன்றும் கோவிந்தனின் வட இந்தியப் படையெடுப்பின் பொழுது இந்திரன் ஆற்றிய அரும்பணிகளை நாம் முன்பே ஆராய்ந்திருக்கின்றோம். கூர்ஜர அரசன் நாகபட்டன் தக்காணத்தின் மீது படையெடுத்து வரா வண்ணம் தடுக்க விந்திய எல்லையைப் பாதுகாக்கும் பணியை இந்திரன் வெற்றிகரமாகச் செய்து முடித்தான். நாகபட்டனையும், தர்மபாலனையும் போரில் வென்று வட இந்தியாவில் அவர்கள் ஆதிக்கத்தை ஒழிக்கும் பணியில் கோவிந்தனுடன் இந்திரன் ஒத்துழைத்தான். சுமார் கி.பி. 805-ல் இந்திரன் இறக்கவே, அவனுடைய மகன் தார்க்கன் அரசப் பிரதிநிதியாக நியமிக்கப்பட்டான். மூன்றும் கோவிந்தன் தன் ஆட்சியின் இறுதி ஆண்டுகளில் வாரிசுரிமைச் சிக்கல்களைத்

தவிர்ப்பதற்காகத் தன் மகன் அமோகவருஷனைத் தன் வாரிசாக அறிவித்ததோடு மட்டுமன்றி, அவன் இளைஞனதால் அவனுக்குக் காப்பாளனாக இருந்து அரசாங்கப் பணிகளில் உதவும் பொருட்டு கார்க்கனைக் குஜராத்திலிருந்து வரவழைத்து அவனிடம் அப் பொறுப்பை ஒப்படைத்தான். அமோகவருஷனின் இளமைப் பருவத்தில் ஏற்பட்ட குழப்பங்களையும், அவனுக்கெதிராக நடந்த கலகங்களையும் ஒடுக்கி, அமோகவருஷனை அவன் பகைவர்களிடமிருந்து காப்பாற்றி, நாட்டில் அவன் அதிகாரத்தை வலுப்பெறச் செய்து, காப்பாளனாகப் பணியாற்றிய கார்க்கனின் மகத்தான சாதனையாகும். சுமார் கி.பி. 812-813-ல் கார்க்கன் குஜராத்திலிருந்து இப் புதுப் பொறுப்பை ஏற்க மான்யகேடம் வந்திருக்க வேண்டும். கார்க்கனுக்கு வயது வந்த மகன் யாரும் இல்லாததால் குஜராத்தை ஆளும் பொறுப்பை அவன் தம்பி கோவிந்தன் ஏற்றான்.[1] கார்க்கன் சுமார் கி.பி. 812 முதல் 822 வரை மான்யகேடத்தில் தங்கியிருக்கக் கூடும். கி. பி. 824-ல் அவன் மீண்டும் அரசப்பிரதிநிதிப் பொறுப்பை ஏற்றுக் குஜராத்தைஆண்ட செய்தி அவன் பொறிப்புகள் மூலம் நமக்குக் கிடைக்கின்றன. கி. பி. 830 வரை அவன் குஜராத் அரசப் பிரதிநிதியாக ஆண்டிருக்க வேண்டும்.[2] கார்க்கனுக்குப் பிறகு அவன் மகன் முதலாம் துருவன் குஜராத் அரசப் பிரதிநிதியாகப் பதவி யேற்றான். கி.பி. 835 வரை அமோகவருஷனிடம் பற்றுறுதி குறையாத ஒரு சிற்றரசனாகவே அவன் ஆண்டு கொண்டிருந்தான் என்பது அவனுடைய கி. பி. 835-ஆம் ஆண்டுச் சாஸனம் ஒன்றிலிருந்து தெரிகிறது. இதற்குப் பிறகு குஜராத் ராஷ்டிரகூடக் கிளையினருக்கும், மான்யகேட ராஷ்டிரகூட மரபினருக்குமிடையே தீராப்பகை ஏற்பட்டு இருபத்தைந்து ஆண்டுகள் இரு குடும்பத்தினரும் ஓயாத சண்டையில் ஈடுபட்டிருந்தனர். இந்தப் பகைமைக்கான காரணம் என்ன என்பது தெளிவாக விளங்கவில்லை. குஜராத் கிளையினர், தனக்கு ஆற்றிய அருந்தொண்டுகளை அறவே மறந்து

[1] கார்க்கன் மான்ய கேடத்திலிருந்தபொழுது அவன் தம்பி கோவிந்தன் அவனுக்கெதிராகக் கலகம் செய்து பதவியைக் கைப்பற்றினன் என்னும் கருத்து ஏற்புடையதன்று. ஏனெனில் கோவிந்தனின் கி. பி. 827-ஆம் ஆண்டு கவி செப்பேடுகள் கார்க்கனைப்பற்றியும், அவன் நிர்வாகத்தைப்பற்றியும் மிக உயர்வாகவும், புகழ்ந்தும், கூறுகின்றன.

[2] கி. பி. 824-க்குப் பிறகு கார்க்கன் இறந்திருக்கக்கூடுமென்று கருதஇடமிருக்கின்றது. எவ்வாறெனில் அவன் மகன் துருவன் அரசப் பிரதிநிதியாகியிருக்கவேண்டும். அவன் இளைஞனதால் அவன் சிற்றப்பன் கோவிந்தன் காப்பாளனாக குஜராத்தை ஆண்டுகொண்டிருக்கவேண்டும். கி. பி. 827-ல் கோவிந்தனல் வெளியிடப்பட்ட கவி செப்பேடுகள் அவன் இந் நிலையிலிருந்தபொழுது வெளியிடப்பட்டவைகளாகும். கோவிந்தன் எப்பொழுதுமே குஜராத்தின் சட்ட பூர்வமான அரசப் பிரதிநிதியாக ஆளவேயில்லை. எனவேதான் குஜராத் ராஷ்டிரகூட வம்சாவளியில் அவனுடைய பெயர் இடம் பெறவில்லை.

அமோகவருஷன், கார்க்கன் இறந்த பிறகு அவனுடைய சந்ததியர்கள் மீது பகைமை கொண்டிருக்கலாம். அல்லது அமோகவருஷன் அன்று அரியணையில் இருப்பதற்கே காரணம் தன் தந்தை கார்க்கன்தான் என்ற இறுமாப்பில் துருவன் அமோகவருஷனை அவமதித்து அவன் ஆதிக்கத்தை ஏற்க மறுத்திருக்கக் கூடும். இவற்றில் எதுகாரணமாக இருந்தாலும், இவ்விரு அரச மரபினரிடையே பகைமை உணர்ச்சி வளர்ந்தது என்பதை மறுக்க முடியாது.

குஜராத் ராஷ்டிரகூட அரசர்கள் மூன்று தலைமுறையினர் (முதலாம் துருவன், அகாலவருஷன், இரண்டாம் துருவன்) வல்லபன் என்ற ஒரு பகைவனோடு போர் புரிந்த செய்தியை அவர்கள் சாஸனங்கள் குறிப்பிடுகின்றன. இப்போர் மான்யகேட ராஷ்டிரகூடர்களுடன் குஜராத் ராஷ்டிரகூடர்கள் நடத்திய போர் என்பதில் ஐயமில்லை. இப் போரில் முதலாம் துருவன் இறுதியில் தோல்வியடைந்து போர்க்களத்தில் கொல்லப்பட்டான். அவனைத் தொடர்ந்து அவன் மகன் அகாலவருஷன் கி. பி. 845-ல் பட்டமெய்தினன். அவனும் இந்த வல்லபனோடு போர் செய்து பெருமுயற்சியின் விளைவாகத் தன் பதவியை மீண்டும் பெற்றான். ஆனால் அவன் பெற்ற வெற்றி நீடித்து நிற்கவில்லை. அமோகவருஷனின் திறமைமிகு படைத்தலைவன் பங்கேயனிடம் மீண்டும் குஜராத் படைகள் தோற்கவே, அகாலவருஷனின் மகன் இரண்டாம் துருவன் தொடர்ந்து இப்போரை நடத்த வேண்டியதாயிற்று. இந்தச் சமயத்தில்தான் வட இந்தியாவில் குர்ஜரப் பிரதிஹார அரசன் முதலாம் போஜனின் எழுச்சியை நாம் காண்கிறோம். தன்னுடைய பாட்டனான நாகபட்டனை ராஷ்டிரகூட மூன்றாம் கோவிந்தன் போரில் வென்று சிறுமைப் படுத்தியதற்காக ராஷ்டிரகூடர்கள் மீது பழிவாங்கும் நோக்கத்துடன் அவன் தக்காணத்தின் மீது படையெடுக்கும் ஒரு திட்டத்தைத் தயாரித்துக் கொண்டிருந்தான். இப் படையெடுப்பு நேர்ந்தால் குஜராத் ராஷ்டிரகூடர்களும் பாதிக்கப்படுவது நிச்சயம். இரண்டாம் துருவனுக்குத் தனித்து நின்று குர்ஜரப் பிரதிஹாரப் படையெடுப்பைச் சமாளிக்க முடியும் என்ற நம்பிக்கை இல்லை. இப் படையெடுப்பைத் தடுக்க குஜராத் கிளையினருடைய உதவி இன்றியமையாதது என்பதை அமோகவருஷன் உணர்ந்தான். எனவே இரு கிளையினருக்கும் ஒருவருடைய உதவி மற்றவருக்கு இன்றியமையாதது என்ற ஒரு நிலை உருவாயிற்று. இச் சூழ்நிலையில் இவ்விருவருக்குமிடையே நடந்து கொண்டிருந்த போர் முடிவடைந்து நட்புறவு ஏற்படுவது சாத்தியமாயிற்று. சுமார் கி.பி. 860ல் இரண்டாம் துருவன் அமோகவருஷனின் மேலாதிக்

கத்தை ஏற்றுக்கொண்டு குஜராத் அரசப் பிரதிநிதியாகப் பதவி ஏற்றுக்கொண்டிருக்கவேண்டும்.[1] பிரதிஹார அரசன் போஜனின் படையெடுப்பு உண்மையிலேயே நடந்ததா என்பது நமக்குத் தெரியாது. ஆனால் இரண்டாம் துருவன் கி.பி. 867க்கு முன்பு போஜனைத் தனித்து நின்று எதிர்த்துப் போரில் வென்றதாகக் கூறிக் கொள்கிறான். இது மிகைப்படுத்தப்பட்ட கூற்றாகயிருக்கலாம். அமோகவருஷனின் உதவியோடு இவ் வெற்றியை அவன் அடைந்திருக்கக் கூடும்,

குஜராத் ராஷ்டிரகூடர்களுடன் போரிட்டதாகக் கூறப்படும் வல்லபன் யார் என்பது குறித்து வரலாற்றறிஞர்களிடையே கருத்து வேறுபாடுகள் உள்ளன. இந்த வல்லபன் பிரதிஹார அரசனை முதலாம் போஜனாக இருக்கக்கூடும் என்று ஒரு சிலர் கருதுகின்றனர். இக் காலப்பகுதியில் போஜன் மத்திய இந்தியா, வடக்கு குஜராத், கத்தியவார் பகுதியினை வெல்லும் பணியில் ஈடுபட்டிருந்ததால் குஜராத் ராஷ்டிரகூடர்களின் போர் இவ்வரசனோடு இருக்கலாம் என்று வாதிடப்படுகிறது. ராஷ்டிரகூடப் பொறிப்புகள் இவ்வரசனை வல்லபன் என்று அழைக்கின்றன. வல்லபன் என்ற பட்டப் பெயரை போஜன் சூட்டிக் கொண்டதாகத் தெரியவில்லை. எனவே குஜராத் ராஷ்டிரகூட அரசர்களுடன் போரிட்ட அரசன் போஜனாக இருக்க முடியாது. மேலும் வல்லபன் என்ற அரசனைத் தவிர இரண்டாம் துருவன் போஜனுடனும் போரிட வேண்டிய அவசிய மேற்பட்டது என்பதை நாம் மேலே கூறியுள்ளோம். ஆகவே இவ்விருவரும் வேறு வேறு அரசர்களாக இருக்கவேண்டும். வல்லபனைப் போஜன் என்று கருதுவது பொருந்தாது. கி. பி. 861-ஆம் ஆண்டைச் சேர்ந்த பரபலன் என்ற அரசனின் பதரிதூண் கல்வெட்டு (Pathari Pillar Inscriptions) ஒன்று மாளவத்தில், மற்றொன்று ராஷ்டிரகூடக் கிளை மரபு கி. பி. 9-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் ஆண்டு கொண்டிருந்த செய்தியைக் கூறுகின்றது. இம் மரபைச் சேர்ந்த அரசன் ஒருவன் கர்நாடகப் படையினை வென்று குஜராத் பகுதியைக் கைப்பற்றியதாகவும் இக் கல்வெட்டு கூறுகிறது. இச் செய்தியின் அடிப்படையில் குஜராத் ராஷ்டிரகூடர்களுடன் போரிட்டதாகக் கூறப்படும்

[1] இரண்டாம் துருவனுக்குப்பிறகு சுமார் கி. பி. 867-ஆம் ஆண்டுக்குப்பிறகு அவன் பிள்ளைகளில் ஒருவனான தந்திவர்மன் பட்டமெய்தினான். அவன் சுமார் கி. பி. 888-வரை ஆட்சி புரிந்தான். கி. பி. 888ல் அவன் மகன் கிருஷ்ண ராஜஅகாலவருஷன் அரியணையிலமர்ந்தான், இவனோடு குஜராத் ராஷ்டிரகூட கிளைமரபு முடிவடைகின்றது. இதற்குப்பிறகு இரண்டாம் கிருஷ்ணன் மூன்றும் இந்திரன் போன்ற அரசர்கள் காலத்தில் குஜராத், மான்யகேட ராஷ்டிரகூடர்களின் நேரடி ஆட்சிக்கு உட்படுத்தப் பட்டது.

வல்லபன் மாளவ ராஷ்டிரகூட மரபைச் சேர்ந்த ஓர் அரசனாக இருக்கலாமோ என்ற ஓர் ஐயப்பாடு எழுகிறது. ஆனால், மாளவ ராஷ்டிரகூடர்களுக்கும், குஜராத் ராஷ்டிரகூடர்களுக்கும் ஏற்பட்ட தொல்லைக்கும் எந்தவிதத் தொடர்பும் இருப்பதாகத் தெரியவில்லை. எனவே குஜராத் ராஷ்டிரகூடர்களோடு போரிட்டதாகக் கருதப்படும் வல்லபன் மான்யகேட ராஷ்டிரகூட அரசர்களுள் ஒருவனாகவோ அவர்கள் ஆதிக்கத்திற்குட்பட்ட ஒரு சிற்றரசனாகவோ இருக்க வேண்டும். குஜராத் ராஷ்டிரகூட மரபினருடன் ஒரு நீண்ட போரில் (மூன்று தலை முறை நீடித்த) ஈடுபடக்கூடிய வலிமையும் துணிவும் சிற்றரசர்களில் ஒருவருக்கு இருந்தது என்று கருதுவது பொருத்தமற்றது. ஆகவே, மான்யகேட ராஷ்டிரகூட மரபைச் சேர்ந்த ஓர் அரசன்தான் இந்த வல்லபன் என்பதில் சிறிதும் ஐயமில்லை. இந்த அரசன் முதலாம் அமோக வருஷனாக இருக்கவேண்டும். ஏனெனில் 'லட்சுமி வல்லபன்' 'பிரிதிவி வல்லபன்' போன்ற பட்டப் பெயர்களை அமோக வருஷன் சூட்டிக் கொண்டான் என்பதை ராஷ்டிரகூடச் சாஸனங்களிலிருந்து நாம் அறிகிறோம். இவனைத்தான் குஜராத் ராஷ்டிரகூடச் சாஸனங்கள் வல்லபன் என்று குறிப்பிடுகின்றனபோலும். குஜராத் கிளையைச் சேர்ந்த முதலாம் துருவனின் சந்ததிமார்களான இரண்டாம் துருவனின் பெகும்ரா சாஸனம், நந்திவர்மனின் குஜராத் செப்பேடுகள் போன்ற பொறிப்புகள் குஜராத் ராஷ்டிரகூட வம்சத்தின் மூன்று தலைமுறையினருடன் (முதலாம் துருவன், அகால வருஷன், இரண்டாம் துருவன்) போரிட்ட ராஷ்டிரகூட அரசன் ஒருவன்தான் என்று கூறுவதிலிருந்து அந்த அரசன் முதலாம் அமோகவருஷனாகத்தான் இருக்கவேண்டும் என்று கருதுவதில் தவறில்லை. ஏனெனில் இந்த மூன்று குஜராத் ராஷ்டிரகூட அரசர்களின்[1] சமகாலத்தவனாக இருந்த மான்யகேட அரசன் அமோகவருஷன்தான். மேலும் அமோகவருஷனின் கி. பி. 860ஆம் ஆண்டுக் கொன்னூர் செப்பேடுகள் அவன் ஆட்சியில் சிற்றரசர்களின் பொறாமையினால் பேரரசின் வடபகுதியில் தோன்றிய குழப்பங்களைப் பற்றிக் கூறுகின்றன. அமோக வருஷன் ஆட்சியில் அவன் மீது பொறாமைகொண்டு அவனுக்கெதிராகக் குழப்பங்கள் விளைவித்தவர்களாகக் கூறப்படும் சிற்றரசர்கள் குஜராத் ராஷ்டிரகூடர்களாகத்தான் இருக்க வேண்டும். எனவே மேலே கூறப்பட்ட செய்திகளிலிருந்து குஜராத் ராஷ்டிரகூடர்களுடன் போரிட்ட வல்லபன் என்பவன்

[1] A. S. Altekar - The Rashtrakutas and their times - Pages. 82 - 84.

மான்யகேட ராஷ்டிரகூட மரபைச் சேர்ந்த முதலாம் அமோக வருஷனாகத்தான் இருக்கவேண்டும் என்பது தெளிவாக விளங்கும்.

**அமோக வருஷனும் வட இந்திய அரசர்களும்**

அமோகவருஷனின் ஆட்சியில் அவன் கவனமும் நேரமும் உள்நாட்டுக் குழப்பங்களையும் கலகங்களையும் ஒடுக்குவதில் செலவழிக்கப்பட்டதால், அவனால் வட இந்திய விவகாரங்களில் தலையிட முடியவில்லை. மேலும் அவன் இயல்பாகவே படைத் துறை ஆற்றல் இல்லாதவன் என்ற காரணத்தினால் தன் தகப்பனைப் போலவோ, பாட்டனைப் போலவோ வடஇந்தியப் படையெடுப்புகளை மேற்கொண்டு தன் புகழை வட இந்தியாவில் நிலைநாட்ட முடியவில்லை. அவனுடைய சமகாலத்தவனான குர்ஜரப் பிரதிஹார அரசன் மிஹிரபோஜன், கத்தியவார் வரையில் தன் ஆதிக்கத்தைப் பரப்புவதில் முனைந்திருந்தான். அவனுடைய ஆக்கிரமிப்புகளைத் தவிர்க்கவோ, அவன் முன்னேற்றத்தைத் தடை செய்யவோ அமோகவருஷன் எந்த முயற்சியையும் மேற்கொள்ளவில்லை. வங்காள அரசியலிலும் அவன் தலையிட்டதாகத் தெரியவில்லை. அவனுடைய சிரூர் செப்பேடுகள், அங்க, வங்க, மகத, மாளவ, வேங்கி அரசர்கள் அவனுக்குக் கீழ்ப்படிந்ததாகக் கூறுகிறது. வேங்கிச் சாளுக்கியர்கள் அமோகவருஷன் ஆதிக்கத்தை ஏற்றுக் கொண்டனர் என்பதை நாம் முன்பு கூறியுள்ளோம். மாளவத்தைப் பொறுத்தவரை ராஷ்டிரகூடர்களுக்கும் பிரதிஹாரர்களுக்குமிடையே அது சச்சரவுக்கான ஒரு பிரச்சினையாக இருந்தது. ஒரு சில சமயங்களில் ராஷ்டிரகூடர்களிடமும், மற்றச் சில சமயங்களில் பிரதிஹாரர்களிடமும் இருந்த மாளவம் இறுதியில் பிரதிஹாரர்கள் வசமாயிற்று. சிரூர் செப்பேடுகளில் காணப்படும் மற்ற மூன்று நாடுகளும் (அங்கம், வங்கம், மகதம்) பாலர்களுடைய ஆட்சிக்குட்பட்டிருந்த பகுதிகளாகும். அமோகவருஷன் பாலர்களுடைய அரசின் மீது படையெடுத்துச் சென்றதாகத் தெரியவில்லை. ஒரு வேளை அவன் ஆட்சியின் இறுதியில் வேங்கி மண்டலத்தை வென்ற பிறகு, அமோகவருஷனின் படைகள் கிழக்குக் கரையோரமாக வடக்கே முன்னேறிச் சென்றிருக்கக் கூடும். அச் சமயத்தில் வங்கத்தை ஆண்டு கொண்டிருந்த பால அரசன் ராஷ்டிரகூடப் படைகளை எதிர்த்திருக்கக்கூடும். இதன் விளைவாக இரு படைகளிடையே சிறு கைகலப்புகள் ஏற்பட்டிருக்கக்கூடும். ஒருசமயம் ராஷ்டிரகூடர்களுக்கும், மற்றொரு சமயம் பாலர்களுக்கும் வெற்றி கிட்டியிருக்கலாம். எனவேதான் இரு தரப்பினரும் வெற்றி தங்களுக்குத்தான் என்று தங்கள்

பொறிப்புகளில் கூறிக்கொள்கின்றனர் போலும்! அமோகவருஷன் தன் பொறிப்புகளில் அங்கம், வங்கம், மகதம் ஆகியவற்றை வென்றதாகக் கூறிக் கொள்வதைப்போலப் பால அரசன் நாராயணபாலனும் ஒரு திராவிட அரசனைப் போரில் தோல்வி யுறச்செய்ததாகக் கூறிக்கொள்கிறன் என்பது இங்குக் குறிப்பிடத் தக்கது, இந்தத் திராவிட அரசன் அமோகவருஷனாக இருக்கக் கூடும். இதுபோலச் சிறு கைகலப்புகள் ஏற்படுவதற்கான சாத்தியக் கூறுகள் உள்ளனவே அன்றி, அமோகவருஷன் வங்காளத்தின் மீது படைஎடுத்துச் சென்று ஒரு பெரிய போர் நிகழ்த்தினன் என்பதற்கான சாத்தியக் கூறுகள் அறவே இல்லை.

**மதிப்பீடு :**

போர்ச் சாதனைகளின் அடிப்படையில் நோக்கும்போது அமோகவருஷனின் ஆட்சி, அவனுடைய தந்தை, பாட்டன் ஆட்சி களைப் போல அல்லாமல் ஒளியிழந்து காணப்படுகிறது. தன்னு டைய தந்தையின் காலத்தில் கைப்பற்றப்பட்ட கங்கவாடியையும், வட இந்தியாவில் மாளவத்தையும் அமோகவருஷன் இழந்தான். இருபத்தைந்து ஆண்டுகளுக்குக் குஜராத் ராஷ்டிரகூடக் கிளையினர் அமோகவருஷனை அல்லலுறச் செய்தனர். கீழைச்சாளுக் கியர்கள் அமோகவருஷனை நாட்டைவிட்டு ஓடச் செய்து தங்கள் ஆதிக்கத்தை ஏற்படுத்திக் கொண்டனர். அதிர்ஷ்டவசமாகக் குஜராத் கிளையினரின் உதவியோடு அமோகவருஷன் தன் பதவியை மீட்டுக்கொள்ள முடிந்தது. எனவே இயல்பாகவே போராற்றல் பெற்றிராத அமோகவருஷன் இந்தச் சூழ்நிலையில் வட இந்தியாவில் தன் தந்தையைப் போல எந்தப் போர்த்துறைச் சாதனைகளையும் புரிய முடியவில்லை என்பதில் வியப்பில்லை. வட இந்திய அரசியலில் தலையிடுவதற்குப் போதுமான காரணம் இருந்தும்கூட அமோகவருஷன் அதில் தலையிடாதது அவனது திறமையின்மையைக் காட்டுகிறது.

போர்ச் சாதனைகளைப் புரிவதைக் காட்டிலும், அமைதிக் கோட்பாட்டிலும் சமய, இலக்கியத் துறைகளிலும் அமோகவருஷ னுக்கு அதிக ஈடுபாடு இருந்தது. அவனுடைய வாழ்க்கையின் பிற்பகுதியில் அவன் சமண சமயக் கோட்பாடுகளினல் மிகவும் ஈர்க்கப்பட்டு அந்தச் சமயத்தில் மிக்க ஈடுபாடு காட் டினன். அவனுடைய போர் ஆற்றலும், போரில் ஆர்வமும் வளர்வதற்கு இது தடையாக இருந்திருக்கலாம். அவன் இந்து, சமண சமயங்களைச் சார்ந்த பல அறிஞர்களையும், தத்துவ ஞானி களையும் ஆதரித்தான். ஆதிபுராணம் என்னும் நூலை எழுதிய

ஜீனசேனர் என்ற சமண சமயத் தத்துவ ஞானி அமோகவருஷனின் ஆசான் என்று தன்னைக் கூறிக்கொள்கிறார். 'கணிதாசார சங்கிரஹா' (Ganitha-Sarasangraha) என்னும் கணிதநூலின் ஆசிரியரான மகா வீராச்சாரியார் என்னும் கணித மேதை தன் நூலில் அமோகவருஷன் சமண சமயத்தைப் பின்பற்றினான் என்று கூறுகிறார். சமணசமயக் கோட்பாடுகளினால் மிகவும் ஈர்க்கப் பட்ட போதிலும், இந்து சமயத்தை அவன் முற்றிலும் புறக் கணிக்கவில்லை. இந்து சமயக் கடவுள்கள் மீது அவனுக்கு இருந்த பற்றும், நம்பிக்கையும் எள்ளளவும் குறையவில்லை. மஹாலட்சுமி வழிபாட்டில் அவன் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டவன். ஒரு சமயத்தில் நாட்டுக்கு நேரவிருந்த ஒரு பேரிடரிலிருந்து மக்களைக் காப்பாற்றும் பொருட்டு அவன் தன் இடக்கை விரல்களில் ஒன்றை அக்கடவுளுக்குப் பலியாகக் கொடுத்தான் என்று அவனுடைய சஞ்சன் செப்பேடுகள் கூறுகின்றன. இதிலிருந்து அவன் பொதுமக்கள் நலனுக்காக எந்தத் தியாகத்தையும் செய்யத் தயாராக இருந்தான் என்பதும், பொதுநலனில் அக்கறை கொண்டவனாயிருந்தான் என்பதும் புலப்படும். இது அமோகவருஷனின் அவைப்புலவர் யாரோ ஒருவர் அரசனின் தற்பெருமையைத் தூண்டிவிடும் வகையில் செய்த முகப்புகழ்ச்சி என்று கருதுவது பொருந்தாது. ஏனெனில் இதே செய்தியைப் பட்டஅகலங்கன் எனும் ஆசிரியன் தன்னுடைய கர்நாடக சப்தானு சாஸனம் எனும் நூலில் உறுதிப்படுத்துகிறான். தங்கள் உடலையே மற்றவர்களுக்காக அர்ப்பணித்த சிபிச்சக்கரவர்த்தி, ஜீமூதவாகளன் போன்ற மன்னர்களோடு அமோகவருஷனை இந் நூலாசிரியன் ஒப்பிட்டு அவர்கள் செய்த தியாகத்தைவிட, அமோகவருஷன் செய்த தியாகம் பன்மடங்கு உயர்ந்தது என்று கூறுகின்றான். சஞ்சன் செப்பேடுகளில் நாற்பத்தியேழாவது செய்யுளில் கூறப்பட்டிருக்கும் கருத்திற்கும், இந் நூலில் காணப் படும் கருத்திற்கும் உள்ள நெருங்கிய ஒற்றுமை இங்குக் குறிப்பிடத் தக்கது. சாதாரணமாக அரசர்கள் தங்களுக்காக மற்றவர்கள் இரத்தம் சிந்தும்படி செய்யும் இயல்புடையவர்கள், ஆனால் மற்றவர்களுக்காகத் தாங்கள் இரத்தம் சிந்தும் அமோகவருஷனைப் போன்ற அரசர்களைக் காண்பது மிக அரிது. இலக்கிய வளர்ச்சியில் மிக்க ஈடுபாடு கொண்ட அமோகவருஷன், அறிஞர் களையும், இலக்கியக் கர்த்தாக்களையும் போற்றி ஆதரித்தான். அவன் அவையில் ஜீனசேனர், மகாவீராச்சாரியார் போன்ற அறிஞர்கள் இருந்தார்கள் என்பதை முன்பு கூறியுள்ளோம். 'அமோகவிரித்தி' என்னும் நூலின் ஆசிரியர் சாகதாயனர் என்பவர் அவன் அவையிலிருந்த மற்றொரு அறிஞராவார்.

அறிஞர்களை ஆதரிப்பதில் இந்திய மரபில் புகழ் பெற்ற விக்கிரமாதித்தியனை விட அமோகவருஷன் தாராளமாக இருந்தான் என்று சஞ்சன் செப்பேடு கூறுகின்றது. அவன் அறிஞர்களின் புரவலன் மட்டுமல்லாமல், ஒரு சிறந்த இலக்கியக் கர்த்தாவாகவும் இருந்தான். கன்னடச் செய்யுளியல் நூல்களில் பழமையானதாகக் கருதப்படும் கவிராஜமார்க்கம் என்னும் நூலை எழுதியவன் அமோகவருஷன் என்று கருதப்படுகிறது. பிரச்சினோத்தரமாலா என்னும் மற்றொரு கன்னட நூலையும் அவன் எழுதினான் என்று கூறப்படுகிறது. அவன் சமயக் கருத்துக்களைக் கேட்டறிந்ததோடு மட்டுமன்றி அவற்றைத் தன் வாழ்க்கையில் கடைப்பிடித்தொழுகவும் முயன்றான். அரசன் தன் வாழ்க்கையின் இறுதி நாட்களில் உலகம் சார்ந்த விஷயங்களில் ஈடுபாட்டை விடுத்துச் சமயம்பற்றி ஆழ்ந்த சிந்தனை செய்யவேண்டும். ஆன்ம விசாரத்தில் ஈடுபடவேண்டும் என்று இந்து, சமண சமயங்கள் வலியுறுத்தும் கருத்துக்களைத் தன் வாழ்க்கையில் கடைப்பிடித்தான். கி.பி. 860ஆம் ஆண்டிற்குப் பிறகு, நாட்டின் பிரச்சினைகள் யாவும் தீர்க்கப்பட்டு அமைதி நிலவியபொழுது, அரச பொறுப்புகளிலிருந்து தன்னை விடுவித்துக்கொண்டு தொடர்ந்து பல ஆண்டுகள் ஆன்ம விசாரணையில் மிகவும் ஈடுபட்டான் என்று சஞ்சன் சாஸனம் கூறுகின்றது. அப்படி அரச பொறுப்புகளிலிருந்து அவன் விலகிக் கொண்ட பொழுதெல்லாம் இளவரசன் கிருஷ்ணன் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக்கொண்டான். இதுபோல அமோகவருஷன் பலமுறை பதவியிலிருந்து விலகியிருந்தான் என்று சஞ்சன் சாஸனம் கூறுகின்றது. அமோகவருஷன் ஆட்சியில்தான் மான்யகேடம் ராஷ்டிரகூடர்களின் தலைநகரமாயிற்று. அந்நகரத்தைக் கட்டிப் பொலிவுறச் செய்தவன் அமோகவருஷனுவான். மிகப் பெரிய ஓர் அந்தப்புரத்தையும், ஒரு குளத்தையும் கொண்ட அவனுடைய அரண்மனை ஒப்பனை மிகுந்தது.

போர்த்துறையில் அரும் பெருஞ் சாதனைகள் புரியாவிட்டாலும், தன் அரசில் அமைதியையும் ஒழுங்கையும் நிலைநாட்டியவன் என்றும், நாட்டை அந்நியப் படையெடுப்பிலிருந்து காப்பாற்றியவன் என்றும் இலக்கியத்தையும், கலையையும் ஆதரித்தவன் என்றும், எல்லாச் சமயங்களையும் பாரபட்சமின்றி ஆதரித்தான் என்றும், தான் மக்களுக்குப் போதித்த கருத்துக்களின்படித் தானே வாழ்ந்து காட்டியவன் என்றும், பொது மக்கள் நலனில் அக்கறை கொண்டவன் என்றும், வரலாற்றில் அவன் புகழ் என்றும் நீடித்திருக்குமென்பதில் சிறிதும் ஐயமில்லை.

அமோகவருஷன் ஆட்சி சுமார் கி.பி. 880 வரை நீடித்திருக்க வேண்டும். கி.பி. 878ஆம் ஆண்டிற்குப் பிறகு வெளியிடப்பட்ட

அவன் பொறிப்புகள் ஒன்றும் கிடைக்காததால் அவன் ஆட்சி அந்த ஆண்டிற்குப்பிறகு முடிவடைந்திருக்கவேண்டும். அவன் இறந்தவுடன் அவன் ஒரே மகனுன கிருஷ்ணன் இரண்டாம் கிருஷ்ணன் என்ற பட்டத்துடன் கி.பி. 880ஆம் ஆண்டில் அரியணையெய்தினுன். அமோகவருஷனுக்கு மூன்று பெண்கள் இருந்தார்கள். அவர்களிலிருவர் கங்கநாட்டு இளவரசர்களேயும், மற்ருெருத்தி பல்லவ அரசனேயும் மணந்திருந்தனர். சர்வன் என்பது அவன் இயற்பெயர். 'அமோகவருஷன்', 'நிருபதுங்கன்', 'வீரநாராயணன்' போன்ற பட்டப் பெயர்களேச் சூட்டிக் கொண்டான்.

### இரண்டாம் கிருஷ்ணன் (கி.பி. 880-914)

அவனுக்கு முன் பட்டமெய்திய பல அரசர்களேப் போலல்லாமல், கிருஷ்ணன் வாரிசுரிமைச் சிக்கல்கள் எவையுமின்றிப் பட்டமெய்தினுன். அவனுடைய ஆட்சியில் அண்டையிலிருந்த பல அரசர்களுடன் அவன் போர் புரிய நேர்ந்தது. தெற்கே கங்கர்களுடனும், நொளம்பர்களுடனும், கிழக்கே வேங்கிச் சாளுக்கியர்களுடனும், வட இந்தியாவில் குஜராத் ராஷ்டிரகூடர்களுடனும், குர்ஜரப் பிரதிகாரர்களுடனும் அவன் போர்களில் ஈடுபட்டான். சேதிநாட்டு அரசன் முதலாம் கக்கவனின் மகளேக் கிருஷ்ணன் மணம் செய்து கொண்டிருந்தான். அவன் ஆட்சியில் நடந்த போர்களில் அவனுடைய மனேவியின் உறவினர்கள் அவனுக்குப் பெருந்துணேயாக இருந்தார்கள். சேதி அரசர்களுடைய பிலஹரி. காசிப் பொறிப்புகள் இச் செய்தியை உறுதிப்படுத்துகின்றன. இவ்விரு அரச குடும்பங்களுக்கிடையே நிலவிய நட்புறவு, கிருஷ்ணன் ஆட்சியில் பல திருமண உறவுகள் மூலம் மேலும் வலுவடைந்தது. தன்னுடைய மகன் ஜகத்துங்கனே லட்சுமி என்னும் சேதி இளவரசிக்கு மணம் முடித்தான். சில ஆண்டுகள் கழித்து ஜகத்துங்கன் லட்சுமியின் தங்கை கோவிந்தாம்பா என்ற மற்ருெரு சேதி இளவரசியையும் மணந்தான். ஜகத்துங்கனுடைய மகன் இந்திரன், சேதி இளவரசி விஜம்பா என்பவளே மணந்து கொண்டான்.

குர்ஜரர்களேயும், குஜராத் ராஷ்டிரகூடர்களேயும், கங்கர்களேயும், அங்கம், வங்கம், கலிங்கம், மகதம் போன்ற நாடுகளேயும் கிருஷ்ணன் வென்றதாகப் பல ராஷ்டிரகூடப் பொறிப்புகள் கூறுகின்றன. இது இயல்பாகவே பொறிப்புகளில் காணப்படும் மிகைப்படுத்தப்பட்ட உயர்வுநவிற்சிக் கூற்றேயன்றி, வரலாற்று உண்மை என்று ஏற்றுக்கொள்ள முடியாது. இருப்பினும்

கிருஷ்ணன் ஆட்சியில் சில போர்கள் நடந்தன என்பது உண்மை. அவற்றுள் அவன் குர்ஜரப்பிரதிஹாரர்களுடனும், வேங்கிச் சாளுக்கியர்களுடனும் நடத்திய போர்கள் குறிப்பிடத் தக்கவை.

**கிருஷ்ணனும் வட இந்திய அரசர்களும்**

பல ராஷ்டிரகூடப் பட்டயங்கள் கிருஷ்ணனுக்கும் குர்ஜரப் பிரதிஹார அரசன் போஜனுக்கும் நடந்த போர்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றன. கி.பி. 914-ஆம் ஆண்டு, பெகும்ரா செப்பேடுகள் அப் போரை மக்கள் இன்னும் நினைவில் கொண்டு அதைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தனர் என்று கூறுகிறது. குஜராத் ராஷ்டிரகூடர்களின் பொறிப்புகளும் இப் போர்களைப் பற்றிக் கூறுகின்றன. குஜராத் ராஷ்டிரகூட அரசன் கிருஷ்ண ராஜன் இப் போரில் கிருஷ்ணனுக்கு ஆற்றிய உதவியை இப் பொறிப்புகள் குறிப்பிடுகின்றன. மூன்றும் கோவிந்தனின் ஆட்சிக்குப் பிறகு ராஷ்டிரகூடர்கள் வட இந்தியப் படையெடுப்புகளில் ஊக்கம் காட்டவில்லை. அமோகவருஷனின் அமைதிக்கொள்கை குர்ஜரப் பிரதிஹாரர்களின் பேரார்வத்தைத் தூண்டிவிட்டது. அமோகவருஷனின் ஆட்சியில் விந்திய மலையைக் கடந்து தக்காணத்தில் ஊடுருவப் பிரதிஹாரர்கள் செய்த முயற்சி வெற்றி பெறவில்லை. கத்தியவார் பகுதி வரை அவன் தன் ஆதிக்கத்தைப் பரப்பினன். கிருஷ்ணன் பட்டமெய்தியவுடன் போஜன் ஓர் ஆக்கிரமிப்புப் போரைத் தொடங்கித் தெற்கு நோக்கித் தன் படைகளுடன் வந்தான். அவனைத் தடுத்து நிறுத்தக் கிருஷ்ணன் பெரும் படையுடன் வடக்கு நோக்கிச் செல்ல, இருபடைகளும் நர்மதை ஆற்றங்கரையில் மோதிக் கொண்டன. இந்த முதற் போரில் கிருஷ்ணன் தோற்றுத் தன் படைகளுடன் பின் வாங்க நேரிட்டது.[1] இந்த வெற்றியினல் தூண்டப்பட்ட போஜன், குஜராத் பகுதியின் மீது தாக்குதலைத் தொடங்கினன்.

குஜராத் ராஷ்டிரகூட அரசனை இரண்டாம் கிருஷ்ணன் (கிருஷ்ணராஜன்) அப்படைகளை முறியடித்ததோடு மட்டுமல்லாமல், அவற்றைப் பின் தொடர்ந்து மாளவம் வரையில் சென்று உஜ்ஜயினியில் போஜன் படைகளைத் தோற்கடித்து அந் நகரையும் கைப்பற்றினன். குஜராத் ராஷ்டிரகூட அரசன்

[1] பிரதிஹாரர்களின் பவநகர் மியூசியம் பொறிப்பு நர்மதைப் பகுதியில் இச்சண்டை நடந்தது என்றும் கிருஷ்ணராஜன் என்ற அரசனைப் போஜன் தோற்கடித்தான் என்றும் கூறுகிறது.

கிருஷ்ணனின் பெகும்ரா சாஸனமும், மூன்றும் இந்திரனுடைய பெகும்ரா செப்பேடுகளும் இப் போரைப் பற்றியும் அதில் இவ்விரு அரசர்களின் சாகசச் செயல்கள் பற்றியும் குறிப்பிடு கின்றன. இளவரசன் ஜகத்துங்கனும், சேதி நாட்டு அரசனும் இப் போரில் கிருஷ்ணனுக்கு ஆதரவாக ஈடுபட்டனர். இப் போரினால் இருதரப்பினருக்கும் எவ்வித நிரந்தரப் பயனும் ஏற்படவில்லை. கிருஷ்ணனால், போஜனுடைய படைகளைத் தொடர்ந்து மேலும் வடக்கே செல்ல முடியவில்லை. தெற்கே ராஷ்டிரகூடர்களை அடக்கி வைப்பதற்காகக் குர்ஜரப் பிரதி காரர்கள் நிரந்தரமாக ஒரு பெரும்படையை வைத்துக் கொள்ள வேண்டியிருந்தது என்று அல்மசூதி என்னும் முஸ்லிம் அறிஞர் கூறுவதிலிருந்து அடிக்கடி இவ்விரு அரசுகளுக்கிடையே எல்லைப் போராட்டங்கள் நடந்தன என்று ஊகிக்கலாம். முதலாம் துருவனைப் போலவோ மூன்றும் கோவிந்தனைப் போலவோ வட இந்தியப் படையெடுப்பு ஒன்றை மேற்கொள்ளத் தேவையான வலிமையும் ஆற்றலும் கிருஷ்ணன் பெற்றிராததாலும், ஒரு தென்னிந்தியப் படையெடுப்பை மேற்கொள்ள போஜனின் முதிர்ந்த வயது தடையாக இருந்ததாலும் இவ்விரு அரசு களிடையே ஒரு பெரும் போர் நடப்பதற்கான சாத்தியக் கூறுகள் இரண்டாம் கிருஷ்ணனின் ஆட்சியில் இருக்கவில்லை.

இரண்டாம் கிருஷ்ணனுக்கும் குஜராத் ராஷ்டிரகூடர்களுக்கு மிடையே நிலவிய உறவை இங்கு ஆராயலாம். முதலாம் அமோக வருஷனின் ஆட்சியில் இவ்விரு கிளையினரிடையே ஒரு போர் ஏற்பட்டது என்பதனையும், அமோக வருஷன் அதில் வெற்றி பெற்றான் என்பதையும் முன்பே கூறியுள்ளோம். சுமார் கி.பி. 865-ல் இப்போர் முடிவடைந்து அதற்குப் பிறகு அமோக வருஷன் ஆட்சியில் இவ்விரு குடும்பத்தினரிடையே நட்புறவு நிலவியது. இரண்டாம் கிருஷ்ணன் ஆட்சியிலும் இந்த உறவு நீடித்தது. அவனுடைய சமகாலத்துக் குஜராத் ராஷ்டிரகூட அரசனும் கிருஷ்ணன் என்ற பெயர் கொண்டவன். அவன் மான்யகேட ராஷ்டிரகூடர்களுக்கு, அவர்கள் சாளுக்கியர் களுடன் நடத்திய போரில் பேருதவியாகயிருந்தான். மேலும் ராஷ்டிரகூடர்களுக்குக் குர்ஜரப் பிரதிஹார அரசன் போஜனால் ஏற்பட்ட பேராபத்திலிருந்து அவர்களைக் காப்பாற்றிய பெருமை இந்தக் கிருஷ்ணனைச் சாரும். குஜராத் மீது படையெடுத்து வந்த பிரதிஹார அரசன் போஜனை அங்கிருந்து விரட்டியதோடு மட்டுமல்லாமல், அவனைத் தொடர்ந்து சென்று உஜ்ஜயினியில் அவன் மீது குஜராத் ராஷ்டிரகூடக் கிருஷ்ணன் ஒரு பெரும்

வெற்றியை ஈட்டினன் என்பதை மேலே குறிப்பிட்டுள்ளோம். இந்தக் கிருஷ்ணன்தான் குஜராத் ராஷ்டிரகூடக் கிளை மரபின் கடைசி அரசனுக இருக்க வேண்டும். இரண்டாம் கிருஷ்ணனின் ஆட்சியில்தான் குஜராத் ராஷ்டிரகூடக் கிளை மரபு முடிவடைகிறது. எப்போது அது முடிவடைந்தது என்பதை அறுதியிட்டுக் கூற இயலாது. குஜராத் ராஷ்டிரகூட அரசர்களின் சாஸனங்களில் கடைசியாகத் தமக்குக் கிடைத்துள்ள சாஸனம் கி.பி. 888-ஆம் ஆண்டைச் சேர்ந்ததாகும். இரண்டாம் கிருஷ்ணனின் கி.பி. 910-ஆம் ஆண்டு கபத்வஞ்ச் (Kapadwanj) சாஸனத்திலிருந்து குஜராத் பகுதியைப் பிரம்மாவலோக வம்சத்தைச் சேர்ந்த பிரசந்தன் (Prachandu) என்னும் சிற்றரசன் ஆண்டதாகத்தெரிகிறது. இரண்டாம் கிருஷ்ணனை அடுத்து மான்யகேட அரியணை ஏறிய மூன்ரும் கிருஷ்ணன் ஆட்சியைச் சேர்ந்த கி.பி. 915-ஆம் ஆண்டு பெகும்ரா சாஸனத்திலிருந்து குஜராத் மான்ய கேடத்தின் நேரடி ஆட்சியின் கீழ்க்கொண்டு வரப்பட்டது என்பதை அறிகிருேம். குஜராத் ராஷ்டிரகூட அரசர்களான முதலாம் துருவன், இரண்டாம் துருவன் ஆகியோர் ஆட்சியில். குஜராத்தில் ஒரு கிராமத்தை நன்கொடையாகப் பெற்ற ஒருவர் அந் நன்கொடையைப் புதுப்பித்துப் பட்டயம் ஒன்று வழங்கும்படி கேட்டுக் கொண்டதற்கிணங்க மூன்ரும் இந்திரன் அந்த நன்கொடையை உறுதி செய்யும் செய்தியை மேற் கூறிய சாஸனம் கூறுகின்றது. ஏற்கெனவே வழங்கப்பட்ட ஒரு நன்கொடையை உறுதி செய்ய வேண்டிய அவசியம் என்ன? முதலில், நன்கொடை வழங்கியவர்களின் வம்சம் பதவியில் இல்லாததால், அப்பொழுது பதவியிலிருப்பவர்களிடமிருந்து நன்கொடையை ஒரு சாஸனத்தின் மூலம் உறுதி செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்க வேண்டும். சுமார் கி.பி. 900-ஆம் ஆண்டில் குஜராத் ராஷ்டிரகூடக் கிளை மரபு முடிவடைந்திருக்க வேண்டும். ஒரு வேளை இரண்டாம் கிருஷ்ணன் சந்ததியின்றி இறந்திருக்கக் கூடும். அதனுல் அம் மரபு முடிவடைந்திருக்க வேண்டும், அல்லது மீண்டும் அவ்விரு கிளையினரிடையே ஒரு போர் ஏற்பட்டு அதில் மான்யகேட ராஷ்டிரகூடர்கள் வெற்றி பெற்று அப் போரின் முடிவில் குஜராத் பகுதியானது அவர்களின் நேரடி ஆட்சியின் கீழ்க் கொண்டு வந்திருக்கப்பட்டிருக்கலாம்.

**கிருஷ்ணனும் வேங்கிச் சாளுக்கியர்களும்**

இரண்டாம் கிருஷ்ணனின் சமகாலத்து வேங்கிச் சாளுக்கிய அரசர்கள் மூன்ரும் விஜயாதித்யனும், பீமனும் ஆவர். இவ்விரு வம்சங்களிடையே நிலவிய பரம்பரைப் பகைமை உணர்வு

கிருஷ்ணன் ஆட்சியிலும் நீடித்தது. அமோகவருஷன் ஆட்சியில் வேங்கிச் சாளுக்கியர்கள் தோல்வியடைந்து ஒடுக்கப்பட்ட செய்தியை ராஷ்டிரகூடச் சாஸனங்களும், வேங்கிச் சாஸனங்களும் கூறுகின்றன. இந்தத் தோல்வியினால் ஏற்பட்ட இழுக்கைப் போக்கிக் கொள்ளும் நோக்கத்துடன் வேங்கி அரசன் மூன்றாம் விஜயாதித்யன் இரண்டாம் கிருஷ்ணன் மீது போர் தொடுத்தான். இப் போர் நேரடியாக ராஷ்டிரகூட அரசின் மீது தொடுக்கப்படவில்லை. மாறாக ராஷ்டிரகூடர்களின் ஆதிக்கத்திற்குட்பட்டக் கங்கர்கள் மீதும், நொளம்பர்கள் மீதும் விஜயாதித்யன் போர் தொடுத்தான் தன்னுடன் நேசஉறவு கொண்ட தன் ஆதிக்கத்திற்குட்பட்ட நொளம்பவாடி, கங்கவாடிப் பகுதிகளை வேங்கி அரசன் படையெடுத்தது, தன்னுடைய இறைமைக்கே ஒரு சவால் என்பதை உணர்ந்த கிருஷ்ணன் சாளுக்கியர்களை எதிர்க்கத் தயாரானான். போரின் தொடக்கத்தில் விஜயாதித்யனுக்கு வெற்றி கிட்டியது. நொளம்ப நாட்டுப் படைகள் தோல்வி அடைந்தன. நொளம்பர்களின் படைத்தலைவன் மங்கிப் போரில் கொல்லப்பட்டான். அடுத்துக் கங்கவாடி மீது படையெடுப்பு தொடர்ந்தது. கங்க அரசன் ராஜமல்லனும் இளவரசன் பூதுகனும் தோல்வி அடைந்தார்கள். கங்க நாட்டின் பெரும்பகுதி கைப்பற்றப் பட்டது. அதே சமயத்தில் விஜயாதித்யன் ராஷ்டிர கூடப் பேரரசின் வட்பகுதியில் பீரார் மீது மற்றொரு தாக்குதலைத் தொடங்கினான். பஸ்தார் பகுதியைக் கைப்பற்றிச் சக்ர கூடம் என்னும் கோட்டை நகரம் அழிக்கப்பட்டது. அங்கிருந்து மேலும் வடக்கே முன்னேறிக் கிரணபுரம் என்னுமிடத்தில் கிருஷ்ணனின் படைகளைத் தோற்கடித்தான். கிரணபுரம் கைப்பற்றப்பட்டு, தீக்கிரையாக்கப்பட்டது, அதே போல அசலபுரம், (எலிச்பூர்) என்னும் நகரம் தீக்கிரையாக்கப்பட்டது. திறமையும், அனுபவமுமிக்க பாண்டுரங்கன் என்ற விஜயாதித்யனின் படைத்தலைவன்தான் இவ் வெற்றிகளுக்கெல்லாம் காரணம். வெற்றிமேல் வெற்றி பெற்று வேங்கிச் சாளுக்கியர்களின் கை ஓங்கியிருந்த இச் சமயத்தில்தான், விஜயாதித்யன் இறக்க பீமன் சாளுக்கிய அரியணையிலமர்ந்தான்.

சாளுக்கியர்கள் பெற்ற இந்த வெற்றி தற்காலிக வெற்றியே. விரைவில் நிலைமை மாறியது. இத்தோல்விகளினால் ஒரு படிப் பின்னையைப் பெற்ற இரண்டாம் கிருஷ்ணன் தன் படைகளைச் சீர்படுத்திக்கொண்டு சாளுக்கியர்களுடன் மற்றொரு போருக்கு ஆயத்தமானான். இப் போரில் குஜராத் கிளை மரபைச் சேர்ந்த கிருஷ்ணனும், கர்நாடகப் பகுதியை ஆண்டுகொண்டிருந்த

சிற்றரசர்களும் அவனுக்குப் பெருந்துணையாக இருந்தார்கள். குறிப்பாக இப் போர் வெற்றிகரமாக முடிவதற்கு வெமுலவாடாச் சாளுக்கிய குடும்பத்தைச் சேர்ந்த பட்டேகன் (Baddega) என்ற படைத்தலைவன் ஆற்றிய பணி மகத்தானது. வேங்கி நாட்டின் மீது ஒரு படையெடுப்பு மேற்கொள்ளப்பட்டு, அந் நாட்டின் பல பகுதிகள் ராஷ்டிரகூடப் படைகளால் கைப்பற்றப்பட்டன. வேங்கி அரசன் பீமனும் சிறைபடுத்தப்பட்டான். வெற்றிக் கதிரவனாகிய விஜயாதித்யன் மறைந்த பிறகு வேங்கி அரசை ராஷ்டிரகூடர்களின் படையென்னும் இருள் சூழ்ந்து கொண்டது என்று சாளுக்கியப் பொறிப்புகள் கூறுவதால் நிலைமை எவ்வாறு இருந்தது என்பதைப் புரிந்துகொள்ளலாம். பீமன் அடைந்த படுதோல்வியின் விளைவாக நொளம்பர்களும், கங்கர்களும் தாங்கள் இழந்த பகுதிகளை மீண்டும் பெற்றார்கள். பீமன் சிறையி லிருந்து விடுவிக்கப்பட்டு, ராஷ்டிரகூட ஆதிக்கத்திற்கு உட்பட்ட சிற்றரசனாக ஆள அனுமதிக்கப்பட்டான். இந் நிலைமை பத்து ஆண்டுகள் நீடித்திருக்கக்கூடும். இதற்கிடையில் பீமன் தன் நிலைமையைச் சீர்படுத்திக்கொண்டு மகாகாளன் என்ற திறமை மிக்க படைத்தலைவனுடைய உதவியுடன் கிருஷ்ணனுக்கு எதிராக மீண்டும் போரைத் துவக்கினான். வேங்கி நாட்டில் அமைக்கப் பட்டிருந்த ராஷ்டிரகூடப் படைத்தளங்கள் தாக்கப்பட்டன. நிரவத்யபுரம் (நிடதவோலு, கிழக்குக் கோதாவரி மாவட்டம்) பெருவங்கூரு என்னுமிடங்களில் நடந்த கடும் சண்டைகளில் இரு தரப்பினருக்கும் வெற்றி கிட்டவில்லை. ராஷ்டிரகூடப் படைத் தலைவன் குண்டையனும், சாளுக்கிய இளவரசனும் உயிரிழந் தனர். சாளுக்கியர்களிடம் காணப்பட்ட புதிய தெம்பையும், ஊக்கத்தையும் கண்ட கிருஷ்ணன் வேங்கி நாட்டைக் கைப்பற்ற முயல்வது மதியீனம் என்று எண்ணியிருக்கவேண்டும். அதே போல அண்மையில் நடந்த போர் அனுபவத்திலிருந்து ராஷ்டிரகூட அரசின்மீது படையெடுத்துச் செல்லும் எண்ணத் தைச் சாளுக்கிய பீமனும் கைவிட்டிருக்க வேண்டும். இருவருமே தாங்கள் தங்கள் நாட்டின் மரபு அடிப்படையில் அமைந்த எல்லைகளை மதித்து நடக்கவேண்டுமென்றும், ஒருவர் பகுதியை மற்றொருவர் ஆக்கிரமித்துக்கொள்ளக் கூடாது என்றும் முடிவு செய்திருக்கவேண்டும். இந்த அடிப்படையில் இவ்விரு அரசுகளுக் கிடையே நட்புறவு ஏற்படுத்தப்பட்டது.

**கிருஷ்ணனும் தென்னிந்திய அரசுகளும்**

கிருஷ்ணன் ராஷ்டிரகூட அரியணையெய்திய பொழுது தென் னிந்திய அரசியல் பெரும் மாறுதல்களுக்குள்ளாகியிருந்தது.

பல்லவர்களுடைய ஆதிக்கம் மெதுவாக மறைந்துகொண்டே யிருந்தது. சோழர்களுடைய எழுச்சி இக் காலப் பகுதியின் வரலாற்றின் சிறப்புக் கூறுகும். ராஷ்டிரகூடக் கிருஷ்ணன் வளர்ந்துவரும் சோழ அரசின் நட்புறவை நாடினன். தன் மகள் ஒருத்தியைச் சோழ வம்சத்து முதலாம் ஆதித்யனுக்கு மணம் செய்வித்தான். இத் திருமண உறவின் விளைவாகப் பிறந்த பிள்ளைதான் கன்னரதேவன் என்பவன். ஆதித்யன் இறந்தவுடன் அவனுடைய வேறொரு மனைவிக்குப் பிறந்த முதலாம் பராந்தகன் சோழன் அரியணையெய்தியது இவ்விரு குடும்பங்களுக்கிடையே பகைமை உணர்வை வளர்த்து, ஒரு போருக்கு அடிகோலியது. தன்னுடைய பேரனை கன்னரதேவனின் உரிமை புறக்கணிக்கப் பட்டு, பராந்தகன் பட்டமெய்தியதைக் கிருஷ்ணன் விரும்பவில்லை. எனவே சோழ அரியணைக்கு அவன் உரிமையை நிலைநாட்டும் நோக்கத்துடன் கிருஷ்ணன் பாணர்கள், வைடும்பர்கள் போன்ற சிற்றரசர்களின் உதவியோடு சோழ நாட்டுப் படையெடுப்பை மேற்கொண்டான். பராந்தகன் கங்க அரசனை இரண்டாம் பிரிதிவீபதியின் துணையைப் பெற்றான். இரு படைகளும் வட ஆர்க்காடு மாவட்டத்தில் இன்று திருவல்லம் என வழங்கும் வல்லாலா என்ற இடத்தில் மோதின. சண்டையில் பராந்தகன் பெரு வெற்றியடைந்தான். எனவே கிருஷ்ணனின் சோழ நாட்டுப் படையெடுப்பின் நோக்கம் நிறைவேறவில்லை.

மூன்றும் கிருஷ்ணனின் பொறிப்புக்கள் சில இரண்டாம் கிருஷ்ணனின் போர் வெற்றிகளை வழக்கம்போலச் சற்று மிகைப் படுத்திக் கூறுகின்றன. எனவே அவற்றிலிருந்து நாம் எந்த உறுதியான முடிவுக்கும் வர இயலாது. உதாரணமாக அவன் கௌட, அங்க, கலிங்க மகத நாட்டு அரசர்களை அடிபணிய வைத்தான் என்று அவை கூறுகின்றன. இரண்டாம் கிருஷ்ணனின் அவைப் புலவர்களுள் ஒருவரான குணசந்திரன் என்னும் சமண சமய அறிஞர் கிருஷ்ணனுடைய யானைகள் கங்கை நீரைப் பருகின என்றும், குமரிமுனைக்கருகிலுள்ள காட்டுமரங்களின் குளிர்ந்த நிழலில் தங்கின என்றும் கூறுகின்றார். இவை யாவும் வரலாற்று உண்மைகளை அறியாத அவைப் புலவர்களின் உயர்வு நவிற்சிக் கூற்றுகள் என்பதில் சிறிதும் ஐயமில்லை. மூன்றும் கோவிந்தனைப் போன்றோ, துருவனைப் போன்றோ போர்த்துறை ஆற்றல் பெற்றிராத கிருஷ்ணன் தன்னுடைய படைகளுடன் கங்கைச் சமவெளியின் பகுதிக்கோ இந்தியாவின் தென்முனைப் பகுதிக்கோ சென்றிருக்க முடியாது. தன் முன்னோர்களிடமிருந்து பெற்ற பேரரசை அந்நியர் படையெடுப்பிலிருந்து காப்பாற்றி அது சீர்குலையாவண்ணம் பாதுகாக்க அவனால் முடிந்ததேயன்றி

அதை விரிவுபடுத்துவதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்ளும் தகுதியை அவன் பெற்றிருக்கவில்லை.

அமோகவருஷனைப்போலச் சமண சமயத்தில் கிருஷ்ணன் ஆழ்ந்த பற்றுக் கொண்டிருந்தான். குணபத்திரர் என்னும் புகழ் பெற்ற சமண சமய அறிஞர் அவனுடைய ஆசான் ஆவர். சமண சமயப் பற்றுள்ளவனாக இருந்தும், கிருஷ்ணன் சமயப் பொறைக் கொள்கையைக் கடைப்பிடித்து ஹிந்து சமயத்தையும் ஆதரித்தான். அவனுடைய சமண சமயப்பற்று அவனுடைய அயல் நாட்டுக் கொள்கையில் குறுக்கிடவில்லை. எனவே அவன் தன்னுடைய ஆட்சியில் பல போர்களைப் புரிந்தான்.

**மதிப்பீடு :**

அவன் ஆட்சியின் நிகழ்ச்சிகளை மொத்தமாக எடுத்து ஆராயும்பொழுது, அது ஒரு சிறப்புமிக்க ஆட்சியென்று கூற முடியாது. சேதி அரசர்களுடன் திருமண உறவுகள் மூலம் அவன் நட்புறவை வளர்த்துக் கொண்டபோதிலும், வட இந்தியாவில் ராஷ்டிரகூடர்களின் புகழை அவனால் நிலைநாட்ட முடியவில்லை. மாளவத்தின் மீதும், வேங்கி மீதும் ராஷ்டிரகூடர்கள் பெற்றிருந்த செல்வாக்கு அவன் ஆட்சியில் மறையத் தொடங்கியது. சோழர்களுடன் அவன் கொண்டிருந்த தொடர்பு எவ்வகையிலும் ராஷ்டிரகூடர்களுக்குப் பயனளிக்கவில்லை. பகைவர்களால் சூழப் பட்டிருந்த தன் நாட்டை அப் பகைவர்களிடமிருந்து காப்பாற்றிப் பேரரசின் பரப்பு சுருங்கிவிடாவண்ணம் பாதுகாத்ததுதான் அவனுடைய சாதனையாகக் கருதவேண்டும். 'அகாலவருஷன்' 'சுபதுங்கன்' போன்ற வழக்கமான பட்டப் பெயர்களை அவனும் சூட்டிக்கொண்டான். அவனுடைய ஒரே மகன் ஜகதுங்கன், தந்தைக்கு முன்பே இறந்துவிடவே, கிருஷ்ணனுக்குப் பிறகு ராஷ்டிரகூட அரியணையில் அவனுடைய பேரன் இந்திரன் அமர்ந் தான். (ஜகதுங்கனுக்குக் கால்சூரி இளவரசி லட்சுமி மூலம் பிறந்தவன்.)

**மூன்றும் இந்திரன் (கி. பி. 914-928)**[1]

கி. பி. 914ஆம் ஆண்டு இறுதியில் அரியணையேறிய இந்திர னின் முடிசூட்டு விழா கி. பி. 915ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் நடந்திருக்கவேண்டும் என்பதை அவனுடைய நவசாரிச் செப்பேடு

[1] சில ஆண்டுகளுக்கு முன்பு இந்திரன் ஆட்சி மூன்று ஆண்டுக் காலமே நீடித்தது என்று கருதப்பட்டது. பிறகு கண்டுபிடிக்கப்பட்ட பொறிப்புகளிலிருந்து அவன் ஆட்சி 928-வரை நீடித்தது என்பது விளங்கும். கி.பி. 925-ஆம் ஆண்டைச் சேர்ந்த கமலாபுரம் பொறிப்பும் கி. பி. 927-ஆம் ஆண்டைச் சேர்ந்த ஹலிரிட்டி பொறிப்பும் அக்காலப் பகுதியில் ஆண்ட ராஷ்டிரகூட அரசன் இந்திரன் என்று குறிப்பிடுகின்றன

களிலிருந்து நாம் அறிகிறோம். கி.பி. 915ல் முன்பு ஆண்ட அரசர்கள் கோயில்களுக்கும், அந்தணர்களுக்கும் தானமாக வழங்கிய 400 கிராமங்களை அவன் மீண்டும் தானமாக வழங்கினான் என்ற செய்தியிலிருந்து அவனுடைய முடிசூட்டு விழா அந்த ஆண்டு நடந்திருக்கக்கூடும் என்று ஊகிக்கலாம். முப்பதே வயது நிரம்பிய இளைஞனை மூன்றும் இந்திரன் மூன்றும் கோவிந்தனின் துணிச்சலையும் போராற்றலையும் பெற்றிருந்தான். தன்னுடைய திறமையை வெளிக்காட்ட ஒரு தகுந்த வாய்ப்புக்காகக் காத்துக் கொண்டிருந்த இந்திரனுக்கு விரைவிலேயே அவ் வாய்ப்புக் கிட்டியது. அதுதான் அவனுடைய வட இந்தியப் படையெடுப்பு.

மூன்றும் இந்திரன் தன்னுடைய முடிசூட்டு விழாவிற்கு முன்பே உபேந்திரன் என்ற அரசனுடன் போரிட்டுக் கோவர்த்தனத்தைக் கைப்பற்றியதாக அவன் பொறிப்புகள் கூறுகின்றன. இந்த உபேந்திரன் குர்ஜரப் பிரதிஹார அரசன் மஹிபாலனாக இருக்கக் கூடுமென்று பண்டார்கார் கூறுகின்றார். இப் படையெடுப்பு இந்திரன் பட்டமெய்திய பிறகு, ஆனால் அவன் முடிசூட்டிக்கொள்வதற்கு முன்பு நடந்தது என்பதனால், அவ்வளவு குறுகிய காலப் பகுதியில் கன்னோசிவரை அவன் படையெடுத்துச் சென்றிருக்க முடியாது என்று கருதலாம். எனவே அவனால் தோற்கடிக்கப்பட்ட உபேந்திரன் மஹிபாலனாக இருக்கமுடியாது. உதயபூர் பொறிப்பிலிருந்து பாரமார அரசன் கிருஷ்ணராஜன் உபேந்திரன் என்று அழைக்கப்பட்டான் என்பது தெரிய வருகின்றது. பாரமாரர்கள் குர்ஜரப் பிரதிஹாரர்களின் சிற்றரசர்களாக மாளவத்தில் ஆண்டுகொண்டிருந்தவர்கள். தங்கள் மேலாளர்களான பிரதிஹாரர்களின் ஆணைக்குக் கீழ்ப் பணிந்து பாரமார அரசன் உபேந்திரன் (கிருஷ்ணராஜன்) நாசிக் மாவட்டத்திலுள்ள கோவர்த்தனத்தின் மீது தாக்குதல் நடத்தியிருக்கவேண்டும். இந்தப் படையெடுப்பைச் சமாளிக்க இந்திரன் ஒரு பெரும் படையுடன் சென்று உபேந்திரனைப் போரில் வென்று, கோவர்த்தனத்தைக் கைப்பற்றியிருக்க வேண்டும். இந் நிகழ்ச்சியைத்தான் இந்திரனுடைய சாஸனங்கள் குறிப்பிடுகின்றன போலும். இதனால் சினமுற்ற இந்திரன், இப் படையெடுப்பிற்கு முக்கிய காரணமாக இருந்த பிரதிஹாரர்களைத் தண்டிக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் வட இந்தியப் படையெடுப்பை மேற்கொண்டிருக்கவேண்டும். அதற்கு மற்றொரு காரணமும் இருந்தது. குர்ஜரப் பிரதிஹார அரசன் மகேந்திரபாலனுக்கு இரண்டாம் போஜன், மஹிபாலன் என்ற இரு பிள்ளைகள் இருந்தனர். கி. பி. 910ல் மகேந்திரபாலன்

இறந்தவுடன் போஜன் அரியணையெய்தினுன். மஹிபாலனும், பிரதிஹார அரியணைக்கு உரிமை கொண்டாடினுன். கி. பி. **912**ல் மஹிபாலன் போஜனைப் பதவியிலிருந்து விலக்கி அரியணையைக் கைப்பற்றினுன். இதைச் சேதி அரசன் கக்கலன் எதிர்த்தான்; ஏனெனில் அவன் போஜனின் ஆதரவாளன். சேதிக் குடும்பத்தினருக்கும், ராஷ்டிரகூடர்களுக்கும் இடையே இக் காலப் பகுதியில் திருமணங்கள் மூலம் நெருங்கிய நட்பு வளர்ந்திருந்தது என்பதை முன்பு கூறியிருக்கிருேம். எனவே சேதி அரசனின் விருப்பத்திற்கு மாருக மஹிபாலன் போஜனைப் பதவியிலிருந்து விலக்கியது தகாத செயல் என்றும், பிரதிஹார அரசுமீது படையெடுத்துச் செல்ல அதுவே போதுமான காரணமென்றும் இந்திரன் நினைத்துப் படையெடுப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்ய முற்பட்டான்.[1]

இப் படை யெடுப்பின் பொழுது வட இந்திய அரசியல் சூழ்நிலை இந்திரனுக்குச் சாதகமாகவே இருந்தது. மூன்ரும் கோவிந்தன், துருவன் ஆகியோர் ஆட்சியில் வடஇந்தியப் படை யெடுப்பு நடந்தபொழுது இருந்ததுபோல வட இந்திய அரசுகளின் கூட்டணி ஒன்றைச் சந்திக்க வேண்டியஅவசியமோ, வலிமைமிக்க வடஇந்திய அரசர்களை எதிர்க்க வேண்டிய நிலையோ இப்பொழுது இருக்கவில்லை. வாரிசுரிமைப் போட்டி காரணமாக பிரதிஹாரர் நிலை பலவீனமடைந்திருந்தது. கி. பி. **916**-ல் ராஷ்டிரகூடப் படைகள் உஜ்ஜயினியிலிருந்து புறப் பட்டன. போபால், ஜான்ஸி, கல்பி மார்க்கமாக வட இந்தியாவை அடைந்து யமுனையைக் கடந்து ராஷ்டிரகூடப் படைகள் தங்கள் இலக்கான கன்னேசி நோக்கி முன்னேறிக் கொண்டிருந்தன. கன்னேசியை அடைந்த ராஷ்டிரகூடப் படை களுக்கு அதிக எதிர்ப்பு இருக்கவில்லை. மகிபாலன் தன் செல்வ மனைத்தையும் உள்நாட்டுப் பூசல்களில் செலவழித்து வலுவிழந்த தனுல், இந்திரனை எதிர்த்துப் போரிட முடியாமல் நாட்டை விட்டே ஓடிவிட்டான். கன்னேசி கைப்பற்றப்பட்டது. போர்க் களத்திலிருந்து தப்பித்து ஓடிய மகிபாலனைப் பின்பற்றுமாறு தன் சிற்றரசர்களுள் ஒருவனை வெமூலவாடாச் சாளுக்கிய மரபைச் சேர்ந்த இரண்டாம் நரசிம்மனை இந்திரன் அனுப்பினுன்.

[1] பிரதிஹாரர்களுக்கும் ராஷ்டிரகூடர்களுக்கும் இந்திரன் ஆட்சியில் நடந்த போருக்கு இதுதான் காரணம் என்பதற்குப் போதுமான சான்றுகள் இல்லை. இவ்விரு குடும்பத்தினருக்கிடையே நீண்ட நாட்களாக நிலவி வந்த பகைமை உறவின் ஒருகட்டம் தான் இந்தப் போர் என்று கருதுவது பொருத்தமுடையதாகும்.

அலகாபாத்வரை நரசிம்மன் அவனைப் பின் தொடர்ந்து சென்றான்.[1] மகிபாலன் இவ்வாறு ராஷ்டிரகூடர்களிடம் தோற்று ஓடிய செய்தி ராஷ்டிரகூடப் பொறிப்புகளில் காணப்படுவதோடு மட்டுமன்றி, சந்தேலர்களின் காஜுராஹோ சாஸனத்திலும் கூறப்படுகிறது. மகிபாலனுக்குப் பிரதிஹார அரியணையைச் சந்தேல அரசன் ஹர்ஷன் மீட்டுக் கொடுத்தான் என்று இச் சாஸனம் குறிப்பிடுகிறது. இந்திரன் கன்னோசியைக் கைப்பற்றியது ஒரு மகத்தான சாதனையாகும். தக்காண வரலாற்றிலேயே ஈடு இணையற்ற ஒரு நிகழ்ச்சியாக இது கருதப்படுகிறது. ஏனெனில் இதற்கு முன் வட இந்தியாவின்மீது படையெடுத்துச் சென்ற தக்காண அரசர்கள் வட இந்தியப் படைகளைப் போரில் தோல்வியுறச் செய்திருக்கக்கூடும். ஆனால் வட இந்தியப் பேரரசின் தலைநகரமாக விளங்கிய கன்னோசியை ஒரு தக்காண அரசன் கைப்பற்றுவது என்பது அவ்வளவு சாதாரண நிகழ்ச்சி அன்று. இவ்வெற்றியினால் ராஷ்டிரகூடர்களின் புகழும், பெருமையும் பெருகி வளர்ந்தது. ஆனால் இந்திரன் தொடர்ந்து கன்னோசியில் தங்கியிருக்க முடியவில்லை. கி. பி. 916-17ல் அவன் கன்னோசியை விட்டகன்றிருக்கவேண்டும். இந்திரன் கன்னோசியை விட்டுச் சென்றாலும், மகிபாலன் சந்தேல அரசன் ஹர்ஷனின் உதவியுடன் கன்னோசியை ராஷ்டிரகூடர்களிடமிருந்து மீட்டுத் தன் ஆதிக்கத்தை மீண்டும் ஏற்படுத்தியிருக்கக்கூடும்.

### இந்திரனும் வேங்கிச் சாளுக்கியர்களும்

இரண்டாம் கிருஷ்ணனின் ஆட்சியில் ராஷ்டிரகூடர்கள் வேங்கியின் மீது தங்கள் மேலாதிக்கத்தை ஏற்படுத்தும் எண்ணத்தைக் கைவிட நேர்ந்தது என்பதையும் இரு அரசுகளிடையே நட்புறவு ஏற்பட்டது என்பதையும் பார்த்தோம். இந்திரன் வேங்கிமீது தன் ஆதிக்கத்தை ஏற்படுத்துவதில் மீண்டும் ஆர்வம் காட்டினான். தன்னுடைய வெற்றிகரமான வட இந்தியப் படையெடுப்பை முடித்துக் கொண்டு, சாளுக்கிய விவகாரங்களில் தலையிட இந்திரன் முடிவு செய்தபொழுது, வேங்கி நாட்டில் அரசியல் நிலைமை அவனுக்குச் சாதகமாக இருந்தது. கிருஷ்ணன் ஆட்சியில் ராஷ்டிரகூடர்கள் செல்வாக்கை ஒழிக்கக் காரணமாக இருந்த சாளுக்கிய பீமன் இறந்து அவன் மகன் நான்காம் விஜயாதித்யன் வேங்கி அரசனாக அரியணையிலமர்ந்தான். இச் சமயத்தில் இந்திரன்

[1] நரசிம்மன் மகிபாலன்மீது பெற்ற வெற்றியை அவைக் கவிஞனான பம்பன் தன்னுடைய பாரதத்தில், மகிபாலன் பேரிடியால் தாக்கப்பட்டவன் போல உண்ணுவதற்கோ, உறங்குவதற்கோ, படைகளை ஒன்று திரட்டுவதற்கோ கூட எங்கும் தங்காமல் ஓட்டம் பிடித்தான் என்று வருணிக்கின்றான்.

வேங்கி நாட்டின் மீது ஒரு படையெடுப்பை மேற்கொண்டு விஜயாதித்யனை விர்ஜபுரி என்ற இடத்தில் சந்தித்துப் போரிட்டான். இப் போரில் விஜயாதித்யன் பெருமுயற்சி செய்து வெற்றியை ஈட்டினுன். ஆனுல், போரில் விஜயாதித்யன் உயிர் துறந்தான். எனவே இது ஒரு பயனற்ற வெற்றியாக அமைந்தது. ராஷ்டிரகூட இந்திரன் இச்சூழ்நிலையில் என்ன செய்தான் என்பது பற்றி அறிந்துகொள்ள நமக்குப் போதுமான சான்றுகள் இல்லே. இந்தச் சூழ்நிலையை இந்திரன் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளவில்லே என்பதைப் பிற்கால நிகழ்ச்சிகளிலிருந்து நாம் அறிந்து கொள்ளலாம். ஏனெனில், விஜயாதித்யன் போரில் இறக்கவே, அவனுடைய மகன் முதலாம் அம்மன் பட்டமெய்தினுன். அவன் சுமார் கி.பி. 925-வரை ராஷ்டிர கூடர்களின் குறுக்கீடின்றி அமைதியாக ஆட்சியை நடத்த முடிந்தது. அம்மனுக்குப் பிறகு இளம் வயதினனுன அவன் மகன் ஐந்தாம் விஜயாதித்யன் பட்டமெய்தியபொழுது, இந்திரன் மீண்டும் சாளுக்கிய அரசியலில் தலையிட்டான். சாளுக்கிய மரபின் வேருெரு கிளையைச் சேர்ந்த முதலாம் யுத்தமல்லனின் மகன் தாடபன் என்பவனைச் சாளுக்கிய அரியணையிலமர்த்த அவன் முயன்ருன். இம்முயற்சி வெற்றி பெறவில்லே. மீண்டும் சாளுக்கிய அரசனுக இருந்த பீமனுக்குப் போட்டியாக இந்திரன் இரண்டாம் யுத்த மல்லனை ஆதரித்து கி.பி. 928-ல் அவனை வேங்கி அரியணையிலமர்த்துவதில் வெற்றி கண்டான். ராஷ்டிரகூட ஆதரவுடன் இரண்டாம் யுத்தமல்லன் கி.பி. 934 வரை வேங்கியை ஆண்டான்.

மதிப்பீடு

மூன்ரும் இந்திரன் ராஷ்டிரகூட அரசர்களுள் சிறந்த ஓர் அரசனுகக் கருதப்படுவதற்குத் தகுதியுடையவன். கன்னேசியைக் கைப்பற்றி வட இந்தியாவில் ராஷ்டிரகூட ஆதிக்கத்தை நிலே நாட்டிய அவனது சாதனை ஒரு பரபரப்பூட்டும் நிகழ்ச்சியாகும். சேதிநாட்டுக் காலசூரிகளுடன் அவன் கொண்டிருந்த நட்புறவு இப் பணியில் அவனுக்குப் பெருந்துணையாக இருந்திருக்க வேண்டும். தன் ஆதரவாளன் ஒருவனை வேங்கி அரியணையிலமர்த்தி, வேங்கி நாட்டை மீண்டும் தன் செல்வாக்கிற்குட்படுத்தியது அவனுடைய மற்ருெரு சாதனையாகும். மேற்கூறிய சாதனைகளிலிருந்து மூன்ரும் இந்திரன் போர்த்துறையில் நல்ல ஆற்றல் மிக்கவன் என்பதும், அரச தந்திரக் கலேயில் வல்லவனுக இருந்தான் என்பதும் விளங்கும். மூன்ரும் இந்திரன் 'நித்யவர்ஷன்',

'ராஜமார்த்தாண்டன்', 'கீர்த்தி நாராயணன்' போன்ற பட்டப் பெயர்களைச் சூட்டிக் கொண்டான்.

**இரண்டாம் அமோகவருஷன் (கி.பி. 928—929)**

மூன்றும் இந்திரனுக்கு அமோகவருஷன், கோவிந்தன் என்ற இரு புதல்வர்கள் இருந்தனர். மூத்தவனுன அமோகவருஷன் இரண்டாம் அமோகவருஷன் என்ற பட்டத்துடன் கி.பி. 928-ல் அரியணையெய்தினுன். அவனுடைய ஆட்சி ஓர் ஆண்டுக் காலமே நீடித்த மிகக் குறுகிய ஆட்சி. அவன் ஆட்சி எவ்வாறு திடீரென முடிவடைந்தது என்பது தெரியவில்லை. ஆனுல், அவனுக்குப்பின் பட்டத்திற்கு வந்த அவன் தம்பி நான்காம் கோவிந்தனின் ஒரு சாஸனத்திலிருந்து அதற்கான காரணத்தை நாம் அறிய முடிகின்றது. அச் சாஸனத்தில் கோவிந்தன் அமோகவருஷனைப் பதவியிலிருந்து விலக்கித் தானே அரியணையைக் கைப்பற்றச் சூழ்ச்சி செய்ததாக ஒப்புக்கொள்கிறுன். எனவே, நான்காம் கோவிந்தன் தகாத வழியில் ராஷ்டிரகூட அரசுரிமையைப் பெற்றுன் என்பது விளங்கும். நான்காம் கோவிந்தனின் சங்கிலிச் செப்பேடுகளில் அமோகவருஷனின் பெயர் குறிப்பிடப்படாததால், அவன் அரியணை யெய்தவே இல்லை என்று ஃப்ளீட் (Fleet) என்னும் அறிஞர் கருதுகிறுர். இக் கருத்துத் தவறுகும். ஏனெனில், இச் செப்பேடுகளை வெளியிட்ட கோவிந்தன் அமோகவருஷனிடமிருந்து பதவியைப் பறித்த அவனுடைய எதிரியாவான். எனவே, அவனுடைய செப்பேடுகளில் அரசுரிமைக்கு அவனுடன் போட்டியிட்ட அமோகவருஷனின் பெயர் எங்ஙனம் இடம் பெற முடியும்? கோவிந்தனுடைய பொறிப்புகள் அவன் பெயரைக் குறிப்பிடாவிட்டாலும், மற்றப் பிற்கால ராஷ்டிரகூடப் பொறிப்புகள் அமோகவருஷனை ராஷ்டிரகூட அரசர்களுள் ஒருவனுகக் கருதுகின்றன. மூன்றும் கிருஷ்ணனின் தியோலி, கர்ஹட் செப்பேடுகள் அவன் அரியணையெய்திய செய்தியைக் கூறுகின்றன. ராஷ்டிரகூட ஆதிக்கத்திற்குட்பட்ட சிலாஹார மரபைச்சேர்ந்த அபராஜிதன் என்ற சிற்றரசனுடைய ஒரு சாஸனம் அமோகவருஷன் ஓர் ஆண்டு ஆட்சி செய்த செய்தியைக் குறிப்பிடுகின்றது. எனவே, அமோகவருஷன் ராஷ்டிரகூட அரியணையெய்தி ஆட்சி புரிந்தான் என்பதைப் பற்றி ஐயப்பாடு இருக்க முடியாது. அமோகவருஷனிடமிருந்து பதவியைப் பறிப்பதற்குக் காரணமாக இருந்த கோவிந்தன் அவன் இறப்பிற்கும் காரணமாக இருந்திருக்கக்கூடும் என்ற ஐயப்பாடும் எழுதுவது இயற்கையே. அது போல ஒரு கருத்து மக்களிடையே நிலவியது என்பதைக் கோவிந்தனின் சில சாஸனங்கள் தெளிவுபடுத்துகின்றன. காம்பே, சங்கிலிச் செப்பேடுகளில் கோவிந்தன் தன் அண்ணனைக்

கொடுமைப்படுத்தவில்லை என்று குறிப்பிட்டுச் சொல்வதிலிருந்து மக்களிடையே அது போல ஓர் எண்ணம் இருந்தது என்பது தெரிகிறது. அமோகவருஷன் இறந்தவுடன், அவனுடைய மனைவி கோவிந்தன் ஆட்சியில் தன் உயிருக்குப் பாதுகாப்பு இல்லை என்பதை உணர்ந்து, வேங்கி நாட்டிற்குச் சென்று, சாளுக்கிய அரசன் முதலாம் அம்மனின் ஆதரவில் வாழ்ந்து வந்தாள். முதலாம் அம்மனின் இந்தச் செய்கை கோவிந்தனுக்குப் பிடிக்க வில்லை போலும். எனவே, அம்மன் இறந்தவுடன் சாளுக்கிய அரசின் விவகாரங்களில் கோவிந்தன் தலையிட முடிவு செய்ததற்கு இது ஒரு காரணமாக இருக்கலாம். அமோகவருஷனுக்குப் பிள்ளைகள் இருந்தார்களா? அவ்வாறெனில் அவர்களுக்கு என்ன நேர்ந்தது? போன்ற கேள்விகளுக்கு இன்று நமக்குக் கிடைத் திருக்கும் சான்றுகளின் அடிப்படையில் விடை அளிக்க இயலாது.

### நான்காம் கோவிந்தன் (கி.பி. 930—936)

ராஷ்டிரகூடர்களின் பெருமைக்கு இழுக்கு ஏற்படும் வகையில் அமைந்தது நான்காம் கோவிந்தனின் ஆட்சி. அரியணை எய்திய பொழுது இருபத்தைந்து வயது இளைஞனை கோவிந்தனை மன்மதனைப் போல அழகுள்ளவன் என்று சங்கிலிச் செப்பேடுகள் வருணிக்கின்றன. அவன் அதிகார ஆர்வமுடைய வனாக இருந்தபோதிலும், சிற்றின்பப் பிரியனாக, ஒழுக்கங்கெட்ட வாழ்க்கை நடத்தினான். அவன் தன் அண்ணனைப் பதவியிலிருந்து விலக்கித் தகாத முறையில் ஆட்சியைக் கைப்பற்றியதால் அவனை மக்கள் வெறுத்தனர். மேலும் அவனுடைய ஒழுக்கங்கெட்ட வாழ்க்கை மக்களின் ஆதரவை இழக்கச் செய்தது. மூன்றாம் கிருஷ்ணனின் தியோலி, கர்ஹட் செப்பேடுகள் இதை உறுதிப் படுத்துகின்றன. அதிருப்தி அடைந்த மக்களும், சிற்றரசர்களும், அரசாங்க அதிகாரிகளும் ஒன்றுசேர்ந்து கோவிந்தனைப் பதவியி லிருந்து நீக்கி, அவன் மாமன் மூன்றாம் அமோகவருஷனைப் பதவியிலமர்த்தச் சதி செய்தனர். கோவிந்தன் எவ்வாறு பதவியி லிருந்து விலக்கப்பட்டான், அமோகவருஷன் பதவி பெற உதவியவர்கள் யார் என்பன போன்ற செய்திகளைப் பிறகு ஆராயலாம்.

### கோவிந்தனும் வேங்கிச் சாளுக்கியர்களும்

கி.பி. 928-ல் தன் ஆதரவு பெற்ற இரண்டாம் யுத்தமல்லனை மூன்றாம் இந்திரன் சாளுக்கிய அரியணையில் அமர்த்தினான் என்பதை முன்பு கூறியுள்ளோம். ராஷ்டிரகூட உதவியுடன் கி.பி. 934 வரை யுத்தமல்லன் வேங்கியை ஆண்டான். அவனுடைய ஆட்சியில் பலர் வேங்கி அரியணைக்கு உரிமை

கொண்டாடியதால் நாடு குழப்பத்தில் ஆழ்த்தப்பட்டது. அவன் ஆட்சிக் காலத்தில் வேங்கி அரசியலில் ராஷ்டிரகூடச் செல்வாக்கு மேலோங்கி இருந்தது. இறுதியில் கி.பி. 934-ல் இரண்டாம் பீமன் யுத்தமல்லனைப் பதவியிலிருந்து விலக்கி அரியணையைக் கைப்பற்றினன். அத்துடன் வேங்கி நாட்டில் ராஷ்டிரகூடச் செல்வாக்கு மறைந்தது.[1] நான்காம் கோவிந்தன் அச் செல்வாக்கை மீண்டும் பெறுவதற்கு எந்த நடவடிக்கையையும் மேற்கொள்ளவில்லை. அதற்குத் தேவையான ஆற்றலும் அவனிடமில்லை. அவனுடைய திறமையின்மையையும், ஒழுக்கமின்மையையும் கண்ட மக்களும், சிற்றரசர்களும், அதிகாரிகளும் அவன் மீது வெறுப்புக் கொண்டு அவனைப் பதவியிலிருந்து விலக்குவது இன்றியமையாதது என்று எண்ணிக் கொண்டிருந்த சூழ்நிலையில் அவனல் சாளுக்கிய விவகாரங்களில் தலையிடமுடியவில்லை.

கோவிந்தனும் வெமுலவாடச் சாளுக்கியரும்

கோவிந்தனுக்கும், அவன் ஆதிக்கத்திற்கு உட்பட்டிருந்த வெமுலவாடச் சாளுக்கியர்களுக்குமிடையே அவன் ஆட்சியில் ஒரு பூசல் நிகழ்ந்தது. வெமுலவாடச் சாளுக்கிய அரசனை இரண்டாம் அரிகேசரி, வேங்கி அரியணை மீது உரிமை கொண்டாடிய பல இளவரசர்களுள் ஒருவனை ஐந்தாம் விஜயாதித்யனுக்குத் தன் நாட்டில் புகலிடம் அளித்திருந்தான். அவனைத் தன்னிடம் ஒப்படைக்கவேண்டும் என்று அரிகேசரிக்குக் கோவிந்தன் விடுத்த கோரிக்கையை அரிகேசரி ஏற்கவில்லை. எனவே, சினங்கொண்ட கோவிந்தன் தன் ஆதிக்கத்துக்குட்பட்ட சிற்றரசன் அரிகேசரியைத் தண்டிக்க விரும்பினன். இச் சமயத்தில்தான் கோவிந்தனைப் பதவியிலிருந்து விலக்க வேண்டியது இன்றியமையாதது மட்டுமல்லாமல் நாட்டின் நலனுக்கு அது உடனடித் தேவை என்பதையும் மக்களும் அதிகாரிகளும் உணரத் தொடங்கியிருந்தனர். இந்த எண்ணத்துக்கு உருக் கொடுக்க ஒரு சதித் திட்டத்தை உருவாக்க அப்போது முயற்சிகள் நடந்து கொண்டிருந்தன. அம் முயற்சிகளில் இரண்டாம் அரிகேசரி ஒரு முக்கியப் பங்கு ஏற்றிருக்க வேண்டும்.

கோவிந்தன் ஆட்சியில் அதிருப்தி அடைந்த அதிகாரிகளும் மக்களும் ஏற்கெனவே கோவிந்தனின் சிற்றப்பனை மூன்றும்

[1] சாளுக்கிய அரசன் இரண்டாம் பீமனின் சாஸனங்கள் கோவிந்தனல் அனுப்பப்பட்ட பெரும்படை ஒன்றை அவன் முறியடித்தான் என்று கூறுகின்றன. ட இந்தக் கோவிந்தன் ராஷ்டிரகூட நான்காம் கோவிந்தனுகத்தான் இருக்கவேண்டும். இந்நிகழ்ச்சி வேங்கி நாட்டில் ராஷ்டிரகூடச் செல்வாக்கு மறைவதற்குக் காரணமாக இருந்திருக்கலாம்.

அமோகவருஷனுடன் தொடர்பு கொண்டு அவனை ராஷ்டிரகூட அரசப் பதவியை ஏற்கும்படி வேண்டிக்கொண்டிருந்தனர். அமோகவருஷன் காலசூரி இளவரசியை மணந்துகொண்டிருந்ததனால் சேதி நாட்டுத் தலைநகரமான திரிபுரியில் அப்போது தங்கியிருந்தான். உலக இன்பங்களையெல்லாம் மறந்து சமய ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்த அமோகவருஷனுக்கு இந்த வேண்டுகோள் ஏற்புடையதாக இல்லை. அரியணையில் அமர அவன் ஆர்வமும் காட்டவில்லை. பம்பன் என்னும் அவைக் கவிஞனின் விக்கிரமார்ஜுன விஜயம் என்னும் நூலில் மேற்கூறிய செய்திகள் காணப்படுகின்றன. மூன்றும் கிருஷ்ணனின் தியோலி, கர்ஹட் செப்பேடுகளும் இவற்றை உறுதிப்படுத்தும் வகையில் ராஷ்டிரகூடர்களின் குலப் பெருமையைக் காக்கும் பொருட்டு ராஷ்டிரகூட அரியணையை ஏற்றுக் கொள்ளும்படி அவனுடைய சிற்றரசர்கள் அமோகவருஷனை வேண்டிக்கொண்டார்கள் என்ற செய்தியைக் கூறுகின்றன. தன்னை அரியணையில் அமர்த்தும் திட்டத்தில் அமோகவருஷன் ஆர்வம் காட்டாத போதிலும், அவனுடைய புகழார்வம் மிக்க மகன் கிருஷ்ணன் தன் தந்தையை இவ் வேண்டுகோள்களை ஏற்கும்படித் தூண்டியிருக்க வேண்டும். கோவிந்தனும் கிருஷ்ணனும் சேதி நாட்டுக் காலசூரிகளுடன் திருமணம் மூலம் நட்புறவு கொண்டிருந்ததால் சேதி அரசன் முதலாம் யுவராஜனும், அமோகவருஷனை அரசனுக்கும் முயற்சியில் முக்கியப் பங்கேற்றிருக்க வேண்டும்.[1]

வெமூலவாடச் சாளுக்கிய அரசன் இரண்டாம் அரிகேசரி சேதி நாட்டு அரசன் முதல் யுவராஜன் ஆகியவர்களைத் தவிர மற்றோர் அரசனும் இச் சதித்திட்டத்தில் முக்கியப் பங்கேற்றிருந்தான். அவன்தான் கங்க அரசன் இரண்டாம் பூதுகன். அந்தக் கங்க அரசன் அமோகவருஷனின் மகள் ரேவகநிம்பதி என்பவளை மணந்திருந்தான். எனவே, தனது மாமனார் ராஷ்டிரகூட அரியணை எய்துவதில் ஆர்வம் கொண்ட பூதுகன் இத் திட்டத்தில் பங்கேற்றிருக்க வேண்டும். மேலும் கங்க நாட்டை ஆண்டுகொண்டிருந்த தன் சகோதரனை மூன்றும் ராச்சமல்லனைப் பதவியிலிருந்து விலக்கித் தான் அரியணையைப் பெற பூதுகன் திட்டமிட்டுக் கொண்டிருந்தான். அதற்கு அமோகவருஷனின் உதவி தேவைப் பட்டது. அவ் உதவியைப் பெறும் நோக்கத்துடன் அமோக

[1] சேதிநாட்டு அவைக் கவிஞனை ராஜசேகரனின் நாடக நூல் ஒன்றில் இந்நிகழ்ச்சிகளின் பிரதிபலிப்பைக் காண்கிறோம். அந் நாடகத்தில் குறிப்பிடப்பட்டிருக்கும் நாடுகளின் பெயரும் அரசர்களின் பெயரும் வேறாக இருப்பினும் அந் நாடகத்தில் வருணிக்கப்பட்டிருக்கும் நிகழ்ச்சி, இந்த நிகழ்ச்சியாகத்தான் இருக்கவேண்டும்.

—A. S. Altekar, op. cit., p. 109

வருஷனுக்கு இவ்வுதவியைச் செய்ய பூதுகன் தயங்கவில்லை. வெமூலவாட அரசன் இரண்டாம் அரிகேசரி கீழைச் சாளுக்கிய அரசன் விஜயாதித்யனைக் கோவிந்தனிடம் ஒப்படைக்க மறுத்தான் என்பதனையும் அதற்காக அரிகேசரியைத் தண்டிக்கக் கோவிந்தன் நினைத்தான் என்பதையும் முன்பு குறிப்பிட்டோம். இந்தச் சமயத்தில்தான் கோவிந்தனை அரியணையிலிருந்து அகற்றி அமோக வருஷனை அரியணையில் அமர்த்தும் திட்டம் மேற்கூறிய அரசர்களால் உருவாக்கப்பட்டிருந்தது. கோவிந்தனின் ஆதிக்கத்திற்குட்பட்ட பல சிற்றரசர்களும் அமைச்சர்களும் அவனிடமிருந்து விலகிக்கொண்டு அவனுடைய எதிரிகள் பக்கம் சேர்ந்துகொண்டனர். இந்தச் சூழ்நிலையில் சாதாரண ஒரு சிற்றரசனாக இயங்கிக் கொண்டிருந்த அரிகேசரி, தன் மேலாளனான ராஷ்டிரகூட அரசனையே எதிர்த்துப் போராடும் துணிவைப் பெற்றான். சதித்திட்டத்தில் சேர்ந்து கொண்டு அக் கூட்டணியின் தலைமையை ஏற்றான். அரிகேசரியின் தலைமையில் கூட்டணியின் படைகளுக்கும் கோவிந்தனின் படைகளுக்கும் நடந்த சண்டையில் கூட்டணியினர் பெரும் வெற்றி பெற்று அமோகவருஷன் ராஷ்டிரகூட அரசனாக அரியணையில் அமர்த்தப்பட்டான்.

வெற்றிவாகை சூடிய அமோக வருஷன் மான்யகேடத்தை நோக்கி முன்னேறிக் கொண்டிருந்த போது, சில பகுதிகளில் கோவிந்தனிடம் இன்னும் பற்றுறுதியோடு இருந்த படைத்துறை அதிகாரிகள் சிலர் அவனை எதிர்த்தனர். அவ்வெதிர்ப்பை எல்லாம் முறியடித்து அமோகவருஷன் மான்யகேடத்தை அடைந்தபோது மக்களின் மகிழ்ச்சிக்கு எல்லையேயில்லை. சிற்றரசர்களும், உயர் அதிகாரிகளும், மக்களும் மகிழ்ச்சி ஆரவாரத்துடன் அவனை வரவேற்று ராஷ்டிரகூட மகுடத்தை அவனுக்களித்தனர். கி.பி. 934 வரை கோவிந்தன் ஆண்டுகொண்டிருந்தான் என்பது அவன் பொறிப்புகளிலிருந்து தெரிகிறது. மூன்றும் அமோகவருஷன் கி. பி. 937-ல் அரியணையில் இருந்தான் என்பதும் திட்டவட்டமாகத் தெரிகிறது, எனவே, இந் நிகழ்ச்சிகள் கி.பி. 935, 936 ஆண்டுகளில் நடந்து 936-ல் கோவிந்தன் பதவியை இழந்திருக்கக்கூடும். கோவிந்தன் வீழ்ச்சி குறித்துக் கர்ஹட் செப்பேடுகள் கூறும் பின்வரும் செய்தி, அவைக் கவிஞனின் உயர்வுநவிற்சிக் கூற்றாகயிருப்பினும் உண்மை நிலையையே பிரதிபலிக்கின்றது என்பதில் சற்றும் ஐயமில்லை. 'அவனுடைய அறிவுத்திறன் இளமங்கையர்களின் கண்களில் சிறைப்பட்டது; அழகான இள நங்கையர்களின் கண்பார்வையின் ஒளி வீச்சில் அவன் உள்ளம் சிக்கிக்கொண்டது; அவனுடைய உடல்

பல நோய்களினால் பாதிக்கப்பட்டதனால் உடல் உறுப்புகள் வலுவிழந்து காணப்பட்டன; அவனுடைய ஒழுக்கங்கெட்ட நடத்தை எல்லோருடைய ஆதரவையும் இழக்கச் செய்தது; அரசின் பல்வேறு உறுப்புகள் இணைந்து இயங்கும் தன்மையை இழந்தன. இதனால் அவனுடைய வலிமையும் செல்வாக்கும் மறைந்து அவனுடைய அழிவு தவிர்க்க முடியாததாகிவிட்டது."[1]

### மூன்றும் அமோகவருஷன் (கி.பி. 936—939)

மூன்றும் அமோகவருஷன் பட்டமெய்தியபொழுது அவனுக்கு ஐம்பது வயதிற்குமேல் இருக்கும். அரச காரியங்களைவிட ஆன்மீக விஷயங்களில் அவனுக்கு அதிக ஈடுபாடு இருந்தது. ஆழ்ந்த சமய உணர்வு கொண்டிருந்த அவன், தான் வழிபட்ட கடவுளான சிவனுக்குப் பல கோயில்கள் கட்டினான். அந்தணர்களுக்கும் கோயில்களுக்கும் ஏராளமாக நன்கொடைகள் வழங்கினான். எனவே, அரசாங்கப் பொறுப்பு முழுவதையும் அவனுடைய மூத்த மகன் கிருஷ்ணன் ஏற்றுக் கொண்டான். அமோகவருஷன் பெயரளவில்தான் அரசனாக இருந்தான்.

அமோகவருஷன் ஆட்சியில் இளவரசன் கிருஷ்ணனின் முதல் சாதனை பூதுகனைக் கங்க நாட்டு அரசனாக்கியதாகும். அமோகவருஷனை அரியணையில் அமர்த்தும் முயற்சியில் பூதுகனுக்கு ஒரு முக்கியப் பங்கு இருந்தது என்பதைப் பார்த்தோம். மேலும், அமோகவருஷனுடைய மூத்த மகள் ரேவகநிம்பதி என்பவளைப் பூதுகன் மணந்திருந்தான். எனவே, இளவரசன் கிருஷ்ணன் தன் சகோதரியின் கணவனான பூதுகனைக் கங்க நாட்டு அரசனாக்குவதில் ஆர்வம் காட்டினான். அப்போது கங்க அரியணையில் இருந்தவன் ராச்சமல்லன் என்பவன். பூதுகனை அரசனாக்குவதன் மூலம் கங்கநாட்டின் நட்பையும் உதவியையும் தொடர்ந்து பெற முடியும் என்ற எண்ணத்துடன் கிருஷ்ணன் தெற்கு நோக்கி ஒரு படையெடுப்பை மேற்கொண்டான். கங்க அரசன் ராஜ மல்லனின் ஆதிக்கத்திற்கு உட்பட்டிருந்த தந்திகன், வப்புகன் என்ற இரண்டு நொளம்பச் சிற்றரசர்களை முதலில் போரில் வென்று, கங்கவாடியை நோக்கித் தன் படைகளை நடத்திச் சென்றான்.

[1] 'His intellect became ensnared in the eyes of young women ; his mind became hemmed in by the flashes of the eyes of beautiful damsels; his limbs became enfeebled as his body began to be undermined by a number of maladies; his vicious conduct alienated the sympathies of all men; the constituents of the body politic became non-coherent neutralising his strength and power and he met with a natural destruction" (Karhad plates)

—G. Yazdani (Ed.), op. cit., p. 190

ராச்சமல்லனுடன் போரிட்டு அவனைப் போரில் கொன்று, கங்க அரியணையில் பூதுகனை அமர்த்தினான். இது சுமார் கி. பி. 937-ல் நடந்திருக்க வேண்டும். ஏனெனில், கி.பி. 937-ல் பொறிக்கப் பட்ட இசமதுரு சாஸனம் ராச்சமல்லன் போரில் கொல்லப் பட்டுப் பூதுகன் கிருஷ்ணனால் அரசனாக்கப்பட்ட செய்தி யைக் கூறுகின்றது.

அடுத்து, கிருஷ்ணன் சேதி நாட்டின் மீது படையெடுத்துச் சென்றான். கோவிந்தனுடைய ஆட்சியில் சேதி நாட்டையாண்ட காலசூரிகளுக்கும், ராஷ்டிரகூடர்களுக்குமிடையே திருமண உறவுகள் மூலம் நெருங்கிய நட்புறவு இருந்தது என்பதை நாம் அறிவோம். அமோகவருஷனுடைய மனைவியும் கிருஷ்ணனுடைய மனைவியும் சேதி இளவரசிகள் ஆவர். மேலும் அமோகவருஷனை ஆட்சிபீடத்தில் அமர்த்துவதில் சேதி அரசர்களும் பங்கு கொண் டனர். அவ்வாறு இருக்க இந்த நீண்ட நட்புறவு எவ்வாறு முறிந்தது? இளவரசன் கிருஷ்ணன் சேதிநாட்டின் மீது படை யெடுத்துச் செல்லவேண்டிய அவசியம் என்ன? இந்தக் கேள்வி களுக்குச் சரியான விடைகள் கிடைக்கவில்லை. சேதி நாட்டின் மீது படையெடுத்துச் சென்ற கிருஷ்ணன் சாகஸதுங்கன் என்ற சேதி இளவரசனைப் போரில் தோற்கடித்தான். இதனால் இவ்விரு குடும்பங்களுக்கிடையே நிலவிய நட்புறவு முறிந்தது. இதைத் தொடர்ந்து கிருஷ்ணன் குர்ஜரப் பிரதிஹாரர்களின் அரசின் மீது படையெடுத்துச் சென்று அவர்கள் ஆதிக்கத்திற்கு உட்பட்ட சந்தேலர்களைப் போரில் வென்று கலிஞ்சார், சித்திரகூடம் எனும் இரு கோட்டைகளைக் கைப்பற்றினான்.[1] இப் படையெடுப்புப் பற்றித் தியோலிச் செப்பேடுகள் கூறும் செய்தி அண்மையில் வெளியிடப்பட்ட ஜுராக் கல்வெட்டின் மூலம் உறுதிப்படுத்தப் படுகிறது. இவ்விரு பொறிப்புகளும் கிருஷ்ணனின் வட இந்தியப் படையெடுப்பில் அவன் பெரும் வெற்றி ஈட்டியதைக் குறிப்பிடு கின்றன. கங்க நாட்டில் தன் ஆதரவாளனை அரசனாக்கி அந் நாட்டைத் தன் செல்வாக்கு மண்டலத்திற்கு உட்படுத்தியதும், பிரதிஹாரர்கள் மீது படையெடுத்துச் சென்று வெற்றியுடன் திரும்பியதும் கிருஷ்ணனுடைய குறிப்பிடத்தக்க இரு சாதனை களாகும். இவ்விரு சாதனைகளும் அவன் அரியணையில் அமர்வதற்கு முன்பே இளவரசனாக இருந்தபொழுது புரிந்த சாதனைகளாகும். கி. பி. 940-ல் வெளியிடப்பட்ட தியோலி செப்பேடுகள்

[1] மூன்றாம் இந்திரன் ஆட்சியில் ராஷ்டிரகூடப் படைத்தளங்கள் நிறுவப்பட்ட இவ்விரு கோட்டைகளை, பிரதிஹாரர்கள் மீண்டும் கைப்பற்றி இருக்கலாம். இக் கோட்டைகளை மீண்டும் பிரதிஹாரர்களிடமிருந்து கைப்பற்றுவது கிருஷ்ணனின் இப் படையெடுப்பின் நோக்கமாக இருக்கலாம்.

இதை உறுதிப்படுத்துகின்றன.[1] (கி.பி. 939-ல் அமோகவருஷன் இறந்தபொழுது, தன்னுடைய மகனின் திறமையையும் போராற்றலையும் நேராகக் கண்டு, திறமைசாலியான ஒருவனிடம் நாட்டுப் பொறுப்பை ஒப்படைத்திருக்கும் மன நிறைவோடு இறந்தான்.)

## மூன்றும் கிருஷ்ணன் (கி. பி. 939—967)

இளவரசனாக இருக்கும்பொழுதே, தன் போர்த்திறமையைக் கிருஷ்ணன் வெளிப்படுத்தினான் என்பதை அமோகவருஷனின் இறுதி ஆண்டுகளில் நடந்த நிகழ்ச்சிகளில் பார்த்தோம். எனவே, அவன் பட்டத்திற்கு வருவதை எதிர்க்கக்கூடிய துணிவுள்ளவர்கள் எவரும் இருக்கவில்லை. இருப்பினும், கங்க அரசன் இரண்டாம் பூதுகனின் ஒரு பொறிப்பு, பூதுகன் கிருஷ்ணனை ராஷ்டிரகூட அரியணையில் அமர்த்தினான் என்று கூறுவதிலிருந்து, வாரிசுரிமைப் போட்டி ஏற்பட்டிருக்கக் கூடுமென்றும், கிருஷ்ணனோடு போட்டியிட்டவர்களைப் பூதுகன் போரில் வென்று, கிருஷ்ணன் அரியணையைப் பெற உதவியிருக்கக்கூடுமென்றும் எண்ணத் தோன்றுகிறது.) இவ்வாறு கருதுவதற்கு வேறு எந்த ஆதாரமும் இல்லை. தன்னுடைய புகழார்வம் மிக்க முன்னோர்களின் உதாரணத்தைப் பின்பற்றி வடக்கிலும் தெற்கிலும் தன் படை வலிமையை நிரூபிக்கப் படையெடுப்புகளை மேற்கொள்ளக் கிருஷ்ணன் திட்டமிட்டான். ஆனால், இத் திட்டத்தைச் செயல் படுத்துவதற்கு முன்பாக, தன் ஆட்சியின் முதல் இரண்டு ஆண்டுகளைத் தன் நாட்டில் அமைதியையும் ஒழுங்கையும் நிலை நாட்டுவதிலும், தன் படைவலிமையைப் பெருக்கிக்கொள் வதிலும் செலவழித்தான். அவனுடைய போர் நடவடிக்கைகள் அவனுடைய மூன்றாவது ஆட்சி ஆண்டிற்குப் பிறகுதான் தொடங்கியிருக்கவேண்டும்.

## கிருஷ்ணனும் சோழர்களும்

இளவரசனாயிருக்கும்பொழுது வட இந்தியப் படையெடுப்பு ஒன்றை மேற்கொண்டு கிருஷ்ணன் வெற்றி வாகை சூடித் திரும்பியிருந்ததால் வட இந்தியா மீது உடனடியாக ஒரு பண்ட

[1] இந்தச் செப்பேட்டில் மூன்றும் அமோகவருஷனின் ஆட்சியில் நடந்த நிகழ்ச்சிகள் வரிசைக் கிரமமாக வருணிக்கப்படுகின்றன. அமோகவருஷன் பட்டமெய்தியது, கிருஷ்ணனின் கங்க நாட்டுப் படையெடுப்பு, அவன் கலிஞ்சார், சித்ரகூடம் என்னும் வட இந்தியக் கோட்டைகளைக் கைப்பற்றியது, அமோகவருஷனின் இறப்பு, கிருஷ்ணன் பட்டமெய்தியது என்ற வரிசையில் நிகழ்ச்சிகள் கூறப்படுவதிலிருந்து, இப் படையெடுப்புகள் அவன் இளவரசனாக இருந்தபொழுதே நடந்திருக்க வேண்டுமென்று உறுதியாகக் கூறலாம்.

—A. S. Altekar, op. cit., pp. 113—114

யெடுப்பை மேற்கொள்ளவேண்டிய அவசியம் எழவில்லை. ஆனால், தென்னிந்தியாவில் நிலைமை வேறாகவிருந்தது. பல்லவர்கள் ஆதிக்கம் மறைந்து முதலாம் ஆதித்யன், முதலாம் பராந்தகன் ஆகியவர் ஆட்சியில் சோழர்கள் ஆதிக்கம் வெகு வேகமாக வளர்ந்துகொண்டிருந்தது. பல்லவர்கள் ஆட்சிக்கு உட்பட்டிருந்த தொண்டை மண்டலம் சோழர்களால் கைப்பற்றப்பட்டது. கிருஷ்ணனின் சமகாலத்துச் சோழ அரசனான முதலாம் பராந்தகனுடைய ஆக்கிரமிப்புக் கொள்கை தென்னிந்தியாவில் ராஷ்டிரகூடர்களின் செல்வாக்கைக் குலைக்கும் வகையில் அமைந்திருந்தது. வேகமாக வளர்ந்துவரும் சோழர்களின் செல்வாக்கினால் விளைந்த அபாயத்தைப் போக்கச் சோழர்களுடன் போரிடவேண்டியது தவிர்க்க முடியாதது என்று கிருஷ்ணன் உணர்ந்தான். இந்தப் போருக்கு வேறு சில காரணங்களும் இருந்தன. ராஷ்டிரகூட இரண்டாம் கிருஷ்ணன் தன் மகள் வயிற்றுப்பேரன் கன்னரதேவனைச் (முதலாம் ஆதித்யன் மகன்) சோழ அரியணையில் அமர்த்த விரும்பினான். முதலாம் ஆதித்யனுக்குப் பிறகு அவனுடைய மற்றொரு மகன் பராந்தகன், சோழ அரியணையில் அமரவே கன்னரதேவனின் உரிமையை நிலைநாட்டக் கிருஷ்ணன் சோழ நாட்டின்மீது படை எடுத்துச்சென்றான். பராந்தகன், கங்க அரசன் பிரிதிவிபதியின் உதவியுடன் ராஷ்டிரகூடப் படைகளை முறியடித்தான். இவ்வாறு தன் எண்ணம் நிறைவேறாமல் கிருஷ்ணன் நாடு திரும்ப வேண்டியிருந்தது.

இவ்வாறு தன் மரபினருக்கு முன்பு ஏற்பட்ட பழியைத் துடைப்பதற்காகவும், பராந்தகனைப் பழிவாங்குவதற்காகவும் மூன்றாம் கிருஷ்ணன் இப் படையெடுப்பை மேற்கொண்டான். அந்தப் போரில் ராஷ்டிரகூடர்களின் ஆதிக்கத்தை ஏற்றிருந்த பாணர்களும் வைதும்பர்களும் கிருஷ்ணனுக்கு உதவினார்கள். போரின் இறுதியில் அவர்களுடைய அரசுகள் அவர்களிடமிருந்து பறிக்கப்பட்டன. இவ்வாறு பராந்தகனிடம் தோல்வியடைந்து தங்கள் அரசுகளை இழந்த பாணர்களும், வைதும்பர்களும் சோழர்களுடன் மீண்டும் ஒரு போரைத் தொடங்கும்படி மூன்றாம் கிருஷ்ணனை ஊக்கியிருக்கக்கூடும். போரார்வமும் புகழார்வமும் மிக்க கங்க அரசன் இரண்டாம் பூதுகனும் கிருஷ்ணனைப் போர் செய்யும்படி தூண்டியிருக்கக்கூடும். மேலும், தன்னுடைய தகப்பனார் அமோகவருஷனுக்குப் போட்டியாக அரசுரிமையைக் கைப்பற்ற முயற்சி செய்து பதவியிலிருந்து விலக்கப்பட்ட நான்காம் கோவிந்தனுக்குப் பராந்தகன் புகலிடம் அளித்திருந்தான். இது கிருஷ்ணனின் ஆத்திரத்தை அதிகரித்தது. எனவே,

கிருஷ்ணனும் பூதுகனும் சேர்ந்து ஒரு பெரும் படையைத் திரட்டிக்கொண்டு சோழநாட்டின் மீது படையெடுத்துச் சென்ருர்கள்.

இப்படையெடுப்பு கி. பி. 943-ல் நடந்திருக்கக்கூடும். இந்த ராஷ்டிரகூடப் படையெடுப்பு பராந்தகனுல் எதிர்பார்க்கப்பட்ட ஒன்றுதான். கிருஷ்ணன் ராஷ்டிரகூட அரியணை எய்துவதற்கு முன்பிருந்தே பராந்தகன் சோழநாட்டை இப்படையெடுப்பிலிருந்து காப்பாற்றத் தடுப்பு நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டிருந்தான். திருமுனைப்பாடி நாடு என்ற பகுதியில் இளவரசன் ராஜாதித்யன் தலைமையில் யானைப்படை, குதிரைப்படை உட்பட ஒரு பெரும்படை வைக்கப்பட்டிருந்தது என்பது பொறிப்புகள் மூலம் தெரியவருகிறது. பல ஆண்டுகள் ராஜாதித்யனும் அவன் தம்பி அரிகுல கேசரியும் அப்பகுதியிலேயே தங்கியிருந்தனர். தன்னுடைய ஆக்கிரமிப்புக் கொள்கையினுல் இதுபோன்ற விளைவு ஏற்படக்கூடும் என்பதைப் பராந்தகன் எதிர்பார்த்துத்தான் மேற்கூறிய தற்காப்பு நடவடிக்கைகளை மேற்கொண்டான் போலும். கி.பி. 944ஆம் ஆண்டு பராந்தகனின் கன்னியாகுமரிப் பொறிப்பு அவன் கிருஷ்ணராஜனுடன் போரிட்டு வெற்றி பெற்ற செய்தியைக் குறிப்பிடுகிறது. எனவே, ராஷ்டிரகூட அரசனுடன் கி. பி. 944ஆம் ஆண்டிற்கு முன்பே பராந்தகன் போரிட்டிருக்க வேண்டுமென்பது இதிலிருந்து தெரிகிறது. ஆனுல், பராந்தகன் இந்தப் போரில் வெற்றி பெற்ருன் என்பது உண்மையாக இருக்க முடியாது. ஏனெனில் கி. பி. 944-லிலிருந்து தன் ஆட்சி இறுதி வரை கிருஷ்ணன் தொண்டைமண்டலத்தைத் தன் வசம் வைத்துக்கொண்டிருந்தான் என்பதற்கு வலுவான ஆதாரங்கள் இருக்கின்றன. எனவே, கி. பி. 943-ல் கிருஷ்ணனும் பூதுகனும் இணைந்து சோழநாட்டின் மீது படையெடுத்து, சோழநாட்டின் ஒரு பகுதியான தொண்டைமண்டலத்தைக் கைப்பற்றியிருக்க வேண்டும்.

காஞ்சிபுரமும் தஞ்சாவூரும் அவர்களால் கைப்பற்றப்பட்டபோதிலும், தஞ்சைப் பகுதியில் ராஷ்டிரகூடப் படைகள் வெகுநாட்கள் இருக்க முடியவில்லை. ஆனுல், தொண்டைமண்டலம் ராஷ்டிரகூடர்களால் தங்கள் உடைமை ஆக்கிக்கொள்ளப்பட்டது என்பதில் ஐயப்பாடு இருக்கமுடியாது. கிருஷ்ணனுடைய ஐந்தாம் ஆட்சி ஆண்டைச் சேர்ந்த சித்தலிங்க மடம் (தென் ஆற்காடு) பொறிப்பு கிருஷ்ணன் காஞ்சிபுரத்தையும் தஞ்சையையும் வென்றதைக் குறிப்பிடுகின்றது. கி. பி. 949ஆம் ஆண்டைச் சேர்ந்த சோழபுரம் பொறிப்பு (வட ஆற்காடு)

ராஜாதித்யனைத் தோற்கடித்த கிருஷ்ணன் தொண்டைமண்டலத்தில் நுழைந்த செய்தியைக் கூறுகிறது. அவனுடைய பதினாறும் ஆட்சி ஆண்டுச் சாஸனம் ஒன்று காஞ்சியையும் தஞ்சாவூரையும் வென்றவன் என்று அவனை வருணிக்கின்றது. அவனுடைய பதினேழாவது, பத்தொன்பதாவது ஆட்சி ஆண்டுகளைச் சேர்ந்த இரண்டு பொறிப்புகள் செங்கற்பட்டு மாவட்டத்தில் கிடைத்துள்ளன. கிருஷ்ணனுடைய ஐந்தாம் ஆட்சி ஆண்டிலிருந்து இருபத்தியாறும் ஆட்சி ஆண்டு வரையிலான காலப்பகுதியைச் சேர்ந்த ஏராளமான பொறிப்புகள் தொண்டைமண்டலப் பகுதியில் (செங்கற்பட்டு, வடாற்காடு, தென்னாற்காடு மாவட்டங்கள்) கிடைத்துள்ளதால், அப்பகுதி கிருஷ்ணனின் ஆதிக்கத்திற்கு உட்பட்டிருக்க வேண்டும் என்று கருதுவது பொருத்தமுடையதாகும். இதைக் கி.பி. 959ஆம் ஆண்டு கிருஷ்ணனின் கர்ஹட் செப்பேடு உறுதிப்படுத்துகிறது. ஆனால், கி.பி. 949-ல் நடந்த தக்கோலப் போருக்கு முன்பே கிருஷ்ணன் தொண்டைமண்டலத்தின் மீது படையெடுத்திருக்க முடியாது என்று பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரி கருதுகிறார்.[1] அப்படி ஒரு படையெடுப்பு நடந்திருக்கக் கூடும் என்று கருதுவதில் தவறில்லை. இப் படையெடுப்பிற்குப் பிறகு தொண்டைமண்டலம் கைப்பற்றப்பட்டதன் விளைவுதான் தக்கோலப் போராக இருக்க வேண்டும். கிருஷ்ணனைத் தொண்டைமண்டலத்திலிருந்து வெளியேற்றப் பராந்தகன் எடுத்துக்கொண்ட எதிர் நடவடிக்கைகளின் விளைவாகத் தக்கோலப் போர் நடந்திருக்கக்கூடும்.

ராஜாதித்யனின் தலைமையில் தொண்டைமண்டலத்திற்கு அனுப்பப்பட்ட சோழப் படைகளும், ராஷ்டிரகூடக் கிருஷ்ணன் படைகளும் வடாற்காடு மாவட்டத்தில் அரக்கோணத்திற்கருகில் தக்கோலம் என்ற இடத்தில் மோதிக்கொண்டன. சோழப் படைகள் வீர உணர்ச்சியுடன் கடுமையாகப் போரிட்டன.

[1] சித்தலிங்கமடம் பொறிப்புக் கூறும் செய்தியை ஏற்றுக்கொண்டால் கி.பி. 949-ல் நடந்த தக்கோலப் போருக்கு முன்பே கிருஷ்ணன் தொண்டை மண்டலத்தின்மீது படையெடுத்து அதைத் தன்வசப்படுத்திக் கொண்டிருக்கவேண்டும். தக்கோலப் போருக்கு முன்பு ராஷ்டிரகூடப் படையெடுப்பு நடக்கவில்லை என்றும், சித்தலிங்கமடம் பொறிப்புக் கூறும் செய்தி நம்பத்தக்கது அன்று என்றும் பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரி கருதுகிறார். அப்படி கி. பி. 944ஆம் ஆண்டிலேயே கிருஷ்ணன் தொண்டை மண்டலத்தைக் கைப்பற்றியிருந்தால் கி.பி.948ஆம் ஆண்டுவரை பராந்தகனுடைய பொறிப்புகள் அப்பகுதியில் எவ்வாறு இருந்திருக்க முடியும்? கி. பி. 949-ல் ராஜாதித்யன் எப்படித் தக்கோலத்தில் தங்கியிருக்க முடியும்; தக்கோலப் போர் எவ்வாறு நடந்திருக்க முடியும்? எனவே, சித்தலிங்கமடம் பொறிப்பில் ஏதோ தவறு இருக்க வேண்டும். மேலும் அந்தப் பகுதியிலிருந்து கிருஷ்ணனுடைய பதினாறும் ஆட்சி ஆண்டிற்கு முற்பட்ட காலப்பகுதியைச் சேர்ந்த வேறு ஒரு பொறிப்பும் கிடைக்கவில்லை என்பது இங்கு நோக்கத்தக்கது.

—K. A. Nilakanta Sastri, *Cholas*, p. 158.

தொடக்கத்தில் போர், சோழர்களுக்குச் சாதகமாக இருந்தது என்பதை ராஷ்டிரகூடச் சாஸனங்களே ஒப்புக்கொள்கின்றன. ஆனால், இறுதியில் கங்க அரசன் பூதுகனும் ராஷ்டிரகூடப் படைத்தலைவன் மானலேரனும் தங்கள் படைகளை ஊக்குவித்துத் தீவிரமாகப் போரிட்டுப் போரில் வெற்றி கண்டனர். பூதுகன் ராஜாதித்யனை நோக்கிப் பாய்ந்து அவன் அமர்ந்திருந்த அம்பாரியிலேறி அவனையும், அவன் யானையையும் வெட்டி வீழ்த்தினன். தங்கள் தலைவனை யிழந்த சோழப் படைகள் போரில் ஆர்வத்தை இழந்து அங்குமிங்கும் சிதறி ஓடின. போர் ராஷ்டிரகூடர்களுக்குப் பெரு வெற்றியில் முடிந்தது. இந்த வெற்றிக்கு மூலகாரணமாக இருந்த பூதுகனைப் போற்றும் வகையில் கிருஷ்ணன் அவனுக்கு வனவாசி - 12000, பெல்வோல் - 300, புரிகேரி - 300, கின்சுகாட் -70, பாகேநாட் - 70 (Banavasi, Belvol, Purigere, Kinsukad, Bagenad) ஆகிய பகுதிகளின் ஆளுநர் பதவியை அளித்தான். பூதுகன் ராஜாதித்யனைத் தாக்கி, அவனைக் கொன்று, தக்கோலத்தில் சோழர் மீது வெற்றி பெற்ற செய்தியை ஆதாகூர் (Atakur) பொறிப்புக் கூறுகிறது. போரில் ராஜாதித்யன் இறந்த செய்தியைச் சோழர்களுடைய திருவாலங்காட்டுச் செப்பேடுகளும், பெரிய லெய்டன் பட்டயங்களும் குறிப்பிடுகின்றன. இவை கூறும் செய்திகளிலிருந்து போர் கடுமையாக நடந்தது என்பதையும், பூதுகனால் ஏவப்பட்ட அம்பு ஒன்று ராஜாதித்யனைக் காயப்படுத்திக் கொன்றது போரின் திருப்பு முனையாக அமைந்து சோழர்கள் தோல்விக்கு வழிவகுத்தது என்பதையும் நாம் எளிதில் புரிந்துகொள்ளலாம்.

ஆனால், அந்தச் சண்டையோடு சோழர்களுடைய எதிர்ப்பு முடிந்துவிடவில்லை. இன்னும் சில ஆண்டுகளுக்குத் தொடர்ந்து கிருஷ்ணன் போரிட வேண்டியிருந்தது. அவனுடைய பதினாறும் ஆட்சி ஆண்டிற்குப் பிறகுதான் (கி.பி. 956) அப்பகுதியிலிருந்து அவன் பொறிப்புகள் வெளியிடப்பட்டுள்ளன என்பதிலிருந்து அதுவரை அவன் சோழர்களின் எதிர்ப்பைச் சமாளிக்க வேண்டியிருந்தது என்று கருதலாம். பூதுகனுடைய சுடி (Sudi) செப்பேடுகள், ராஜாதித்யனைப் போரில் வென்ற பிறகு அவன் கிருஷ்ணனின் ஆணையின்படித் தஞ்சையை முற்றுகையிட்டான் என்று கூறுகின்றன. மூன்றாம் கிருஷ்ணன் 'தஞ்சையும் கொண்ட' என்ற பட்டத்தைச் சூடிக் கொண்டான் என்பது அவனுடைய பல பொறிப்புகளிலிருந்து புலப்படும். எனவே, கிருஷ்ணன் தஞ்சை நகரைக் கைப்பற்றி ஒரு சில காலத்திற்காவது அந் நகரைத் தன் வசமாகிக்கொண்டிருக்க வேண்டும் என்று ஊகிக்கலாம். கி.பி. 959ஆம் ஆண்டு கர்ஹட் சாஸனம் கிருஷ்ணன் மேல்பாடி

என்ற இடத்தில் (வடாற்காடு மாவட்டம்) முகாமிட்டு இருந்த செய்தியைக் குறிப்பிட்டு, தன்னுடைய தென்னிந்தியப் படையெடுப்பின் பொழுது அவன் சோழர்களை அழித்து அவர்களுக்குச் சொந்தமான பிரதேசங்களைத் தன் ஆதரவாளர்களிடையே பகிர்ந்து கொடுத்தான் என்றும், மேலும் தெற்கே படையெடுத்துச் சென்று பாண்டியர்களையும் சோழர்களையும் வென்றான் என்றும், ராமேஸ்வரம் சென்று அங்கு ஒரு வெற்றித்தூணை நிறுவினான் என்றும், இவற்றைக் கண்டு அஞ்சிய இலங்கை அரசனும் தானாகவே இவனுக்கு அடிபணிந்தான் என்றும் கூறுகின்றன. தான் வென்ற பகுதிகளில் கிருஷ்ணன் பல கோயில்களைக் கட்டினான். அவற்றுள் ராமேஸ்வரத்தில் அவன் கட்டியதாகக் கூறப்படும் கிருஷ்ணேஸ்வரர் கோயிலும், கண்டமார்த்தாண்டாதித்தியர் கோயிலும், காஞ்சிபுரத்தில் காலப்பிரியர் கோயிலும் குறிப்பிடத்தக்கவை.[1] கர்ஹட் செப்பேடுகள் கூறும் இச்செய்தி சோமதேவன் என்னும் சமகாலத்து நூலாசிரியன் ஒருவனால் உறுதிப்படுத்தப்படுகிறது. அவனுடைய நூலின் இறுதியில் கிருஷ்ணராஜன் பாண்டியர்களையும், சோழர்களையும், சேரர்களையும், சிங்களவர்களையும் பணியவைத்த மிகச் சிறந்த அரசன் என்று அவன் கிருஷ்ணனுக்குப் புகழ்மாலை சூட்டுகிறான். மேற்கூறியவற்றிலிருந்து தொண்டைமண்டலப் பகுதியை மட்டுமன்றிச் சோழ நாட்டின் ஒரு பகுதியையும் கிருஷ்ணன் கைப்பற்றித் தன் வசப்படுத்திக் கொண்டிருக்க வேண்டுமென்பது தெரிகிறது. தென் ஆற்காடு மாவட்டத்திற்குத் தெற்கே எந்தப் பகுதியிலும் கிருஷ்ணனுடைய பொறிப்புகள் காணப்படாததால், கர்ஹட் செப்பேடுகளினுடைய இக் கூற்று மிகைக் கூற்றாக இருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது. ஆனால், இப் படையெடுப்பினால் சோழப் பேரரசு ஒரு பேரதிர்ச்சிக்குள்ளாகியது என்பது பற்றி ஐயப்பாடு இருக்க முடியாது. சோழப் பேரரசு உண்மையிலேயே மறைந்து போயிற்று என்றே கூறலாம். ஏனெனில், வடக்கில் ஏற்பட்ட அழிவைக் கண்டு, தெற்கிலிருந்த சிற்றரசர்களும் தாங்கள் சுதந்திரம் பெற்றுவிட்டதாக அறிவித்துக் கொண்டார்கள். முதலாம் ராஜராஜன் மீண்டும் சோழப் பேரரசிற்குப் புத்துயிர் அளிக்கும் வரை, அடுத்த முப்பது ஆண்டுகளில் சோழர் ஆதிக்கம் மறைந்துபோயிற்று.

### கிருஷ்ணனும் வட இந்திய அரசுகளும்

கிருஷ்ணனுடைய தென்னிந்தியப் படையெடுப்புகளும், அங்கு அவன் ஏற்றுக்கொண்ட பொறுப்புகளும், வட இந்தி

[1] G. Yazdani (Ed.) op. cit., p. p. 294—295

யாவில் அவனுடைய நிலைமையைப் பெரிதும் பாதித்தன. அமோக வருஷன் ஆட்சியில், இளவரசன் கிருஷ்ணன் பிரதிஹாரர்கள் மீது படையெடுத்துச் சென்று, அவர்கள் ஆதிக்கத்திற்கு உட்பட்ட சிற்றரசர்களாயிருந்த சந்தேலர்களைப் போரில் வென்று, கலிஞ்சார், சித்ரகூடம் என்னும் இரு கோட்டைகளைப் பிடித்து ராஷ்டிரகூடப் படைகளை அங்கு நிறுத்தினன் என்பதை முன்பே பார்த்தோம். இந் நிலை இப்பொழுது மாறியது. ராஷ்டிரகூடப் படைகள் இவ்விரு கோட்டைகளிலிருந்தும் சந்தேலர்களால் விரட்டப்பட்டன. அவனுடைய முன்னோர்கள் காலத்தில் ராஷ்டிரகூட அரச மரபிற்கும், சேதி நாட்டை ஆண்டு கொண்டிருந்த காலசூரி மரபினருக்கும் நெருங்கிய நட்புறவு நிலவி வந்தது. ஆனல், கிருஷ்ணன் இளவரசனக இருந்தபொழுது சேதி நாட்டின் மீது படையெடுத்துச் சென்ற தால் அவர்களுடன் நிலவிய நட்புறவு முறிந்தது. எனவே, ராஷ்டிரகூடப் படைகள் சந்தேலர்களால் விரட்டப்பட்ட பொழுது சேதி அரசர்கள் ராஷ்டிரகூடர்களுக்கு உதவி அளிக்க முன்வரவில்லை.

கி. பி. 960-ல் தனது தென்னிந்தியப் படையெடுப்பை முடித் துக் கொண்டு நாடு திரும்பிய கிருஷ்ணன், வட இந்தியாவில் மங் கிப் போயிருந்த ராஷ்டிரகூடர்களின் புகழை மீண்டும் நிலைநாட்ட ஒரு பெரும் படையெடுப்பை மேற்கொள்ளத் திட்டங்கள் வகுத்தான். இந்தச் சமயத்தில்தான் இவனுடைய நெருங்கிய உறவினனும், ஆதரவாளனுமான கங்க நாட்டு இரண்டாம் பூதுகன் இறந்து அவனுடைய மகன் மாறசிம்மன் பட்டத்திற்கு வந்தான். தன் தந்தையைப் போல மாறசிம்மனும் கிருஷ்ண னிடம் பற்றுறுதி மாருமல் அவனுக்கு ஆதரவளிக்க முன்வந் தான். அவனுடைய தலைமையில் ராஷ்டிரகூடப் படையொன்று வடஇந்தியப் படையெடுப்பிற்குத் தயாராக இருந்தது. இப்படை யெடுப்பு சுமார் கி. பி. 963-ல் மேற்கொள்ளப்பட்டிருக்க வேண்டும். புந்தேல்கண்ட் பகுதியிலுள்ள ஜுரா (Jura) என்னு மிடத்தில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள ஒரு கன்னடப் பொறிப்பி லிருந்து, ராஷ்டிரகூடக் கிருஷ்ணன் இப்பகுதி வழியாக வட இந்தியா மீது படையெடுத்திருக்க வேண்டுமென்று தெரிகிறது. சந்தேலர்களிடமிருந்து கலிஞ்சார், சித்ரகூடம் கோட்டைகளை மீட்பது கிருஷ்ணனுடைய படையெடுப்பின் நோக்கமாகும். இது நிறைவேறியதா இல்லையா என்பது விளங்கவில்லை. அடுத்துக் கிருஷ்ணன் மாளவத்தின் மீது படையெடுத்துச் செல்வதைக் காண்கிறோம். மாளவத்தை ஆண்டு கொண்டிருந்த பரமார அரசன் சீயகன் ஒரு காலத்தில் ராஷ்டிரகூட மேலாதிக்கத்தை

ஏற்றுக்கொண்டிருந்தவன். கிருஷ்ணன், இப்படையெடுப்பின் மூலம் சீயகன் மீண்டும் ராஷ்டிரகூட மேலாதிக்கத்தை ஏற்றுக் கொள்ளுமாறு செய்தான். கூர்ஜரப் பிரதிஹாரர்கள் மீதும் படையெடுப்பு மேற்கொள்ளப்பட்டு உஜ்ஜயினி கைப்பற்றப்பட்டது. கங்க அரசன் மாறசிம்மன் இந்தக் கூர்ஜரப் படையெடுப்பில் முக்கியப் பங்கேற்றதால் அவன் 'கூர்ஜராதிராஜன்' என்ற பட்டம் சூட்டிக்கொண்டான் என்று அவனுடைய சிரவண பெல்கோலா கல்லறை வாசகம் கூறுகின்றது. கிருஷ்ணனால் தோற்கடிக்கப்பட்ட இந்தக் கூர்ஜர அரசன் மூலராஜனாக இருக்கக்கூடும். ஆனால், இவ் வெற்றிகள் எந்த நிரந்தரப் பயனையும் அளிக்கவில்லை.

### கிருஷ்ணனும் கீழைச் சாளுக்கியர்களும்

கி.பி. 956-ல் தன்னால் நியமிக்கப்பட்ட பாடபன் என்பவனை வேங்கி அரியணையில் அமர்த்தியதன் மூலம், கிருஷ்ணன் வேங்கி நாட்டைத் தன் செல்வாக்கிற்கு உட்படுத்திக்கொண்டான். கிருஷ்ணன் ஆட்சியிலும், முன்பு போலவே வேங்கி நாட்டில் வாரிசுரிமைத் தகராறுகள் மலிந்து கிடந்தன. கி.பி. 945-ல் இரண்டாம் பீமன் இறக்கவே, அவனுடைய இரண்டாவது மகன் இரண்டாம் அம்மன் அரசுரிமையைக் கைப்பற்றினான். இரண்டாம் யுத்தமல்லன் என்பவனின் மகன் பாடபன் என்பவனும் சாளுக்கிய அரியணைக்கு உரிமை கொண்டாடினான். இந்த நிகழ்ச்சிகள் நடந்து கொண்டிருந்தபொழுது கிருஷ்ணன் சோழர்களுடன் போரில் ஈடுபட்டிருந்ததால் தன் கவனத்தை உடனடியாகச் சாளுக்கிய விவகாரங்களில் திருப்ப முடியவில்லை. தென்னிந்தியப் போர் முடிவடைந்தவுடன் ராஷ்டிரகூடர்களின் நண்பனான யுத்த மல்லனின் மகன் பாடபனை வேங்கி அரியணையிலமர்த்தக் கிருஷ்ணன் விரும்பினான். ஒரு பெரும் ராஷ்டிரகூடப் படை வேங்கிக்கு அனுப்பப்பட்டது. அம்மன் பதவியிலிருந்து விலக்கப்பட்டு கி.பி. 956-ல் பாடபன் பதவியில் அமர்த்தப்பட்டான். பாடபன் தன் வாழ்நாள் முழுவதும் ராஷ்டிரகூட ஆதிக்கத்தை ஏற்றுக் கொண்டு ஆட்சிபுரிந்தான். அவனுக்குப் பிறகு பட்டமெய்திய தாழனைப் பதவியிலிருந்து விலக்கித் தான் மீண்டும் அரியணையைப் பெற அம்மன் செய்த முயற்சியைக் கண்டு ஆத்திரமடைந்த கிருஷ்ணன் மீண்டும் வேங்கி மீது படையெடுத்துச் சென்று, அம்மனை முறியடித்து, தானார்னவனை வேங்கி அரசனாக்கினான்.

### மதிப்பீடு

ராஷ்டிரகூட அரசர்களில் சிறந்தவர்களாகக் கருதப்படும் அரசர்களில் கிருஷ்ணனும் ஒருவன். அவன் முன்னோர்கள்

எவருடைய ஆட்சியிலும் பெற்றிராத அளவிற்கு ராஷ்டிர கூடர்கள் தங்கள் மேலாண்மையைத் தக்காணத்தில் பெறுவதற்கு அவன் காரணமாக இருந்தான். 'சகலதட்சிணதிகதிபதி' (தக்காணம்முழுமைக்கும்அதிபதி)என்ற நிலையைஅவன் பெற்றான். மூன்றும் கோவிந்தனும் அவனைப்போலத் தக்காணத்தில் வெற்றி யினைப் பெற்றிருந்தாலும், அவன் காஞ்சிபுரத்தை மட்டுந்தான் வென்றிருந்தான். ஆனால் கிருஷ்ணன் காஞ்சிபுரம் மட்டுமன்றிச், சோழப் பேரரசின் வேறுசில பகுதிகளையும் வென்று தன் வசப் படுத்திக்கொண்டு ராமேஸ்வரம் வரை தன் படைகளை நடத்திச் சென்று பல திராவிட அரசர்களையும் வென்றான். அவனது ஆட்சியின் இறுதியில் வேங்கியும் அவனுடைய செல்வாக்கிற்கு உட்படுத்தப்பட்டது. இவ்வாறாகத் தக்காணத்தில் ராஷ்டிர கூடர்கள் ஆதிக்கத்தை இவ்வளவு முழுமையாக வேறு எந்த அரசனும் நிலை நாட்டியதில்லை. தென்னிந்தியாவில் சோழர்களின் ஆதிக்க வளர்ச்சியை வெற்றிகரமாகத் தடுத்து நிறுத்தியது அவ னுடைய சாதனைகளில் ஒன்றாகும். ஆனால் தக்காணத்தில் அவன் ஆதிக்கம் வளர்ந்த அளவிற்கு வட இந்தியாவில் வளரவில்லை.

துருவன், மூன்றும் கோவிந்தன், மூன்றும் இந்திரன் போன்றோர் களுடைய வட இந்தியச் சாதனைகளுடன் ஒப்பிடும்பொழுது கிருஷ்ணன் வட இந்தியாவைப் பொறுத்தவரை எதையுமே சாதிக்கவில்லை என்றுதான் கூறவேண்டும். இதற்குக் காரணம் சேதிநாட்டுக் காலசூரிகளை அவன் பகைத்துக்கொண்டு அவர்கள் ஆதரவை இழந்த தாகும். வட இந்தியாவில் சந்தேலர்களின் எழுச்சி இதற்கு மற்றொரு காரணமாக இருக்கக்கூடும். பரமாரர்கள் மீது இரண்டு முறை படையெடுத்ததின் மூலம் அவர் களுடைய வெறுப்பை வளர்த்தான். திறமைமிக்க போர்வீரனாக வும், அரசியல் அறிவுக் கூர்மை மிக்க அரசனாகவும் விளங்கிய மூன் றும் கிருஷ்ணன் அரச தந்திரம் அற்றவன் என்றே கருதவேண்டும். கங்கர்களுக்கு அளவுக்கு மீறிய ஆதரவை அவன் அளித்தான். பரமாரர்கள், காலசூரிகள் போன்ற வட இந்திய அரச குடும்பங் களின் வெறுப்பிற்காளானான். முன் ஆலோசனையின்றி தன் னுடைய படைத்தலைவர்களுக்கு நிலமானியங்களை வழங்கினான். இந்தக் குறைபாடுகள் இருப்பினும், தன்னுடைய முன்னோர்கள் சிலர் ஆட்சியில் பாதிக்கப்பட்டிருந்த ராஷ்டிரகூடர்களின் பெருமையை உயர்த்துவதில் அவன் வெற்றி கண்டான். கன்னடக் கவிஞனை பொன்னன் என்பவன் கிருஷ்ணனால் ஆதரிக்கப்பட்ட புலவர்களில் ஒருவன். பாரதத்தை இயற்றிய பம்பன் என்னும் கவிஞன் கிருஷ்ணனின் ஆதிக்கத்திற்கு உட்பட்ட சிற்றரசன் ஒருவனால் ஆதரிக்கப்பட்டவன். கன்னட இலக்கியத்தின் மூன்று

ரத்தினங்களாகக் கருதப்படும் மூன்று சிறந்த கவிஞர்களில் இந்த இரண்டு கவிஞர்களும் இடம் பெறுகின்றனர். மூன்றாமவன் ரண்ணன் என்ற கவிஞன் ஆவான்.

மூன்றாம் கிருஷ்ணனுக்குக் கன்னரன் என்ற மற்றொரு பெயரும் உண்டு. 'அகாலவருஷன்', 'வல்லப நரேந்திரன்', 'பிரிதிவி வல்லபன்' போன்ற பட்டப் பெயர்களை அவன் சூடிக்கொண்டான். அவனுக்கு ஒரு பிள்ளையும், மூன்று உடன்பிறந்தவர்களும் இருந்தனர். ஜகத்துங்கன், கொட்டிகன், நிருபமன் ஆகியவர்கள் அவனுடைய சகோதரர்கள். அவனுடைய பிள்ளை இளம் வயதிலேயே இறந்துவிட்டதால், அவனுடைய சகோதரர்களில் ஒருவனை கொட்டிகன் பட்டமெய்தினன்.

## கொட்டிகன் (967-972)

கொட்டிகன் ஆட்சியில் ராஷ்டிரகூடர்களின் வீழ்ச்சி தொடங்கியது. போர்த்துறைஆற்றலோ, நிர்வாகத்திறமையோ அவனிடம் காணப்படவில்லை. ராஷ்டிரகூடர்களின் பெருமையையும் ஆதிக்கத்தையும் குலைக்கும் வகையில் ஒரு நிகழ்ச்சி அவன் ஆட்சியில் நடந்தது. மூன்றாம் கிருஷ்ணனால் பரமார அரசன் சீயகன் தோற்கடிக்கப்பட்டு, உஜ்ஜயினி அவனிடமிருந்து கைப்பற்றப்பட்டது என்பதைப் பார்த்தோம். அத் தோல்வியினால் மனம் புழுங்கிக் கொண்டிருந்த சீயகன் ராஷ்டிரகூடர்கள் மீது பழி வாங்கத் தக்க வாய்ப்புக்காகக் காத்துக்கொண்டிருந்தான். மூன்றாம் கிருஷ்ணன் இறந்து, கொட்டிகன் பட்டமெய்தியது ஒரு நல்ல வாய்ப்பாக அமைந்தது. பரமார சீயகன் ஒரு பெரும் படையுடன் நர்மதை ஆற்றைக் கடந்து ராஷ்டிரகூடப் பேரரசின் மீது படையெடுத்து வந்தான். அவனுடைய முன்னேற்றம் தொடக்கத்தில் தடைப்பட்டபோதிலும், மேலும் புதிய படைகளுடன் தாக்குதல் தீவிரப்படுத்தப்பட்டதால், கொட்டிகன் தன்னுடைய நண்பனை கங்க அரசன் மாறசிம்மனின் உதவியை நாடினான். ஆனால் மாறசிம்மன் உதவிக்கு வருவதற்கு முன்பே சீயகன் படைகள் மான்யகேட்த்தைக் கைப்பற்றின. (கி.பி. 972) ராஷ்டிரகூடர்களின் கருவூலத்திலிருந்த பணம் முழுவதும் கொள்ளையடிக்கப்பட்டது. ஆவணக் காப்பகத்திலிருந்த செப்பேடுகளின் படிகள்கூடக் கவர்ந்து செல்லப்பட்டன. பரமார அரசன் சாமுண்டராயனின் கி.பி. 1079ஆம் ஆண்டு அர்துணா பொறிப்பு கர்நாடக அரசனுடன் சீயஹர்ஷன் நடத்திய போரைப் பற்றிக் குறிப்பிடுகின்றது. சீயகன் போரிட்டது ராஷ்டிரகூட அரசனை கொட்டிகனோடுதான் என்பதை மாளவ அரசர்களின்

உதயப்பூர் பொறிப்பு உறுதிப்படுத்துகின்றது. கங்க அரசன் மாறசிம்மன் பிறகு ஒரு படையுடன் வந்து, பர்மாரப் படைகளை மான்யகேடத்திலிருந்து விரட்டி, அந் நகரை மீட்பதில் வெற்றி கண்டான். இருப்பினும் இந் நிகழ்ச்சியினால் மனமுடைந்த கொட்டிகன் அவமானம் தாங்கமுடியாமல் கி.பி. 972ல் உயிர் நீத்தான்.

**இரண்டாம் கார்க்கன் கி.பி. 972—73**

கொட்டிகன் இறந்த பிறகு அவனுக்குப் பிள்ளைகள் இல்லாததால் அவனுடைய தம்பி நிருபனின் மகன் கார்க்கன், இரண்டாம் கார்க்கன் என்ற பட்டப் பெயருடன் அரியணை எய்தினன். அவனுடைய ஒரே சாஸனமான கர்த்தா சாஸனம் (Kharda) அவனைக் கண்டு பாண்டியர்கள் அச்சப்பட்டார்கள் என்றும், அவன் ஹூணர்களோடும் சோழர்களோடும் குர்ஜரர் களோடும் போரிட்டான் என்றும் அவனைப் பற்றிப் புகழ்ந்து பேசுகின்றது. ஆனால் இவையெல்லாம் அவைக் கவிஞர்களின் கற்பனையில் எழுந்த சாதனைகளேயன்றி, உண்மையிலேயே கார்க்கனின் சாதனைகள் அல்ல. கொட்டிகன் ஆட்சியில், நடந்த பரமாரப் படையெடுப்பும், மான்யகேடம் அவர்களால் கைப் பற்றப்பட்டு, சூறையாடப்பட்ட நிகழ்ச்சியும் ராஷ்டிரகூடப் பேரரசின் சீர்கேடான நிலைமையை எடுத்துக் காட்டின. கிருஷ்ணனுக்குப் பின்பு வந்த அரசர்கள், அவர்கள் முன்னோர் களிடமிருந்து பெற்ற ராஷ்டிரகூடப் பேரரசு சிதறிவிடாமல் பாதுகாக்கும் திறமையற்றவர்களாக இருந்தார்கள் என்பதையும் இது சுட்டிக் காட்டியது. அரசர்களின் வலிமையின்மையும், திறமையின்மையும் இவ்வாறு வெளியிடப்பட்டபொழுது, அதனால் பயனடைந்தவர்கள் ராஷ்டிரகூட ஆதிக்கத்திற்கு உட்பட்டிருந்த சிற்றரசர்களேயாவர். இந்த நிலைமையைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொண்டு இரண்டாம் தைலன் என்னும் சிற்றரசன் ஒருவன் கி.பி. 973-ல் கார்க்கனிட மிருந்து தக்காண ஆதிக்கத்தைப் பறித்து, ராஷ்டிரகூடர் ஆட்சிக்கு ஒரு முடிவு கட்டினன். இவன் சாளுக்கிய மரபைச் சேர்ந்தவன் ராஷ்டிரகூட ஆட்சியை ஒழித்துவிட்டு, இரண்டாம் தைலன் தன்னுடைய ஆட்சியை கி.பி. 973-ல் ஏற்படுத்தியதிலிருந்து தக்காணத்தில் கல்யாணி சாளுக்கியர் ஆதிக்கம் தொடங்குகிறது. ஏனெனில் இரண்டாம் தைலனும் அவன் சந்ததிகளும் கல்யாணியைத் தங்கள் தலைநகரமாகக் கொண்டு ஆட்சி செய்ததால் அவர்கள் மரபு கல்யாணி சாளுக்கிய மரபு என்று அழைக்கப்பட்டது.

பீஜப்பூர் மாவட்டத்தில் தருதவாடி என்ற பகுதியை மூன்றும் கிருஷ்ணன் ஆட்சியில் மானியமாகப் பெற்று ராஷ்டிர கூடர்களுக்கு அடங்கிய சிற்றரசஞக இருந்தவன், இந்தத் தைலன். மேலைச் சாளுக்கிய மரபைச் சேர்ந்தவன் என்று இவன் கூறிக் கொண்டான்.[1] தன்னுடைய முன்னேர்களிடமிருந்து ராஷ்டி கூடர்களால் பறிக்கப்பட்ட அரசை அவர்களிடமிருந்து மீட்பது நியாயமானது என்றும் அது தன் கடமையென்றும் அவன் கருதினன். அவனுடைய தாய், சேதி அரசன் லட்சுமணனுடைய மகளாவாள். இக்காலப் பகுதியில் சேதிநாட்டுக் காலசூரிகளுக்கும் ராஷ்டிரகூடர்களுக்கு மிடையே பகைமை உணர்வு மேலோங்கி யிருந்ததால், சேதி மன்னர்கள் தைலனின் திட்டத்தை ஊக்குவித் திருக்கக்கூடும். மேலும் வெமுலவாடச் சாளுக்கிய அரசஞன இரண்டாம் பட்டேகனும், யாதவ சிற்றரசன் பில்லமனும் தைலனுக்கு உதவியிருக்கக் கூடும். மூன்றும் கிருஷ்ணனுடைய பேரஞன நான்காம் இந்திரனின் உரிமையைப் புறக்கணித்துக் கார்க்கன் பட்டமெய்தியது மக்களிடையே அதிருப்தியை ஏற்படுத்தியது, இந்த இளவரசனின் தாய் வழி மாமன் கங்க மன்னன் மாறசிம்மன் ஆவன். எனவே இந்திரனைப் புறக்கணித்துப் பட்ட மெய்தியதால், கார்க்கன் கங்க அரசனுடைய ஆதரவை யும் இழக்க நேரிட்டது.

இரண்டாம் தைலனுக்கும், இரண்டாம் கார்க்கனுக்குமிடையே தக்காண ஆதிக்கத்திற்காக ஒரு கடுமையான போராட்டம் நடந்தது. இரண்டாம் தைலன் தக்காண இறைமையை எளிதில்

1



பெற்றுவிடவில்லை என்பது அவனுடைய மங்கோலிப் பொறிப்புப் போன்ற சாஸனங்களிலிருந்து நாம் அறிகிறோம். கி.பி. 973-ல் தைலன் இரண்டாம் கார்க்கனின் ஆதிக்கத்தை எதிர்த்துப் போர்க் கொடி உயர்த்தியிருக்க வேண்டும். ராஷ்டிரகூடப் பேரரசின் தலைவிதியை நிர்ணயித்த இப்போர் எங்கு நடந்தது என்பதைத் திட்டவட்டமாகக் கூற இயலாது. கர்நாடகத்தின் வட பகுதியில் இது நடந்திருக்கலாம். தீமையின் உருவகமான, கலியோடு ஒப்பிடப்பட்ட கார்க்கனின் இரண்டு அமைச்சர்கள் இப் போரில் ஈடுபட்டுக் கொல்லப்பட்டிருக்க வேண்டும். கார்க்கன் போர்க்களத்திலிருந்து தப்பியோடித் தன் பேரரசின் தென்பகுதியில் ஒரு சிறு பகுதியைத் தனதாக்கிக் கொண்டு கி.பி. 991 வரை ஆண்டு கொண்டிருந்தான் என்று தெரிகிறது. ஏனெனில் அவன் போர்க்களத்தில் கொல்லப்பட்டிருந்தால், சாளுக்கிய சாஸனங்கள் கண்டிப்பாக அச் செய்தியைக் குறிப்பிட்டிருக்க வேண்டும். அப் பகுதியிலிருந்து கிடைத்த கி.பி. 991-ஆம் ஆண்டுப் பொறிப்புகள் சில, ஸ்ரீ கக்கலதேவன்அப் பகுதியை ஆண்டு கொண்டிருந்ததாகக் குறிப்பிடுகின்றன. இந்தக் கக்கலதேவன் கார்க்கனாக இருக்கக் கூடும். இவ் வெற்றிக்குப் பிறகு தைலன் மான்யகேடத்தைக் கைப்பற்றினான். இத்துடன் இவனுடைய முக்கிய பணி முடிவடைந்தது.

ஆனால் ராஷ்டிர கூட அரசுக்கு உரிமை கொண்டாடிய தன்னை ஏற்க மறுத்த இன்னும் சிலருடன் அவன் போராட வேண்டியிருந்தது. அவர்களில் குறிப்பிடத்தக்கவன் மூன்றாம் கிருஷ்ணனின் பேரன் நான்காம் இந்திரன் ஆவான். அவன் தன் தாய்மாமன் கங்க அரசன் மாறசிம்மனின் உதவியோடு தைலனை எதிர்க்க முன்வந்தான். கி.பி. 974-ல் நடந்த போரில் இந்த இருவரும் படுதோல்வியடைந்தனர். இருவரும் சமயத் துறவிகளாக மாறிச் சில ஆண்டுகள் கழித்து வடக்கிருத்தல் (சல்லேகனம்) என்னும் சமண சமய வழக்கப்படி உண்ணாநோன்பு மேற்கொண்டு உயிரிழந்தனர். இந்திரனை அரியணையிலமர்த்துவதில் மாறசிம்மன் தோல்வி கண்டதால் அவனுக்குப்பின்பு பட்ட மெய்திய பாஞ்சால தேவன் என்பவன் தைலனுக்குப் போட்டியாகத் தக்காண இறைமையைத் தானே பெற முயன்றான். இம் முயற்சியும் படுதோல்வியில் முடிந்தது. இதற்குப் பிறகு அவன் உரிமையை எதிர்க்கக் கூடிய எவருமில்லாத நிலையில் தைலன் ராஷ்டிரகூடப் பேரரசின் தலைவனானான். ராஷ்டிரகூடர்களின் ஆதிக்கத்திற்குட்பட்டிருந்த பல்வேறு சிற்றரசர்களை அடக்கி அவர்களைத் தன் ஆதிக்கத்தை ஏற்றுக் கொள்ளும்படி

செய்த பணியில் அவன் அடுத்த சில மாதங்களைக் கழித்திருக்க வேண்டும். இறுதியில் சிற்றரசர்கள் எல்லாரையும் தன் ஆதிக்கத்திற்குட்படுத்துவதில் தைலன் வெற்றி கண்டான். தைலனின் வெற்றி கல்யாணி சாளுக்கியர்கள் பேரரசுக்கு அடிகோலியது.

**ராஷ்டிரகூடர்களின் வீழ்ச்சிக்கான காரணங்கள்**

ராஷ்டிரகூடப் பேரரசின் வீழ்ச்சி எதிர்பாராத விதமாகத் திடீரென்று ஏற்பட்ட ஒரு நிகழ்ச்சியாகும். மூன்றும் கிருஷ்ணனுடைய ஆட்சியின் இறுதியில், கி.பி. 967-ல் ராஷ்டிரகூடர்களின் அரசியல் செல்வாக்கும், பெருமையும் உயர் நிலையை அடைந்திருந்தன. அப்பொழுது அவர்கள் வீழ்ச்சிக்கான அறிகுறி எதுவும் காணப்படவில்லை. அடுத்த ஏழு ஆண்டுகளில் ராஷ்டிரகூடப் பேரரசு வீழ்ச்சிப் பாதையில் வெகுவேகமாக நடப்பதைக் காண்கிறோம். இவ்வளவு குறுகிய காலத்தில் இவ்வளவு பெருமைமிக்க ஒரு பேரரசு, ஒரு கனவைப் போல முடிவடைந்துவிட்டது என்பது வியப்பிற்குரிய ஒரு நிகழ்ச்சியாயினும் அதற்கு ஏதோ சில காரணங்கள் இருக்க வேண்டும். அவற்றை இங்கு ஆராய்வது பொருத்தமுடையதாகும். நாடு பிடிக்கும் ஆர்வங் கொண்ட ஏகாதிபத்தியவாதிகள் ஆக்கிரமிப்பு, அடக்குமுறை மூலம் பெரிய பேரரசுகளை உருவாக்கலாம். ஆனல் அவர்கள் கையாளும் இம் முறைகள் அண்டை அரசுகளிடையேயும், மக்களிடையேயும் கசப்புணர்ச்சியைத் தோற்றுவித்து விபரீதமான விளைவுகளுக்கு வழிவகுக்கும் என்பது நாம் வரலாற்று வாயிலாக அறியும் படிப்பினையாகும். ராஷ்டிரகூட அரசர்கள் இதற்கு விதிவிலக்கு அல்லர். பேரரசுக் கோட்பாட்டில் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டிருந்த ராஷ்டிரகூட அரசர்களின் நாடு பிடிக்கும் கொள்கை பல பகைவர்களைத் தோற்றுவித்தது. துருவன், மூன்றும் கோவிந்தன், மூன்றும் கிருஷ்ணன் போன்றோரின் அயல்நாட்டுக் கொள்கையும், அவர்களின் வட இந்தியத் தென்னிந்தியப் படையெடுப்புகளும், வட இந்தியத் தென்னிந்திய அரசர்களின் மனத்தில் பொறமை உணர்ச்சியைத் தூண்டி அவர்களைப் பகைவர்களாக மாற்றியது. உதாரணமாக வட இந்தியாவில் ராஷ்டிரகூடர்களின் எதிரிகளான குர்ஜரப் பிரதிஹாரர்கள் பத்தாம் நூற்றுண்டின் முற்பகுதியிலேயே வீழ்ச்சியடைந்த போதிலும், அவர்களின் வாரிசுகளான பரமாரர்களும், சந்தேலர்களும் அதே பகைமை உணர்வோடு செயல்பட்டனர். மூன்றும் கிருஷ்ணனின் ஏகாதிபத்தியக் கொள்கை இவ்வாறு ராஷ்டிரகூடர்களுக்குப் பல பகைவர்களை உருவாக்கியது.

இரண்டாவதாக, ராஷ்டிரகூட அரசர்களின் ஆக்கிரமிப்புக் கொள்கையின் அடிப்படையில் மேற்கொள்ளப்பட்ட வட இந்தியத் தென்னிந்தியப் போர்களும் படையெடுப்புகளும் அரசின் நிதி நிலைமையை வெகுவாகப் பாதித்தன. இது போன்ற போர்கள் அநேகமாக எல்லா ஆட்சியிலும் நடந்ததால் நாட்டின் செல்வம் கரைந்து விட்டது.

மூன்றாவதாக, மூன்றாம் கிருஷ்ணனின் தவறான சில கொள்கைகள் ராஷ்டிரகூட ஆதிக்கத்தைப் பலவீனப்படுத்தின. அவனுடைய ஆக்கிரமிப்புக் கொள்கை சிற்றரசர்களின் ஆதரவையும், அண்டை அரசர்களின் ஆதரவையும் இழக்கச் செய்தது. அவன் தன் ஆட்சியில் தென்னிந்திய விவகாரங்களில் அடிக்கடி தலையிட்டு அங்குப் போர்களில் ஈடுபட்டிருந்ததால், வடநாட்டு நடப்புகளைச் சரிவரக் கவனிக்கவோ, கண்காணிக்கவோ முடியவில்லை. உதாரணமாக வட இந்திய நடப்புகள் பற்றி அவன் அசட்டையாக இருந்ததால்தான் பரமாரர்கள் செல்வாக்கு வேகமாக வளர்ந்து ராஷ்டிரகூட ஆதிக்கத்தையே எதிர்க்கும் துணிவை அவர்கள் பெற்றார்கள். பரமாரர்களின் செல்வாக்கை இந்த அளவிற்கு வட இந்தியாவில் வளர அனுமதித்தது மூன்றாம் கிருஷ்ணன் செய்த மாபெரும் தவறாகும். இரண்டாம் கிருஷ்ணன் ஆட்சியிலிருந்து சேதி நாட்டை ஆண்ட காலசூரிகள் ராஷ்டிரகூட அரசர்களிடம் பற்றுறுதிமாறாத நண்பர்களாக இருந்தார்கள். மூன்றாம் கிருஷ்ணன் தன் ஆக்கிரமிப்புக் கொள்கை மூலம் காலசூரிகள் உள்ளத்தில் அச்சத்தையும் பொறாமையையும் வளர்த்து, அவர்கள் ராஷ்டிரகூடர்களுக்கு அளித்த ஆதரவையும் உதவியையும் இழக்கும்படிச் செய்தான். ராஷ்டிரகூட மன்னர்கள் அரசமரபினருடன் திருமண உறவுகள் கொண்டிருந்ததால் இந் நட்புறவு மேலும் வலுப்பெற்றுச் சேதி மன்னர்கள் ராஷ்டிரகூடர்களின் உயர்விலும் தாழ்விலும் பெருமையிலும் சிறுமையிலும் தாங்களும் பங்கேற்றனர். இவ்வளவு நெருக்கமாகவும், வலுவாகவும் இருந்த உறவை முறிப்பதற்கு மூன்றாம் கிருஷ்ணனுடைய தவறான அயல் நாட்டுக் கொள்கைதான் காரணம் என்பதை மறுக்க முடியாது. சேதி மன்னர்கள் ராஷ்டிரகூடர்களுடன் நட்புறவை முறித்துக் கொண்டது மட்டுமன்றி, ராஷ்டிரகூட ஆதிக்கத்திற்கு முடிவு கட்ட முன்வந்த இரண்டாம் தைலனுக்குத் தங்கள் உதவியையும் அளித்தார்கள். வட இந்தியாவில் ராஷ்டிரகூட ஆதிக்கத்தை நிறுவுவதற்கும் தென்னிந்திய அரசியலில் வெற்றிகரமாகத் தலையிடுவதற்கும் சேதி அரசர்களுடைய உதவி எவ்வளவு இன்றியமையாதது என்பதை உணர்ந்திருந்தும் கூட, கிருஷ்ணன் அவர்கள்

ஆதரவை இழக்க நேரிட்டது, ராஷ்டிரகூடர்களின் துரதிர்ஷ்டம் என்றே நினைக்கத் தோன்றுகிறது. கங்கர்களுக்குத் தேவைக்கும் அதிகமான அளவு ஊக்கமளித்துக் கங்க அரசனுக்குப் பனவாசி மற்றும் பேரரசின் பல பகுதிகளைக் கொடுத்ததும் கிருஷ்ணன் இழைத்தது மற்றொரு தவறாகும். கிருஷ்ணா ஆற்றிற்குத் தெற்கே பெரும் பகுதி கங்கர்கள் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. தன் சிற்றரசர்களுக்கு இவ்வளவு சலுகைகளையும், இவ்வளவு பரந்த அரசையும் கொடுப்பது, பேரரசு நலனின் அடிப்படையில் நோக்கும் பொழுது, விரும்பத் தக்கது அன்று. இதனால் கங்கர்களுடைய செல்வாக்கு அளவுக்கு மீறி வளர்ந்ததோடு மட்டுமன்றிப் பேரரசின் வருவாயும் குறைந்தது. இது பேரரசின் நிதிநிலைமையைப் பாதித்தது.

நான்காவதாக, ராஷ்டிரகூட அரசில் காணப்பட்ட இயல்பான ஒரு குறைபாடு அதன் வீழ்ச்சிக்கு வழிகோலியது என்று கருதலாம். அவர்களுடைய ஆட்சிமுறை, நிலமானிய முறை அடிப்படையில் இயங்கியது. அரசனுடைய ஆதிக்கத்திற்கு உட்பட்ட சிற்றரசர்கள் ஏராளமானவர்கள் இருந்தனர். பேரரசின் உறுதித் தன்மை, சிற்றரசர்கள் தங்கள் மேலாளர்களான பேரரசர்களுக்கு அளித்த ஆதரவையும் ஒத்துழைப்பையும் பொறுத்தே இருந்தது. எனவே அரசன் தன்னுடைய படைவலிமையையும், செல்வத்தையும் மட்டுமே நம்பியிருக்க முடியாது. பேரரசன் வலிமையும், ஆற்றலும் உள்ளவனாக இருக்கும்வரை, சிற்றரசர்களால் எந்த ஆபத்தும் ஏற்படாது. பேரரசர்கள் வலுவற்றவர்களாக இருந்தால் சிற்றரசர்களின் கை ஓங்கி அவர்கள் செல்வாக்கு ஏற்றம் பெறுகிறது; பேரரசு வீழ்ச்சியடைகிறது. இந் நிலையை நாம் மூன்றாம் கிருஷ்ணனின் ஆட்சிக்குப் பிறகு காண்கிறோம்.

ஐந்தாவதாக, ராஷ்டிரகூட அரச குடும்பத்தினரிடையே போட்டியும் பொறாமையும் மலிந்து ஒவ்வொரு முறையும் அரியணை காலியான பொழுது ஒரு வாரிசுரிமைப் போர் மூலந்தான் அரச பதவி யாருக்கு என்பது நிர்ணயம் செய்யப்பட்டது. இத்தகைய வாரிசுரிமைப் போர்கள் நாட்டின் நிதிநிலைமையைப் பாதித்ததோடு மட்டுமன்றி, பொதுவாக நாட்டைப் பலவீனப்படுத்தியது.

ஆறாவதாக, மூன்றாம் கிருஷ்ணனுக்குப் பிறகு அரியணை எய்திய அரசர்கள் திறமையற்றவர்கள். குறிப்பாகக் கார்க்கன் படைத்துறை ஆற்றலோ, நிர்வாகத் திறமையோ பெற்றிராதது மட்டுமன்றி, அவன் கயவர்களையும் நேர்மையற்றவர்களையும் தன் அமைச்சர்களாகவும் ஆலோசகர்களாகவும் வைத்துக்

கொண்டிருந்தான். மக்கள் அவர்களை வெறுத்தார்கள். கார்க்கனின் திறமையின்மையும், அவன் ஆட்சியில் தோன்றிய நிர்வாகச் சீர்கேடும், சிற்றரசர்களின் சுதந்திர ஆர்வத்தைத் தூண்டிவிட்டன. மேலும் கார்க்கன் ராஷ்டிரகூட அரியணையை நான்காம் இந்திரனிடமிருந்து தகாத முறையில் கைப்பற்றியதால் மக்களும் சிற்றரசர்களும் அவனை ஆதரிக்க முன்வரவில்லை. அவனுடைய சிற்றரசர்களில் ஒருவனுன இரண்டாம் தைலன் கி.பி. 973-ல் அவனுக்கெதிராகப் போர்க்கொடியை உயர்த்தியபொழுது கார்க்கனுக்கு உதவி அளிக்க மக்களோ சிற்றரசர்களோ அண்டை நாட்டு அரசர்களோ எவரும் முன் வரவில்லை.

ஏழாவதாக, ராஷ்டிரகூடப் பேரரசு சிதைவுற்றதற்குக் காரணம் அவர்களின் ஆதிக்கத்திற்கு உட்பட்ட சிற்றரசர்களின் சுதந்திர ஆர்வமும், எழுச்சியுமாகும். மேலே கூறிய காரணங்களினுல் ஏற்பட்ட ராஷ்டிரகூட அரசின் பலவீனமின்மையைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொண்டு கொங்கணப்பகுதியில் சிலாஹாரர்களும், சௌந்தட்டியில் ரட்டர்களும், சேன் தேசத்தில் யாதவர்களும், தங்களை ராஷ்டிரகூடப் பிடியிலிருந்து விடுவித்துக் கொண்டு, சுதந்திர அரசர்களாக அறிவித்துக் கொண்டார்கள். தக்காணத்தில் ராஷ்டிரகூடர்களின் ஆதிக்கத்திற்கு முடிவுகட்டி, அவர்களின் வீழ்ச்சிக்குக் காரணமாக இருந்த தைலன், ஒரு சிற்றரசன் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. இறுதியாகக் கார்க்கனை எதிர்த்துப் போரிட்டு, ராஷ்டிரகூடர்களை அழித்த இரண்டாம் தைலன், கார்க்கனைப் போலல்லாமல், போர்த்துறையில் நல்ல ஆற்றல் மிக்கவன். சேதி நாட்டுக் காலசூரிகள், யாதவர்கள் போன்றவர்களுடைய ஆதரவும் அவனுக்குக் கிடைத்ததால் வலுவிழந்த ராஷ்டிரகூடர்களை ஒழிப்பது அவனுக்கு எளிதாயிற்று.

## முடிவுரை

இதுவரை நாம் ராஷ்டிரகூடர்களைப் பற்றிக் கூறிய செய்திகளை நினைவுபடுத்திப் பார்க்கும்பொழுது கி.பி. 753 முதல் கி.பி. 973 வரை அவர்கள் எழுச்சிபெற்றிருந்த காலம் தக்காண வரலாற்றில் ஓர் ஒளிமிகுந்த காலமாகத் திகழ்கிறது. பதினெட்டாம் நூற்றுண்டில் மராத்தியர்கள் ஒரு மாபெரும் சக்தியாகத் தோன்றும்வரையில், தக்காணத்தை ஆண்ட வேறு எந்த அரச மரபும் ராஷ்டிரகூடர்களைப்போல இந்திய வரலாற்றில் இவ்வளவு மேம்பட்ட நிலையை அடைந்ததில்லை. ராஷ்டிரகூட அரசர்களான துருவன், மூன்றும் கோவிந்தன்' மூன்றும் இந்திரன் போன்றோர் வட இந்தியாவின் மையப் பகுதிக்கே தங்கள் படைகளை நடத்திச்

சென்று அங்கு வெற்றிக்கொடி நாட்டி வந்தவர்கள். தெற்கிலும் அவர்கள் படைத்துறை ஆதிக்கம் நிலைநாட்டப்பட்டது. பிரதிஹாரர்கள், பாலர்கள் போன்ற வட இந்திய அரசுகளும், கீழைச் சாளுக்கியர்கள், சோழர்கள் போன்ற தென்னிந்திய அரசுகளும் அவர்கள் மேலாதிக்கத்தை ஏற்றுக்கொண்டன. வடக்கே நர்மதையையும், தெற்கே காவிரியையும், மேற்கே அரபிக் கடலையும் எல்லையாகக் கொண்டு, மாளவம், தெற்குக் குஜராத் போன்ற வட இந்தியப் பகுதிகளையும், தன்னுட் கொண்டிருந்த ஒரு பரந்த அரசை ஆண்ட ராஷ்டிரகூடர்கள் தக்காணத்தில் ஏகாதிபத்தியக் கோட்பாட்டை உருவாக்கினர்கள்.

போர்த்துறை வெற்றிகள் மட்டுமல்லாமல், ராஷ்டிரகூட அரசர்கள் அமைதிக்காலச் சாதனைகள் பலவற்றையும் புரிந்துள்ளார்கள். மொழி, இலக்கியம், சமயம், கலை போன்ற பண்பாட்டுக் கூறுகளின் வளர்ச்சிக்காக ராஷ்டிரகூடர்கள் ஆற்றிய பணி மகத்தானது. இத் துறைகளில் அவர்களுடைய சாதனைகள் இடத்தாலும், காலத்தாலும் எழும் தடைகளுக்கெல்லாம் அப்பாற்பட்டவை. சமயத்துறையில் பரந்த மனப்பான்மை கொண்ட ராஷ்டிரகூட அரசர்கள் தங்கள் பேரரசில் பல்வேறு சமயங்களையும் போற்றி வளர்த்தனர். கன்னட மொழியும், இலக்கியமும் அவர்கள் ஆட்சியில் ஆக்கம் பெற்றுப் பல கன்னட மொழிப் புலவர்களும், அறிஞர்களும் அவர்களால் ஆதரிக்கப் பட்டுப் பல அரிய நூல்கள் எழுதப்பட்டன. கட்டட, சிற்பக் கலைகளும் அவர்களால் போற்றி வளர்க்கப்பட்டன என்பது எல்லோரா போன்ற இடங்களில் அவர்களால் எழுப்பப்பட்ட கோயில்களிலிருந்தும், சிற்பங்களிலிருந்தும் தெரியவரும்.[1] சமகாலத்து அரேபிய அறிஞனை சுலைமான் என்பவன் உலகத்தின் நான்கு தலைசிறந்த அரசுகளில் ராஷ்டிரகூட அரசும் ஒன்று, என்று கூறுவதிலிருந்து ராஷ்டிரகூடர்களின் பெருமையை நாம் நன்கு புரிந்துகொள்ள முடியும்.

[1] ராஷ்டிரகூடர்கள் கலாச்சார வளர்ச்சிக்கு ஆற்றிய தொண்டுபற்றி மேலும் விரிவாக இந் நூலின் இரண்டாம் பாகத்தில் காண்க.


பரமாரர்கள்
உஜ்ஜயினி
காலசூரிகள்
அசலபுரம்
சூரத்
நவ்சாரி
அஜந்தா
எல்லோரா
கல்யாணி
லட்டலூர்
புளிகம்
மான்ய கேடம்
கர்னாடகம்
வேங்கி மண்டலம்
ராஜமகேந்திரம்
திராக்ஷாராமம்
வனவாசி
நொளம்பவாடி
பாணவாடி
கங்கவாடி
ராஷ்டிர கூடப்
பேரரசு

## வேங்கி (கீழைச்) சாளுக்கியர் வம்சம்

(1) முதலாம் விஷ்ணுவர்த்தனன் (குப்ஜ) (624-41-42)

- (2) முதலாம் ஜயசிம்மன் (641-73)
- (3) இந்திரபட்டாரகன் (673)
  - (4) இரண்டாம் விஷ்ணுவர்த்தனன் (673-81)
    - (5) மங்கி யுவராஜன் (681-705)
      - (6) இரண்டாம் ஜயசிம்மன் (705-718)
      - (7) மூன்றும் விஷ்ணுவர்த்தனன் (718-752)
        - (8) முதலாம் விஜயாதித்யன் (752-770)
          - (9) நான்காம் விஷ்ணுவர்த்தனன் (771-806)
            - சீலபட்டாரிகா தி = ராஷ்டிரகூட துருவன்
            - (10) இரண்டாம் விஜயாதித்யன் (806-846)
            - பீமசலுகி
      - முதலாம் கொக்கிலிவர்மன்
      - பிரிதிவிபோதி


மூன்றும் கோவிந்தன்
இந்திரன்
முதலாம் அமோகவருஷன்
சீலபட்டாரிகா
= தி. = (11) ஐந்தாம் விஷ்ணுவர்த்தனன் (846-847)
(12) மூன்றும் குணக விஜயாதித்யன் (848-9-891)
முதலாம் விக்ரமாதித்யன்
நிருபகாமன்
முதலாம் யுத்தமல்லன்
(13) முதலாம் சாளுக்கிய பீமன் (892-922)
(17) முதலாம் தாழன் (927)
(14) நான்காம் விஜயாதித்யன் (922)
(18) இரண்டாம் விக்கிரமாதித்யன் (927)
(20) இரண்டாம் யுத்தமல்லன் (928-934)
(15) முதலாம் அம்மன் (922-927)
(21) இரண்டாம் சாளுக்கிய பீமன் (934-945)
பாடபன்
இரண்டாம் தாழன்
(16) ஐந்தாம் விஜயாதித்யன் (927)
(19) பீமன் (928)
(23) தாஞர்ணவன் (970-973)
(22) இரண்டாம் அம்மன் (945-970)
குறிப்பு : தி. = திருமணம்

# 4. வேங்கி (கீழைச்) சாளுக்கியர்கள்

## (கி. பி. 624 - 973)

கீழைச் சாளுக்கியர்கள், சாளுக்கிய மரபின் ஒரு கிளை மரபின ராவர். கீழைச் சாளுக்கிய அரசின் தோற்றத்திற்குக் காரணமாக யிருந்த விஷ்ணுவர்த்தனன் இரண்டாம் புலிகேசியின் சகோதரன் ஆவான். வட இந்திய அரசன் ஹர்ஷன் மீது பெற்ற வெற்றியினுல் தூண்டப்பட்ட பாதாமிச் சாளுக்கிய அரசன் இரண்டாம் புலிகேசி தென்னிந்திய அரசுகளைவென்று தக்காணம் முழுவதையும் வென்று தன் ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டுவரத் திட்டமிட்டான். மஹாராஷ்டிரத்திற்குக் கிழக்கே அமைந்திருந்த கோசல, கலிங்க நாடுகளை வென்று தென்மேற்காகக் கிழக்குக் கடற்கரையோரத் தில் அமைந்திருந்த பிஷ்டபுரத்தையும், வேங்கிப் பகுதியையும் வென்றுன் என்று ஐஹோள் பொறிப்பு கூறுகிறது. அப்பொழுது அப் பகுதி விஷ்ணுகுண்டினர் அரசனுன மூன்ரும் விக்ரமேந்திர வர்மனுல் ஆளப்பட்டு வந்தது. பிறகு கிருஷ்ண ஆற்றைக்கடந்து இரண்டாம் புலிகேசியின் படைகள் பல்லவ நாட்டில் நுழைந்தன. இவ்வாறு கிழக்குத் தக்காணத்தில் வடக்கே விசாகப்பட்டினம் மாவட்டத்திற்கும், தெற்கே நெல்லூர் மாவட்டத்திற்கும் இடைப்பட்ட கிழக்குக் கடலோரப் பகுதிகளை வென்று, ஒரு தனி மாநிலமாக அமைத்துத் தன் தம்பி விஷ்ணுவர்த்தனனை அதன் அரசப் பிரதிநிதியாக இரண்டாம் புலிகேசி நியமித்தான். இரண்டாம் புலிகேசியின் உடன் பிறந்தவர்களுள் மிகவும் திறமை வாய்ந்தவன் கூனன் விஷ்ணுவர்த்தனன் (குப்ஜ விஷ்ணுவர்த் தனன்) என்றழைக்கப்பட்ட இந்த முதலாம் விஷ்ணுவர்த்தனன். இரண்டாம் புலிகேசியின் போர்களில் அவனுக்குத் துணையாக இருந்த விஷ்ணுவர்த்தனன், மஹாராஷ்டிர மாநிலத்தின் அரசப் பிரதிநிதியாக முதலில் நியமிக்கப்பட்டான். புலிகேசி கிழக்குத் தக்காணப்பகுதியின் மீது படையெடுத்த பொழுது விஷ்ணுவர்த் தனன் அப் போரில் முக்கியபங்கேற்றுப் புலிகேசியின் வெற்றிக்குக் காரணமானுன். அவன் தனக்கு ஆற்றிய உதவியைப் பாராட்டும் வகையிலும் அவனுக்கு நன்றி செலுத்தும் வகையிலும் அவனை அப் பகுதியின் அரசப் பிரதிநிதியாகப் புலிகேசி நியமித்தான். படையெடுப்புகளை முடித்துக்கொண்டு புலிகேசி

பாதாமி திரும்பியதும், விஷ்ணுவர்த்தனன் மகாராஜன் என்ற பட்டத்தைச் சூட்டிக்கொண்டு சுயேச்சையாக ஆள ஆரம்பித் தான். புலிகேசியும் இதைப் பொருட்படுத்தவில்லை. இவ்வாறு தக்காணத்தின் கிழக்குப் பகுதியைச் சுயேச்சையாக ஆளத் தொடங்கிய விஷ்ணுவர்த்தனனும் அவன் சந்ததியார்களும் தக்காண வரலாற்றில் கீழைச் சாளுக்கியர்கள் அல்லது வேங்கிச் சாளுக்கியர்கள் என்றழைக்கப்படுகின்றனர். தொடக்கத்தில் பிஷ்டபுரமும், பிறகு வேங்கியும் அவர்களுடைய தலைநகரமாக விளங்கியது. அவர்களுடைய மூத்த மரபான மேலைச் சாளுக்கிய மரபு மறைந்த பிறகும்கூட அவர்கள் வேங்கிப் பகுதியை முந்நூறு ஆண்டுகளுக்கும் மேலாக ஆண்டு கொண்டிருந்தார்கள். (இந்தக் காலப் பகுதியில் வேங்கிச் சாளுக்கியர்கள் ராஷ்டிரகூடர்களின் எழுச்சியினால் பாதிக்கப்பட்டுச் சுமார் கி.பி. 912 வரை அவர் களின் ஆதிக்கத்திற்கு உட்பட்டு வாழ்ந்தார்கள்.) முதலாம் பீமன் ஆட்சியில் ராஷ்டிரகூடர்கள் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற்ற வேங்கிச் சாளுக்கியர்கள் கி.பி. 973ல் தானார்ணவன் ஆட்சியில் தெலுங்குச் சோடர்களின் ஆதிக்கத்திற்கு உள்ளாக்கப் பட்டார்கள். தெலுங்குச் சோடர்களின் ஆக்கிரமிப்பினால் இருபத் தேழு ஆண்டுகள் மறைந்து கிடந்த வேங்கி அரசு மீண்டும் கி.பி. 1000த்தில் மறுமலர்ச்சி பெற்றது.) வேங்கிச் சாளுக்கியர் களின் வரலாற்றை கி.பி. 973 வரை இந் நூலின் பின்வரும் பக்கங்களில் விரிவாக ஆராயப் போகிறோம். (இந்த வேங்கிச் சாளுக்கியர்கள்தாம் இன்றைய தெலுங்குக் கலாச்சாரத்திற்கு வித்திட்டவர்கள் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.)

### கீழைச் சாளுக்கியர் காலம்

கீழைச்சாளுக்கியர் வரலாற்றில் இன்னும் தீர்க்கப்படாத ஒரு பிரச்சினையாக விளங்குவது அவர்களுடைய கால வரிசை முறையை (chronology) நிர்ணயம் செய்வதாகும். கீழைச் சாளுக்கியச் சாஸனங்களில் இம் மரபைச் சேர்ந்த அரசர்களின் நீண்ட பட்டியல்களும், ஒவ்வோர் அரசன் எவ்வளவு ஆண்டுகள் ஆட்சி புரிந்தான் என்ற செய்தியும் காணப்பட்ட போதிலும் அச் செய்திகள் ஒன்றுடன் ஒன்று முரண்பட்டு இருப்பதால் அவர்களுடைய காலவரிசை முறையை நிர்ணயிப்பதில் சில இடை யூறுகள் தோன்றுகின்றன. இந்தப் பிரச்சினையை ஆராய்வதற்கு முன்பு அவ் வரசர்களின் ஆட்சிக்காலம் பற்றிக் கீழைச் சாளுக்கியப் பொறிப்புகள் கூறும் செய்திகளை முதலில் தொகுத்துக் கூறலாம். கி.பி. 973 வரை கீழைச் சாளுக்கிய அரசர்களின் வரலாற்றை ஆராய்வது இந் நூலின் நோக்கமாதலால் அந்த ஆண்டுவரை

ஆட்சி செய்த அரசர்களின் பெயரையும், அவர்கள் ஆண்ட காலத்தையும் கீழே காணலாம். (ஓர் அரசனின் ஆட்சிக்காலம் பற்றிப் பொறிப்புகளில் காணப்படும் வேறுபட்ட கருத்துகள் குறிப்பிடப்பட்டுள்ளன.[1])

| | | | |
|---|---|---|---|
| 1. | முதலாம் (குப்ஜ) விஷ்ணுவர்த்தனன் | 18 ஆண்டுகள் | |
| 2. | ஜயசிம்ம வல்லபன் | 30 ,, | (33) |
| 3. | இந்திரப் பட்டாரகன் | 7 நாட்கள் | |
| 4. | இரண்டாம் விஷ்ணுவர்த்தனன் | 9 ஆண்டுகள் | |
| 5. | மங்கி யுவராஜன் | 25 ,, | |
| 6. | இரண்டாம் ஜயசிம்ம வல்லபன் | 13 ,, | |
| 7. | கொக்கிலி | 6 மாதங்கள் | |
| 8. | மூன்றும் விஷ்ணுவர்த்தனன் | 37 ஆண்டுகள் | (35) |
| 9. | முதலாம் விஜயாதித்தியன் | 18 ,, | (19) |
| 10. | நான்காம் விஷ்ணுவர்த்தனன் | 35 ,, | (36) |
| 11. | இரண்டாம் விஜயாதித்தியன் | 40 ,, | (41, 48) |
| 12. | ஐந்தாம் விஷ்ணுவர்த்தனன் | $1\frac{1}{2}$ ,, | ($1\frac{2}{3}$) |
| 13. | மூன்றும் விஜயாதித்யன் அல்லது குணக விஜயாதித்தியன் | 44 ,, | |
| 14. | சாளுக்கிய முதலாம் பீமன் | 30 ,, | |
| 15. | நான்காம் விஜயாதித்தியன் | 6 மாதங்கள் | |
| 16. | முதலாம் அம்மன் | 7 ஆண்டுகள் | |
| 17. | ஐந்தாம் விஜயாதித்தியன் | 15 நாட்கள் | |
| 18. | தாடபன் | 1 மாதம் | |
| 19. | விக்கிரமாதித்தியன் | 1 ஆண்டு 11 மாதங்கள். | (9 மாதங்கள்) |
| 20. | பீமன் | 6 மாதங்கள் | |
| 21. | யுத்தமல்லன் | 7 ஆண்டுகள் | |
| 22. | சாளுக்கிய இரண்டாம் பீமன் | 12 ,, | |
| 23. | இரண்டாம் அம்மன் அல்லது ஆறும் விஜயாதித்தியன் | 25 ,, | |
| 24. | தானுர்ணவன் | 3 ,, | |

மேலைச் சாளுக்கியர்களால் வேங்கி எப்பொழுது கைப்பற்றப் பட்டது; அங்குக் கீழைச் சாளுக்கியர் ஆட்சி எப்பொழுது தொடங்கியது என்ற கேள்விகளுக்குச் சரியான விடை கிடைத்தால்தான்

[1] N. Venkataraman yya—The Eastern Chalukyas of Vengi, p. 42-43.

கீழைச் சாளுக்கியக் காலவரிசை முறையை ஓரளவு சரியாக நிர்ணயம் செய்யமுடியும். (வேங்கியில் கீழைச் சாளுக்கிய ஆட்சி எப்பொழுது தொடங்கியது என்பது பற்றிக் கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன.) மேலும் சாளுக்கியப் பொறிப்புகள் கூறும் விவரங்களில் பல குறைபாடுகள் உள்ளன. உதாரணமாகப் பொறிப்புகளில் அரசர்களின் ஆட்சி ஆண்டுமட்டும் குறிப்பிடப்பட்டுள்ளதேயன்றிக் காலத்தை நிர்ணயம் செய்வதற்குத் தேவையான எந்தச் சகாப்தமும் குறிப்பிடப்படவில்லை. (காலவரிசை முறையை நிர்ணயம் செய்வதில் இடர்ப்பாடுகள் சாளுக்கியர் ஆட்சியின் பிற்பகுதியைவிட முற்பகுதியில் அதிகம் உள்ளன) முதலாம் பீமனுடைய ஆட்சியிலிருந்து நிலைமை சற்று மாறுகிறது. இந்த இடர்ப்பாடுகள் மறையத் தொடங்குகின்றன. ஏனெனில் அவனுடைய பொறிப்புகளில் அவனுடைய முடிசூட்டு விழா நடந்த சக சகாப்த ஆண்டு குறிப்பிடப்பட்டுள்ளதால், அவன் ஆட்சி எப்பொழுது துவங்கியது என்பதைத் தவறில்லாமல் கணிக்கமுடியும். இதே முறையை அவனுக்குப் பின்வந்த அரசர்களும் பின்பற்றியதால் பிற்காலச் சாளுக்கியர்களின் காலவரிசை முறையை ஓரளவு சரியாகக் கணிக்கமுடிகின்றது. வேங்கி எப்பொழுது பாதாமிச் சாளுக்கியர்களால் வெல்லப்பட்டது என்பதும் இரண்டாம் புலிகேசி அவன் ஆட்சியின் தொடக்கத்தில் சுமார் கி.பி. 610-11ல் வேங்கியை வென்றான் என்பதும், கி.பி. 615ல் விஷ்ணுவர்த்தனனிடம் அதன் ஆட்சியை ஒப்படைத்தான் என்பதும், விஷ்ணுவர்த்தனின் ஆட்சி ஆண்டு கி.பி. 615லிருந்து கணக்கிடப்படவேண்டுமென்பதும் அறிஞர் ஃபிளீட்டின் கருத்தாகும். ஃபிளீட்டின் இந்த முயற்சிக்குப் பிறகு கிடைத்துள்ள பல புதிய பட்டயச் சான்றுகளின் அடிப்படையில் இக் கணிப்பு தவறு என்பதைச் சோமசேகரசர்மா, பி. வி. கிருஷ்ணராவ் போன்ற அறிஞர்கள் எடுத்துக்காட்டியுள்ளனர். இரண்டாம் புலிகேசியின் கொப்பாரம் செப்பேடுகளில் காணப்படும் செய்திகளின் அடிப்படையில், சோமசேகரசர்மா இரண்டாம் புலிகேசி வேங்கியை வென்று தன் தம்பி விஷ்ணுவர்த்தனனிடம் ஒப்படைத்தது கி.பி. 631ஆம் ஆண்டுக்கு முன்னதாக இருக்கமுடியாது என்று கருதுகிறார். அதே ஆண்டிலோ, அதற்குச் சற்றுப் பின்போ அந் நிகழ்ச்சி நடந்திருக்க வேண்டுமென்பது அவர் கருத்தாகும். கி.பி. 611ல் இரண்டாம் புலிகேசி வேங்கியைக் கைப்பற்றினான் என்றும், ஆனால் அப் பகுதியின் ஆட்சியைத் தன் தம்பி விஷ்ணுவர்த்தனனிடம் உடனடியாக ஒப்படைக்கவில்லை யென்றும், கி.பி. 624ல்தான் விஷ்ணுவர்த்தனனை அரசப் பிரதிநிதியாக நியமித்தான் என்றும் பி. வி. கிருஷ்ணராவ் நினைக்கிறார். கி.பி. 611ல் புலிகேசி வேங்கியைக் கைப்பற்றினான் என்பதற்கு ஆதாரம்

இல்லை. மேலும் அந்த ஆண்டிலேயே விஷ்ணுவர்த்தனன் தன் ஆட்சியைத் தொடங்கினான் என்று கருதுவதும் பொருந்தாது. ஏனெனில் விஷ்ணுவர்த்தனனுடைய பல சாஸனங்களில் காணப் படும் பல செய்திகள் அவன் அவ்வளவு முன்னதாகவே வேங்கியை ஆளத் தொடங்கியிருக்க முடியாது என்ற நிலையை வலியுறுத்தும் வகையில் இருக்கின்றன. விஷ்ணுவர்த்தனனுடைய ஆட்சி கி.பி. 624ல் தொடங்கியது என்ற கருத்து சாளுக்கியர் வரலாறு பற்றி நாம் பொறிப்புகள் மூலம் அறிந்துள்ள பொதுச் செய்திகளோடு முரண்பாடின்றி இருப்பதால், அதைத்தான் நாம் முடிவான கருத்தாக ஏற்றுக்கொள்ள வேண்டும். விஷ்ணுவர்த்தனன் ஆட்சி யின் தொடக்க ஆண்டை நிர்ணயம் செய்வதற்குச் சர்வலோக சிரையன் விஷ்ணுவர்த்தனன் என்னும் கீழைச் சாளுக்கிய அரசனின் ஐந்தாம் ஆட்சி ஆண்டு தேரளா (Terala) பொறிப்பில் தடயம் கிடைத்துள்ளது. அதில் காணப்படும் வான சாஸ்திரக் குறிப்புகளின் உதவியோடு விஷ்ணுவர்த்தனின் ஆட்சிக்காலத்தை நிர்ணயித்து, அவன் எந்த விஷ்ணுவர்த்தனன் என்பதைத் தீர்மா னித்தால், அதிலிருந்து முதலாம் விஷ்ணுவர்த்தனின் ஆட்சி எப்பொழுது தொடங்கியது என்பதை முடிவு செய்ய இயலும். விஷ்ணுவர்த்தனன் என்ற பெயர் கொண்ட அரசர்கள் பத்துப் பேர் வேங்கியை ஆண்டதாக அவர்களுடைய பொறிப்புகளி லிருந்து அறிகிறோம். இவர்களில் எந்த விஷ்ணுவர்த்தனன் தேரளா சாஸனத்தில் குறிப்பிடப்பட்டவன்? அந்த அரசன் முதலாம் விஷ்ணுவர்த்தனனாகத்தான் இருக்கவேண்டுமென்றும், தேரளா சாஸனம் கி.பி. 621ஆம் ஆண்டைச் சேர்ந்தது என்றும், எனவே முதலாம் விஷ்ணுவர்த்தனனுடைய ஆட்சி கி.பி. 616-17ல் தொடங்கியிருக்க வேண்டுமென்றும் அரசாங்கக் கல்வெட்டு ஆராய்ச்சித்துறை அதிகாரி கருதுகிறார். ஆனால் இக் காலப்பகுதியில் விஷ்ணுவர்த்தனன் புலிகேசியின் அரசப் பிரதி நிதியாகத் தென் மகாராஷ்டிரத்தை ஆண்டு கொண்டிருந்தான் என்று சதாரா சாஸனம் கூறும் செய்திக்கு இது முரண்பட்டதாக இருப்பதால் இக் கருத்தை ஏற்றுக்கொள்ள இயலாது. தேரளா சாஸனத்தில் கூறப்பட்டிருக்கும் விஷ்ணுவர்த்தனன் முதலாம் விஷ்ணுவர்த்தனனுடைய பேரனான இரண்டாம் விஷ்ணுவர்த் தனனாக இருக்கவேண்டுமென்றும், அச் சாஸனம் கி.பி. 678ல் வெளியிடப்பட்டதென்றும், எனவே இரண்டாம் விஷ்ணுவர்த் தனன் ஆட்சி கி.பி. 673ல் தொடங்கியிருக்க வேண்டுமென்றும் வெங்கடரமணய்யா கருதுகிறார்.[1] இரண்டாம் விஷ்ணுவர்த் தனனின் ஆட்சியிலிருந்து பின்நோக்கிச் சென்று கணக்கிட்டால்

[1] Ibid p. p. 41—56.

முதலாம் விஷ்ணுவர்த்தனன் ஆட்சியின் தொடக்கத்தைக் கண்டு பிடிக்கமுடியும். இரண்டாம் விஷ்ணுவர்த்தனனுக்குமுன் அரியணை யிலிருந்த முதலாம் ஜயசிம்ம வல்லபன் (இந்திர பட்டாரகனை இங்கு நாம் கணக்கில் எடுக்கவில்லை. ஏனெனில் அவன் ஏழு நாட் களே ஆண்டதாகச் சாளுக்கியப் பொறிப்புகள் கூறுகின்றன.) முப்பத்திரண்டு ஆண்டுகளும் சில மாதங்களும் ஆண்டதாகப் பொறிப்புகள் மூலம் தெரிகிறது. முதலாம் விஷ்ணுவர்த்தனன் பதினேழு ஆண்டுகளும் சில மாதங்களும் ஆண்டான். எனவே இரண்டாம் விஷ்ணுவர்த்தனனின் தொடக்க ஆட்சி ஆண்டான 673லிருந்து முதலாம் ஜயசிம்ம வல்லபன், முதலாம் விஷ்ணுவர்த் தனன் ஆகியோரின் ஆட்சிக்காலத்தைக் கழித்தால், முதலாம் விஷ்ணுவர்த்தனனன் ஆட்சியின் தொடக்க ஆண்டைக் கணக் கிடலாம்; அதாவது 673-(32+17)=624. நாம் முன்பே குறிப் பிட்டுள்ளது போல முதலாம் பீமனுடைய பொறிப்புகளில் அவனுனடய முடிசூட்டு விழா நடந்த சக சகாப்த ஆண்டு குறிப் பிடப்பட்டுள்ளதால் அவனுடைய ஆட்சியின் தொடக்கத்தைத் தவறில்லாமல் கணிக்க முடிகின்றது. அவனுடைய அத்திலி (Attili) சாஸனம் கி.பி. 892ல் அவன் முடிசூட்டிக்கொண்டதாகக் கூறுகிறது (சக ஆண்டு 814). முதலாம் விஷ்ணுவர்த்தனனின் ஆட்சி எப்பொழுது தொடங்கியது என்பதை நிர்ணயிக்க இச் செய்தி ஓர் இன்றியமையாத தடயமாக உள்ளது. எவ்வாறெனில் முதலாம் பீமனுக்கு முன் பன்னிரண்டு சாளுக்கிய அரசர்கள் மொத்தம் 268 ஆண்டுகள் ஆட்சி புரிந்ததாகச் சாளுக்கியப் பொறிப்புகள் மூலம் நாம் அறிகிறோம். எனவே முதலாம் பீமன் ஆட்சியின் தொடக்க ஆண்டான 892லிருந்து அவனுக்கு முன் ஆண்ட பன்னிரண்டு அரசர்களின மொத்த ஆட்சிக் கால மான 268ஐக் கழித்தால் (892-268=624) முதல் அரசனை குப்ஜ: விஷ்ணுவர்த்தனன் ஆட்சியின் தொடக்க ஆண்டு கி.பி. 624 என்பது புலப்படும். மேற்கூறிய இரண்டு முறைகளின் அடிப்படையிலும் கணக்கிட்டுப் பார்த்தால் கி.பி. 624ஆம் ஆண்டு முதலாம் விஷ்ணுவர்த்தனனின் ஆட்சி தொடங்கியிருக்க வேண்டும் என்பது தெரியவரும். கீழைச் சாளுக்கிய வரலாற்றை ஆராய்வதற்கு அடிப்படையான ஒரு தற்காலிக முடிவாக இதைக் கொள்ளவேண்டுமேயன்றி இதுவே இறுதி முடிவு ஆகாது.[1]

[1]ஏனெனில் இந்த முடிவு புலிகேசியின் கொப்பாரம் செப்பேடுகளில் கூறப்பட் டிருக்கும் செய்திகளுக்கு முரண்பட்டதாக உள்ளது. இரண்டாம் புலிகேசியின் 21ஆம் ஆட்சி ஆண்டைச் சேர்ந்த அச் சாஸனம் (கி.பி. 631) விஷ்ணுவர்த்தனனை பிருதிவி யுவராஜன் என்றே குறிப்பிடுகிறது- கி பி. 624ல் கீழைச்சாளுக்கிய ஆட்சி தொடங்கியது என்றால். விஷ்ணுவர்த்தனன் முழுத் திறமையையும் பெற்ற அரசனாக அல்லவோ வேங்கியை ஆண்டுகொண்டிருக்க வேண்டும்? எவ்வாறு கி, பி. 631ஆம் ஆண்டுச் சாஸனம் அவனை யுவராஜன் என்று அழைக்கக் கூடும்? இதற்குத் தகுந்த விடை அளிப்பது எளிதன்று. ஒருவேளை கி. பி. 631 வரை அவன் தன் அண்ணனுக்கு அடங்கிய சிற்றரசனாக ஆண்டிருக்கக் கூடும். விஷ்ணுவர்த்தனன் யார் ஆதிக்கத்திற் கும் உட்படாத சுதந்திர அரசனாகத் தான் ஆளுவதாகக் கூறிக்கொள்ளும் அவன் பதினெட்டாம் ஆட்சி ஆண்டு சிபுருபள்ளிச் சாஸனம் கி. பி. 632ல் வெளியிடப்பட்ட தாகக் கருதலாம். அவ்வாறெனில் அவன் ஆட்சியின் தொடக்கம் 632-18—614-15 ஆகவும், அவன் ஆட்சிக் காலம் 614-5—632-33 ஆக இருக்க வேண்டும்.

—D. C Sircar - The History and culture of the Indian people - Vol. III - p. 252.

### முதலாம் (குப்ஜ) விஷ்ணுவர்த்தனன் (கி.பி. 624-641-42)

இவ்வாறு தன் அண்ணன் இரண்டாம் புலிகேசியிடமிருந்து பெற்ற தக்காணத்தின் கிழக்குக் கரையோரப் பகுதியில் கி.பி. 624 முதல் விஷ்ணுவர்த்தனன் சுதந்திரமாக ஆளத் தொடங்கினன். அவனுடைய ஆட்சியிலிருந்து கீழைச் சாளுக்கியர்கள் வரலாறு தொடங்குகின்றது. அவர்கள் வரலாற்றின் பெரும் பகுதி அம் மரபின் இளவரசர்களிடையே ஏற்பட்ட வாரிசுரிமைப் போட்டிகள் ஆகும். அவற்றைத் தொடர்ந்து சில சமயங்களில் ராஷ்டிரகூடர்கள், மற்றச் சமயங்களில் கல்யாணிச் சாளுக்கியர்கள் சோழர்கள் ஆகியோரின் தலையீடு பற்றியதாக உள்ளது கி.பி. 624-ல் தன் ஆட்சியைத் தொடங்கிய விஷ்ணுவர்த்தனன் கி.பி 631 வரை தன் அண்ணன் புலிகேசிக்கு அடங்கிய ஒரு சிற்றரசனாக ஆண்டிருக்கக் கூடும். எனவேதான் கி.பி. 631-ஆம் ஆண்டுக் கொப்பாரம் சாஸனம் அவனை யுவராஜன் என்று அழைக்கின்றது போலும், அவனுடைய திம்மாபுரம் செப்பேடுகளிலும், பதினெட்டாம் ஆட்சி ஆண்டு சிபுருபள்ளி (Chipurupalle) செப்பேடுகளிலும் அவன் தன்னை மகராஜன் என்று அழைத்துக் கொள்கிறான். எனவே கொப்பாரம் சாஸனம் வெளியிடப்பட்டதற்கும், திம்மாபுரம் சாஸனம் வெளியிடப்பட்டதற்கும் இடைப்பட்ட காலப் பகுதியில் அவன் சுதந்திர அரசன் என்ற நிலையை எய்தியிருக்க வேண்டும். கி.பி. 624-ஆம் ஆண்டிலோ அதற்குச் சற்று முன்னரோ விஷ்ணுவர்த்தனன் கலிங்கம், வேங்கிப் பகுதிகளை வென்று தன் வசப்படுத்திக் கொண்டிருக்க வேண்டும். முந்தைய கீழைச் சாளுக்கிய அரசர்கள் வேங்கியிலிருந்து ஆளவில்லை என்ற ஒரு கருத்தும் உண்டு.

விஷ்ணுவர்த்தனனுக்கு முன்பு வேங்கிப் பகுதியை ஆண்டு கொண்டிருந்த விஷ்ணு குண்டினர்கள் தங்கள் செல்வாக்கையும் பெருமையையும் இழந்தும்கூட மேலும், சில காலத்திற்கு வேங்கியிலிருந்து ஆட்சி புரிந்தனர் என்ற கருத்து ஒரு சிலரால் வலியுறுத்தப்படுகிறது. அவ்வாறு நினைப்பதற்குத் தகுந்த ஆதாரங்கள் கிடையா. அவ்வாறு அவர்கள் ஆண்டது உண்மையாக இருப்பினும், அவர்கள் விஷ்ணுவர்த்தனனின் ஆட்சிக்கு உட்பட்ட சிற்றரசர்களாகத் தான் ஆண்டிருக்க வேண்டும். மேலும் பிற்காலச் சாளுக்கியப் பொறிப்புகள் கூறும் செய்திகளிலிருந்து இக் கருத்து தவறு என்பது விளங்கும். அப் பொறிப்புகள் துர்ஜயர்கள் என்பவர்களைத்தான் விஷ்ணுவர்த்தனனின் பகைவர்களாகக் குறிப்பிடுகின்றனவேயன்றி, விஷ்ணு குண்டினர்களை அல்ல. விஷ்ணுவர்த்தனன் வேங்கியைத் துர்ஜயர்களிடமிருந்து கைப்பற்றியதாகவும் அப்பொறிப்புகள்கூறுகின்றன.

சாளுக்கியர்களால் வேங்கி கைப்பற்றப்படுவதற்கு முன்பு, அப் பகுதி துர்ஜயர்களால் ஆளப்பட்டு வந்தது என்ற செய்தி பிரிதிவி மகாராஜன் என்ற துர்ஜய அரசனின் தாண்டிவாடாச் செப்பேடுகள் மூலம் தெரிகிறது. கொப்பாரம், திம்மாபுரம், சிபுருபள்ளி செப்பேடுகளிலிருந்து விஷ்ணுவர்த்தனின் ஆதிக்கம் வேங்கிப் பகுதியில் ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்தது என்பதை அறிகிறோம். அவனை அடுத்து ஆட்சி செய்த கீழைச் சாளுக்கிய அரசர்களின் சாஸனங்களிலிருந்து வடக்கே விசாகப்பட்டினத்திலிருந்து தெற்கே நெல்லூர் மாவட்டத்திலுள்ள மன்னேடு வரை விஷ்ணுவர்த்தனனின் ஆதிக்கம் பரவியிருந்தது என்பது ஐயப்பாட்டிற்கிடமின்றித் தெரிகிறது. குண்டூர் மாவட்டத்திலுள்ள சேஸர்லா (chezerla) என்ற இடத்தில் கிடைத்துள்ள விஷம சித்தியின் கல்வெட்டு ஒன்று(விஷம சித்தி என்பது முதலாம் விஷ்ணுவர்த்தனின் மற்றொரு பெயர்) அவன் ஆதிக்கம் அப் பகுதியில் ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்தது என்பதைக் காட்டுகிறது. கி.பி. 1132-ஆம் ஆண்டைச் சேர்ந்த குண்டூர்மாவட்டத்திலிருந்து கிடைத்த மற்றொரு பொறிப்பு, அம் மாவட்டத்தைச் சேர்ந்த எழுபத்து மூன்று கிராமங்கள் கொண்ட ஒரு பகுதியின் ஆட்சிப்பொறுப்பைப் புத்தராஜன் என்பவன் முதலாம் விஷ்ணுவர்த்தனனிடமிருந்து பெற்றான் என்று கூறுகிறது.[1] மேற்கூறியவற்றிலிருந்து தற்காலக்குண்டூர், நெல்லூர் மாவட்டங்களை உள்ளிட்ட வேங்கி அரசை முதலாம் விஷ்ணுவர்த்தனன் ஆண்டு கொண்டிருந்தான் என்பது விளங்கும்.

முதலாம் விஷ்ணுவர்த்தனனின் ஆட்சியில் குறிப்பிடவேண்டிய மற்றொரு நிகழ்ச்சி அவனுடைய பல்லவநாட்டுப் படையெடுப்பாகும். முதலாம் மகேந்திரவர்மன் பல்லவ அரியணையிலிருந்த வரை மேலைச் சாளுக்கியர்களின் ஆதிக்க வளர்ச்சி தடைப்பட்டு வந்தது. அவன் இறந்தவுடன் அவனுடைய மகன் இளம் வயதினனான முதலாம் நரசிம்மவர்மன் பட்டத்திற்கு வந்ததும் இரண்டாம் புலிகேசி பல்லவ நாட்டுப் படையெடுப்பு ஒன்றை மேற்கொண்டான். புலிகேசியுடன் விஷ்ணுவர்த்தனனும் இப் படையெடுப்பில் பங்கு கொண்டு, புலிகேசியின் வெற்றிக்குக் காரணமாக இருந்தான். இப் படையெடுப்பின் பொழுது அவன் புரிந்த வீரதீரச் சாகஸச் செயல்களால்தான் அவனுக்கு 'விஷம சித்தி' (கடினமான காரியங்களைச் சாதிப்பவன்) என்ற பட்டப் பெயர் கிடைத்தது போலும். இப் போரின் பொழுதுதான் கர்மராஷ்டிரம் என்றழைக்கப்பட்ட குண்டூர், நெல்லூர்ப் பகுதிகளை விஷ்ணுவர்த்தனன் கைப்பற்றியிருக்க' வேண்டும்.

[1] G. Yazdani—The Early History of the Deccan p. 472.

சாளுக்கியப் பொறிப்புகள் அனைத்தும் முதலாம் விஷ்ணு வர்த்தனன் பதினெட்டு ஆண்டுகள் ஆட்சிபுரிந்ததாகக் கூறுவதால் அவனுடைய ஆட்சி கி. பி. 641-42-ல் முடிவடைந்திருக்க வேண்டும். இதே ஆண்டில்தான் பல்லவ அரசன் முதலாம் நரசிம்மவர்மன் சாளுக்கிய நாட்டின் மீது படையெடுத்து வாதாபியைக் கைப்பற்றினன். இந்த நெருக்கடியான நேரத்தில் முதலாம் விஷ்ணுவர்த்தனன் தன் அன்பு சகோதரன் இரண்டாம் புலிகேசிக்கு உதவி செய்யும் பொருட்டுத் தன் படைகளுடன் சென்று, வாதாபிப் போரில் பங்கு கொண்டு அங்கு உயிரிழந் திருக்கக்கூடும். 'விஷம சித்தி' என்ற பெயரிலிருந்து அவன் போர்த்துறையில் நல்ல ஆற்றல் பெற்றிருந்தான் என்பதும், குறிப்பாக முற்றுகைப் போர்க் கலையில் கைதேர்ந்தவனுக இருந்தான் என்பதும் தெரிகிறது. எனவே வேங்கிப் பகுதியைக் கைப்பற்றுவதில் அவன் ஒரு முக்கிய பங்கை ஏற்றிருக்க வேண்டும்.

விஷ்ணுவர்த்தனன் பரமபாகவதன் என்றழைக்கப்பட்டதால் விஷ்ணுவை வழிபட்டான் என்று கருதலாம். ஆனுல் மற்றச் சமயங்களை அவன் புறக்கணிக்கவில்லை. அவனுடைய மரபினரின் குலக்கடவுள்களான துர்க்கை, கார்த்திகேயன் ஆகியோரையும் அவன் வழிபட்டான். அவனுடைய அரசியான அய்யணமகாதேவி பெஜவாடாவில் தன்னுல் கட்டப்பட்ட ஒரு சமணக்கோயிலுக்கு வழங்கப்பட்டிருந்த மானியத்தை அவன் புதுப்பித்தான் என்று அவனுடைய சந்ததியார்களில் ஒருவனுடைய சாஸனம் கூறு கின்றது. அரசியே சமணசமயத்தைச் சார்ந்தவளாக இருக்கலாம்; அல்லது ஹிந்து அரசர்கள் பெரும்பாலோரைப் போல அவனும் தன் நாட்டில் எல்லாச் சமயத்தினரையும் போற்றி ஆதரிக்கக் கூடும். இதிலிருந்து அவ் வரசனின் பரந்த சமயநோக்கு புலனுகின் றது. விஷமசித்தி என்ற அவனுடைய பட்டப்பெயரும், திரிசூலமும் விளக்குகளுக்கிடையே சிங்கத்தின் உருவமும் பொறிக்கப்பட்ட அவனுடைய வெள்ளி நாணயங்கள் கண்டுபிடிக்கப்பட்டன,

**ஜயசிம்ம வல்லபன் (கி. பி. 641-673) :-**

'சகலலோகசிரையன்' 'சர்வசித்தி' போன்ற பட்டப் பெயர்களைக் கொண்ட ஜயசிம்மனின் ஆட்சி முப்பத்து மூன்று ஆண்டுகள் நீடித்ததாகக் கீழைச் சாளுக்கியப் பொறிப்புகள் கூறுகின்றன. சில சாஸனங்கள் அவன் முப்பது ஆண்டுகளே ஆட்சி செய்ததாகக் கூறுகின்றன. அவன் வழங்கிய மானியங்களை அறிவிக்கும் பல சாஸனங்கள் கிடைத்திருப்பினும், அவற்றில் அவன் ஆட்சியைப் பற்றிய செய்திகள் அதிகம் காணப்படவில்லை.

அவன் ஆட்சியின் இறுதி ஆண்டுகளில் நாட்டின் நிர்வாகப் பொறுப்பு அவனுடைய மகன் இந்திரபட்டாரகனிடம் ஒப்படைக்கப்பட்டது. இந்தக் காலப் பகுதியைச் சில பொறிப்புகள் ஜயசிம்மனுடைய ஆட்சியோடு இணைக்காமல்இந்திர பட்டாரகனுடைய ஆட்சியோடு இணைத்திருக்கக்கூடும். இதன் விளைவாகத்தான் அவன் ஆட்சிக் காலம் பற்றிய இக் குழப்பம் ஏற்பட்டிருக்கவேண்டும். அவன் ஒரு வெற்றிகரமான போருக்குப் பிறகு தன்னுடைய படைகளுடன் முகாமிட்டுக்கொண்டிருந்த இடத்திலிருந்து புலொம்பூரு சாஸனத்தை (Pulomburu charter) வெளியிட்டான் என்பதிலிருந்து அவன் ஆட்சியில் ஏதோ ஒரு போர் நடந்திருக்க வேண்டுமென்று ஊகிக்கலாம். ஆனால் யாருடன் இப்போர் நடந்தது, எப்பொழுது நடந்தது என்பதை அறிய முடியவில்லை. அவன் பட்டத்திற்கு வந்த பொழுதுதான் பல்லவர்களின் வாதாபிப் படையெடுப்பு நடந்தது. வாதாபி கைப்பற்றப்பட்டு அழிக்கப்பட்டது. ஒரு வேளை இப் போர் பல்லவர்களுடன் அவன் நடத்திய போராக இருக்கலாம். ஜயசிம்மனுடைய பொறிப்புகள் கண்டுபிடிக்கப் பட்ட இடங்களிலிருந்து அவன் பேரரசில் கிழக்குக் கோதாவரி (குத்தவாடி விஷயம்) கிருஷ்ணு (குத்ரஹார விஷயம்) குண்டூர் (கந்தேறு விஷயம்) மேற்குக் கோதாவரி (சென்னூருபள்ளி விஷயம்) மாவட்டங்கள் அடங்கியிருந்தன என்பது தெரியவருகிறது. அவனுடைய சாஸனம் ஒன்று உதயபுரம் என்ற இடத்திலிருந்து வெளியிடப்பட்டிருக்கிறது. உதயபுரம் என்பது நெல்லூர் மாவட்டத்திலுள்ள உதயகிரி என்ற இடத்தைக் குறிப்பிடும் என்ற கருத்தை ஏற்றுக்கொண்டால் நெல்லூர் மாவட்டத்தின் வடபகுதியும் அவன் பேரரசிற்கு உட்பட்டிருக்க வேண்டும். அவனுக்கும் மேலைச்சாளுக்கிய அரசிற்கும் நிலவிய உறவு பற்றித் திட்டவட்டமாகத் தெரியவில்லை. இரண்டாம் புலிகேசியின் மகன் முதலாம் விக்கிரமாதித்யன் பல்லவர்களுக்கு எதிராகப் போரைத் தொடர்ந்து நடத்தினன். ஜயசிம்மவல்லபன் இப் போரில் பங்கு கொண்டானு என்பது தெரியவில்லை.

தன் தந்தையைப் போல ஜயசிம்மனும் வைணவ சமயத்தைச் சேர்ந்தவன். கல்வி, கேள்விகளில் நல்ல தேர்ச்சி பெற்றவன். அறிவுத் துறையில் அவன் ஆற்றல் எல்லாராலும் போற்றப் பட்டது. அசனபுரம் என்ற இடத்தில் உயர் கல்வியைப் போதிக்கும் கடிகை (கல்லூரி) ஒன்று இருந்ததாகக் கூறப் படுகிறது. இக் கல்லூரிக்கு ஜயசிம்ம வல்லபன் ஏராளமான மானியங்கள் வழங்கினன்.

### இந்திர பட்டாரகன் (கி.பி. 673)

ஜயசிம்மனுக்குப் பிள்ளைகள் இல்லாததால் தன் இளைய சகோதரனான இந்திர பட்டாரகனைத் தன்னுடைய வாரிசாக நியமித்தான். அவனுடைய ஆட்சி ஏழு நாட்களே நீடித்த மிகக் குறுகிய ஆட்சியாகும். 'சிம்ம விக்கிரமன்' 'தியாக தேனு' போன்ற பட்டப் பெயர்களை அவன் சூடிக் கொண்டான். வீரத்தில் அவன் இந்திரனை ஒத்தவன் என்று அவனுடைய மகன் இரண்டாம் விஷ்ணுவர்த்தனனின் பொறிப்புகள் அவனை வருணிக்கின்றன. இது, பொறிப்புகளில் வழக்கமாகக் காணப்படும் உயர்வுநவிற்சிக் கூற்றேயாகும். ஏனெனில் அவனுடைய குறுகிய ஆட்சிக் காலத்திலோ, அதற்கு முன்போ அவனுடைய போர்ச் சாதனைகள் பற்றி நமக்கு ஒன்றும் தெரியாது. கலிங்க நகரத்துக் கங்க அரசன் அதிராஜன் இந்திரவர்மன் தலைமையில் தோன்றிய தன் பகைவர்களின் கூட்டணி ஒன்றுடன் போரிட்டு இந்திர பட்டாரகன் போரில் மடிந்தான் என்று ஒரு காலத்தில் கருதப்பட்டது. ஆனால் அண்மையில் கிடைத்துள்ள சான்றுகளிலிருந்து இப்போரில் கொல்லப்பட்ட இந்திர பட்டாரகன் விஷ்ணு குண்டினர் மரபைச் சேர்ந்த ஓர் அரசன் என்று தெரிகிறது.

### இரண்டாம் விஷ்ணுவர்த்தனன் (கி.பி. 673-681)

இந்திரபட்டாரகனுக்குப் பிறகு அவன் மகன் இரண்டாம் விஷ்ணுவர்த்தனன் பட்டமெய்தினான். 'சர்வலோக சிரையன்', 'விஷமசித்தி', 'மகாத்வஜன்', 'பிரளயாதித்தியன்' போன்ற பட்டங்களை அவன் சூடிக் கொண்டான். தன்னுடைய பொறிப்புகள் ஒன்றில் அவன் தன்னை ஜயசிம்மனுடைய பிள்ளை என்று கூறிக் கொள்கிறான். அவனுக்குத் தன் பெரியப்பனிடம் இருந்த அன்பு, மரியாதை காரணமாக அதுபோல அவன் கூறியிருக்கலாம். அல்லது ஜயசிம்மனுடைய தத்துப் பிள்ளையாக இருக்கக்கூடும். அவனுடைய ஒன்பது ஆண்டு ஆட்சிக்காலத்தில் அவன் பல வெற்றிகளைப் பெற்றதாகக் கூறப்பட்ட போதிலும், அவன் ஆட்சியின் நிகழ்ச்சிகளைப் பற்றி அறிந்து கொள்வதற்குப் போதுமான சான்றுகள் இல்லை. அவனுடைய பெரும்பாலான பொறிப்புகள் அவன் கர்ம ராஷ்டிரம் என்னும் பகுதியில் கிராமங்களை நன்கொடையாக அளித்த செய்தியைக் குறிப்பிடுகின்றன.

### மங்கியுவராஜன் (கி.பி. 681-705)

முதலாம் ஜயசிம்மன் காலத்திலிருந்தே அவன் யுவராஜ் பதவியை வகித்து வந்ததால், யுவராஜன் என்ற பட்டப் பெயரை,

அவன் அரசனாக அரியணையிலமர்ந்த பிறகும் கூட தொடர்ந்து பயன்படுத்தினான் போலும். ('சகலலோகசிரையன்' 'சமஸ்தபுவன சிரையன்' 'விஜயசித்தி' போன்ற பட்டப் பெயர்களை அவன் சூடிக் கொண்டான்). அவன் ஆட்சி இருபத்தைந்து ஆண்டுகள் நீடித்த போதிலும், முக்கியமான நிகழ்ச்சி எதுவும் நிகழ்ந்ததாகத் தெரியவில்லை. அவனுக்கு இரண்டாம் ஜயசிம்மன், மூன்றாம் விஷ்ணுவர்த்தனன், கொக்கிலி என்ற மூன்று பிள்ளைகள் இருந்தனர்.

## இரண்டாம் ஜயசிம்மன், கொக்கிலி (கி.பி. 705-718)

மங்கியுவராஜனுக்குப் பிறகு அவன் மகன் இரண்டாம் ஜயசிம்மன் பட்டமெய்தினான். 'சகலலோகசிரையன்' 'சர்வ சித்தி' போன்ற பட்டப் பெயர்களை அவன் சூடிக் கொண்டான். கர்மராஷ்டிரத்தில் பெணுகபற்று என்ற ஒரு கிராமத்தைத் தானமாக வழங்கிய செய்தியைக் கூறும் அவனுடைய ஆட்சியைச் சேர்ந்த ஒரே ஒரு செப்பேடு நமக்குக் கிடைத்துள்ளது. ஜயசிம்மன் ஆட்சி முடிவடைந்ததும் முதல் முதலாகக் கீழைச் சாளுக்கியர் அரசில் வாரிசுரிமைப் போட்டி ஏற்படுவதைக் காண்கிறோம். இரண்டாம் ஜயசிம்மனின் இளைய சகோதரனான கொக்கிலி என்பவன் அரியணையைக் கைப்பற்றி ஆறு மாதங்கள் ஆட்சி புரிந்தான். கொக்கிலி விக்கிரமாதித்ய பட்டாரகன் என்பது அவனுடைய முழுப் பெயர் என்பது அவனுடைய ஒரு சாஸனத்திலிருந்து தெரிகிறது. கொக்கிலிக்குப் போட்டியாக அவன் மூத்த சகோதரன் மூன்றாம் விஷ்ணுவர்த்தனன் வேங்கி அரியணைக்கு உரிமை கொண்டாடினான். வாரிசுரிமைப் போர் ஒன்று நிகழ்ந்து இறுதியில் இரு சகோதரர்களிடையே ஓர் உடன்பாடு ஏற்பட்டது. அதன்படி வேங்கி அரசின் ஒரு பகுதியான கலிங்கத்தைச் சேர்ந்த எலமன்சி என்ற பகுதியை கொக்கிலி ஆளவேண்டுமென்றும், வேங்கி அரியணை மூன்றாம் விஷ்ணுவர்த்தனனுக்குச் சேர வேண்டுமென்றும் முடிவாகியது. எலமன்சிலியிருந்து கொக்கிலியும் அவன் சந்ததியார்களும் நான்கு தலை முறைகள் ஆண்டனர். அவர்கள் வேங்கி அரசின் ஆதிக்கத்திற்கு உட்பட்டிருந்தனரா, சுயேச்சையாக ஆண்டனரா என்பதைக் கூற இயலாது.

## மூன்றாம் விஷ்ணுவர்த்தனன் (கி.பி.718-752)

இவ்வாறு கொக்கிலியிடமிருந்து வேங்கி அரியணையைக் கைப்பற்றிய மூன்றாம் விஷ்ணுவர்த்தனன் முப்பத்தைந்து ஆண்டுகள் ஆட்சிபுரிந்தான். சில பொறிப்புகள் அவன் முப்பத்து ஏழு ஆண்டுகள் (கி. பி. 755 வரை) ஆட்சி செய்ததாகவும்

கூறுகின்றன. 'சமஸ்தபுவன சிரையன்', 'திரிபுவனங்குசன்', 'விஷமசித்தி' போன்ற பட்டங்களை அவன் சூட்டிக்கொண்டான். அவனுடைய ஆட்சியைச் சேர்ந்த பல பொறிப்புகள் நமக்குக் கிடைத்துள்ளன. அவற்றுள் சமணப்பள்ளி ஒன்றுக்கு ஒரு கிராமத்தைத் தானமாக வழங்கிய குப்ஜ விஷ்ணுவர்த்தனனின் சாஸனத்தைப் புதுப்பிக்கின்றது. மற்றொரு பொறிப்பு மூன்றாம் விஷ்ணுவர்த்தனனின் சகோதரி பிரிதிவி வழங்கிய தானத்தை அறிவிக்கிறது.

மூன்றாம் விஷ்ணுவர்த்தனனின் ஆட்சியின் ஒரு முக்கியமான நிகழ்ச்சி, அவனுடைய பேரரசின் தெற்குப் பகுதியில் பல்லவ அரசன் இரண்டாம் நந்திவர்மனின் (பல்லவமல்லன்) படைத் தலைவனான உதயசந்திரனுக்கும், நிஷாத அரசன் பிரிதிவி வியாக்ர னுக்கும் நடந்த போரும், அதன் விளைவாக விஷ்ணுவர்த்தனன் தன் பேரரசின் சில பகுதிகளை இழந்ததுமாகும். இந்தப் போர் மூளுவதற்கான சூழ்நிலை நந்திவர்மனின் 21ஆம் ஆட்சி ஆண்டைச் சேர்ந்த உதயேந்திரம் செப்பேடுகளில் வருணிக்கப்பட்டுள்ளது. நிஷாத அரசன் பிரிதிவி வியாக்ரன் தன் வலிமையைப் பெருக்கிக் கொள்ள அசுவமேதக் குதிரையைப் பின்தொடர்ந்து விஷ்ணு வர்த்தனனின் பேரரசின் தெற்குப் பகுதியைக் கைப்பற்றிக் கொண்டானென்றும், பல்லவ நந்திவர்மனின் படைத் தளபதி உதயசந்திரன் அவனைப் போரில் வென்று விஷ்ணுராஜ விஷயத்தி லிருந்து (அதாவது கீழைச் சாளுக்கியப் பேரரசிலிருந்து) அவனை வெளியேற்றி அப்பகுதியைப் பல்லவப் பேரரசோடு இணைத்துக் கொண்டான் என்றும் உதயேந்திரம் செப்பேடு கூறுகின்றது.[1] எனவே இந்தப் போர் நிஷாத அரசன் ஒருவனுக்கும், பல்லவப் படைத்தளபதிக்கும் விஷ்ணுவர்த்தனன் பேரரசின் தென் பகுதியில் நடந்திருக்கவேண்டும். போரின் விளைவாக விஷ்ணு வர்த்தனன் தன் பேரரசின் ஒரு பகுதியைப் பல்லவர்களிடம் இழந் திருக்கவேண்டும். என். வெங்கடரமணய்யா அவர்கள் உதயேந் திரம் செப்பேட்டில் கூறப்பட்டிருக்கும் இச்செய்திகளுக்கு வேறு விதமாகப் பொருள் விளக்கம் கூறுகிறார். அசுவமேத வேள்வி யார் செய்தது என்பது தெளிவாக உதயேந்திரம் செப்பேட்டில் குறிப்பிடப்படவில்லை. இந்த அசுவமேத வேள்வியைச் செய்தது இரண்டாம் நந்திவர்மன் என்றும், அசுவமேதக் குதிரையைத் தொடர்ந்து சென்று அதைப் பாதுகாக்கும் பொறுப்பு படைத் தளபதி உதயசந்திரனிடம் ஒப்படைக்கப்பட்டது என்றும், அவ் வாறு செல்லும்பொழுது வடதிசையில் போயர் நாட்டில் போயர்

[1] T. V. Mahalingam — KanchiPuram in Early South Indian History — p. 158.

தலைவன் பிரிதிவி வியாக்ரன் உதயசந்திரனை எதிர்த்து நெல்லூருக் கருகில் போரிட்டானென்றும், போரில் உதயசந்திரன் வெற்றி பெற்று, வேங்கிச் சாளுக்கிய அரசின் தென்பகுதியான போயர் நாட்டைக் கைப்பற்றிப் பல்லவப் பேரரசுடன் இணைத்துக் கொண் டான் என்றும் வெங்கடரமணய்யா கருதுகிறார். இந்தப் போயர் தலைவன் விஷ்ணுவர்த்தனனின் ஆதிக்கத்திற்கு உட்பட்ட ஒரு சிற்றரசனாக இருக்கக்கூடும் என்பது அவருடைய கருத்து.[2] பல்லவ நந்திவர்மன் அசுவமேத வேள்வி செய்திருந்தால், அவனுடைய உதயேந்திரம் செப்பேடும் மற்றப் பல்லவப் பொறிப்புகளும் அவ்வளவு சிறப்பான நிகழ்ச்சியை நிச்சயமாகக் குறிப்பிட்டிருக்க வேண்டும். அவ்வாறு குறிப்பிடாதது வியப்பிற்குரியது. எனவே அசுவமேத வேள்வியைச் செய்தவன் நந்திவர்மனாக இருக்க முடி யாது. அவன் பிரிதிவி வியாக்ரனாகத்தான் இருக்கவேண்டுமென்று டி. சி. சர்க்கார் கருதுகிறார்.[3] பல்லவ அரசன் இரண்டாம் பரமேஸ்வரனின் ஆட்சியில் வேங்கிச் சாளுக்கிய அரசன் மூன்றாம் விஷ்ணுவர்த்தனனும் மேலைச்சாளுக்கிய அரசன் விஜயாதித்யனும் ஒன்றிணைந்து தங்கள் நாட்டிற்கு அடுத்திருந்த எல்லைப் பகுதிகளைப் பல்லவர்களிடமிருந்து கைப்பற்றியிருக்கக்கூடும். இரண்டாம் நந்திவர்மன் அரியணையெய்தியவுடன் இப் பகுதிகளை மீட்கும் நோக்கத்துடன் தன் படைத்தளபதி உதயசந்திரனை இதற்காக அனுப்பியிருக்கக்கூடும். போர் நடந்த சூழ்நிலை, எதுவாயிருப் பினும், இப் போரின் விளைவாக விஷ்ணுவர்த்தனன் தன் பேரரசின் தென் பகுதியைப் பல்லவர்களிடம் இழந்தான் என்பதில் ஐயப்பாடு இல்லை.

### முதலாம் விஜயாதித்யன் (கி. பி. 752-770)[1]

'சமஸ்தபுவன சிரையன்', 'திரிபுவனாங்குசன்', 'மகாராஜாதி ராஜன்', 'பரமேஸ்வரன்', 'பட்டாரகன்' போன்ற இவனுடைய பட்டப் பெயர்களிலிருந்து இவன் ஒரு வலிமைமிக்க அரசனாக இருக்கவேண்டுமென்று தெரிகிறது. ஆனால் இவன் சாதனைகளைப் பற்றி அறிந்துகொள்வதற்குப் போதுமான சான்றுகள் இல்லை. இவனுடைய பொறிப்புகளிலும் இவனுக்குப்பிறகு ஆட்சி செய்த அரசர்கள் பொறிப்புகளிலும் இவன் ஆட்சியைப்பற்றி

[2] N. Venkataramanayya - op. cit., p. p. - 75-76.

[3] R. C. Majumdar (Ed.) — The History and culture of the Indian people Vol. III p. 254 f. n.

[1] தன் ஆட்சியின் இறுதி ஆண்டுகளில் மூன்றாம் விஷ்ணுவர்த்தனன் அரச பதவி யைத் துறந்தான் என்றும் அதன் பிறகு அவன் மகன் முதலாம் விஜயாதித்யன் பட்டமெய்தினனென்றும் டி. சி. காங்குலி என்ற அறிஞர் கருதுகின்றார். இதற்கு ஆதாரமில்லை.

வரலாற்றுக்குப் பயனுடைய செய்தி எதுவும் காணப் பெறவில்லை. இருப்பினும் இவன் ஆட்சியில் நிகழ்ந்த ஒரு முக்கியமான நிகழ்ச்சியை இங்குக் குறிப்பிடவேண்டும். பிற்கால வேங்கிநாட்டின் வரலாற்றை வெகுவாகப் பாதித்தது என்ற காரணத்தினுல் இந்நிகழ்ச்சி முக்கியத்துவம் பெறுகிறது. விஜயாதித்யன் பட்டமெய்திய சில ஆண்டுகள் கழித்து மேலைச்சாளுக்கிய அரசில் ஒரு புரட்சிகரமான மாற்றம் நிகழ்ந்தது. மேலைச்சாளுக்கிய ஆதிக்கத்திற்குட்பட்டுச் சிற்றரசர்களாயிருந்த ராஷ்டிரகூடர்கள் தந்திதுர்க்கன் தலைமையில் ஓர் அரசியல் புரட்சியின் மூலம் மேலைச்சாளுக்கியர் ஆதிக்கத்திற்கு முடிவுகட்டி, தங்கள் ஆதிக்கத்தை மேற்குத் தக்காணப் பகுதியில் ஏற்படுத்தினுர்கள். தங்கள் நெருங்கிய உறவினர்களும், தங்களுடன் நட்புறவு கொண்டவர்களான மேலைச்சாளுக்கியர்களின் ஆதிக்கம் மறைந்து, ராஷ்டிரகூடர்களின் ஆதிக்கம் தோன்றியது, தக்காணத்தின் அரசியல் அமைதியைக் குலைப்பதாக இருந்தது. மேலைச்சாளுக்கியர்களைத் தங்கள் பகைவர்களாகக் கருதிய ராஷ்டிரகூடர்கள், நாளடைவில் வேங்கிச் சாளுக்கியர்களையும் தங்கள் பகைவர்களாகக் கருதினுர்கள். ராஷ்டிரகூட அரசன் தந்திதுர்க்கன், காஞ்சிபுரம், கோசலம், கலிங்கம், ஸ்ரீ சைலம் போன்ற நாடுகளை வென்றதாக ராஷ்டிரகூடப் பொறிப்புகள் கூறுகின்றன. ஆனுல் வேங்கிநாடு இங்குக் குறிப்பிடப்படவில்லை. ஏன் தந்திதுர்க்கன் வேங்கி நாட்டின் மீது படையெடுக்கவில்லை என்பதுபற்றி நம்மால் கூறயியலவில்லை. ஆனுல் இந்நிலை வெகு நாட்கள் நீடித்திருக்கவில்லை. ஏனெனில் அவனுடைய ஆட்சியின் இறுதியில் அவன் வேங்கிமீது படையெடுப்பு ஒன்றை மேற்கொண்டதாகக் கூறப்படுகிறது. வேங்கிச் சாளுக்கியர்களுக்கு ராஷ்டிரகூடர்களால் எதிர்காலத்தில் தொடர்ந்து ஏற்படப் போகும் ஆபத்திற்கு ஓர் அறிகுறியாக, ஒரு முன்னெச்சரிக்கையாக இப்படையெடுப்பு விளங்கியது. ராஷ்டிரகூட முதலாம் கிருஷ்ணன் ஆட்சியில் இளவரசன் இரண்டாம் கோவிந்தன் தலைமையில் வேங்கி நாட்டின் மீது ஒரு படையெடுப்பு மேற்கொள்ளப்பட்டது என்றும், வேங்கி அரசன் முதலாம் விஜயாதித்யன், ராஷ்டிரகூடப் படைகளை எதிர்த்துப் போரிடமுடியாமல் படைகளையும் பணத்தையும் நாட்டின் பகுதிகளையும் பகைவனுக்குக் கொடுத்து நிலைமையைச் சமாளித்தான் என்றும் கி.பி. 769ஆம் ஆண்டு ராஷ்டிரகூட அலாஸ் செப்பேடுகள் கூறுகின்றன. இந்தப் போருக்கு ராஷ்டிரகூடர்களின் நாடுபிடிக்கும் ஆர்வம் மட்டும் காரணமாக இருக்கமுடியாது. வேறு காரணமும் இருக்க வேண்டும். இதைத் தெரிந்துகொள்ள ராஷ்டிரகூட வரலாறு தொடர்பான சில செய்திகளை நாம் நினைவுபடுத்திக்கொள்ள வேண்டும். தந்திதுர்க்கனுக்குப் பிள்ளைகள் இல்லாததால் அவன்

இறந்தவுடன் அவனுடைய தந்தைவழி மாமன் முதலாம் கிருஷ்ணன் பட்டமெய்தினன். பட்டமெய்தி, பத்து ஆண்டுகள் வரை அவனுக்கு நாட்டில் பல தொல்லைகள் ஏற்பட்டன. குறிப்பாக மேலைச்சாளுக்கியர் தங்கள் ஆதிக்கத்தை மீட்டுக்கொள்ளும் முயற்சியில் ஈடுபட்டார்கள். ராகப்பன் என்பவன் தலைமையில் இம் முயற்சி தொடங்கியது. எட்டு ஆண்டுகள் அவனுடன் தீவிரமாகப் போரிட்டு அவனை முறியடித்த பிறகுதான் கிருஷ்ணன் ராஷ்டிரகூட ஆதிக்கத்தைக் காப்பாற்ற முடிந்தது. இந்த ராகப்பன் யார் என்பது குறித்து வரலாற்றறிஞர்களிடையே கருத்து வேறுபாடுகள் உள்ளன. துருவனுடைய பிம்பரி (pimpari) செப்பேடுகளிலிருந்து, ராகப்பன் மேலைச்சாளுக்கிய குடும்பத்தைச் சேர்ந்தவனாக இருக்கக்கூடும் என்று ஊகிக்கலாம். ராஷ்டிரகூடக் கிருஷ்ணனுக்கு எதிராகப் போரிட்ட இந்த ராகப்பனுக்கு முதலாம் விஜயாதித்யன் ஆதரவு அளித்ததின் மூலம் கிருஷ்ணனின் கோபத்திற்கு அவன் ஆளாகியிருக்கக்கூடும். தன் பகைவனுக்கு உதவிய வேங்கிச்சாளுக்கிய அரசனான முதலாம் விஜயாதித்யனைத் தண்டிக்கும் நோக்கத்துடன் இப் படையெடுப்பு மேற்கொள்ளப்பட்டிருக்க வேண்டும்; அல்லது கிருஷ்ணன் ஆட்சியில் நிலவிய குழப்பமான நிலையைப் பயன்படுத்திக்கொண்டு முதலாம் விஜயாதித்யன் ராஷ்டிரகூடர்களுக்குச் சொந்தமான பகுதிகள் சிலவற்றைக் கைப்பற்றியிருக்கக்கூடும். இதனால் வெறுப்படைந்த கிருஷ்ணன் வேங்கி மீது ஒரு படையெடுப்பை மேற்கொண்டிருக்கக்கூடும்.

இப் படையெடுப்பின்பொழுது வேங்கி கைப்பற்றப்படவில்லை. இருதரப்பினரிடையே பெரிய சண்டை ஏதும் நடந்ததாகத் தெரியவில்லை. கோவிந்தன் தன் படைகளுடன் வேங்கி நாட்டின் எல்லையைக் கடப்பதற்கு முன்பே, முதலாம் விஜயாதித்யன் சமாதானப் பேச்சு வார்த்தையைத் தொடங்கிப் பொருள், படை, நாடு எல்லாம் கொடுத்து நாட்டை ராஷ்டிரகூட ஆபத்திலிருந்து காப்பாற்றினன். இருப்பினும் இப் படையெடுப்பு வருங்கால நிகழ்ச்சிகளின் ஒரு முன்னெச்சரிக்கையாக அமைந்தது. அடுத்துவரும் அரசர்களின் ஆட்சியில் ராஷ்டிரகூடர்களுக்கும், வேங்கிச்சாளுக்கியர்களுக்குமிடையே தொடர்ந்து ஆதிக்கப் போர்கள் நடப்பதைக் காணப்போகிறோம்.

**நான்காம் விஷ்ணுவர்த்தனன் (கி.பி. 771-806)**

இவனுடைய ஆட்சி பற்றிய பல செய்திகளை நாம் ராஷ்டிரகூடப் பொறிப்புகளிலிருந்து அறிகிறோம். இவன் தன் ஆட்சியின் தொடக்கத்தில் ராஷ்டிரகூட விவகாரங்களில் தலையிட்டான். முதலாம் விஜயாதித்யன் ஆட்சியின் இறுதியில் நடந்த

ராஷ்டிரகூடப் படையெடுப்பில் விஜயாதித்யன் தோல்வியடைந்ததால் ராஷ்டிரகூடர்களின் மேலாண்மையை ஏற்றுக்கொண்டு, அவர்களுக்கடங்கிய சிற்றரசனுக இவன் இருந்தான். விஷ்ணுவர்த்தனன் தன் ஆட்சியின் தொடக்கத்தில் அதே நிலையில் இருந்திருக்கவேண்டும். கி. பி. 769-ல் ராஷ்டிரகூட முதலாம் கிருஷ்ணன், விஷ்ணுவர்த்தனனின் ஆட்சியில் வேங்கிமீது மீண்டும் படையெடுத்தான். வாதாபிச் சாளுக்கியர்கள் வீழ்ச்சிக்கு ராஷ்டிரகூடர்கள் காரணமாகயிருந்ததால், சாளுக்கியர்களின் ஒரு கிளை மரபினரான வேங்கிச்சாளுக்கியர்கள் ராஷ்டிரகூடர்கள்மீது பழி வாங்கும் எண்ணங் கொண்டிருந்தனர். கீழைச்சாளுக்கியர்களால் தன் அரசிற்கு எப்பொழுதும் ஆபத்து இருக்கிறது என்பதை உணர்ந்த கிருஷ்ணன், அவர்கள் அதிகார வளர்ச்சியைத் தடுக்க இளவரசன் கோவிந்தன் தலைமையில் இப் படையெடுப்பை மேற்கொண்டான். வேங்கிக்கு நூறு மைல் தொலைவில் முகாமிட்டிருந்த ராஷ்டிரகூடப்படை, வேங்கிமீது தாக்குதலைத் தொடங்கத் திட்டமிட்டிருந்தது. ஆனுல், அது செயல்படுத்தப்படுவதற்கு முன்பே நான்காம் விஷ்ணுவர்த்தனன் தன் பேரரசின் ஒரு சில பகுதிகளையும், போர் நஷ்ட இழப்பாக ஒரு பெரும் தொகையையும் ராஷ்டிரகூடர்களுக்குக் கொடுப்பதாக இசைந்து, ஒரு சமாதான உடன்படிக்கை செய்துகொண்டான். இந்த உடன்படிக்கை ஒரு திருமண ஒப்பந்தத்தின் மூலம் மேலும் வலுப்படுத்தப்பட்டது. விஷ்ணுவர்த்தனன் தன் மகள் சீலபத்ரிகா என்பவளைக் கோவிந்தன் தம்பி துருவனுக்கு மணமுடித்துக் கொடுத்தான்.

ராஷ்டிரகூட ஆதிக்கத்திலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ள விஷ்ணுவர்த்தனனுக்கு, அடுத்து ஒரு நல்ல வாய்ப்பு கிடைத்தது. முதலாம் கிருஷ்ணன் கி.பி, 772ல் உயிரிழக்கவே அவனுடைய மூத்த மகன் இரண்டாம் கோவிந்தன் பட்டமெய்தினுன். ஆனுல் அவனுடைய தம்பி துருவன் அரியணையைக் கைப்பற்றச் சூழ்ச்சிகள் செய்துகொண்டிருந்தான். தன் தம்பியைத் தனித்து நின்று எதிர்க்கமுடியாத கோவிந்தன், சிற்றரசர்கள் பலர் உதவியை நாடினுன். அவ்வாறு அவனுக்கு உதவியளித்த சிற்றரசர்களுள் ஒருவன், வேங்கி அரசன் நான்காம் விஷ்ணுவர்த்தனன். கோவிந்தன் போன்ற திறமையற்ற அரசன் ஒருவன் ராஷ்டிரகூட அரியணையிலிருந்தால் தன்னைப் போன்ற சிற்றரசர்களுக்கு அது சாதகமாக இருக்கலாமென்று நினைத்த விஷ்ணுவர்த்தனன், துருவன் போன்ற திறமை படைத்த அரசன் ராஷ்டிரகூட அரசனுவதை விரும்பவில்லை. எனவே அவன் துருவனுக்கு எதிராகக் கோவிந்தனுக்கு உதவி செய்ய இசைந்தான். இவ்வாறு மாளவம், காஞ்சிபுரம், கங்கவாடி. வேங்கி நாட்டரசர்கள் கோவிந்தன்

தலைமையில் ஒரு கூட்டணியை அமைத்துத் துருவனோடு போரிடத் தயாராயினர். இப்போரில் இறுதி வெற்றி துருவனுக்குக் கிடைத்த தால் துருவன் அரச பதவியை அடைந்தான். துருவன் ராஷ்டிரகூட அரியணையைக் கைப்பற்றியவுடன், தனக்கு எதிராகத் தன் அண்ணன் கோவிந்தனுக்கு உதவிய எல்லாரையும் ஒடுக்கும் பணியில் ஈடுபட்டான். வெமுலவாடச் சாளுக்கிய அரசன் முதலாம் அரிகேசரியின் தலைமையில் துருவன் ஒரு படையை வேங்கி நாட்டின்மீது படையெடுத்துச் செல்ல அனுப்பினான். அரிகேசரியின் பர்பனி (Parbhani) செப்பேடுகளும் அரிகேசரியின் அவைக் கவிஞனான பம்பனின் விக்ரமார்ஜுன விஜயம் என்னும் நூலும் இப் படையெடுப்பைப் பற்றிக் கூறுகின்றன. இப் படையெடுப்பி லிருந்து வேங்கி நாட்டைக் காப்பாற்ற விஷ்ணுவர்த்தனன் என்ன நடவடிக்கைகள் எடுத்தான் என்பது நமக்குத் தெரியவில்லை. ஆனால் அவன் போரில் தோல்வியடைந்து, துருவனுடன் சமாதானம் செய்துகொண்டான் என்பதை உறுதியாகக் கூறலாம். இச் சமாதானத்தின்படி ராஷ்டிரகூட மேலாதிக்கத்தை மீண்டும் விஷ்ணுவர்த்தனன் ஏற்றுக் கொண்டிருக்கவேண்டும். துருவன் மகன் மூன்றும் கோவிந்தன் ஆட்சியிலும் ராஷ்டிரகூடர் களுக்கும் வேங்கிச் சாளுக்கியர்களுக்கும் இதே அடிப்படையில் உறவு நீடித்தது. மூன்றும் கோவிந்தனின் ஆட்சியில் தன் மேலாளனின் ஆணைகளைச் சிரமேற்கொண்டு நிறைவேற்ற நான்காம் விஷ்ணுவர்த்தனன் காத்துக் கொண்டிருந்தான் என்றும் மான்யகேட நகரம் நிர்மாணிக்கப்பட்டபொழுது அதன் மதிற் சுவர்கள் கட்டும் பணியில் விஷ்ணுவர்த்தனன் ஈடுபட்டிருந்தான் என்றும் ராஷ்டிரகூடச் செப்பேடுகள் கூறுகின்றன. விஷ்ணு வர்த்தனன் ராஷ்டிரகூடர்களின் மேலாதிக்கத்தை ஏற்றுக் கொண்டு ஒரு சிற்றரசனாக இருந்தான் என்பதை ராஷ்டிரகூடச் செப்பேடுகள் இவ்வாறு மிகைப்படுத்திக் கூறுகின்றன போலும்.

### இரண்டாம் விஜயாதித்யன் (கி.பி. 806-846)

நான்காம் விஷ்ணுவர்த்தனன் இறந்தவுடன் அவன் மூத்த மகன் இரண்டாம் விஜயாதித்யன் பட்டமெய்தினான். அவனுடைய நாற்பது ஆண்டு ஆட்சி ராஷ்டிரகூடர்களுடன் செய்த போரிலேயே கழிந்தது. தன் தந்தையின் காலத்தில் வேங்கிமீது ஏற்படுத்தப்பட்ட ராஷ்டிரகூடர்கள் ஆதிக்கத்தை விஜயாதித்யன் வெறுத்தான். எப்படியாவது தன் நாட்டை ராஷ்டிரகூடர்கள் செல்வாக்கிலிருந்து விடுவிக்கவேண்டும் என்பது அவன் குறிக் கோள். ஆனால் ராஷ்டிரகூடர்கள் வேங்கி நாட்டின்மீது தங்கள் இரும்புப்பிடியைத் தளர்த்துவதாக இல்லை. அதற்கேற்ற வகையில் வேங்கி அரசியலில் தலையிட ராஷ்டிரகூடக் கோவிந்தனுக்கு ஒரு

நல்ல வாய்ப்புக் கிட்டியது. இரண்டாம் விஜயாதித்யனின் தம்பி பீமசாளுகி என்பவன் வேங்கி அரியணையைத் தன் அண்ணனிட மிருந்து பறிக்கத் திட்டமிட்டுக்கொண்டிருந்தான். அவன் கோரிக்கையை ஏற்று மூன்றும் கோவிந்தனும், கங்கர்களும் அவனுக்கு உதவி செய்ய முன் வந்தனர். இப் போரில் விஜயாதித்யன் தோற்கடிக்கப்பட்டுப் பீமசாளுகி வேங்கி அரியணை யில் அமர்த்தப்பட்டான். ராஷ்டிரகூடச் செல்வாக்கை வேங்கி நாட்டிலிருந்து அகற்றி, தன் தம்பி பீமசாளுகியிடமிருந்து வேங்கி அரியணையைக் கைப்பற்ற விஜயாதித்யன் ஒரு நீண்ட போரில் ஈடுபட வேண்டியதாயிற்று. ராஷ்டிரகூடர்களுடன் பன்னிரண்டு ஆண்டுகள் அவன் நடத்திய இந்தப் போர் பற்றிய செய்திகளை மூன்றும் விஜயாதித்யனின் சாதலூரு, போனங்கிச் செப்பேடுகள் கூறுகின்றன. கங்கர்களுடனும், ராஷ்டிரகூடர்களுடனும் நூற்று எட்டுப் போர்களைப் புரிந்து, அவர்களை முறியடித்து, பீமசாளுக்கி யிடமிருந்து அரியணையைக் கைப்பற்றி விஜயாதித்யன் வேங்கியை ஆண்டான் என்றும், போரில் வெற்றி பெற்ற நூற்றுஎட்டு இடங் களிலும் நூற்று எட்டுச் சிவன் கோயில்களைக் கட்டினனென்றும் இப் பொறிப்புகள் கூறுகின்றன.

தொடக்கத்தில் இப்போர் விஜயாதித்யனுக்குச் சாதகமாக யில்லை; அவனுக்கு எதிராகப் போரில் தலையிட்ட ராஷ்டிரகூட மூன்றும் கோவிந்தனுக்குக் கங்கர்கள், வெமுலவாடச் சாளுக் கியர்கள் போன்ற சிற்றரசர்களின் உதவி கிடைத்ததால் போரில் ராஷ்டிரகூடர்களின் நிலை ஏற்றம் பெற்றது. ஆனல் விரைவிலேயே நிலைமை விஜயாதித்தனுக்குச் சாதகமாக மாறியது. கி.பி. 814ல் மூன்றும் கோவிந்தன் இறந்து அவனுடைய மகன் இளம் வயதினனை முதலாம் அமோகவருஷன் ராஷ்டிரகூட அரியணை எய்தியது விஜயாதித்யனுக்குச் சாதகமாக அமைந்தது. ராஷ்டிரகூட ஆதிக்கத்திற்குட்பட்ட சிற்றரசர்களும், அதிகாரி களும் முதலாம் அமோகவருஷனுக்கு எதிராகக் கிளர்ச்சிகளில் ஈடுபட்டு அவனுக்குத் தொல்லைகளை விளைவித்ததால் ராஷ்டிர கூடர்கள் தொடர்ந்து வேங்கி அரசியலில் அக்கறை காட்ட வில்லை. பீமசாளுகிக்குப் படையுதவியும் அளிக்கமுடியவில்லை. இந்த நிலைமையைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொண்டு, விஜயாதித்யன் ராஷ்டிரகூட-கங்கப் படைகளைப் போரில் வென்று, தன் தம்பி பீமசாளுகியைப் பதவியிலிருந்து அகற்றி, வேங்கி அரியணையைக் கைப்பற்றினன். பீமசாளுகி பதவியிலிருந்து விலக்கப்பட்டு, இரண்டாம் விஜயாதித்யன் மீண்டும் அரசனானது முதல், வேங்கி, ராஷ்டிரகூட அரசைச் சார்ந்த ஒரு சார்பு நாடாக இல்லாமல், பேராற்றல் மிக்க ஒரு வலிமையான அரசனல்

ஆளப்பட்ட ஒரு சுதந்திர நாடாகத் தோற்றமளித்தது. அடுத்து விஜயாதித்யன் தன் இன்னல்களுக்கெல்லாம் காரணமாயிருந்த ராஷ்டிரகூடர்கள்மீது பழிவாங்கத் திட்டமிட்டான். மீண்டும் ராஷ்டிரகூடர்களுக்கும், வேங்கிச் சாளுக்கியர்களுக்குமிடையே ஒரு போர் மூண்டது. விஜயாதித்யன் ராஷ்டிரகூடர்கள்மீது பல வெற்றிகளைப் பெற்று, குஜராத் வரை தன் படைகளுடன் சென்று ஸ்தம்பா என்ற நகரத்தைக் கைப்பற்றிச் சூறையாடினன் என்று சாளுக்கிய சாஸனங்கள் கூறுகின்றன. அமோகவருஷன் ஆட்சியில் ராஷ்டிரகூடர்கள் வேங்கிச் சாளுக்கியர்களால் இவ்வாறு தோற்கடிக்கப்பட்ட செய்தியை நவசாரிச் சாஸனம் போன்ற ராஷ்டிரகூடப் பொறிப்புகளே குறிப்பிடுகின்றன. அமோகவருஷன் ஆட்சியின் முற்பகுதியில் நிலவிய குழப்பமான சூழ்நிலையில், ராஷ்டிரகூடர்களின் இத் தோல்வி தவிர்க்கமுடியாததாகிவிட்டது போலும். ஆனால் இந்த நிலைமை நீடித்திருக்கவில்லை. விரைவிலேயே மீண்டும் ராஷ்டிரகூடர்களின் நிலை ஏற்றம் பெறுவதைக் காண்கிறோம். குஜராத்தின் அரசப்பிரதிநிதியாக ஆண்டுகொண்டிருந்த கார்க்கன் அமோகவருஷனின் இழந்த செல்வாக்கையும், ஆதிக்கத்தையும் மீட்க மான்யகேட அரசியலில் தலையிட்டதின் விளைவாகக் கலகங்களை விளைவித்த சிற்றரசர்கள், அதிகாரிகள் ஆகியோரின் கொட்டம் அடக்கப்பட்டு, ராஷ்டிரகூட விவகாரங்களில் அந்நியர் தலையீட்டிற்கும் முடிவு கட்டப்பட்டது. அமோகவருஷனனின் சிரூர் சாஸனமும், நான்காம் கோவிந்தனின் சங்கிலிச் செப்பேடுகளும் சாளுக்கியர்களுடன் நடந்த இப்போரைப் பற்றிக் கூறுகின்றன. விங்கவல்லி என்ற இடத்தில் நடந்த சண்டையில் அமோகவருஷன் சாளுக்கியர்மீது பெரும் வெற்றியைப் பெற்றான் என்று சங்கிலிச் செப்பேடுகள் கூறுகின்றன. இப் போரில் தோல்வியுற்ற சாளுக்கிய அரசன் பெயர் குறிப்பிடப்படாவிட்டாலும், இரண்டாம் விஜயாதித்யன்தான் அந்த அரசனாக இருக்க வேண்டும். சுமார் கி.பி. 830ல் இப் போர் நடந்திருக்கக் கூடும். இவ்வாறாக வேங்கியின்மீது ராஷ்டிரகூடர்கள் ஆதிக்கம் மீண்டும் ஏற்படுத்தப்பட்டது.

விஜயாதித்யன் தன் ஆட்சியின் இறுதி ஆண்டுகளை அமைதியாகக் கழித்தான். ஆழ்ந்த சமயப் பற்றுக்கொண்ட அவன் தன் விருப்பக் கடவுளான சிவனுக்குப் பல கோயில்களை எழுப்பினான். தன் ஆட்சியில் நடந்த போர்களுக்கும் போரில் ஏற்பட்ட அழிவுகளுக்கும் தானே பொறுப்பு என்னும் உணர்வு அவனை வாட்டிக்கொண்டேயிருந்தது. அந்தப் பாவங்களுக்குப் பிராயச்சித்தமாக நாடுமுழுவதும் சமய, அறப்பணிகளைத் துவங்கினான். அவன் தன்பகைவர்களுடன் போர் செய்த இடங்கள்

13

ஒவ்வொன்றிலும் நரேந்திரேஸ்வரனுக்கு (சிவபெருமான்) ஒரு கோயில் எழுப்பி, அங்குத் தவறுமல் வழிபாடு நடப்பதற்குத் தேவையான மானியங்களையும் வழங்கினான். இதுபோல நூற்று எட்டுக் கோயில்களையும், நூற்று எட்டு அன்ன சத்திரங்களையும் அவன் நிறுவியதாகக் கூறப்படுகிறது. இவை தவிர தண்ணீர்ப்பந்தல்கள், பூங்காக்கள், தோட்டங்கள், பாசன வசதிக்காகக் குளங்கள் போன்ற பல வசதிகளையும் அவன் உருவாக்கினான். அவனால் பெருமளவில் மேற்கொள்ளப்பட்ட கட்டட நிர்மாணப்பணி, கட்டடக்கலை வளர்ச்சிக்குப் பெரிதும் உதவியது. அவனால் எழுப்பப்பட்ட நூற்றுக் கணக்கான கோயில்கள், கட்டட, சிற்ப ஓவியக் கலைஞர்கள், இசை நாட்டியக் கலைஞர்கள், அறிஞர்கள், இலக்கிய மேதைகள் போன்றோரை ஆதரித்து நாட்டின் கலாச்சார வளர்ச்சிக்கு உதவியது. 'நரேந்திர' 'மிருகராஜன்' 'சாளுக்கிய ராமன்' 'விக்கிரம தவளன்' போன்ற பட்டங்களை அவன் சூட்டிக்கொண்டான்,

**ஐந்தாம் விஷ்ணுவர்த்தனன் (கி. பி. 846 - 847)**

விஜயாதித்யனின் மகன் ஐந்தாம் விஷ்ணுவர்த்தனன் ஆட்சி பதினெட்டு மாதங்களே நீடித்தது. அவன் சூடிக்கொண்ட 'கலி' என்ற பட்டப்பெயரிலிருந்து அவன் ஒரு தலைசிறந்த போர் வீரனாக இருந்திருக்க வேண்டுமென்று தெரிகிறது. ஆனால் அவனுடைய போர்ச் செயல்களைப் பற்றிய எத்தச் செய்தியும் நமக்குக் கிடைக்கவில்லை. தன்னுடைய தந்தை ராஷ்டிரகூடர்களுடன் நடத்திய போர்களில் விஷ்ணுவர்த்தனன் ஒரு முக்கிய பங்கை ஏற்றிருக்க வேண்டும். குஜராத் ராஷ்டிரகூட மரபைச் சேர்ந்த சீலமகாதேவி என்ற இளவரசியை அவன் மணந்திருந்தான். அவள் மூலம் அவனுக்கு விஜயாதித்யன், விக்ரமாதித்யன், நிருபகாமன், யுத்தமல்லன் என்ற நான்கு பிள்ளைகள் இருந்தனர். அவர்களுள் மூத்தவனான விஜயாதித்யன், மூன்றும் விஜயாதித்யன் அல்லது குணக விஜயாதித்யன் என்ற பட்டத்துடன் கி.பி. 848-ல் சாளுக்கிய அரியணையிலமர்ந்தான்.

**மூன்றும் (குணக) விஜயாதித்யன் [கி. பி. 848 - 9 - 891]**

குணக விஜயாதித்யன் கீழைச் சாளுக்கிய அரசர்களில் தலைசிறந்தவனாகக் கருதப்படுகிறான். கீழைச் சாளுக்கிய ஆதிக்கம் அவனுடைய ஆட்சியில்தான் உயர்நிலையை அடைந்தது. அவனுடைய ஆட்சியின் முக்கிய போர் நிகழ்ச்சிகள் பற்றியும் அவனுடைய போர்த்துறைச் சாதனைகள் பற்றியும் நாம் அவனுடைய சந்ததியார்களின் பொறிப்புகளிலிருந்து பல செய்திகளை அறிகிறோம். அவன் ஆட்சியை மூன்று பிரிவுகளில்

ஆராயலாம். முதல் கட்டத்தில், சாளுக்கியர்கள் பல வெற்றிகளைப் பெற்றுத் தங்கள் ஆதிக்கத்தை வளர்த்துக் கொள்வதையும் இரண்டாவது கட்டத்தில், பகைவர்களிடம் தோல்விகண்டு கீழைச்சாளுக்கியர் ஆதிக்கம் அந்நியர்களுக்கு அடிபணிவதையும் மூன்றாவது கட்டத்தில், சாளுக்கியர் மீண்டும் எழுச்சிபெற்று, போரில் பல வெற்றிகளை ஈட்டித் தக்காணத்தில் தங்கள் மேலாதிக்கத்தை ஏற்படுத்துவதையும் நாம் காணப் போகிறோம்.

**முதல் கட்டம் :**

குணகவிஜயாதித்யன் தன் ஆட்சியின் தொடக்கத்தில் போயக்கோட்டத்தின் மீது படையெடுத்துச்சென்று, பன்னிரண்டு போயக் கோட்டங்களைக் கைப்பற்றியதாக அவனுடைய அத்தங்கி (Addanki) பொறிப்பு கூறுகின்றது. பல்லவப் பேரரசின் வட எல்லைப் புறத்தில் அவர்கள் ஆதிக்கத்திற்குட்பட்டு ஆண்டு கொண்டிருந்தவர்கள் போயர் என்பவர்கள். தற்காலத்து ஆந்திர மாநிலத்தில் நெல்லூர்ப் பகுதிதான் அன்று போயர் கோட்டம் என அழைக்கப்பட்டது. 'கோட்டம்' என்று அப் பகுதி குறிப்பிடப்படுவதிலிருந்து அது பல்லவர்களின் ஆட்சிக்குட்பட்ட பகுதி என்பது எளிதில் புலப்படும். குணகவிஜயாதித்யன் ஆட்சி தொடங்குவதற்கு முன்பே இந்தப் போயர்கள் கீழைச் சாளுக்கிய ஆதிக்கத்திற்குட்படுத்தப் பட்டிருக்கவேண்டும். விஜயாதித்யன் ஆட்சியின் தொடக்கத்தில் அவர்கள் சாளுக்கிய மேலாதிக்கத்தை ஒழித்துச் சுதந்திரம் பெற முயன்றிருக்கக்கூடும். அவர்களை அடக்குவதற்காகக் குணகவிஜயாதித்யன் இப் படையெடுப்பை மேற்கொண்டிருக்கலாம். விஜயாதித்யனின் திறமை மிக்க படைத்தலைவன் பாண்டுரங்கனிடம் இப் பணி ஒப்படைக்கப் பட்டது. கட்டெம், கந்துகூர், நெல்லூர் போன்ற முக்கிய போயர்களின் கோட்டை, நகரங்கள் கைப்பற்றப்பட்டன. கட்டெம் கோட்டை தரைமட்டமாக்கப்பட்டு நெல்லூர் தீக்கிரையாக்கப்பட்டது. தொண்டைமண்டலத்தின் வடஎல்லை வரை பாண்டுரங்கன் தன் படைகளுடன் முன்னேறிச் சென்று பழவேற்காடு ஏரிக்கரையில் பாண்டுரங்கம் என்ற சிற்றூரையும் பாண்டுரங்கமகேஸ்வரம் என்னும் சிவன் கோயில் ஒன்றையும் நிறுவினான். இப் போரின் விளைவாகச் சாளுக்கியர்களின் போர் வலிமை வெளிப்பட்டதோடு மட்டுமன்றி இதுவரை பல்லவப் பேரரசிற்குட்பட்டிருந்த போயர் கோட்டம் சாளுக்கியப் பேரரசிற்குட்படுத்தப்பட்டது. இவ்வாறு சாளுக்கியப் பேரரசின் எல்லைகள் விரிவடைந்தன. புதிதாக வெல்லப்பட்ட இப் பகுதி பாண்டுரங்கன் வசம் ஒப்படைக்கப்பட்டு அவன் ஆளுநனாக

நியமிக்கப்பட்டான். கந்துகூர் நகரைத் தன் தலைநகராக் அமைத்துக்கொண்டு பாண்டுரங்கன் சாளுக்கிய அரசின் இந்தத் தெற்கு எல்லைப் புறத்தை ஆண்டுவந்தான். இப் பகுதியைப் பாண்டுரங்கன் சந்ததியர்கள் வெகுகாலம் ஆண்டுவந்தனர் என்பது இரண்டாம் அம்மனின் மலியம்பூண்டி சாஸனத்தின்மூலம் அறியப்படுகிறது.

இந்தப் படையெடுப்பை அடுத்துக் குணக விஜயாதித்யன், ராகணன் என்பவனோடு போர் புரிந்ததாகத் தர்மாவரம் பொறிப்பு கூறுகின்றது. இந்த ராகணனைப் பற்றிக் காணப்படும் குறிப்புகளிலிருந்து வலிமை வாய்ந்த சிற்றரசர்களில் ஒருவனாக அவன் இருக்கவேண்டுமென்று ஊகிக்கலாம். அவன் எப் பகுதியை ஆண்டு கொண்டிருந்தான் எந்த அரசமரபைச் சேர்ந்தவன் போன்ற கேள்விகளுக்குப் போதுமான சான்றுகள் இல்லாத காரணத்தினால் சரியான விடையளிக்க இயலாத நிலையிலிருக்கிறோம்.

இரண்டாவது கட்டம் :

ராஷ்டிரகூட அமோகவருஷனுடன் போர்

இதுவரை போர்களில் வெற்றிவாகை சூடிய விஜயாதித்யனுக்கு அடுத்துப் பெருந்தோல்வி காத்துக்கொண்டிருந்தது. விஜயாதித்யனுடைய தாய் ராஷ்டிரகூட அரச மரபைச் சேர்ந்த சீல மகாதேவி என்பதை முன்பு கூறியுள்ளளோம். அவ்வாறு இருந்தும் குணக விஜயாதித்யனுக்கும், முதலாம் அமோகவருஷனுக்குமிடையே ஒரு போர் தவிர்க்கமுடியாததாயிற்று. இப் போரைப்பற்றிக் கீழைச் சாளுக்கியப் பொறிப்புகளில் ஒரு செய்தியும் காணப்படவில்லை. இறுதியில் தோல்வி ஏற்பட்டதால் இப் போரைப்பற்றிக் கீழைச் சாளுக்கியப் பொறிப்புகள் கூறாமல் விட்டுவிட்டன போலும். ஆனால் ராஷ்டிரகூடச் சாஸனங்கள் பல ஒன்பதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் ராஷ்டிரகூடர்கள் கீழைச் சாளுக்கியர்கள் மீது வெற்றி பெற்ற செய்தியையும், குணகவிஜயாதித்யன் ராஷ்டிரகூடர்களின் மேலாதிக்கத்தை ஏற்றுக்கொண்ட செய்தியையும் குறிப்பிடுகின்றன. உதாரணமாக கி.பி. 866ஆம் ஆண்டு நில்குண்ட் பொறிப்பு அமோகவருஷனின் ஆதிக்கத்தை ஏற்றுக்கொண்ட அரசர்களுள் விஜயாதித்யனும் ஒருவன் என்று கூறுகிறது. அமோகவருஷனின் கி.பி. 872ஆம் ஆண்டுச் சஞ்சன் செப்பேடுகள், கூலிக்குக் குற்றேவல் புரிந்து கொண்டிருந்த மற்றச் சிற்றரசர்களைப் போலல்லாமல் விஜயாதித்யன் கூலியில்லாமலேயே அமோகவருஷனுக்குப் பணிவிடைகள் செய்யக் காத்திருந்தான் என்று கூறுவதிலிருந்து அந்தச் சமயத்தில் குணகவிஜயாதித்யன் அமோகவருஷனின் ஆதிக்கத்திற்கு

அடங்கியிருந்தான் என்பது அறியப்படுகிறது. இது முதலாம் அம்மனின் இடார் செப்பேடுகள் மூலம் உறுதிபடுத்தப்படுகிறது. ராஷ்டிரகூட அரசனின் ஆணைக்குக் கீழ்ப்படிந்து, விஜயாதித்யன் கங்கர்கள் மீது படையெடுத்துச் சென்றான் என்று அப் பொறிப்பு கூறுகிறது. எனவே குணகவிஜயாதித்யன் அமோகவருஷனால் போரில் வெல்லப்பட்டு ராஷ்டிரகூட மேலாதிக்கத்தை ஏற்றுக் கொண்டான் என்பதை உறுதியாகக் கூறலாம். ஆனால் இந்தப் போர் ஏன் ஏற்பட்டது என்பதைத்தான் எந்தப் பொறிப்பும் தெளிவாகக் கூறவில்லை. ஆனால் மூன்றும் இந்திரனின் பெகும்ரா செப்பேடு கூறும் செய்தி ஒன்றிலிருந்து இப் போரின் காரணத்தை ஊகிக்கலாம். ராஷ்டிரகூடர்களின் பேரரசிற்குட்பட்ட ஸ்தம்பபுரி என்ற இடத்தைச் சாளுக்கியப் படைகள் அழித்ததாகவும் சாளுக்கியர்களை அமோகவருஷன் போரில் வென்றதாகவும் அச் செப்பேடு கூறுகிறது. நான்காம் கோவிந்தனின் காம்பே, சங்கிலிச் செப்பேடுகள் விங்கவல்லிப் போரில் சாளுக்கியர்களை அமோக வருஷன் முறியடித்த செய்தியைக் கூறுகிறது. இதிலிருந்து இப் போரின் போக்கை ஒருவாறு நிர்ணயிக்கலாம். போயர்கள் மீதும் ராகணன் மீதும் பெற்ற வெற்றியினால் இறுமாப்படைந்த குணக விஜயாதித்யன் ராஷ்டிரகூட நாட்டின் மீது படையெடுத்துச் சென்று, ஸ்தம்பபுரியைத் தாக்கி அதை அழித்திருக்கவேண்டும்.[1] இந்தச் செயலைக்கண்டு ஆத்திரமடைந்த அமோகவருஷன் விஜயாதித்யனைத் தண்டிக்கும் நோக்கத்துடன் வேங்கி நாட்டின் மீது படையெடுத்துச் சென்றிருக்கவேண்டும். இவ்விரு படைகளும் விங்கவல்லி என்ற இடத்தில் மோதிக்கொண்டு சாளுக்கியப்படை படுதோல்வியடைந்து, விஜயாதித்யன் ராஷ்டிரகூட மேலாதிக்கத்தை ஏற்றுக்கொண்டிருக்கவேண்டும். இவ்வாறு இப் போரின் விளைவாகச் சாளுக்கியர்கள் தாங்கள் இழந்த சுதந்திரத்தை அமோகவருஷன் இறந்த பிறகுதான் கி.பி. 880ல் மீண்டும் பெற முடிந்தது.

**மூன்றாவது கட்டம் :**

**விஜயாதித்யனின் கங்கப் படையெடுப்பு**

இரண்டாம் அம்மனின் மலியம்பூண்டிச் சாஸனம், முதலாம் சாளுக்கிய பீமனின் அத்திலி சாஸனம் போன்ற கீழைச்சாளுக்கிய

[1] ஸ்தம்பபுரி என்பது தற்காலத்துக் கர்நூல் மாவட்டத்திலுள்ள கம்பம் என்ற ஊராகும். டி. ஆர். பண்டார்கார் வங்காளத்திலுள்ள தாம்லூக் என்ற நகரந்தான் பழைய காலத்து ஸ்தம்பபுரியாக இருக்கவேண்டுமென்று கருதுகிறார். இப்போரில் கைப்பற்றப்பட்ட நகரம் இவ்விரு அரசுகளின் எல்லைக்குட்பட்ட பகுதியில் இருக்க வேண்டுமே யல்லாது, தூரத்திலிருக்கும் வங்காளத்தில் இருந்தது என்ற கருத்து ஏற்புடையதாகாது.

பொறிப்புகள் இப்போரைப்பற்றிய பல செய்திகளைக் கூறுகின்றன. இந்தப் போருடன் தொடர்புகொண்டிருந்தவர்கள் கர்நாடகத்தின் தென்பகுதியை ஆண்டுகொண்டிருந்த மேலைச் சாளுக்கியர்கள் ஆவர். மேலைக் கங்கர்களுக்கும், விஜயாதித்யனுக்குமிடையே பகைமை ஏதுமில்லையென்றாலும் தன் மேலாளனான அமோகவருஷனின் ஆணைப்படி விஜயாதித்யன் கங்க நாட்டின் மீது படையெடுப்பை மேற்கொண்டான். ராஷ்டிரகூட ஆதிக்கத்தை எதிர்த்து அமோகவருஷனின் ஆட்சியில் பல கிளர்ச்சிகள் நிகழ்ந்தன. முதலாம் கிருஷ்ணனால் ராஷ்டிரகூட ஆதிக்கத்திற்கு உட்படுத்தப்பட்ட மேலைக் கங்கர்கள் அப்பொழுது முதல் ராஷ்டிரகூட ஆட்சியை வெறுத்து வந்தனர். அதிலிருந்து தங்களை விடுவித்துக்கொள்ளத்தக்க வாய்ப்புக்காகக் காத்துக்கொண்டிருந்தனர். அமோகவருஷனின் ஆட்சியில் நீதிமார்க்கன், ரணவிக்கிரமன் என்ற கங்க அரசனின் தலைமையில் ராஷ்டிரகூட ஆதிக்கத்திற்கு மாபெரும் எதிர்ப்பு உருவாகியது. நொளம்பவாடியை ஆண்டுகொண்டிருந்த பல்லவச் சிற்றரசர்களும் இதேபோல ராஷ்டிரகூடர்களுக்கு எதிராகப் போர்க்கொடியை உயர்த்தினர். நாடெங்கும் இதுபோலக் கிளர்ச்சிகள் ஏற்படவே, அமோகவருஷன் ராஷ்டிரகூடர்களை ஒன்று திரட்டிப் பங்கேயன் என்ற தளபதியிடம் இக் கலகங்களை ஒடுக்கும் பணியை ஒப்படைத்தான். பங்கேயன் கலகக்காரர்களைப் போரில் வென்று கலகங்களை ஒடுக்கிக்கொண்டிருக்கும் வேளையில், ராஷ்டிரகூடப் பேரரசின் வட பகுதியில் லாடாவில் அமோகவருஷன் ஆட்சிக்கு எதிராகக் கிளர்ச்சிகள் தோன்றவே, அவற்றை ஒடுக்கப் பங்கேயனுடைய உதவியும், பங்கேயன் படைகளும் தேவைப்பட்டதால், தெற்கே கலகங்களை ஒடுக்கும் பணி முற்றுப் பெறுவதற்கு முன்பே பங்கேயனை அங்கிருந்து திருப்பி அழைக்கவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. ஆனால் தெற்கே இருந்த ஆபத்தான நிலைமையை நன்கு உணர்ந்திருந்த அமோகவருஷன் அப்பகுதியில் போர் நடவடிக்கைகளைக் கைவிடவில்லை. பங்கேயனுக்குப் பதிலாகக் கங்கவாடியில் போரைத் தொடர்ந்து நடத்துமாறு அமோகவருஷன் விஜயாதித்யனுக்கு ஆணையிட்டான். தன் மேலாளன் அமோகவருஷனின் ஆணைக்குக் கீழ்ப்படிந்து விஜயாதித்யன் கங்கவாடியின்மீது படையெடுத்துச் சென்று கொண்டிருந்தபொழுது, நொளம்பவாடியை ஆண்டுகொண்டிருந்த மங்கி[1] என்னும்

[1] மங்கி என்பவன் நொளம்ப ராஷ்டிரத்தின் அரசன் என்று பொறிப்புகள் கூறுகின்றன. ஆனால் அந்தப் பெயர்கொண்ட அரசன் நொளம்பவாடியை அந்தக் காலப் பகுதியில் ஆண்டதற்குச் சான்றுகள் எதுவுமில்லை. நொளம்ப பல்லவ அரசர்களின் வம்சாவளியில் மங்கி என்ற பெயரே காணப்படவில்லை. மங்களன் என்பவன் நொளம்ப பல்லவ வம்சத்தைத் தோற்றுவித்தவன். மங்களன் என்ற பெயர் மங்கி

சிற்றரசன் விஜயாதித்யனை எதிர்த்துப்போரிட்டான். நொளம்பப் படைகள் போரில் தோற்கடிக்கப்பட்டு, மங்கியும் போரில் கொல்லப்பட்டான். இந்தப் போரில் வெற்றி பெறுவதற்கும், மங்கியைக் கொல்வதற்கும் வினயாதிசர்மன் என்ற அந்தணன் ஒருவன் விஜயாதித்யனுக்குப் பெருந்துணையாக இருந்தான் என்று அவனுடைய மசூலிப்பட்டணம் செப்பேடுகள் கூறுகின்றன.[2] நொளம்பர்களின் எதிர்ப்பு முறியடிக்கப்பட்டவுடன், விஜயா தித்யன் கங்கவாடியை நோக்கி முன்னேறுவதில் எந்தத் தடையும் இருக்கவில்லை. கங்கவாடியை அவன் படைகள் அணுகியபொழுது, கங்கர்கள் தங்கள் அரசின் கிழக்கு எல்லையில் ராஷ்டிரகூடப் படை களைச் சந்திக்கக் காத்துக்கொண்டிருந்தனர். அங்கு நடந்த போரில் கங்கர்கள் படுதோல்வியடைந்து, கங்ககூடம்[3] என்னும் ஒரு செங்குத்தான குன்றின்மீது தங்கள் முகாமை அமைத்துக் கொண்டு மீண்டும் போருக்காகக் காத்திருந்தனர். எதிரிகளால் அணுகமுடியாத, நல்ல பாதுகாப்புப் பெற்ற இடம் கங்ககூடம் என்ற நம்பிக்கையில் கங்கர்கள் அங்குப் போரிட முடிவு செய்தனர்.

ஆனால் விஜயாதித்யன் 4500 அடிக்குமேல் உயரமான இந்தச் செங்குத்தான குன்றின்மீது தன் படைகளுடன் ஏறிச் சென்று, கங்கர்களை அங்குப் படுதோல்வியடையச் செய்தது அவனுடைய மகத்தான சாதனையாகும். இந்தத் தோல்விகளுக்குப் பிறகு போரைத் தொடர்ந்து நடத்துவதில் பயனில்லை என்பதைக் கங்க அரசன் உணர்ந்தான். தன் பேரரசின் வடபகுதியில் நிலவிய குழப்ப நிலையைச் சீர்படுத்தவேண்டிய அவசியத்தை உணர்ந்த அமோகவருஷனும் போரை முடித்துக்கொள்ளத் தயாராக இருந் தான். எனவே இவ்விருவரிடையே ஒரு சமாதான உடன்படிக்கை செய்துகொள்ளப்பட்டது. அதன்படி ராஷ்டிரகூட மேலாதிக் கத்தை ஏற்றுக்கொண்டு, நீதிமார்க்கன் கங்கநாட்டை ஆள வேண்டுமென்று முடிவாகியது. இந்த அரசியல் உறவு ஒரு திருமண

என்று மருவியிருக்கலாம். ஆனால் இந்த மங்களன் விஜயாதித்யனுக்குப் பல ஆண்டுகள் முன்னதாகவே நொளம்பவாடியை ஆண்டுகொண்டிருந்தவன். எனவே அவன் விஜயாதித்யனின் சம காலத்தவனாக இருக்க முடியாது. ஆகவே மங்கி என்பவன் நொளம்ப அரசனின் உறவினனாக இருக்கக்கூடுமென்று அல்டேகரும், படைத்தலைவ னாக இருக்கக்கூடுமென்று எம். வி. கிருஷ்ணராவும் கருதுகின்றனர். மங்கி நொளம்ப வாடியின் அரசன் என்று பொறிப்புகள் குறிப்பிட்டுக் கூறும் செய்திக்கு முரண்பட்ட தாக இருப்பதால், மேலே கூறப்பட்டுள்ள கருத்துக்கள் ஏற்புடையன அல்ல, நொளம்பவாடியை அப்பொழுது ஆண்டுகொண்டிருந்த முதலாம் நொளம்பாதி ராஜன் என்பவன்தான் மங்கி என்றழைக்கப்பட்டான் என்ற எம். சோமசேகர சர்மாவின் கருத்து பொருத்தமுடையதாகக் காணப்படுகிறது.

[2] N. Venkatar amanayya —op. cit., p. 109 f. n.

[3] கங்ககூடம் என்பது தற்காலப் பெங்களூர் மாவட்டத்திலிருக்கும் சிவகங்கை என்றழைக்கப்படும் இடமாகும். வீர சைவ சமயத்தினரின் புனித இடங்களில் ஒன்றாக இன்று அது கருதப்படுகிறது.

உறவின்மூலம் வலுப்படுத்தப்பட்டது. அமோகவருஷன் தன் மகள் சந்திரோபலப்பா என்பவளை நீதிமார்க்கன் மகன் முதலாம் பூதுகனுக்கு மணமுடித்துக் கொடுத்தான். இத் திருமண உறவினால், இவ்விரு நாடுகளிடையே இதுவரை நிலவிவந்த பகைமை உணர்வு மறைந்து, நெருங்கிய நட்புறவு தொடங்கியது. இந்த நட்புறவு ராஷ்டிரகூடர்களின் வீழ்ச்சிக்காலம் வரை நீடித்திருந்தது.

### விஜயாதித்யனும் ராஷ்டிரகூட இரண்டாம் கிருஷ்ணனும்

சுமார் கி.பி. 880-ல் முதலாம் அமோகவருஷன் இறந்தது, ராஷ்டிரகூடர்கள் ஆதிக்கத்திலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ள விஜயாதித்யனுக்கு நல்லதொரு வாய்ப்பை அளித்தது, இம் முயற்சி இவ்விரண்டு நாடுகளையும் மீண்டும் ஒரு போரில் ஆழ்த்தியது. விஜயாதித்யனின் சாதலூரு சாஸனத்திலும். முதலாம் பீமனின் தர்மாவரம், அத்திலி பொறிப்புகளிலும் இப் போரைப் பற்றிய விவரங்கள் காணப்படுகின்றன. சாதலூரு சாஸனம் விஜயாதித்யன் ராஷ்டிரகூடர்களைப் போரில் வென்று தன் ஆதிக்கத்தைத் தக்காணம் முழுவதிலும் நிலைநாட்டிய செய்தியைப் பொதுவாகக் குறிப்பிடுகிறது. தர்மாவரம் பொறிப்பு விஜயாதித்யனின் படைத் தலைவன் பாண்டுரங்கன் இரண்டாம் கிருஷ்ணனையும், அவனுக்கு உதவிய அவன் உறவினன் சேதி அரசன் சங்கரகணனையும் போரில் வென்ற செய்தியையும், அடுத்துச் சேதி நாட்டின் மீதே படையெடுத்துச் சென்ற செய்தியையும் குறிப்பிடுகிறது. அத்திலி சாஸனம், கிரணபுரம். அசலபுரம் போன்ற நகரங்களைத் தீக்கிரையாக்கியது போன்ற மேலும் பல விவரங்களைத் தெரிவிக்கிறது. இப்போரின் முதல் கட்டத்தில் விஜயாதித்யனின் படைத் தளபதி பாண்டுரங்கன் கிருஷ்ணனையும் அவன் உறவினனான சேதி நாட்டரசன் சங்கரகணனையும் தோற்கடிக்கிறான். இருவரும் போர்க்களத்திலிருந்து தப்பியோடிச் சேதி அரசனின் தாஹல நாட்டிற்குச் சென்று விடுகின்றனர். அடுத்த கட்டத்தில் விஜயாதித்யனின் படைகள் பாண்டுரங்கன் தலைமையில் ராஷ்டிரகூட அரசனைத் தொடர்ந்து செல்லுகின்றன. கலிங்கத்தைக் கடந்து, தென் கோசலம், மத்திய இந்தியப்பீடபூமிப் பகுதியை நோக்கி முன்னேறிக் கொண்டிருக்கும் சாளுக்கியப் படைகளுக்குத் தீவிர எதிர்ப்பு தோன்றுகிறது. ராஷ்டிரகூட ஆதிக்கத்திற்கும், சேதி அரசர்களின் ஆதிக்கத்திற்கும் உட்பட்ட பல சிற்றரசர்கள் சாளுக்கியப் படைகளின் முன்னேற்றத்தைத் தடுக்கின்றன. இந்தத் தடையையெல்லாம் அகற்றிவிட்டுப் பாண்டுரங்கன்

சேதி நாட்டிலேயே நுழைந்து கிருஷ்ணனையும் சங்கரகணனையும் போரில் வென்று கிரணபுரம், அசலபுரம் ஆகிய இரு நகரங்களையும் தீக்கிரையாக்குகிறான். இதற்குப் பிறகும் தொடர்ந்து போரை நடத்த முடியாத நிலைமையில் கிருஷ்ணன் சமாதானம் செய்து கொள்ள முன்வருகின்றான். கிருஷ்ணனிடமிருந்து ராஷ்டிரகூட ஆதிக்கத்தின் அடையாளமாக விளங்கிய கங்கை—யமுனை ஆறுகளின் சின்னங்களையும், பாலித்வஜம் என்னும் கொடியையும் கைப்பற்றிக் கொண்டு, வல்லபன் என்ற பட்டத்தைச் சூட்டிக் கொண்டு, தன் மேலாண்மையை ஏற்றுக்கொள்ள இசைந்த கிருஷ்ணனுக்கு அவன் நாட்டைத் திருப்பிக் கொடுத்துவிட்டு, விஜயாதித்யன் வேங்கி நோக்கிப் புறப்படுகிறான். மேலே கூறப்பட்ட இந்தச் செய்திகள் தவிர இப்போர்த் தொடர்பான வேறு சில விவரங்கள் பிற்காலச் சாளுக்கியப் பொறிப்புகளின் மூலம் நமக்குக் கிடைத்துள்ளன. கிருஷ்ணன் சங்கரகணன் ஆகிய இருவரைத் தவிர பட்டேகன் (Baddega) என்ற மற்றொரு பகைவனுடனும் விஜயாதித்யன் போர் செய்தான் என்று ஒரு பொறிப்பு கூறுகிறது. விஜயாதித்யன் சக்ரகூடம் என்னும் ஓர் இடத்தைக் கைப்பற்றி அதைத் தீக்கிரையாக்கிய நிகழ்ச்சியை மற்றொரு பொறிப்பு குறிப்பிடுகிறது. இந்தப் பட்டேகன் என்பவன் ராஷ்டிரகூடர்களுக்கு ஆதரவாக இருந்த வெமுலவாடச் சாளுக்கிய மரபைச் சேர்ந்த ஒரு சிற்றரசனாக இருக்கக்கூடும். சக்ரகூடம் என்பது விஜயாதித்யன் முன்னேறிச் சென்றுகொண்டிருந்த பகுதியில் அமைந்திருந்த ஒரு முக்கியமான கோட்டையாக இருக்கலாம். அப் பகுதியில் தன் படைகள் வெற்றிகரமாக முன்னேறச் சக்ரகூடம் என்னும் கோட்டையைக் கைப்பற்ற வேண்டியதின் இன்றியமையாமையை உணர்ந்த விஜயாதித்யன் அக் கோட்டையை முற்றுகையிட்டுக் கைப்பற்றியிருக்கக்கூடும்.

### விஜயாதித்யனும் தென்புல அரசர்களும்

குணகவிஜயாதித்யன் கிருஷ்ணனுடன் போரில் ஈடுபட்டிருந்த இச் சமயத்தில் தென்புல நாட்டு அரசியலில் நடந்த சில நிகழ்ச்சிகள் அவன் கவனத்தைக் கவர்ந்தன. சோழச் சிற்றரசன் ஒருவன் தனக்குப் பகைவனால் நேர்ந்த அபாயத்திலிருந்து பாதுகாப்புக் கோரி விஜயாதித்யன் உதவியை நாடினான் என்ற செய்தியைத் தர்மாவரம் பொறிப்பு கூறுகின்றது. விஜயாதித்யனின் சாத்தலூரு சாஸனம் அவன் பல்லவர்களுடனும் பாண்டியர்களுடனும் போரிட்டான் என்று கூறுகிறது. எதற்காக இப் போர் மேற்கொள்ளப்பட்டது? போர் நிகழ்ச்சிகள், எந்த சோழன் விஜயாதித்யனிடம் பாதுகாப்பு கோரினான் போன்ற விவரங்கள்

பொறிப்புகளில் காணப்படவில்லை. இங்குக் குறிப்பிடப்பட்ட சோழ அரசன், தெலுங்கு நாட்டின் தெற்கு-மேற்கு மாவட்டங்களில் ஆண்டுகொண்டிருந்த தெலுங்கு சோழ அரசன் ஒருவனாக இருக்கலாம். ஏனெனில் இந்தக் காலப் பகுதியில் கங்கர்கள், வைதும்பர்கள், நொளம்பர்கள், தெலுங்குச் சோழர்கள் போன்ற பல்வேறு சிற்றரசர்களிடையே அடிக்கடி, போட்டி பொறாமை காரணமாகப் பூசல்கள் ஏற்பட்டுக் கொண்டிருந்தன. அவ்வாறு தன்னுடன் போரிட்ட தன் பகைவர்களுக்கு எதிராகத் தெலுங்கு சோழ சிற்றரசன் விஜயாதித்யன் உதவியை நாடியிருக்கக்கூடும். அல்லது இந்த அரசன் தமிழ்நாட்டை ஆண்ட சோழ அரசன் முதலாம் ஆதித்தனாகவே இருக்கக்கூடும்.[1] பல்லவர்கள் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற்றுச் விஜயாலயன், சோழ மரபை மீண்டும் தோற்றுவித்தான். அவனுடைய மகனான முதலாம் ஆதித்தனுக்கும் பல்லவர்களுக்குமிடையே தொடர்ந்து பகைமை உணர்ச்சி இருந்திருக்கலாம். ஒருபுறம் பல்லவர்களாலும், மற்றொருபுறம் பாண்டியர்களாலும் தொல்லைக்குள்ளாக்கப்பட்ட ஆதித்த சோழன், விஜயாதித்யனின் உதவியை நாடியிருக்கக்கூடும். சாளுக்கிய அரசன் முதலாம் பீமனின் அத்திலி சாஸனம், விஜயாதித்யன் பாண்டியர்கள், பல்லவர்களுடைய செல்வத்தைக் கைப்பற்றினான் என்று கூறும் செய்தி மேற்கூறிய ஊகத்தை உறுதி செய்யும் வகையில் இருக்கிறது.

வேங்கிச்சாளுக்கிய அரசர்களுள் குணகவிஜயாதித்யன் சிறந்த அரசனாகக் கருதப்படுகிறான். அவனுடைய நீண்ட நாற்பத்து நான்கு ஆண்டுக்கால ஆட்சியில் வேங்கி அரசு வடக்கே மகேந்திர கிரியிலிருந்து தெற்கே பழவேற்காடு வரை பரவியிருந்தது. முதலாம் அமோகவருஷனிடம் தோல்வியடைந்து, ராஷ்டிரகூட ஆதிக்கத்தை ஏற்றுக்கொள்ள வேண்டிய நிலை ஏற்பட்ட போதிலும், இந் நிலை சிறிது காலத்திற்குத்தான் நீடித்தது. விரைவிலேயே அமோகவருஷன் இறந்தவுடன் சாளுக்கிய அரசு ராஷ்டிரகூட ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற்று, சுயேச்சை நாடாக இயங்கியதோடு மட்டுமன்றி, ராஷ்டிரகூடர்களே தம்முடைய மேலாண்மையை ஏற்றுக்கொள்ளும்படி விஜயாதித்யன் செய்தான். விஜயாதித்யனைத் தக்ஷிணபதத்தின் பேரரசன் என்று ஒப்புக்கொண்டு அவனுக்குக் கீழ்ப்பணிந்து நடக்க ராஷ்டிரகூட அரசன் இரண்டாம்கிருஷ்ணன் சம்மதித்தான். ராஷ்டிரகூட நாட்டின்மீது படையெடுத்துச் சென்றதையோ, அவர்களைப் போரில் வென்றதையோ பெருஞ்சாதனையாகக்கொள்ளமுடியாது.

[1] Ibid, p. p. 122-123.

ஏனெனில், விஜயாதித்யனின் முன்னோர்கள் இச் சாதனையைப் புரிந்துள்ளனர். ராஷ்டிரகூடர்களைத் தம் ஆதிக்கத்திற்கு உட்படுத்தி அவர்கள் தம் ஆணைகளுக்குக் கட்டுப்பட்டு நடக்கும்படிச் செய்தது விஜயாதித்யனின் சிறப்புச் சாதனையாகக் கருதவேண்டும். விஜயாதித்யனிடம் பற்றுறுதி மாறாமல் அவனுக்கு உறுதுணையாக இருந்த கடேயராஜன், பாண்டுரங்கன் போன்ற திறமைமிக்க படைத் தலைவர்கள்தாம், விஜயாதித்யனின் இவ் வெற்றிகளுக்குக் காரணமாக இருந்தவர்கள் என்று கூறினால், அது மிகையாகாது. கடேயராஜன், பாண்டுரங்கன், வினயாதிசர்மன், ராஜாதித்யன் போன்ற அதிகாரிகள் யாவரும் அந்தணர்களாக இருந்தும்கூடப் போர் புரிவதைத் தங்கள் தொழிலாக மேற்கொண்டு, போர்த் துறையில் நல்ல தேர்ச்சி பெற்றனர். விஜயாதித்யனின் போயநாட்டுப் படையெடுப்பின்பொழுதும், ராஷ்டிரகூடக் கிருஷ்ணனுடன் செய்த போரின்பொழுதும், கிருஷ்ணனுக்கு உதவிய சேதி அரசன் மீது போர் தொடுத்த பொழுதும், பாண்டுரங்கன் ஆற்றிய சிறப்பான பணிகளை நாம் முன்பே குறிப்பிட்டுள்ளோம். விஜயாதித்யன் நொளம்பர்களுடன் நடத்திய போரில் வினயாதிசர்மன் ஒரு முக்கிய பங்கேற்றுச் சாளுக்கிய வெற்றிக்கு வழிவகுத்தான் என்பதையும் முன்பு கூறியுள்ளோம்.

சேதி நாட்டுப் படையெடுப்பை முடித்துக்கொண்டு திரும்பிய விஜயாதித்யன் மேலும் மூன்று அல்லது நான்கு ஆண்டுகள் ஆட்சி புரிந்தான். அவனுடைய ஆட்சியின் இந்த இறுதி ஆண்டுகளில் எந்தச் சிறப்பு நிகழ்ச்சியும் நடக்கவில்லை. அரசாங்க அலுவல்கள் யாவற்றையும் தன் அமைச்சர்களிடம் ஒப்படைத்துவிட்டு, விஜயாதித்யன் சமயத் துறையில் ஈடுபாடு கொண்டு, பல நற்பணிகளைச் செய்து வந்தான். விஜயாதித்யனுக்குப் பிள்ளைகள் இல்லை. தன்னுடைய சகோதரர்களில் ஒருவனை விக்கிரமாதித்யனைத் தன் வாரிசாக நியமித்து அவனுக்கு இளவரசுப் பட்டமும் சூட்டினான். ஆனால் விக்கிரமாதித்யன் தன் தமயனுக்கு முன்பே இறந்து விட்டதால் அரியணையிலமர அவனுக்கு வாய்ப்பு கிடைக்கவில்லை. சுமார் கி.பி. 891ல் விஜயாதித்யன் இறந்து விடவே விக்கிரமாதித்யனின் மகன் பீமன் அரசுரிமை பெற்றான். 'பரசக்ரராமன்' 'ரணரங்கசூத்ரகன்' 'விக்கிரமதவளன்' 'நிருபதி மார்த்தாண்டன்' 'திரிபுவனாங்குசன்' போன்றவை அவன் சூடிக் கொண்ட பட்டப் பெயர்களாகும்.

முதலாம் சாளுக்கிய பீமன் (கி.பி. 892-922)

முதலாம் பீமனின் அத்திலி பொறிப்பு அவனுடைய முடி சூட்டுவிழா சக ஆண்டு 814ல் நடந்தது என்று கூறுவதால், அவன் ஆட்சி கி.பி. 892ல் தொடங்கியது என்று கூறலாம். அவன் முடி சூட்டிக்கொள்வதற்கு முன்பு நாடு குழப்பத்தில் ஆழ்த்தப்பட்டுப் பீமனுக்குப் பல தொல்லைகள் தோன்றின என்றும், அவற்றை ஒழித்தபிறகே பீமன் அரியணைலமர முடிந்தது என்றும் சாளுக்கியப் பொறிப்புகள் கூறுகின்றன. பீமன் பட்டமெய்துவதற்கு முன்பு ராஷ்டிரகூடப் படையெடுப்பு ஒன்றைச் சமாளிக்க வேண்டியிருந்தது என்று பண்டிபாக்கம் சாஸனம் கூறுகிறது. குணக விஜயாதித்யன் இறந்தவுடன் வேங்கி மண்டலம் ராஷ்டிரகூடர்களின் படைகளாலும், பங்காளிகளின் படைகளாலும் சூழ்ந்து கொள்ளப்பட்டது என்றும், முதலாம் பீமன் இப் படைகளை யெல்லாம் போரில் வென்று அரியணையைப் பெற்றான் என்றும் முதலாம் அம்மனின் ஏடேறு செப்பேடுகள் குறிப்பிடுகின்றன. ஆனால், முதலாம் பீமனால் அவனுடைய முடிசூட்டுவிழா ஆண்டில் வெளியிடப்பட்ட பெஜவாடாச் செப்பேடுகள் இந்தப் படையெடுப்புகளைப்பற்றி எதுவுமே கூறவில்லை. சாளுக்கியச் சாஸனங்களில் இச் செய்திபற்றி முரண்பாடுகள் இருப்பினும், பீமன் அரியணையிலமர்ந்ததற்கு முன்பும், பின்பும் இரண்டு ராஷ்டிரகூடப் படையெடுப்புகள் நிகழ்ந்திருக்கக்கூடும் என்று கருத இடமுள்ளது. சாளுக்கியர்களின் பங்காளிகளால் ஏற்பட்ட தொல்லை இந்தப் படையெடுப்புகளுக்குக் காரணமாக இருக்கலாம்.

இப் படையெடுப்புகள் தொடர்பான சில முக்கிய நிகழ்ச்சிகளை இங்கு ஆராயலாம். முதலாம் பீமனுக்குப் போட்டியாக வேங்கி அரியணை உரிமையைக் கொண்டாடிய பங்காளிகளுள், பீமன் தந்தையின் சகோதரன் முதலாம் யுத்தமல்லன் முக்கியமானவன் ஆவான். யுத்தமல்லன் போன்ற பங்காளிகள் தனித்து நின்று பீமனுடன் போரிடுவதற்குப் போதுமான படைவலிமை பெற்றிராததால், சாளுக்கியர்களின் பரம்பரை விரோதிகளான ராஷ்டிரகூடர்களின் உதவியை நாடினார்கள். குணகவிஜயாதித்யனிடம் போரில் தோல்வியடைந்து அவமானத்தால் மனம் புழுங்கிக்கொண்டிருந்த இரண்டாம் கிருஷ்ணன் இவ் வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு, வேங்கி நாட்டின்மீது ஒரு படையெடுப்பை மேற்கொண்டான். தொடக்கத்தில் பல வெற்றிகளைப் பெற்றுக் கிருஷ்ணன் வேங்கி நாட்டின் ஒரு பகுதியைக் கைப்பற்றினான். இப் போரின் பொழுது நடந்த ஒரு சண்டையில் முதலாம் பீமன் சிறைபிடிக்கப்பட்டான். வெமுலவாடச் சாளுக்கியர்களின்

பொறிப்புகளும், பம்பன் என்ற கவிஞனின் விக்கிர மார்ஜுன விஜயம் என்னும் நூலும் கிருஷ்ணனின் படைத் தலைவனான பட்டேகன் முதலாம் பீமனைச் சிறைபிடித்ததாகக் கூறுகின்றன. விரைவிலேயே முதலாம் பீமன் சிறையிலிருந்து தப்பி வந்து ராஷ்டிரகூடர்களை வேங்கி நாட்டிலிருந்து விரட்டும் பணியை மேற்கொண்டான். பங்காளிகளால் பீமனுக்குத் தொல்லை ஏற்பட்டபோதிலும், சாமந்தர்கள் என்றழைக்கப்பட்ட சாளுக்கிய அரசின் உயர் அதிகாரிகளும், சிற்றரசர்களும் பீமனை ஆதரிக்க முன்வந்தனர். குசுமாயுதன் என்ற சிற்றரசன் ஒருவன் சாளுக்கியப் படைகளைத் திரட்டி, கிருஷ்ணனுடன் போரிட்டு, ராஷ்டிரகூடர்களால் கைப்பற்றப்பட்ட பகுதிகளை மீட்டு அவற்றைப் பீமனிடம் ஒப்படைத்தான். இவ்வாறு ராஷ்டிரகூடப் படையெடுப்பிலிருந்தும், பங்காளிகளின் தொல்லையிலிருந்தும் விடுதலைபெற்ற பீமன் அமைதியாகத் தன் முடிசூட்டு விழாவைச் சிறப்பாக நடத்தினான். தான் அரியணையை மீண்டும் பெறுவதற்குக் காரணமாக இருந்த சிற்றரசர்கள், அதிகாரிகள் எல்லாருக்கும் பீமன் மானியங்களும் பரிசுகளும் வழங்கினான். குறிப்பாகக் குசுமாயுதனுக்கு நாட்டின் ஒரு பகுதியை ஆளும் பொறுப்பைக் கொடுத்தான்.

சாளுக்கிய பீமன் அமைதியாகத் தன் நாட்டை ஆள அனுமதிக்கப்படவில்லை. கிருஷ்ணன் வேங்கி நாட்டைக் கைப்பற்றும் திட்டத்தைக் கைவிடவில்லை. கர்நாடகப் பகுதியிலிருந்தும், லாடாவிலிருந்தும் படைகளைச் சேகரித்து, குண்டையன் என்ற தன் ஆற்றல் மிக்க தளபதியின் தலைமையில் கிருஷ்ணன் மீண்டும் ஒரு படையெடுப்பை மேற்கொண்டான். ராஷ்டிரகூடப் படைகள் சாளுக்கிய அரசில் ஊடுருவிச் சென்று வேங்கி நகரின் எல்லையை அடைந்துவிட்டன. வேங்கிக்கு அருகில் நிரவத்யபுரம், பெருவங்கூரு கிராமம் என்ற இரண்டு இடங்களில் கடுமையான போர் நடந்தது. இப்போரில் பீமனின் மகன் இளவரசன் இறிமர்த்திகண்டன் வீரத்துடன் போர்புரிந்து நிரவத்யபுரத்தில் ராஷ்டிரகூடப் படைகளைப் புறமுதுகுகாட்டி ஓடச் செய்தான். பெருவங்கூரு சண்டையில் லாடர்களின் படையை முறியடித்ததோடு மட்டுமன்றி, ராஷ்டிரகூடப் படைத்தலைவன் குண்டையனைப் போரில் கொன்றான். இவ்வாறு ராஷ்டிரகூட அபாயத்திலிருந்து நாட்டைக் காப்பாற்றுவதில் பெரும் பங்கு கொண்ட இளவரசன், போரின் நற்பயன்களைத் துய்ப்பதற்கு உயிருடனிருக்கவில்லை. பெருவங்கூருப் போரில் காயமடைந்த இளவரசன் உடனே உயிர் துறந்தான்.

இந்த வெற்றிகளுக்குப் பிறகு, தன் ஆட்சியின் எஞ்சியிருந்த ஆண்டுகளைப் பீமன் யாருடைய தலையீடுமின்றி அமைதியாகக் கழித்தான். அந்நியர்கள் ஊடுருவலை ஒழித்ததின் மூலமும் பங்காளிகளின் தொல்லைகளுக்கு முடிவுகட்டியதின் மூலமும் வேங்கியரியணையில் தன் நிலைமையை வலுப்படுத்திக் கொண்ட பிறகு பீமன் நாட்டின் நிர்வாகத்தைச் சீர்படுத்தும் பணியிலும், மக்களின் நலனுக்கு உகந்த திட்டங்களைச் செயல்படுத்துவதிலும் தன் கவனத்தைச் செலுத்தினன். சமயத்தில் ஆர்வம் கொண் டிருந்த பீமன் கோயில்கள் கட்டும் பணியை மேற்கொண்டான். அவனால் கட்டப்பட்ட ஏராளமான கோயில்களில் இரண்டு குறிப் பிடத்தக்கவை. கிழக்குக் கோதாவரி மாவட்டத்தில் சாளுக்கியப் பீமவரம் என்ற இடத்தில் சிவபெருமானுக்குக் கட்டப்பட்ட கோயில் அவற்றுள் ஒன்றாகும். கோதாவரி ஆற்றங்கரையில் திராட்சாராமம் என்ற இடத்தில் கட்டப்பட்ட சிவன் கோயில் மற்றொன்றாகும். அரசனுடைய கோயில் கட்டும் நற்பணியினால் ஊக்குவிக்கப்பட்ட அவன் அதிகாரிகளும், பிரபுக்களும், நாடெங்கும் பல கோயில்கள் தோன்றுவதற்குக் காரணமாக இருந்தனர். அழகான வேலைப்பாடுகள் நிறைந்த கருந்தூண் களும், நேர்த்தியான சிற்பங்களும் இக்கோயில்களில் இடம் பெற்றுள்ளன. கோயில் கட்டுவதுமட்டுமன்றி இவை போன்ற நுண்கலைகளையும் பீமன் போற்றி வளர்த்தான். மல்லப்பன் என்பவ னுடைய மகள் கல்லவை என்ற ஒருத்திக்கு, அவள் இசைத் துறையில் பெற்றிருந்த தேர்ச்சிக்காக நிலத்தை இறையிலி நன் கொடையாக பீமன் வழங்கிய செய்தியை அவனுடைய அத்திலி சாஸனம் கூறுகின்றது. காவ்யாலங்காரச் சூத்திரங்களை இயற்றிய வராகக் கருதப்படும் பட்டவாமனன் என்ற அறிஞர் பீமனுடைய அவையை அலங்கரித்த அறிஞர்களுள் ஒருவர்.

முதலாம் பீமன் ஆட்சியில், அவனுக்கு இடுக்கண் ஏற்பட்ட பொழுதெல்லாம் உறுதுணையாகயிருந்து அவன் சார்பில் போரிடப் பல சிற்றரசர்கள் இருந்தனர். வேங்கி நாட்டை ஆக்கிரமித்துக் கொண்டிருந்த ராஷ்டிரகூடப் படைகளை விரட்டி; முதலாம் பீமன் அமைதியாக ஆட்சிபுரிய உதவிய சிற்றரசன் குசுமாயுதன் என் பவன். முதலாம் பீமனின் கி.பி. 909ஆம் ஆண்டுப் பெஜவாடா பொறிப்பு கட்டப்பன் என்ற சிற்றரசனைப் பற்றிக் கூறுகின்றது. அவன் அரசனுடைய உதவியோடு சிவபெருமானுக்கு ஒரு கோயில் எழுப்பிய செய்தி பொறிப்புகளில் காணப்படுகிறது. தர்மாவரம் பொறிப்பு அய்யப்பராஜன், பேஜய்யராஜன் என்ற இரு சிற்றரசர்களின் பெயர்களைக் குறிப்பிடுகிறது. இவர்கள் இருவரும் குணகவிஜயாதித்யனின் படைத்தலைவன்

பாண்டுரங்கனின் உறவினர்களாக இருக்கலாம். கடேயராஜன் என்பவன் முதலாம் பீமனின் உண்மையான அரசாங்க அதிகாரிகளுள் ஒருவன். அவன் சாளுக்கியப் படைத்தலைவனுகப் பணி புரிந்தவன்.

முதலாம் பீமனுக்கு விஜயாதித்யன், விக்கிரமாதித்யன் என்ற இரு பிள்ளைகள் இருந்தனர். மூத்தவனுன விஜயாதித்யன் கி.பி. 922ல் நான்காம் விஜயாதித்யன் என்ற பட்டத்துடன் சாளுக்கிய அரியணையிலமர்ந்தான்.

**நான்காம் விஜயாதித்யன் (கி. பி. 922)**

கொல்லபிகண்டன் என்ற பட்டப் பெயர் கொண்ட விஜயாதித்யனின் ஆட்சி ஆறு மாதங்களே நீடித்தது. இருப்பினும் இக் குறுகிய ஆட்சியில் அவன் குறிப்பிடத்தக்க போர்ச்சாதனைகளைப் புரிந்தான் என்பது அவனுடைய சந்ததியார்களின் சாஸனங்களிலிருந்து தெரியவருகிறது. அவன் கலிங்கத்தின்மீது படை எடுத்துச் சென்று விரஜாபுரி என்ற இடத்தில் நடந்த சண்டையில் பெரும் வெற்றியடைந்து, அதன் நினைவாக அங்கு ஒரு வெற்றித் தூணை நிறுவியதாகப் பொறிப்புகள் கூறுகின்றன. கலிங்கத்தின்மீது ஏன் படையெடுப்பு மேற்கொள்ளப்பட்டது? விடை: கலிங்கம் கீழைக் கங்கர்களால் ஆளப்பட்டு வந்தது. குணக விஜயாதித்யன் ஆட்சியில் கலிங்கம் முழுவதும் வெல்லப்பட்டு, சாளுக்கியர்களின் ஆதிக்கத்திற்கு உட்படுத்தப்பட்டது. முதலாம் பீமன் ஆட்சியில் கலிங்கத்தின் ஒரு பகுதி சாளுக்கிய ஆதிக்கத்திலிருந்து விடுபட்டது. விஜயாதித்யன் ஆட்சியில் கலிங்கத்தின் காடுகள் அடர்ந்த பகுதி மட்டும்தான் சாளுக்கியர் வசம் இருந்தது. அப்பொழுது கலிங்கத்தை வஜ்ரஹஸ்தன் என்பவன் ஆண்டு கொண்டிருந்தான். ஐந்து சிறு அரசுகளாகப் பிரிந்து ஐந்து தனித் தனிச் சிற்றரசர்களால் ஆளப்பட்டுவந்த கலிங்கத்தை ஒன்று படுத்தித் தன் ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டுவர வஜ்ரஹஸ்தன் திட்டமிட்டுக் கொண்டிருந்தான். இத் திட்டம் நிறைவேற்றப் பட்டால் சாளுக்கியர் நலன் பாதிக்கப்படும் என்பதை உணர்ந்த விஜயாதித்யன் வஜ்ரஹஸ்தனின்திட்டத்தை முறியடித்துச் சாளுக்கிய ஆதிக்கத்தைக் கலிங்கம் முழுவதும் மீண்டும் ஏற்படுத்தும் நோக்கத்துடன் இப் படையெடுப்பை மேற்கொண்டான். விரஜாபுரியில் நடந்த போரில் விஜயாதித்தியன் வெற்றி பெற்ற போதிலும், போரின் இறுதியில் அவன் உயிரிழந்ததால் அவ் வெற்றியினுல் எப் பயனும் கிட்டவில்லை. கலிங்கத்தின் ஒரு சிறு பகுதி மீது சாளுக்கியர்கள் பெற்றிருந்த ஆதிக்கமும் அப் போருக்குப்

பிறகு மறைந்து, திரிகலிங்கம் என்றழைக்கப்பட்ட கலிங்கம் முழுவதும் வஜ்ரஹஸ்தன் கையில் சிக்கியது. விஜயாதித்யன் கலிங்கப்போரில் ஈடுபட்டிருந்தபொழுது அவனுடைய தம்பி இரண்டாம் விக்கிரமாதித்யனும், அவன் ஆதிக்கத்திற்குட்பட்ட சிற்றரசர்களும் அவனுக்கெதிராகக் கிளர்ச்சிகள் செய்து அவனுக்குத் தொல்லைகளை விளைவித்ததால். விஜயாதித்யனுல் முழுக் கவனத்தையும் கலிங்கப்போரில் செலுத்த முடியவில்லை.

நான்காம் விஜயாதித்யனுக்குப் பல்லவமகாதேவி, மேலாம்பா என்ற இரு மனைவியர் இருந்தனர். பல்லவ அரச மரபைச் சேர்ந்தவளான பல்லவ மகாதேவியின் மூலம் பிறந்த முதலாம் அம்மன் அடுத்துப் பட்டமெய்தினுன். இரண்டாம் மனைவியின் பிள்ளை இரண்டாம் பீமன் சில ஆண்டுகள் கழித்துச் சாளுக்கிய அரசனுவதையும் நாம் காணப்போகிறோம். விஜயாதித்யன் இறந்தவுடன் அரசபதவிகளுக்குப் போட்டிகளும் பொறாமையும் அதிகமாகி வாரிசுரிமைப் போர்கள் அடிக்கடி நிகழ்வதும், நாடு குழப்பத்தில் ஆழ்த்தப்படுவதும் அன்றாட நிகழ்ச்சியாக ஆகிவிட்டது. பன்னிரண்டு ஆண்டுக்காலப்பகுதியில் ஆறு திறமையற்ற அரசர்கள் ஒருவர்பின் ஒருவராகப் பதவி பெறுவதையும், பதவியிழப்பதையும் காண்கிறோம். இந்தச் சூழ்நிலையில் சாளுக்கிய நாடு அந்நியர் படையெடுப்பிற்குள்ளாக்கப்பட்டு மேலும் பலவீனம் அடைந்தது.

### முதலாம் அம்மன் முதல் —இரண்டாம் யுத்தமல்லன் வரை (கி.பி. 922-934)

இந்தக் காலப்பகுதியில் சாளுக்கிய அரியணையைக் கைப்பற்ற இளவரசர்களிடையே போட்டி மிகுந்தது. இந்தச் சூழ்நிலையில் ராஷ்டிரகூடர்கள், போட்டியிடும் இளவரசர்களை ஊக்குவித்துச் சாளுக்கிய அரசியலில் தலையிட்டுக் குழப்பத்தை உண்டாக்கினுர்கள். விரஜபுரிப் போரில் உயிரிழந்த நான்காம் விஜயாதித்யனுக்குப் பிறகு அவன் மகன் முதலாம் அம்மன் ராஜமகேந்திரன் என்ற பட்ட மெய்தினுன். ஆனுல் அவன் தந்தையின் சகோதரன் இரண்டாம் விக்கிரமாதித்யன் அம்மனுக்குப் போட்டியாகச் சாளுக்கிய அரியணைமீது தன் உரிமையை நிலைநாட்ட விரும்பிக் கிளர்ச்சி செய்தான். அதே சமயத்தில் சாளுக்கிய ஆதிக்கத்திற்கு உட்பட்டிருந்த மற்றச் சிற்றரசர்களும் ராஷ்டிரகூட மூன்றும் இந்திரனின் உதவியோடு அம்மனின் ஆதிக்கத்தை ஏற்றுக்கொள்ள மறுத்தார்கள்.

எப்போதுமே பதவியிலிருக்கும் அரசனுக்கு ஆதரவாகப் போரிடும் நாட்டுப்படைகள் கூட, இப்போது அம்மனுக்குத் துரோகம் செய்து அவை பகைவர்களுடன் சேர்ந்து கொண்டன. ஒரு நெருக்கடியான சூழ்நிலையில் அம்மன் சிக்கிக்கொண்டான். இந்த நெருக்கடியை அம்மன் சமாளித்ததையும், பகைவர்கள் அனைவரையும் வென்று வேங்கி அரியணையைக் கைப்பற்றித் தன் நிலையை உறுதிபடுத்திக் கொண்டதையும் அவனுடைய ஏடேறு செப்பேடுகள் விளக்குகின்றன, உதயசூரியனால் இருள் அழிக்கப் படுவதுபோல, அம்மன் வாளேந்திப் போரிட்டதால் அவன் பகைவர்கள் அனைவரும் அழிக்கப்பட்டனர்; பரம்பரையாக அரசர்களுக்குக் கீழ்ப்படிந்து நடந்துவந்த படைகள் மீண்டும் அடக்கப்பட்டன என்று அச் சாஸனம் கூறுகிறது. ஆனால் இதைச் சாதிக்க அவன் என்ன நடவடிக்கைகளை மேற்கொண்டான் என்பது திட்டவட்டமாகத் தெரியவில்லை. இருப்பினும், அடுத்த ஏழு ஆண்டுகளுக்கு அம்மன் தொடர்ந்து சாளுக்கிய அரசை ஆண்டான். முதலாம் அம்மனின் புலிவற்று (pulivarru) பொறிப்பு அவன் இந்தபராஜனுக்கு ஒரு கிராமத்தைத் தான மாகக் கொடுத்த செய்தியைக் கூறுகிறது. இவன் மான்யகேடத்து மகாரட்ட வம்சத்து இந்தபராஜனின் பேரன் என்று அப் பொறிப்பு கூறுவதால், அவன் ராஷ்டிரகூட மூன்றும் இந்திரனின் பேரனாக இருக்கவேண்டும். கீழைச்சாளுக்கிய அரசில் புகலிடம் தேடிவந்த ராஷ்டிரகூட இளவரசனாக இவன் இருக்கக்கூடும்.

அம்மன் தன்னுடைய குறுகிய ஆட்சியில்,இவ்வளவு தொல்லை களுக்கிடையிலும், நொளம்ப நாட்டின்மீது படையெடுத்துச் சென்று நொளம்ப அரசன் அய்யப்பனோடு போர் செய்தா னென்று சிலர் கருதுகின்றனர். தர்மபுரியிலிருந்து கிடைக்கப் பெற்ற நொளம்ப சாஸனம் கூறும் செய்தியின் அடிப்படையில் இவ்வாறு கருதப்படுகிறது. ஆனால் அம்மன் சாளுக்கிய அரசனாக ஆண்டகாலத்தில் அய்யப்பன் என்ற நொளம்ப அரசன் ஆண்டதற்குச் சான்றுகள் இல்லை. எனவே தர்மபுரி சாஸனத்தில் நொளம்ப அரசன் அய்யப்பனோடு போரிட்ட தாகக் கூறப்பட்டிருக்கும் அம்மனராஜன் வேறு அரசனாக இருக்க வேண்டும். ராஷ்டிரகூட மூன்றும் இந்திரனின் மாமனாரான சேதி அரசன் அம்மன்தேவன்தான் இந்த அம்மனராஜனாக இருக்கக் கூடும். இக்காலப் பகுதியில் நொளம்பர்களுக்கும், ராஷ்டிரகூடர் களுக்கும் போர் நடந்தது என்பதை இங்குக் குறிப்பிட வேண்டும். ராஷ்டிரகூடர்களுக்கு உதவியாகச் சேதி அரசன் அம்மனதேவன் என்பவன் இப் போரில் ஈடுபட்டிருக்கக்கூடும். எனவே கீழைச் சாளுக்கிய அரசனுக்கும் நொளம்பர்களுக்கும் எந்தவிதத்

தொடர்பும் இக் காலப் பகுதியில் இருந்ததாகக் கருதுவது பொருத்தமுடையதாகாது.[1]

அம்மன் தனக்கெதிராகக் கிளர்ச்சி செய்தவர்களை அடக்கி, சாளுக்கிய அரியணையில் தன் நிலைமையை வலுப்படுத்திக் கொண்டதற்குக் காரணமாக இருந்தவர்கள் அவனிடம் உண்மையாகவும், விசுவாசமாகவும் நடந்துகொண்ட மகாகாளன், குந்தாதித்யன் என்ற இரண்டு அதிகாரிகள் ஆவர். போர்த் துறையில் வல்லவனான மகாகாளன் முதலாம் பீமனின் ஆட்சியில் சேனாதிபதிப் பதவியைப் பெற்றான். குந்தாதித்யன், நான்காம் விஜயாதித்யன் காலத்திலிருந்தே முதலமைச்சனாகப் பணியாற்றி வந்தவன். இவ்விரு அதிகாரிகளின் உதவியும், ஒத்துழைப்பும் அம்மனுக்குக் கிடைத்தது, அவன் வெற்றிக்கு வழிகோலியது. முதலாம் அம்மன்தான் தற்காலக் கிழக்குக் கோதாவரி மாவட்டத்திலிருக்கும் ராஜமகேந்திரபுரம் என்ற நகரை நிர்மாணித்தவன் என்ற ஒரு கருத்து வரலாற்றறிஞர்களிடையே நிலவுகிறது. ராஷ்டிரகூடர்களின் தாக்குதலுக்கு அடிக்கடி இலக்காகிக் கொண்டிருந்த வேங்கி நகரம், போதுமான பாதுகாப்புப் பெற்றிராததால் அவர்களால் எளிதில் அணுகமுடியாத, நல்ல பாதுகாப்புப் பெற்ற ஒரு புதிய தலைநகரத்தின் அவசியத்தை உணர்ந்து அம்மன் இத் திட்டத்தை உருவாக்கியிருக்கக் கூடும். கோதாவரி ஆற்றின் கிழக்குக் கரையில் ஒரு புது நகரத்தை நிர்மாணித்து, அதற்குத் தன் நினைவாக ராஜமகேந்திரபுரம் என்று பெயர் சூட்டினான் (ராஜமகேந்திரன் என்பது அம்மனின் மற்றொரு பெயர் என்பதை இங்கு நாம் நினைவுகூர வேண்டும்) என்று கருதப்படுகிறது. ஆனால் அம்மனுக்கும் இந்த நகரத்தின் தோற்றத்திற்கும் எந்தவிதத் தொடர்பும் இருந்தது என்பதற்குச் சான்றுகள் எவையும் இல்லை; மேலும், முதலாம் அம்மன் ஆட்சியில் பழைய தலைநகரமான வேங்கி கைவிடப்பட்டு, இந்தப் புதிய இடத்திற்குத் தலைநகரம் மாற்றப்பட்டது என்பதற்கும் எந்தச் சான்றும் இல்லை. மேலும் சாளுக்கியக் குடும்பத்தைச் சேர்ந்த இரண்டாம் அம்மன், ராஜராஜன் என்ற வேறு இரு அரசர்களும் ராஜமகேந்திரன் என்று அழைக்கப்பட்டதால், அவர்களில் ஒருவன் ராஜமகேந்திரபுரத்தை நிர்மாணித்திருக்கக்கூடும். வேங்கியில் பதினைன்காம் நூற்றாண்டில் கிடைத்த மரபு வழிச் செய்திகளிலிருந்து ராஜராஜன் என்னும் பிற்காலக் கீழைச்சாளுக்கிய அரசன் ராஜமகேந்திர புரத்தை நிறுவியவன் என்பது அறியப்படுகிறது. இதுவே உண்மையாக இருக்கலாம்.

[1] Ibid. p 161.

### ஐந்தாம் விஜயாதித்யன், முதலாம் தாழன், இரண்டாம் விக்கிரமாதித்யன், பீமன்.

அரியணைக்கு வந்தபொழுது இளைஞனாக இருந்த ஐந்தாம் விஜயாதித்யன் பதினைந்து நாட்கள் மட்டுமே அரசபதவியிலிருந்தான். முதலாம் யுத்தமல்லனின் மகன் முதலாம் தாழன், அவனை அரசபதவியிலிருந்து விலக்கி அரியணையைக் கைப்பற்றிக் கொண்டான்.[1] அரியணையையிழந்த விஜயாதித்யன், வெமுலவாடச் சாளுக்கிய அரசன் இரண்டாம் அரிகேசரியிடம் தஞ்சம் புகுந்தான். தாழன் ராஷ்டிரகூட அரசன் நான்காம் கோவிந்தனின் உதவியுடன் சாளுக்கிய அரியணையைக் கைப்பற்றியிருக்கவேண்டும். ஆனால், அரியணையெய்திய ஒரு மாதத்திற்குள்ளாகவே முதலாம் சாளுக்கிய பீமனின் மகன் இரண்டாம் விக்கிரமாதித்யனால் பதவியிலிருந்து அகற்றப்பட்டான். இரண்டாம் விக்கிரமாதித்யனின் பதினொரு மாத கால ஆட்சி, போர்ச் சாதனைகள் நிரம்பியதாக இருந்தது. வேங்கி அரியணையைக் கைப்பற்றியதோடு மட்டுமன்றி இரண்டாம் விக்கிரமாதித்யன் முதலாம் பீமனின் ஆட்சியில் சாளுக்கியர்கள் இழந்த திரிகலிங்கம் என்ற பகுதிகளை மீட்டுக்கொண்டான். முதலாம் அம்மனின் மகன் பீமன் விக்கிரமாதித்யனைப் போரில் கொன்று, வேங்கி அரியணையைக் கைப்பற்றி எட்டு மாதங்கள் ஆட்சி புரிந்தான். அடுத்து முதலாம் தாழனின் மகன் இரண்டாம் யுத்தமல்லன் வேங்கி அரசனானான்.

### இரண்டாம் யுத்தமல்லன்

இரண்டாம் யுத்தமல்லனுக்கு ராஷ்டிரகூடர்களின் முழு ஆதரவும் கிடைத்தது. முதலாம் அம்மனின் மகன் பீமன் பட்டமெய்தியதை அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்களே பலர் விரும்பவில்லை, நாட்டின் எல்லைப் பகுதிகளும் அவனை அரசனாக

[1] ஐந்தாம் விஜயாதித்யனிடமிருந்து அரசுரிமையைப் பறித்த முதலாம் தாழனின் நிலைமையை விளக்கும் அரசமரபுப் பட்டியல்.



ஏற்றுக் கொள்ள மறுத்தன. இளவரசர்கள் பலர் கிளர்ச்சியில் ஈடுபட்டுத் தங்கள் உரிமையை நிலைநாட்ட முயன்றனர். இந்தச் சூழ்நிலையில் நான்காம் கோவிந்தன் ராஷ்டிரகூட அரியணையில் அமர்ந்தான், வாரிசுரிமைப் போர் தீவிரமாக நடந்துகொண்டிருந்த இந்தச் சூழ்நிலை, ராஷ்டிரகூடர்கள் தலையீட்டிற்கு மிகச் சாதகமாயிருந்தது. எனவே, நான்காம் கோவிந்தன் யுத்தமல்லனை சாளுக்கிய அரசனுக்கும் நோக்கத்துடன் ஒரு பெரும் படையை அவனுக்கு உதவியாக அனுப்பினான். ஆனால், உண்மையிலேயே இந்த உதவி செய்ததின் நோக்கம், வேங்கி அரசை ராஷ்டிரகூட ஆதிக்கத்திற்கு உட்படுத்துவதேயாகும்; ராஷ்டிரகூடப்படையுதவியுடன் இரண்டாம் யுத்தமல்லன் பீமனைக் கொன்று அதிகாரத்தைக் கைப்பற்றினான். இரண்டாம் யுத்தமல்லனின் ஆட்சி ஏழு ஆண்டுக் காலம் நீடித்தது. இந்த ஏழு ஆண்டுக் காலத்தில் யுத்தமல்லன் தொடர்ந்து சாளுக்கிய அரியணைக்குத் தன்னுடன் போட்டியிட்டுக் கொண்டிருந்த இளவரசர்களுடன் போரிட வேண்டியிருந்தது. இதற்கு ராஷ்டிரகூட அரசனின் உதவி நிரந்தரமாகத் தேவைப்பட்டது. எனவே, ராஷ்டிரகூடர்கள் உதவியில்லாமல் யுத்தமல்லன் பதவியில் ஒரு கணங்கூட நிலைத்திருக்க முடியாது என்ற நிலை உருவாகியது. ராஷ்டிரகூட அரசன் நான்காம் கோவிந்தனும் வேங்கி நாட்டின்மீது, தான் பெற்றிருந்த ஆதிக்கத்தைத் தளர்த்த விரும்பவில்லை. எனவே, ராஷ்டிரகூடப் படைகள் தொடர்ந்து வேங்கி நாட்டில் இருந்தன. வேங்கி அரசின் பெரும் பகுதி ராஷ்டிரகூட அதிகாரிகளிடமும் ராஷ்டிரகூடப் படைத்தலைவர்களிடமும் ஒப்படைக்கப்பட்டது. ஒரு சிறு பகுதி மட்டுந்தான் யுத்தமல்லனின் நேரடி ஆட்சியின் கீழிருந்தது. இந்த நிலையிலிருந்து நாட்டை மீட்டவன் நான்காம் விக்கிரமாதித்யனின் மகன் இரண்டாம் பீமனாவான்.

இவ்வளவு நெருக்கடியான சூழ்நிலையிலும், இரண்டாம் யுத்தமல்லன் பெஜவாடா நகரத்தை அழகுபடுத்த முயற்சிகள் மேற்கொண்டான். பெஜவாடா அவன் தலைநகரமாக இருந்திருக்கக்கூடும். கார்த்திகேயனுக்கு ஒரு புதிய கோயிலும் அவனால் கட்டப்பட்டது.

**சாளுக்கிய இரண்டாம் பீமன் (கி.பி. 934-945)**

யுத்தமல்லன் ஆட்சியில் அவனிடமிருந்து அரியணையைப் பறிக்க முயன்றுகொண்டிருந்த பல இளவரசர்களில் இரண்டாம் பீமனும் ஒருவன். இவன் யுத்தமல்லனிடமிருந்து பதவியைக் கைப்பற்றியதோடுமட்டுமன்றி, ராஷ்டிரகூடச் செல்வாக்கை நாட்டிலிருந்து ஒழித்து, அவர்கள் ஆட்சிக்கு

உட்பட்டிருந்த நாட்டின் பெரும்பகுதியை விடுவித்துத், தன் ஆதிக்கத்தை நாடு முழுவதும் நிலைநாட்டி ஏறக்குறைய பன்னிரண்டு ஆண்டுகள் ஆட்சி புரிந்தான். இவ்வளவு கடினமான ஒரு பணியை இவன் எவ்வாறு செய்து முடித்தான் என்பது பற்றிய விவரங்கள் நமக்குக் கிடைக்கவில்லை. ஆனால் இப் பணியைச் செய்துமுடிக்க இவன் ஐந்து ஆண்டுகள் கடுமையாக உழைக்க வேண்டியிருந்தது. ராஷ்டிரகூட அரசில் நான்காம் கோவிந்தன் ஆட்சியில் தோன்றிய உள்நாட்டுக் கலவரங்களும் குழப்பங்களும் இவனுக்கு மறைமுகமாக உதவின. நான்காம் கோவிந்தன் சிற்றின்பங்களில் மூழ்கி ஒழுக்கங்கெட்ட வாழ்க்கை நடத்தியதாலும், நாட்டின் நிர்வாகத்தில் சிறிதும் அக்கறை காட்டாததாலும், இவனைப் பதவியிலிருந்து விலக்குவது நாட்டின் நலனிற்கு இன்றியமையாததும் உடனடித் தேவையுமாகும் என்று நாட்டில் பலர் நினைத்தனர். சிற்றரசர்களும் அரசாங்க அதிகாரிகளும் ஒன்று சேர்ந்து கோவிந்தனைப் பதவியிலிருந்து நீக்கி இவன் மாமன் மூன்றும் அமோகவருஷனைப் பதவியிலமர்த்த சதி செய்து கொண்டிருந்தனர். இந்தச் சூழ்நிலையில் கோவிந்தன் வேங்கி அரசின் விவகாரங்களில் தலையிட முடியவில்லை. தன் ஆதிக்கத்தை வேங்கி நாட்டில் நிலைநிறுத்திக்கொள்ள எந்த முயற்சியையும் இவன் மேற்கொள்ளவில்லை. எனவே ராஷ்டிரகூடச் செல்வாக்கை வேங்கியிலிருந்து அகற்றுவது இரண்டாம் பீமனுக்கு எளிதாயிற்று.

இரண்டாம் அம்மனின் மலியம்பூண்டிச் சாஸனம், இரண்டாம் பீமன் தன்னுடன் போட்டியிட்ட உறவினர்கள் ராஜமார்த்தாண்டன், கந்திக விஜயாதித்யன், யுத்தமல்லன் ஆகியோரைப் போரிட்டுக் கொன்றான் என்று கூறுகிறது. கலுசம்பற்றுச் சாஸனம் (Kalucambarru grant) இவனால் வெல்லப்பட்ட பகைவர்கள் என்று ராஜமையன், தழகன், தாடபிக்கி, அய்யப்பன், கோவிந்தன், யுத்தமல்லன் ஆகியோர் பெயரைக் குறிப்பிடுகின்றன. இந்தப் பொறிப்புகளில் காணப்படும் பெயர்களில் மூவரைத் தவிர மற்றவர்கள் யார் என்பதை நிர்ணயம் செய்ய முடியவில்லை. இதில் குறிப்பிடப்பட்ட மூவர் ஐந்தாம் விஜயாதித்யன், இரண்டாம் யுத்தமல்லன், ராஷ்டிரகூட நான்காம் கோவிந்தன் ஆகியோர் என்று கருதலாம். மற்றவர்கள் ராஷ்டிரகூட அரசன் நான்காம் கோவிந்தனால் கீழைச் சாளுக்கிய நாட்டிற்கு அனுப்பப்பட்ட சிற்றரசர்களாகவோ அதிகாரிகளாகவோ இருக்கலாம்.

இரண்டாம் பீமன், ராஷ்டிரகூட மேலாதிக்கத்திலிருந்து எப்படித் தன்னை விடுவித்துக்கொண்டான் என்பதை இங்கு ஆராயலாம். நான்காம் கோவிந்தன் ராஷ்டிரகூட அரியணையை

எய்தியபொழுது நாடு இருந்த நிலையை மேலே கூறியுள்ளோம். மக்களிடையே அதிருப்தி நிலவியது. அதனைப் பதவியிலிருந்து விலக்கப் பல முயற்சிகள் நடந்துகொண்டிருந்தன. அவனுக்கெதிராகச் சதி செய்தவர்களில் முக்கியமானவர்கள் அவன் மாமன் பட்டேகனும் அவன் மகன் கன்னரனும் ஆவர். கோவிந்தனால் நாடு கடத்தப்பட்ட இவ்விருவரும் சேதி நாட்டிற்குச் சென்று தங்கள் உறவினனான அவ்வரசனின் ஆதரவில் வாழ்ந்து வந்தனர். கோவிந்தன் ஆட்சியில் அதிருப்தி அடைந்த ராஷ்டிரகூடப் பிரபுக்களுக்கும் அதிகாரிகளுக்கும், கோவிந்தனுக்கெதிராகச் சதித் திட்டங்கள் தீட்ட சேதி நாடு ஓர் உகந்த இடமாக அமைந்தது, கோவிந்தனைப் பதவியிலிருந்து விலக்க முயற்சி செய்துகொண்டிருந்த இவர்களுடன் மேலைக்கங்க அரசன் பூதுகனும், வெமுலவாடச் சாளுக்கிய அரசன் இரண்டாம் அரிகேசரியும் சேர்ந்து கொண்டனர். ராஷ்டிரகூட ஆதிக்கத்தை ஒழித்து, வேங்கிச் சாளுக்கியர்களை அவர்கள் பிடியிலிருந்து விடுவிக்க வேண்டுமென்று ஏற்கெனவே நினைத்துக் கொண்டிருந்த இரண்டாம் பீமனைக் கோவிந்தன் எதிரிகள் எல்லாரும் புரட்சி செய்யுமாறு ஊக்குவித்தனர்.

இரண்டாம் பீமன் போர்க் கொடியை உயர்த்தியதைக் கண்ட நான்காம் கோவிந்தன் அவனுடைய புரட்சியை நசுக்கவும் தன் ஆதரவாளனான இரண்டாம் யுத்தமல்லனை வேங்கி அரியணையில் உறுதிபடுத்தவும் ஒரு பெரும் படையையும் பல அதிகாரிகளையும் அனுப்பியிருக்கவேண்டும். அவர்கள் எல்லாரையும் பீமன் போரில் கொன்றதாகச் சாளுக்கியப் பொறிப்புகள் கூறுகின்றன என்பதை மேலே குறிப்பிட்டுள்ளோம். இதே சமயத்தில்தான் சாளுக்கிய மரபைச் சேர்ந்த மற்றொரு கிளையினர் தெலுங்கானாப் பகுதியில் ராஷ்டிரகூட ஆதிக்கத்தை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தனர். வெமுலவாடச் சாளுக்கிய அரசன் இரண்டாம் அரிகேசரி பட்டேகனை ராஷ்டிரகூட அரசனாக அறிவித்தான். ஒரே சமயத்தில் பல திசைகளிலிருந்தும் எதிரிகள் தோற்றுவித்த தொல்லைகளைச் சமாளிக்க முடியாமல் நான்காம் கோவிந்தன் தன் மாமனாரான சோழ அரசன் பராந்தகனிடம் தஞ்சம் புகுந்தான். இந்தச் சூழ்நிலையைச் சாதகமாகப் பயன்படுத்திக்கொண்டு இரண்டாம் பீமன் வேங்கியில் தன் நிலைமையை வலுப்படுத்திக் கொண்டான். கி. பி. 934-35ல் அவன் வேங்கி அரசனாக முடிசூட்டிக்கொண்டான். அவன் பன்னிரண்டு ஆண்டுகள் ஆட்சி செய்த போதிலும் அவன் ஆட்சியின் முக்கிய நிகழ்ச்சிகள் பற்றி ஏதும் தெரியவில்லை.

விஷ்ணுவர்த்தனன், கண்டமகேந்திரன், ராஜமார்த் தாண்டன், ராஜபீமன் போன்ற மற்றப் பெயர்களாலும் பீமன் அழைக்கப்பட்டான். நாட்டை அந்நியர்கள் ஆதிக்கத்திலிருந்து விடுவித்துக் குழப்பங்களையும் போராட்டங்களையும் ஒழித்து அமைதியையும் ஒழுங்கையும் நிலைநாட்டியதால் அவன் சந்ததி யார்களுக்கு அவன் மீது அளவுகடந்த மதிப்பும் மரியாதையும் இருந்தன. அவனுக்கு இரு மனைவியர் இருந்தனர். கலிங்கநாட்டு இளவரசி அங்கிதேவி என்பவள் ஒருத்தி. அவளுக்குப் பிறந்தவன்தான் தானார்ணவன் என்பவன். மற்றொரு மனைவி லோகாம்பிகா என்பவள். அவள் அம்மன் என்ற ஒரு மகனை ஈன்றாள். இந்த அம்மன்தான் பீமனுக்குப் பிறகு இரண்டாம் அம்மன் என்ற பட்டத்துடன் சாளுக்கிய அரியணையிலமர்ந்தான்.

**இரண்டாம் அம்மன் கி.பி. 945-970**

இரண்டாம் பீமனின் மூத்தமகன் தானார்ணவன் இருக்கும் பொழுது, இளையவனான அம்மன் எவ்வாறு பட்டமெய்தினான் என்பது தெரியவில்லை. அவன் பட்டமெய்தியதைத் தானார்ணவன் ஏற்றுக் கொண்ட போதிலும் அம்மனுக்குத் தன் உறவினர்கள் மூலம் தொல்லைகள் இருந்துகொண்டேயிருந்தன. கீழைச் சாளுக்கிய மரபின் இளைய கிளையைச் சேர்ந்த இரண்டாம் யுத்த மல்லனின் பிள்ளைகள் பாடபனும் (Badapa) இரண்டாம் தாழனும் (Tala II) வேங்கி அரியணைக்கு உரிமை கொண்டாடினர். இரண்டாம் அம்மனை அரசனாக ஏற்றுக் கொள்ள அவர்கள் மறுத்தனர். ராஷ்டிரகூட மூன்றாம் கிருஷ்ணனின் உதவியைப் பெற்றுப் பாடபன் இரண்டாம் அம்மனைப் பதவியிலிருந்து விலக்கினான் என்று ஆரும்பாகம் செப்பேடுகள் கூறுகின்றன. இது அம்மன் ஆட்சியில் எப்பொழுது நடந்தது என்பது தெரிய வில்லை. அம்மனின் இருபத்தைந்து ஆண்டு ஆட்சி முடிந்த பிறகு கி.பி.970-ல் பாடபன் அம்மனைப் பதவியிலிருந்து நீக்கித் தான் சாளுக்கிய அரியணையைக் கைப்பற்றி மேலும் இருபத்தேழு ஆண்டுகள் ஆட்சி செய்ததாகக் கருதப்படுகிறது. இக் கருத்து ஏற் புடையதன்று. ஏனெனில் பாடபன் வேங்கியை இருபத்தேழு ஆண்டுகள் ஆட்சி செய்ததற்குச் சான்றுகள் எவையுமில்லை. மாறு கப் பாடபன், தாழன் ஆகிய இருவருடைய பெயர்களும் கீழைச் சாளுக்கியச் சாஸனங்களில் இடம் பெறவில்லை என்பதை இங்கு நோக்கவேண்டும். மேலும் இரண்டாம் அம்மனின் ஆட்சி முடி வடைவதற்குப் பாடபன் காரணமல்லன்என்பது முதலாம்சக்திவர் மனின்பொன்னேறு சாஸனத்திலிருந்து அறியப்படுகிறது இருபத் தைந்து ஆண்டுகள் ஆட்சி செய்த பிறகு அம்மன் அவனுடையமூத்த சகோதரன் தானார்ணவனால் கொல்லப்பட்டான் என்று அந்தப்

பொறிப்பு கூறுகிறது. எனவே இரண்டாம் அம்மன் ஆட்சியின் இறுதியில் பாடபன் வேங்கி மீது படையெடுத்து வந்தான் என்பதற்கு எந்த ஆதாரமும் கிடையாது.

இந்தப் படையெடுப்பு இரண்டாம் அம்மன் ஆட்சியின் முற்பகுதியில் நடந்திருக்கவேண்டும். ராஷ்டிரகூடக் கிருஷ்ணன் உதவியுடன் பாடபன் வேங்கி மீது படையெடுத்து வந்தான். வேங்கிநாட்டுப் பிரபுக்களும் பல அதிகாரிகளும் அம்மனுக்கு எதிராக அவன் பகைவர்களுடன் ஒத்துழைத்தனர். இந்தச் சூழ்நிலையில் இரண்டாம் அம்மன் போரில் தோல்வியைத் தவிர்க்க முடியவில்லை. தோல்வியடைந்த அம்மன் நாட்டைவிட்டே ஓடிவிட்டான். பாடபன், விஜயாதித்யன் என்ற பட்டப் பெயருடன் வேங்கி அரியணையிலமர்ந்தான். தான் அரியணையைப் பெறுவதற்குக் காரணமாக இருந்த சாளுக்கியப் பிரபுக்கள் யாவருக்கும் அவன் முதலில் தன் நன்றியைத் தெரிவிக்கும் வகையில் பல பரிசுகளை வழங்கினன். எவ்வளவு காலம் பாடபன் ஆட்சி செய்தான் என்பதை அறுதியிட்டுக் கூற முடியாது. அவன் ஆட்சி முடிவடைந்ததும் அவனுடைய தம்பி இரண்டாம் தாழன் விஷ்ணுவர்த்தனன் என்ற பட்டப் பெயருடன் அரியணையிலமர்ந்தான். அவன் ஆட்சி வெகு குறுகிய காலமே நீடித்தது. இரண்டாம் அம்மன் திரும்பி வந்து வேங்கி அரியணையைக் கைப்பற்றியதால் தாழன் ஆட்சி முடிவடைந்திருக்க வேண்டும். இவ்வாறாக இரண்டாம் அம்மனின் ஆட்சி இருபத்தைந்து ஆண்டுகள் தொடர்ச்சியாக நீடிக்கவில்லை. இந்த இடைப்பட்ட ஆட்சிக் காலத்தில்தான் பாடபனும், தாழனும் ஆட்சி புரிந்திருக்கவேண்டும். பாடபன் ஆட்சியைக் கைப்பற்றுவதற்கு உதவியாயிருந்த முக்கிய அரச அதிகாரிகளும், சாமந்தர்களும் (நிலமானியப் பிரபுக்கள்) தாழன் மீது வெறுப்பு கொண்டு, இரண்டாம் அம்மனை ஆதரித்தார்கள். அவ்வாறு அம்மனை ஆதரித்த அதிகாரிகளுள் முக்கியமானவர்கள் கண்ட நாராயணன், இரண்டாம் பாண்டுரங்கன், துர்க்கராஜன் போன்றவர்கள் ஆவர். இவ்வாறு தன் அரச பதவியை மீண்டும் பெற்ற இரண்டாம் அம்மன் கி.பி. 955 வரை தொல்லைகளேதுமின்றி வேங்கியை ஆண்டு வந்தான். இந்தச் சமயத்தில்தான் ராஷ்டிரகூட மூன்றும் கிருஷ்ணன் வேங்கி மீது மீண்டும் படையெடுத்தான். வேங்கி அரசைக் கைப்பற்றி ராஷ்டிரகூட எல்லையைத் தக்காணத்தின் கிழக்குக்கரை வரை விரிவாக்க வேண்டும் என்பது அவன் நோக்கம். படையெடுப்பதற்குமுன் இரண்டாம் அம்மனின் பங்காளிகளுடன் அவன் நட்புறவை வளர்த்துக் கொண்டான். அம்மனின் மூத்த

சகோதரனை தானார்ணவனுடன் தொடர்பு கொண்டு அவனைத் தன் நண்பனாக்கிக் கொண்டான். பிறகு ஒரு பெரும் படையுடன் சாளுக்கிய நாட்டின் மீது தாக்குதலைத் தொடங்கினான். ராஷ்டிரகூடப் படைகளை எதிர்க்க முடியாத நிலையில் அம்மன் நாட்டைவிட்டு இரண்டாம் முறையாக ஓடிக் கலிங்கத்தில் தஞ்சம் புகுந்தான். தானார்ணவன் கிருஷ்ணனுக்கு ஆண்டுதோறும் திரை செலுத்துவதாக ஒப்புக் கொண்டு, அவன் ஆதிக்கத்திற்கு உட்பட்டு, வேங்கியை ஆள இசைந்தான். ஆனால் ராஷ்டிரகூடப் படைகள் வேங்கியில் தங்கியிருந்தவரைதான் அவனால் வேங்கியை ஆள முடிந்தது. ராஷ்டிரகூடப் படைகள் வேங்கியை விட்டு அகன்றதும் இரண்டாம் அம்மன் வேங்கி திரும்பி, தானார்ணவனுடன் உடன்பாடு ஒன்றைச் செய்து கொண்டு, மீண்டும் வேங்கியை ஆள ஆரம்பித்தான்.

ஆனால், அவன் ஆட்சியின் இறுதி ஆண்டுகளை அமைதியாகக் கழிக்க முடியவில்லை. மீண்டும் வாரிசுரிமைப் போட்டிகள் தோன்றின என்றும், தானார்ணவனே அவனுக்கு எதிராகப் புரட்சி செய்து அவனைக் கொன்று பட்டமெய்தினான் என்றும் பென்னேறு சாஸனம் கூறுகிறது.

இரண்டாம் அம்மனுடைய இருபத்தைந்து ஆண்டுக்கால ஆட்சியில் இருமுறை அவனிடமிருந்து அரியணை பறிக்கப்பட்டு நாட்டை விட்டே அவன் துரத்தப்பட்டான், ஆனால் இருமுறையும் அவன் வெற்றிகரமாக நாட்டிற்குத் திரும்பிவந்து மீண்டும் அரச பதவியைக் கைப்பற்றியது அவனுடைய போர்த் திறமையைக் காட்டுகிறது. யானைகளைப் போரில் பயிற்றுவிப்பதிலும், யானைப்படையைப் போர்க்களத்தில் நடத்திச் செல்வதிலும் அவனுக்கு அதிக ஈடுபாடு இருந்தது. அவன் செய்த போர்களிலும், ஆட்சியை நடத்துவதிலும், நிருபகாமன், துர்க்கராஜன், கடகராஜ விஜயாதித்யன், கும்பணன், பல்லாள தேவன் போன்றவர்கள் அவனுக்குப் பெருந்துணையாக இருந்தனர். சமயத்துறையில் பரந்த நோக்குடையவனாக இரண்டாம் அம்மன் விளங்கினான். ஹிந்துக் கோயில்களுக்கும், சமணக்கோயில்களுக்கும் அவன் சமமாக மானியங்கள் அளித்து உதவினான். சமணத்துறவிகளும், சைவ சமயத்தைச் சேர்ந்த காளமுகர்கள் என்ற பிரிவினரும் அவன் ஆட்சியில் தங்கள் தங்கள் சமயக் கோட்பாடுகளை மக்களிடையே பரப்பி வந்தனர். அடிக்கடி போர்கள் ஏற்பட்ட போதிலும் அவனுடைய ஆட்சியில் நாட்டின் செல்வநிலை செழிப்பாகவே காணப்பட்டது.

**தானார்ணவன் (கி.பி. 970-973)**

ராஷ்டிரகூட மூன்றும் கிருஷ்ணனின் உதவியோடு தானார் ணவன் முன்பே ஒருமுறை வேங்கி அரியணையிலமர்ந்திருந்தான் என்பதையும், இரண்டாம் அம்மன் நாடு திரும்பியதால் அவன் பதவி விட்டு விலகவேண்டியிருந்தது என்பதையும் முன்பே குறிப் பிட்டுள்ளோம். ஆனால் கி.பி. 970ல் தானார்ணவன், அம்மனுக்கு எதிராகப் புரட்சி செய்து அம்மனைக் கொன்று அரியணையைக் கைப்பற்றினான் என்று முதலாம் சக்திவர்மனின் பொன்னேறு சாஸனம் கூறுகிறது.

தன்னுடைய மூன்று ஆண்டுக்காலக் குறுகிய ஆட்சியில் தானார்ணவன் பல வியத்தகு போர்த்துறைச் சாதனைகளைப் புரிந் தான். கடப்பை மாவட்டத்திலுள்ள ராஜம்பேட்டா என்ற இடத்திலிருந்து சித்தூர் மாவட்டத்திலுள்ள காளஹஸ்தி வரையி லான பொத்தப்பி நாடு என்ற பகுதியைத் தானார்ணவன் வைதும் பர்களிடமிருந்து கைப்பற்றினான். இது சுமார் கி.பி. 972 ஆம் ஆண்டில் நிகழ்ந்திருக்கக்கூடும். இக் காலப்பகுதியில் ராஷ்டிர கூடர்கள் மிகவும் வலிமை குன்றியிருந்ததால் வைதும்பர்களிட மிருந்து இப் பகுதியை அவனால் எளிதில் பெற முடிந்தது. பொத் தப்பி நாட்டைக் கைப்பற்றியதின் விளைவாகத் தானார்ணவனின் ஆதிக்க எல்லை தெற்கே விரிவடைந்ததால் தமிழ்நாட்டுச் சோழர் களுடன் அவன் மோதவேண்டிய நிலை உருவாயிற்று. தொண்டை மண்டலத்தைத் தங்கள் ஆதிக்கத்திற்கு உட்படுத்திக்கொள்ளும் பணியில் ஈடுபட்டிருந்த சோழர்கள், சாளுக்கியர் ஆதிக்கம் தெற்கு நோக்கிப் பரவுவதை விரும்பவில்லை. தானார்ணவன் ஆட்சியில் இவ்விரு அரசுகளிடையே ஒரு போர் ஏற்பட்டிருக்கக்கூடும். அந்தப் போரில் தானார்ணவனின் மகன் முதலாம் சக்திவர்மன் பங்குகொண்டு, சோழர்கள் மீது வெற்றி அடைந்ததாக அவனுடைய பொறிப்புகள் கூறுகின்றன. ஆனால் தானார்ணவன் இந்த வெற்றியைத் தொடர்ந்து தமிழ்நாட்டில் வேறு எந்தப் பயனையும் பெறவில்லை. ஏனெனில் தானார்ணவன் வேறு ஒரு பகைவனை எதிர்நோக்க வேண்டியிருந்தது. அந்தப் பகைவன் தெலுங்கு சோட அரசன் ஜடசோட பீமன் என்பவன்.

ஜடசோட பீமன் ஏன் வேங்கிநாட்டின் மீது படையெடுத் தான்? தானார்ணவன் இரண்டாம் அம்மனிடமிருந்து அரச பதவியைக் கைப்பற்றிய செயலுக்காக அவனைத் தண்டிக்க இப் படையெடுப்பு மேற்கொள்ளப்பட்டது என்பது கைலாச நாதர் கோயில் பொறிப்பிலிருந்து பெறப்படுகிறது. ஜடசோட பீமனின் சகோதரி ஒருத்தி இரண்டாம் அம்மனை மணந்திருந்தாள்.

தன் சகோதரியின் கணவன் கொல்லப்பட்டு, அரசபதவி அவனிடமிருந்து பறிக்கப்பட்டதற்குப் பழிவாங்குவதற்காக பீமன் இப்படையெடுப்பை மேற்கொண்டிருக்கலாம். மேலும் தாணர்ணவன் பொத்தப்பி நாட்டைக் கைப்பற்றிச் சாளுக்கிய ஆதிக்கத்தை அதுவரை விரிவுபடுத்தியது, தெலுங்கு சோடர் களுக்கு ஒரு பெரிய ஆபத்தாக இருந்தது. எனவே, சாளுக்கிய ஆதிக்க வளர்ச்சியைத் தடுத்து நிறுத்தவேண்டியதின் உடனடி அவசியத்தைப் பீமன் உணர்ந்திருக்கவேண்டும். எனவே தாணர் ணவன் மீது போர் தொடுத்து அவன் ஆதிக்கத்திற்கு முடிவு கட்ட பீமன் தீர்மானித்தான். தாணர்ணவனும் அவன் ஆதர வாளர்களும் தீவிரமாகப் போரிட்டும்கூட இறுதியில் தெலுங்கு சோட ஆதிக்கத்தை ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று. தாணர்ணவன் போரில் கொல்லப்பட்டு வேங்கி நாடு தெலுங்கு சோடர்களின் ஆதிக்கத்திற்கு உட்படுத்தப்பட்டது. வேங்கி நாட்டின்மீது தெலுங்கு சோடர்களின் ஆட்சி ஏழு ஆண்டுகள் நீடித்தது. கி.பி. 999-1000த்தில் தாணர்ணவனின் மகன் முதலாம் சக்திவர்மன், சோழ அரசன் இராஜ இராஜன் உதவி யுடன் தெலுங்கு சோடர்களின் ஆட்சிக்கு முடிவுகட்டி வேங்கியில் மீண்டும் சாளுக்கியர் ஆட்சியை நிறுவினன்.

# 1. ஆட்சி முறை

தக்காண அரசுகளின் ஆட்சிமுறை பற்றி அறிந்துகொள்ள நமக்கு அவ்வரசர்களின் பொறிப்புகள் ஓரளவு உதவுகின்றன. சாளுக்கியர்கள், ராஷ்டிரகூடர்கள் ஆகியோரின் ஏராளமான கல்வெட்டுகளும், செப்பேடுகளும் நமக்குக் கிடைத்துள்ளன. பெரும்பாலான பொறிப்புகள் கோயில்களுக்கும், அறநிலையங்களுக்கும் அரசர்கள் தானங்கள் அளித்ததை அறிவிக்கின்றன. அத்தகைய ஆவணங்களில் அக்கொடைகளைப்பற்றிய விவரங்கள் மட்டுமன்றி, அவற்றைப் பெற்றவர்களுக்கு என்னென்ன வரிகள் விலக்கப்பட்டன, என்னென்ன தனியுரிமைகள் அளிக்கப்பட்டன, அக் காலத்து அரசியல் கொள்கைகளும் ஆட்சி அமைப்பும் எவ்வாறு இருந்தன என்பன போன்ற செய்திகள் காணப்படுகின்றன. குறிப்பாக நாட்டின் எல்லைகளை நிர்ணயம் செய்வதற்கும், நாட்டின் நிர்வாகப் பிரிவுகள் பற்றி அறிந்துகொள்வதற்கும் நிர்வாக அதிகாரிகள், அவர்கள் அலுவல்கள் போன்ற செய்திகளை அறிந்துகொள்வதற்கும் இப் பொறிப்புகள் பெரிதும் உதவுகின்றன.

தக்காண அரசுகளில் நிலவிய ஆட்சிமுறையைப் பற்றி அறிய முற்படுவதற்கு முன்பு, பண்டைக்காலத்தில் இந்தியர்களின் ஆட்சிமுறை பற்றிய கருத்துக்களின் தன்மையை நாம் முதலில் தெரிந்துகொள்ளவேண்டும். முதலில் அவர்கள் அரசிடமிருந்து எதையும் அதிகமாக எதிர்பார்க்கவில்லை. வழக்கிலிருந்த சமுதாய அமைப்பை உள்நாட்டுக் குழப்பங்களிலிருந்தும், வெளிநாட்டுப் படையெடுப்பிலிருந்தும் பாதுகாக்க வேண்டியது அரசனுடைய தலையாயகடமையெனக் கருதப்பட்டது. இதற்குக்கூலியாக அரசன் மக்களிடமிருந்து வரிகளை வசூல் செய்துகொள்ளலாம். வரிகளில் முக்கியமானது நிலவரி. விளைச்சலில் ஆறில் ஒரு பங்கை அரசன் நிலவரியாகப் பெறலாம். ஸ்ருதி, ஸ்மிருதி, ஆசாரம் ஆகிய மூன்றிலிருந்து தோன்றியதுதான் சமுதாய அமைப்பு. மக்களின் பல்வேறு சமூகப், பொருளாதார, சமய நடவடிக்கைகளில் அரசன் தலையிடவில்லை. குடிமக்களின் அன்றாட வாழ்க்கை நிகழ்ச்சிகளைக் கவனித்துக்கொள்ள, தொழில், சாதி, சமயம் ஆகியவற்றின் அடிப்படையில் இயங்கிக் கொண்டிருந்த பல்வேறு

குழுக்களும், சங்கங்களும் இருந்தன. மரபுவழி வந்த பழக்க வழக்கங்களின் அடிப்படையில் இவை செயல்பட்டன. வணிகர் சங்கங்களும் கன்ஞர், நெசவுக்காரர், புரோகிதர், கோயிற் பணியாளர் போன்ருேர் தொழிற் சங்கங்களும் அரசனுடைய தலையீடின்றி நாட்டில் சுதந்திரமாகச் செயல்பட்டு வந்தன. அதேபோலக் கிராம சபைகளும் சுயேச்சையாக இயங்கிவந்தன. மக்களுடைய வாழ்க்கை முறையும், மரபுகளும் தொடர்ந்து வழக்கிலிருப்பதற்கும் அரசியல் சூருவளிகளால் சமுதாயம் சிதைந்து போகாமல் பாதுகாக்கப்படுவதற்கும் காரணமாக இருந்தவை, தன்ஞட்சியும், தன்னிறைவும் பெற்ற கிராமங்கள்தாம். அரசியலமைப்பின் உயிரணுவாக விளங்கியது கிராமமாகும். அந்தக் கிராமங்களில் காணப்பட்ட நிர்வாக அமைப்புகளின் உயிர்த்துடிப்பு நூற்றுக்கணக்கான பொறிப்புகளிலிருந்து வெளிப்படுகிறது. கிராமத்தின் பொதுநலனைப் பாதுகாத்தல், வழக்குகளை விசாரித்தல், நீதி வழங்குதல் போன்ற பணிகளைக் கிராமத்து மக்களே கிராம மன்றங்களின் மூலமாகக் கவனித்து வந்தனர். நாட்டின் ஆட்சி அமைப்பிற்கே இந்தக் கிராம மன்றங்கள் உயிர் நாடியாக விளங்கின.

மேலே கூறப்பட்ட பொதுவான சில கருத்துகளை நினைவில் கொண்டு நாம் தக்காணத்தில் நிலவிய ஆட்சி முறையை ஆராய வேண்டும். பண்டைய இந்திய ஆட்சி முறை நூல்கள் வகுத்துக் கூறியுள்ள கோஞட்சி முறைதான் தக்காண அரசுகளால் பின்பற்றப்பட்டது. கிராம ஆட்சிமுறை ஜனநாயக அடிப்படையில் இயங்கியபோதிலும் தக்காணத்தில் குடியாட்சி முறை நிலவியதாகத் தெரியவில்லை. சாளுக்கிய ராஷ்டிரகூட அரசர்கள் நாட்டை ஆண்டது மட்டுமன்றி, ஆட்சியும் செய்தார்கள் (not only reigned but also ruled). நாட்டின் அரசாங்க அலுவல்களில் அரசர்கள் அக்கறை காட்டினர். அன்ருட நிர்வாகத் தொடர்பான சில நடவடிக்கைகளைத் தாங்களே நேரில் கவனித்தனர். நாட்டில் வழக்கிலிருந்த சமுதாய அமைப்பைப் பாதுகாப்பதும் பரம்பரையாக வந்த மரபுகள், வழக்காறுகளின் அடிப்படையில் தர்மசாஸ்திர நூல்களில் கூறப்பட்டுள்ள அறக் கருத்துக்கேற்ப ஆட்சி நடத்துவதும் அரசனுடைய தலையாய கடமையாகக் கருதப்பட்டது. மேலும் நாடு பிடிப்பது, அரசனுடைய ஏற்றுக்கொள்ளப்பட்ட கடமைகளுள் ஒன்ருகக் கருதப்பட்டது. அதனுல் அரசர்கள் அடிக்கடி ஆக்கிரமிப்புப் போர்களில் ஈடுபடுவதைக் காண்கிருேம். அரசுரிமை பொதுவாகப் பரம்பரையாக வந்தது. ஆளும் அரசனின் மூத்த மகன் பட்டத்தைப் பெறுவது மரபாக இருந்தது. ஆனுல் சில சமயங்களில் மூத்தமகன்

புறக்கணிக்கப்பட்டு இளையமகன் வாரிசாக நியமிக்கப்படு வதையும் காண்கிறோம். ஆனால் மூத்த மகன் இருக்கும்பொழுது இளையமகனுக்கு அரசுரிமை அளிப்பதால் பல சிக்கல்கள் தோன்று கின்றன என்பது சாளுக்கிய, ராஷ்டிரகூட வரலாறுகளிலிருந்து தெளிவாய்ப் புலப்படும். ராஷ்டிரகூட வம்சத்திலும், கீழைச் சாளுக்கிய வம்சத்திலும் இதனால் பல அரசுரிமைப் போட்டிகள் ஏற்பட்டு, நாடு உள்நாட்டுப் போரில் ஆழ்த்தப்பட்டது. ராஷ்டிரகூடத் துருவன் தன் மூத்தமகன் ஸ்தம்பனுடைய உரிமையைப் புறக்கணித்து இளையமகன் மூன்றாம் கோவிந்தனை அரசனாக்கியதால் உள்நாட்டுப் போர் மூண்டது. கீழைச் சாளுக்கிய வம்சத்தில் நடந்த அரசுரிமைப் போட்டிகள் எண்ணற் றவை. அவற்றால் நாட்டிற்குப் பெருந்தீங்கு ஏற்பட்டது. அரசுரிமையை நிலைநாட்டிக்கொள்ள மக்கள் ஆதரவும் தேவை என்பது மேலைச்சாளுக்கியர் வரலாற்றில் நடந்த ஒரு நிகழ்ச்சியி லிருந்து விளங்கும். முதலாம் கீர்த்திவர்மன் இறந்தபொழுது, அவன் மகன் இரண்டாம் புலிகேசி இளைஞனாக இருந்ததால், கீர்த்திவர்மனின் தம்பி மங்கலேசன் அரியணையிலமர அனுமதிக் கப்பட்டான். இரண்டாம் புலிகேசி ஆளும் வயது எய்தியவுடன் அவனுக்கு அரியணை அளிக்காமல், தன் மகனை அரசபதவியி லமர்த்த அவன் முயற்சி செய்தபொழுது பொதுமக்கள் ஆதரவு இரண்டாம் புலிகேசிக்குக் கிடைத்தது. எனவே அவன் எளிதில் மங்கலேசனைப் பதவியிலிருந்து நீக்கிவிட்டு அரியணையைப் பெற முடிந்தது. மேலும் அரச பதவியைப் பெறுவதில் பரம்பரை உரிமைமட்டும் இருந்தால் போதாது. தகுதியும் இருக்கவேண்டும் என்பது இரண்டாம் புலிகேசி இறந்தவுடன் நடந்த நிகழ்ச்சியி லிருந்து புலப்படும். பல்லவர்களிடம் தோற்று, தலைநகரமும் பறிபோய், அரசனும் தன் உயிரையிழந்து சாளுக்கிய அரசு பெரும் குழப்பத்தில் ஆழ்த்தப்பட்டது. இரண்டாம் புலிகேசியின் பிள்ளைகளிடையே வாரிசுரிமைப் போட்டி ஏற்பட்டது. இறுதியில் பன்னிரண்டு ஆட்சிக்கால இடைவெளிக்குப் பிறகு இளையமகன் முதலாம் விக்கிரமாதித்யன் தன் மூத்த சகோதரர்களைப் போரில் வென்று பட்டமெய்தினான். அவன் புலிகேசியின் மூத்த மகன் இல்லை என்ற போதிலும் தகுதியின் காரணமாக அவன் அரியணையைப் பெறமுடிந்தது.

பொதுவாக மூத்தமகன் இளவரசன் (யுவராஜன்) என்று அறிவிக்கப்பட்டு, இளவரசனாக முடி சூட்டப்படுவது வழக்கமாக இருந்தது. அப்படி முடிசூட்டப்படும் பொழுது கழுத்தணி ஒன்றை இளவரசனுக்கு அப் பதவியின் சின்னமாக வழங்குவது ராஷ்டிரகூடர்களுடைய ஒரு வழக்கமாக இருந்தது.

சாதாரணமாகத் தகுந்த வயதை அடைந்த பிறகும் அப் பதவித் தொடர்பான பொறுப்புகளை ஏற்கும் தகுதி பெற்ற பிறகுந்தான் அவன் இளவரசனுக அறிவிக்கப்பட்டான். இளவரசன் தலைநகரிலேயே தங்கித் தன் தந்தைக்கு அரசகாரியங்களில் உதவி புரிந்தான். சில சமயங்களில் தந்தையுடன் அந்நிய நாட்டுப் படையெடுப்புகளில் கலந்து கொண்டான். ஒரு சில நேரங்களில் இளவரசனின் தலைமையிலேயே அந்நியநாட்டுப் படையெடுப்புகள் மேற்கொள்ளப்பட்டன. அரசனுடைய பிள்ளைகளுக்கு நல்ல தரமான கல்வியும் பயிற்சியும் அளிப்பதில் அரசர்கள் மிகுதியாக அக்கறை காட்டினுர்கள். இலக்கியம், சட்டம், தத்துவம் போன்ற துறைகளில் அவர்களுக்குப் பயிற்சியளிக்கப்பட்டது. போர்த் துறைப் பயிற்சியும் இன்றியமையாததாகக் கருதப்பட்டது. நிர்வாகத்துறையிலும் அவர்கள் பயிற்சி பெற்ருர்கள். மநுசாஸ்திரம், புராணங்கள், இராமாயணம், மகாபாரதம் ஆகியவற்றைச் சாளுக்கிய முதலாம் புலிகேசி நன்கு கற்றறிந்தான் என்று நெரூர் சாஸனம் கூறுகிறது. மங்கலேசன் எல்லாச் சாஸ்திரங்களிலும், இராஜதந்திரத்திலும் வல்லவனுக இருந்தான் என்று மகாகூடச் சாஸனம் குறிப்பிடுகிறது. முதலாம் விக்கிர மாதித்யன் தன்னுடைய மகனுக்கு நிர்வாகப் பொறுப்புகளைக் கொடுத்து அவன் இளவரசனுக இருக்கும்பொழுதே ஆட்சித் துறையில் பயிற்சியளித்தான். ராஷ்டிரகூடர்கள் ஆட்சியிலும் இளவரசர்கள், ஆளும் அரசனுக்கு அடுத்தவராக நாட்டில் முக்கிய இடத்தைப் பெற்ருர்கள். ஆளும் அரசனே தனக்கு அடுத்து ஆளப்போகும் அரசனை நியமிக்கும் வழக்கம் ராஷ்டிரகூடர்கள் ஆட்சியிலும் இருந்தது என்பது சுலைமானுடைய குறிப்புகளி லிருந்து தெரிகிறது. சில சமயங்களில் ராஷ்டிரகூடர்கள் ஆட்சியில் யார் அரச பதவியை ஏற்பது என்பதைத் தீர்மானிப் பதில் அமைச்சர்களுக்கும் சிற்றரசர்களுக்கும் முக்கிய பங்கு இருந்தது. பதவியிலிருக்கும் அரசர்கள் முதிர்ந்த வயதின் காரண மாகவோ, சமயத்தில் ஈடுபடுவதின் காரணமாகவோ அரச காரியங்களைக் கவனிக்க முடியாத நிலையில் இளவரசர்கள், அவர்கள் அதிகாரங்கள் அனைத்தையும் பெற்ருர்கள். ராஷ்டிரகூட இளவரசர்கள் நாட்டைவிட்டு வெளியே செல்வதை விரும்ப வில்லை ஏனெனில் அடிக்கடி வாரிசுரிமைப் போர்கள் நிகழ்ந் ததால், தன் உரிமையைப் பாதுகாத்துக்கொள்ள ஒவ்வோர் இளவரசனும் தலைநகரிலேயே இருக்க விரும்பினுன். எனவேதான் இளவரசர்கள் மாநில ஆளுநர்களாகக்கூட நியமிக்கப்படவில்லை. சாதாரணமாக அப் பதவிக்கு அரசனின் இளையபிள்ளைகள்தாம் நியமிக்கப்பட்டார்கள். ஓர் அரசன் இளம்வயதினனுக இருந்த பொழுது, அவனுடைய நெருங்கிய ஆண் உறவினர்களில் ஒருவன்

காப்பாளனுக நியமிக்கப்படுவது சாளுக்கியர்கள் அரசிலும், ராஷ்டிரகூடர்கள் அரசிலும் வழக்கமாக இருந்தது. ஆனுல் பெண்கள் எவரும் தக்காண அரசுகளில் காப்பாளர்களாக நியமிக்கப்படவில்லை. வாதாபிச் சாளுக்கியர் ஆட்சியிலும் கல்யாணிச் சாளுக்கியர் ஆட்சியிலும் அரச குடும்பத்தைச் சேர்ந்த பெண்கள் மாநிலங்களின் ஆளுநர்களாக நியமிக்கப்பட்டிருக்கின்றுர்கள் என்பதற்குச் சான்று இருக்கின்றது. அப் பெண்கள் முக்கிய பதவிகளை ஏற்றதோடு மட்டுமின்றிப் பொது அலுவல்களிலும் முக்கிய பங்கேற்றுள்ளனர். விஜயபாட்டாரிகா என்ற சாளுக்கிய வம்சத்தைச் சேர்ந்த ஒரு பெண் தன் பெயரிலேயே இரண்டு சாஸனங்களை வெளியிட்டிருக்கிறுள். விஜயாதித்யனின் தங்கை இளவரசி குங்குமதேவி தன் அண்ணனுடன் பாசறையில் இருந்ததாகச் சாளுக்கியப் பொறிப்புகள் கூறுகின்றன. சில அரச குடும்பத்துப் பெண்மணிகள் அரசாங்க நிர்வாகத்திலும் முக்கிய பங்கேற்றனர். துருவனுடைய பட்டத்தரசி சீல பட்டாரிகை என்பவள், 'பரமேஸ்வரி' 'பரமபட்டாரிகை' போன்ற பேரரசுப் பட்டங்களை ஏற்றுத் தன் விருப்பப்படி நிலமானியங்களை அளித்தாள். நிர்வாக ஆணைகளைத் தானே பிறப்பித்தாள். சாளுக்கிய அரசர்கள் தொடக்கத்தில் 'சத்தியாசிரையன்' 'ஸ்ரீபிரிதிவி வல்லபன்' 'மகாராஜன்' போன்ற பட்டங்களைச் சூட்டிக்கொண்டனர். ஹர்ஷவர்த்தனனைப் போரில் முறியடித்த பிறகு இரண்டாம் புலிகேசி 'பரமேஸ்வரன்' என்ற பட்டத்தையும் சூட்டிக் கொண்டான். முதலாம் விக்கிரமாதித்யன் காலத்தில் தலைமைப் பதவியைக் குறிக்கும் 'மகாராஜாதிராஜன்' 'பட்டாரகன்' போன்ற பட்டப் பெயர்கள் வழக்கிற்கு வந்தன. சில அரசர்கள் தங்கள் சமயப்பற்றைக் குறிப்பிடும் வகையில் 'பரம பாகவதன்' 'பரமமகேஸ்வரன்' போன்ற பட்டங்களையும் சூட்டிக் கொண்டார்கள். ராஷ்டிரகூட அரசர்களின் பட்டப் பெயர்கள் அவர்களிடம் காணப்பட்ட சில சிறப்புப் பண்புகளைக் குறிப்பிடும் வகையில் இருந்தன. சாளுக்கிய அரசர்களைப்போல இவர்களும் 'பிரிதிவிவல்லபன்' 'வல்லபநரேந்தின்' வீரநாராயணன்' போன்ற பட்டப் பெயர்களால் தங்களை அழைத்துக் கொண்டனர்.

சாளுக்கிய-ராஷ்டிரகூட அரசர்கள், தங்கள் நேரத்தில் பெரும் பகுதியை அரசாங்க அலுவல்களிலேயே கழித்தனர். ஒவ்வொரு நாளும் அரசன் குறிப்பிட்ட நேரத்தை அரசவையில் கழித்தான். அரசனைக் காணவரும் அயல்நாட்டு அரசர்கள், தூதுவர்கள், சிற்றரசர்கள் ஆகிய யாவரும் அரசனைக் காணுவதற்கு அரசவை அதிகாரிகளிடம் முன்னதாகவே அனுமதி பெறவேண்டியிருந்தது.

அரசவை கூடும்பொழுது, காலாட்படை, குதிரைப்படை, யானைப்படை ஆகியவை அரசவையைச் சுற்றிப் பாதுகாப்பிற்காக நிறுத்தப்பட்டன. முக்கியமான விழாக்காலங்களில் அரசன் பகட்டான ஆடை, ஆபரணங்களுடன் அரச சபையில் காட்சி யளிப்பது வழக்கமாயிருந்தது. இதுபோலச் சமயங்களில் அரசவை அணங்குகள் புடைசூழ மன்னன் அவையில் தோன்றினன். எல்லா இந்திய அரசர்களைப்போலத் தக்காண அரசர்களும் இப் பரத்தை யர்களின் அழகிற்கு அடிமைளாகி அவர்கட்கும் அரசியலில் ஒரு முக்கிய இடத்தை அளித்திருந்தார்கள். விஞபோதி (Vinapoti), குசிபோதி (Kucipoti), சாலப்பே (Chalabbe) போன்ற அணங்குகள் சாளுக்கிய அரசர்களின் உள்ளத்தைக் கவர்ந்தவர்க ளாவர். ராஷ்டிரகூட அரசர்கள் தங்கள் அவையில் அழகு மங்கையர் பலரை வைத்துக்கொண்டதோடு மட்டுமன்றிச் சிற்றர சர்கள் அவையிலும் பகை அரசர்கள் அவையிலும் அவர்களை இருக்கச் செய்தார்கள். ஒருவேளை ராஷ்டிரகூட அரசர்கள் அவர்களை ஒற்றர்களாகப் பயன்படுத்தியிருக்கக்கூடும். இளவர சர்கள், அரச குடும்பத்தைச் சேர்ந்த மற்றவர்கள், அமைச் சர்கள், முக்கிய படைத்துறை அதிகாரிகள் ஆகியோர், அரசவை யின் முக்கிய அங்கத்தினர்கள் ஆவார்கள். அவர்களைத் தவிர ராஷ்டிரகூடர்களின் அரசவையில் கவிஞர்களும், சோதிடர்களும், மருத்துவர்களும் இடம் பெற்றனர். அரசாங்க அதிகாரிகளாலோ, பொது மக்களாலோ அரசனின் கவனத்திற்குக் கொண்டுவரப் பட்ட விண்ணப்பங்கள், கோரிக்கைகள் மீது அரசன் ஆணை பிறப்பித்தான். இந்த ஆணைகள் சாளுக்கியப் பொறிப்புகளில் 'ராஜசிராவீதம்' என்றழைக்கப்படுகின்றன. தமிழ்ப் பொறிப்புகள் இவற்றைத் 'திருவாய்க் கேள்வி' என்று கூறுகின்றன. இவ்வாறு அரசன் வாய்மொழியாகப் பிறப்பித்த ஆணைகளை அரசாங்க அலுவலர்கள் எழுத்து வடிவில் வரைந்து உரிய அலுவலர்களுக்கு அமுல்படுத்துவதற்காக அனுப்பிவைத்தனர்.

சாளுக்கிய-ராஷ்டிரகூட அரசர்கள் வரம்புகடந்த அதிகா ரத்தைப் பெற்றிருந்தனர் நாம் தற்கால அரசாங்கங்களில் காணுவதுபோல நிறுவன ரீதியாக அவர்கள் அதிகாரத்திற்கு எந்தவிதக் கட்டுப்பாடும் இருக்கவில்லை. பொதுமக்கள் கருத்து, ஆட்சிமுறை மரபுகள், வழக்காறுகள், தல அரசாங்க அமைப்புகள் பெற்றிருந்த அதிகாரங்கள், அமைச்சரவை ஆகிய யாவும் ஓரளவு அரசனின் அதிகாரம் எதேச்சாதிகாரமாக வளருவதைத் தடுத் திருக்கவேண்டும்.

வட இந்திய அரசர்களைப் போலத் தக்காண அரசர்களும் சிலர் அரச பதவியைத் துறந்தனர் என்பதற்குச் சான்றுகள் உள்ளன. குறிப்பாக ராஷ்டிரகூடர்களிடையே இப் பழக்கம் நிலவியது. துருவன் தன் மகன் கோவிந்தன் வாரிசுரிமைப் போட்டியின்றி அரியணையிலமர வேண்டுமென்பதற்காக, அவனை இளவரசனாக நியமித்ததோடு மட்டுமன்றித், தானே பதவியைத் துறந்து அவனைப் பதவியிலமரும்படிச் செய்தான். முதலாம் அமோக வருஷன் இவ்வுலகப் பற்றுகளையெல்லாம் விடுத்து, அரச பதவியையே துறந்தான் என்று நாம் அவனுடைய சஞ்சன் செப்பேடுகளிலிருந்து அறிகிறோம்.

நாட்டை ஆளுவதில் அரசனுக்கு உதவ அமைச்சரவை ஒன்று இருந்தது. அமைச்சரவையின் அறிவுரை பெற்று அரசன், அரச காரியங்களைக் கவனித்தான். ஆனால் அமைச்சரவைபற்றியோ, அது எவ்வாறு செயல்பட்டது என்பதுபற்றியோ விளக்கமான செய்திகள் எவையும் பொறிப்புகளில் காணப்படவில்லை. ஆனால் சாளுக்கிய ஆட்சியில் அரச குடும்பத்தைச் சேர்ந்தவரனைவரும் நிர்வாகத்தில் பங்கு பெற்றனர்கள். திறமைமிக்க தன் உறவினர்களை நிர்வாகத்தில் முக்கிய பதவியிலமர்த்துவது சாளுக்கியர் காலத்தில் வழக்கமாக இருந்தது. இதுபோல அரச குடும்பத்தினரிடம் அரசாங்க அதிகாரத்தை ஒப்படைப்பதில் நன்மையும் இருந்தது; தீமையும் இருந்தது. மகாசாந்தி விக்ரகிகா (Mahasandhi vigrahika) என்றழைக்கப்பட்ட ஓர் அதிகாரியைப்பற்றிச் சாளுக்கியப் பொறிப்புகள் அடிக்கடி கூறுவதைக் காண்கிறோம். இந்த அதிகாரி அரசனின் அமைச்சர்களுள் ஒருவராக இருக்கவேண்டும். தற்காலத்து அயல்நாட்டுத்துறை அமைச்சரோடு அவரை ஒப்பிடலாம். ராஷ்டிரகூடர்கள் பொறிப்புகளிலும் அமைச்சர்களைப் பற்றியோ, அவர்கள் நிர்வாகப் பொறுப்பு ஏற்றிருந்த பல்வேறு துறைகளைப் பற்றியோ விளக்கமான செய்திகள் கிடைக்கவில்லை எனினும், நிர்வாகத்தைப்பற்றிப் பொறிப்புகளில் காணப்படும் பொதுப்படையான செய்திகளிலிருந்து அமைச்சரவைபற்றியும் அதன் பணிகளைப் பற்றியும் எளிதாக ஊகித்தறியலாம். அமைச்சர்கள் அரசாங்கத்தின் ஒரு முக்கிய அங்கமாகக் கருதப்பட்டார்கள். ராஷ்டிரகூட மூன்றாம் கிருஷ்ணனின் வெளி விவகார அமைச்சன், அரசனின் மற்றொரு கையைப் போன்றவன் (pratihastah) என்று ராஷ்டிரகூடச் சாஸனம் ஒன்று கூறுகிறது. அரச காரியங்களில் எந்த முடிவையும் எடுப்பதற்கு முன், அரசன் அமைச்சரவையைக் கலந்து ஆலோசித்து அதன் அறிவுரையைப் பெற்றான். நல்ல பண்புகளும் திறமையும் பெற்றிருந்த அமைச்சர்கள் அரசனால் எப்பொழுதும் உயர்வாக மதிக்கப்பட்டனர்;

அவர்கள் அறிவுரைகளுக்கும் நல்ல மதிப்பு இருந்தது. அத்தகைய அமைச்சர்கள் அரசாங்கத்தில் நல்ல செல்வாக்குப் பெற்றிருந்தார்கள். அமைச்சர்களிடம் என்னென்ன தகுதிகள் எதிர்பார்க்கப்பட்டன என்பதுபற்றி நமக்கு விவரங்கள் கிடைக்கவில்லையாயினும், 'ராஜநீதி' எனப்படும் ஆட்சிக்கலையிலும் போர்த்துறையிலும் நல்ல தேர்ச்சி பெற்றவர்களும், பொதுவாகச் செயலாற்றும் திறன் பெற்றவர்களும் மட்டுமே அமைச்சர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். பல சமயங்களில் அமைச்சர்களே படைத்துறைத் தலைமையையும் ஏற்றிருந்ததால் அத் துறையிலும் அவர்களுக்கு நல்ல தேர்ச்சியும் அனுபவமும் தேவை என்று எதிர்பார்க்கப்பட்டது. எனவேதான் அமைச்சர்களில் சிலர் தண்டநாயக்கர் என்றழைக்கப்பட்டனர். அமைச்சரவையில் அமைச்சர்கள் எத்தனை பேர் இருக்கவேண்டும் என்பது குறித்து வரையறை ஒன்றும் செய்யப்படவில்லையாயினும் நாட்டின் அன்றைய தேவையைப் பொறுத்துத்தான் அது அமைந்திருந்தது. சாளுக்கிய ராஷ்டிரகூட அரசுகள், பரந்த பேரரசுகள் ஆதலால் அவர்கள் அமைச்சரவை எட்டு முதல் இருபது உறுப்பினர்களைக் கொண்டதாக இருந்திருக்கலாம். முதலமைச்சர் (Pradhana). மகாசாந்திவிக்ரகிகா (Mahasanthivigrahika) என்னும் வெளிநாட்டுத்துறை அமைச்சர், பிரதம நீதிபதி, சேனாதிபதி, யுவராஜன், பண்டிதன் என்னும் சமயத்துறை அமைச்சர், அமாத்தியன் (Amatya) என்னும் வருவாய்த்துறை அமைச்சர், சமாஹர்த்தன் (Samaharta) என்றழைக்கப்பட்ட கருவூல அமைச்சர், அமைச்சரவையின் சில முக்கிய உறுப்பினர்கள். தற்கால அரசாங்கங்களில், அரசாங்கத்தின் உறுப்பினர்களாகக் கருதப்படும் அமைச்சர்களும் பல்வேறு துறைகளின் பொறுப்பை ஏற்றிருக்கும் நிர்வாக அதிகாரிகளும் வெவ்வேறாகக் கருதப்படுகிறார்கள். மேலே கூறியவற்றிலிருந்து தக்காணத்தின் அந்தக் காலப்பகுதியில் அமைச்சர்களும், துறை அதிகாரிகளும் வெவ்வேறாகக் கருதப்படவில்லை என்பது புலப்படும். அரசன் நாட்டில் இல்லாதபொழுதும் உடல் நலமின்மை போன்ற காரணங்களினால் அரச காரியங்களைக் கவனிக்க இயலாதபொழுதும் முதலமைச்சர் அரசனின் பிரதிநிதியாக அரசன் சார்பில் ஆட்சிப் பொறுப்பை ஏற்றார். அது தவிர பல்வேறு அமைச்சர்களின் அன்றாட அரசாங்கப் பணிகளை இயக்கி ஒருநிலைப்படுத்தும் பொறுப்பும் அவரிடமிருந்தது. சாளுக்கிய ராஷ்டிரகூடப் பொறிப்புகள் அடிக்கடி குறிப்பிடும் வெளிநாட்டுத் துறை அமைச்சர், அயல்நாட்டு விவகாரங்களைக் கவனித்துக் கொண்டதோடு மட்டுமல்லாமல் அரசனால் நன்கொடையாக வழங்கப்பட்ட செய்தியைச் செப்பேடுகளில் அறிவிக்கும் அதிகாரி

யாகவும் அவர் விளங்கினர்.[1] சாளுக்கிய முதலாம் விக்கிரமா தித்யன் ஆட்சியில் வஜ்ரவர்மன், ஜெயசேனன் என்ற இரண்டு மகாசாந்தி விக்கிரகர்கள் இருந்ததாகச் சாளுக்கியச் செப்பேடுகள் கூறுகின்றன. பிரதம நீதிபதி நீதித்துறைப் பொறுப்பை ஏற்ற அமைச்சராவார், நாட்டின் கீழ்நீதிமன்றங்களிலிருந்து எல்லா வழக்குகளும் இந்த அமைச்சரிடம்தான் மேல் முறையீடு செய்யப் பட்டன. சேனுதிபதி, அமைச்சரவையில் ஒரு முக்கிய உறுப்பின ராவார்.

சில ஆட்சிமுறை நூல்கள், படைத்தலைவன் அமைச்சரவையில் இருக்கக்கூடாது என்ற கருத்தை வலியுறுத்தியபோதிலும், சாளுக்கிய, ராஷ்டிரகூட அரசர்கள் சுக்கிரநீதியைப் பின்பற்றிப் படைத்தலைவர்களைத் தங்கள் அமைச்சரவையின் உறுப்பினர் களாக நியமித்துக் கொண்டார்கள். அமைச்சரவையில் ஒன்றுக்கும் மேற்பட்ட போர்த்துறை அமைச்சர்கள் இருக்கக் கூடும். போர்த்துறை அமைச்சர்களுக்குப் பல சிறப்புரிமைகளும் சலுகைகளும் வழங்கப்பட்டன. போர்த்துறை அமைச்சர்களே படைத்தலைவர்களாயும் போர்க்காலங்களில் பணிபுரிந்தார்கள். பலாதிகிரிகா (Baladhikrika) தண்டநாயகா (Dhandanayaka) மகா பிரஸண்டதண்டநாயகா (Mahaprachandadandanayaka) என்ற மூன்று நிலைப் படைத்துறை அதிகாரிகள் இருந்தனர். பண்டைய வடஇந்திய அரசுகளில் காணப்பட்ட புரோகிதர் என்ற அமைச்சர் சாளுக்கிய, ராஷ்டிரகூட அரசுகளில் இருந்ததாகத் தெரியவில்லை. புரோகிதர், அரசாங்க அமைச்சராக இல்லாவிட்டாலும் அரசனுடைய அரண்மனை அதிகாரிகளுள் ஒரு முக்கிய அதிகாரியாக இருந்திருக்கவேண்டும். அமைச்சரவையில் அவருக்குப் பதிலாகப் பண்டிதன் என்னும் அமைச்சர் சமயத்துறைப் பொறுப்புகளைக் கவனித்துக் கொள்ள நியமிக்கப்பட்டார். குறிப்பாக முதலாம் அமோகவருஷன், மூன்றும் அமோகவருஷன் போன்ற சமயத்தில் மிக்க ஈடுபாடுகொண்ட அரசர்கள் ஆட்சியில் பண்டிதன் என்னும் இந்த அமைச்சர், அரசாங்கத்தில் நல்ல செல்வாக்கைப் பெற் றிருக்க வேண்டும். அமாத்தியர் என்னும் வருவாய்த்துறை அமைச்சர் நில உரிமை பற்றிய எல்லா விவரங்களையும், ஆவணங் களையும் தன் கண்காணிப்பில் வைத்திருந்தார். மாநில ஆளுநர் களுக்கோ, மாவட்ட அதிகாரிகளுக்கோ வருவாய்த் தொடர்பான அதிகாரங்கள் ஒன்றும் அளிக்கப்படாததால் இத்துறை பொறுத் தவரை, இந்த அமைச்சர் ஏராளமான அதிகாரங்களைப்

[1] விஜயநகர அரசர் காலத்துச் 'சாஸனுச்சார்யன்' என்ற அதிகாரியின் முன்னோடி யாக இருக்கக்கூடும்.

பெற்றிருக்க வேண்டும். இவர் துறையைச் சார்ந்த பல்வேறு அலுவல்களைக் கவனிக்க இவருக்குக் கீழ் ஏராளமான கீழ்நிலை அதிகாரிகள் இருந்தனர். ஒரு செயலகமும் இருந்தது. கீழைச் சாளுக்கியப் பொறிப்பு ஒன்றிலிருந்து மந்திரி, புரோகிதர், சேனாதிபதி யுவராஜன் ஆகிய அமைச்சர்கள் அடங்கிய ஒரு குழு அப்பொழுது செயல்பட்டது என்று தெரிகிறது.

மேற்கூறியவற்றிலிருந்து அமைச்சரவை உள்ளிட்ட அரசன் கையில் (King-in-Ministry) ஆட்சிப்பொறுப்பு முழுவதும் இருந்தது என்பது புலப்படும். தலைநகரத்தில் அமைந்திருந்த தலைமைச் செயலகத்தில் அன்றாட நிர்வாகம் எவ்வாறு இயங்கியது என்பது குறித்து நமக்குப் பொறிப்புகள் மூலம் எந்தச் செய்தியும் கிடைக்கவில்லை. ஒவ்வொரு அமைச்சருக்கும் கீழ் ஒன்றுக்கும் மேற்பட்ட செயலர்கள் இருந்திருக்கவேண்டும். மாநில, மாவட்ட அதிகாரிகளையும் சிற்றரசர்களையும் கண்காணிக்க மத்திய அரசாங்கம் பல அதிகாரிகளை நியமித்திருந்தது. அவர்கள் அடிக்கடி அப்பகுதிகளுக்குச் சுற்றுப் பயணங்களை மேற்கொண்டு அப் பகுதியின் நடப்புகளைப் பற்றி அறிந்துவந்தனர். நாடு முழுவதும் ஏராளமான ஒற்றர்களை அரசன் நியமித்து அவர்களின் மூலம் மாநில, மாவட்ட, கிராம அதிகாரிகளின் நடவடிக்கைகளைப்பற்றி அறிந்துகொண்டான்.

### அரசின் சின்னங்களும் கொடியும்

வாதாபிச் சாளுக்கியர்களும், வேங்கிச் சாளுக்கியர்களும் பன்றிச்சின்னம் பொருந்திய கொடியைப் பெற்றிருந்தனர். விஷ்ணுவிடமிருந்தே அவர்கள் அதைப் பெற்றதாக மரபு. வாதாபிச் சாளுக்கியர்கள் தங்கள் ஆதிக்கத்தின் சின்னமாகப் பாலித்வஜம் என்னும் ஒரே வரிசையில் ஒரு குறிப்பிட்ட மாதிரி அடுக்கப்பட்ட கொடிகளை அடையாளமாக வைத்திருந்தனர். வட இந்தியப் படையெடுப்பிற்குப் பிறகு விஜயாதித்யன் பாலித்வஜத்தோடு கங்கை, யமுனை ஆறுகளின் சின்னத்தையும் சேர்த்துக் கொண்டான். ராஷ்டிரகூடர்கள் கருடன் சின்னத்தைப் பயன்படுத்தினர். மேலைச் சாளுக்கியர்களின் பாலித்வஜ சின்னமும் அவர்களால் பயன்படுத்தப்பட்டது.

### சிற்றரசர்கள்

அரசனின் நேரடி ஆட்சிக்குட்பட்ட பகுதிகளைத் தவிர அரசனின் ஆதிக்கத்திற்கு உட்படுத்தப்பட்ட, சிற்றரசர்களால் ஆளப்பட்டுவந்த சில பகுதிகளும் நாட்டில் இருந்தன. சாளுக்கியர்

களுக்கும் ராஷ்டிரகூடர்களுக்கும் அடங்கி ஆட்சி செய்துகொண்டிருந்த பல சிற்றரசர்களை நாம் அவர்களின் பொறிப்புகளின் மூலம் அறிகின்றோம். எல்லாச் சிற்றரசர்களுக்கும் ஒரே சமமான உரிமைகளோ அதிகாரங்களோ அந்தஸ்தோ அளிக்கப்படவில்லை. ஒரு சிற்றரசன் பெற்றிருந்த அதிகாரமும் அந்தஸ்தும் அச் சிற்றரசனைப் பொறுத்திருந்தது. படையெடுத்துச் செல்லும் அரசன் ஒரு நாட்டை வென்றால், அந் நாட்டை அந்த அரசனுக்கே திருப்பிக் கொடுத்துவிட்டு, அவனைத் தன் மேலாதிக்கத்தை ஏற்றுக்கொள்ளும்படிச் செய்வது தக்காண அரசர்களிடையே வழக்கமாக இருந்தது. சாளுக்கியர்களும், ராஷ்டிரகூடர்களும் இதுபோலப் பல அரசர்களை வென்று, அவர்களைத் தங்கள் ஆதிக்கத்திற்குட்பட்ட சிற்றரசர்களாக ஆக்கினார்கள். அவர்கள் சாமந்தர்கள்' என்றும், மகாசாமந்தர்கள் என்றும் சாளுக்கிய ராஷ்டிரகூடப் பொறிப்புகளில் குறிப்பிடப்படுகின்றார்கள். தங்கள் அரசுகளை அவர்கள் முழுச் சுய ஆட்சி உரிமையோடு ஆண்டனர். அவர்கள் துணைச் சிற்றரசர்கள் (Sub-feudatories) என்றழைக்கப்பட்டனர். தங்கள் மேலாளனான அரசனிடம் பற்றுறுதிமாறாது, அவன் ஆணைக்குக் கீழ்ப்பணிந்து, அவனுடைய உண்மை ஊழியர்களாகச் சிற்றரசர்கள் நடந்து கொள்ளவேண்டுமென்று எதிர்பார்க்கப்பட்டது. அவர்கள் அரசனுக்கு ஆண்டுதோறும் திரைப்பணம் செலுத்துவதோடு மட்டுமல்லாமல் அரசனுக்குத் தேவைப்படும்பொழுது படையுதவியும் செய்ய வேண்டும். அரசனுடைய படையெடுப்புகளிலும், அவன் சார்பில் சிற்றரசர்கள் பங்கு கொள்ளவேண்டும். சிற்றரசர்கள் தங்கள் அரசுகளில் தங்கள் மேலாளனான அரசனின் தூதுவர்களை ஏற்றுக் கொள்ளவேண்டும். சிற்றரசர்களின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்துவதும், கண்காணிப்பதும் அத் தூதுவர்களுடைய கடமையாகும். அரசனின் பிறந்த நாள் விழா, முடிசூட்டுவிழா போன்ற காலங்களில் சிற்றரசர்கள் அரசனுக்குப் பல பரிசுகள் வழங்கவேண்டும். சிற்றரசர்கள் தங்கள் மேலாளனை எதிர்த்துக் கலகங்கள் விளைவித்தாலோ, போரில் தோல்வியடைந்தாலோ பல தண்டனைகளுக்கு உள்ளாக்கப்பட்டதோடு மட்டுமின்றிப் பல வகைகளில் அவமானப்படுத்தப்பட்டனர். அரசன் வலிமையுள்ளவனாக இருந்தவரையில் சிற்றரசர்களால் ஒரு தொல்லையும் ஏற்படவில்லை. வலிமையற்ற அரசர்கள் பதவிக்கு வந்தபொழுது சிற்றரசர்கள் நிலை ஏற்றம் பெற்றது. வாரிசுரிமைப் போர்கள் நடந்த காலங்களிலும் சிற்றரசர்கள் முக்கியத்துவம் பெற்றனர். ஏனெனில் போட்டியிட்ட இளவரசர்கள் ஒவ்வொருவரும் தாங்கள் அரியணையைப் பெறச் சிற்றரசர்களின் உதவியை நாடினர்.

துருவன், முதலாம் அமோகவருஷன், மூன்றும் அமோகவருஷன் போன்ற அரசர்கள் பதவியைப் பெற்றதே, சிற்றரசர்கள் உதவியின் மூலம்தான் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. சாளுக்கியர்கள் ஆதிக்கத்திற்குட்பட்ட ஆலுபர்கள், சேந்திரகர்கள், பாணர்கள், கங்கர்கள் போன்ற சிற்றரசர்களுக்கும் சாளுக்கியர்களுக்குமிடையே மேலே விளக்கப்பட்டுள்ள உறவு முறை நிலவியது என்று கருதலாம்.

**மாநில, மாவட்ட, நகர, கிராம நிர்வாகம்**

சாளுக்கியப் பேரரசின் மாநில, மாவட்ட ஆட்சி முறை நாடு முழுவதும் ஒரே மாதிரியாக இருக்கவில்லை. நாட்டின் பல்வேறு பகுதிகளின் தேவைகளுக்கேற்ப, இந்த நிர்வாக முறையில் சில வேறுபாடுகள் காணப்பட்டன. இந்த ஆட்சி முறையைப் பற்றிச் சாளுக்கியப் பொறிப்புகளில் கிடைக்கும் செய்திகளிலிருந்து அது விரிவான, சிக்கல் மிகுந்த ஓர் அமைப்பாக இல்லாமல் எளிமையான ஓர் அமைப்பாக இருந்தது என்பதை அறிகிறோம். விஷயம், ராஷ்டிரம், நாடு போன்ற நிர்வாகப் பிரிவுகள் சாளுக்கியப் பொறிப்புகளில் குறிப்பிடப்பட்டுள்ளன. விஷ்ணுவர்த்தனன் சதாரா சாஸனம் விஷயபதிகள், சாமந்தர்கள் கிராமபோகிகர்கள், மகாத்தரர்கள் போன்ற அதிகாரிகளைக் குறிப்பிடுகிறது. நிர்வாக சௌகரியத்திற்காக உருவாக்கப்பட்ட இப் பிரிவுகளில் விஷயம் என்ற பிரிவு மிகப் பெரியது. இன்றைய மாநிலத்திற்குச் சமமானது. விஷயத்தைவிடச் சிறியவை ராஷ்டிரம், நாடு, கிராமம் போன்ற பிரிவுகள். ஆனால் ராஷ்டிரகூடர்கள் காலத்தில் ராஷ்டிரம் மிகப் பெரிய நிர்வாகப் பிரிவாக இருந்தது. ராஷ்டிரத்தை விடச் சிறியவை விஷயம், புக்தி போன்ற பிரிவுகள். நிர்வாக அமைப்பின் அடிப்படையாக விளங்கியது கிராமம் ஆகும். வேங்கிச் சாளுக்கியர் ஆட்சியில் மண்டலம் நிர்வாகப் பிரிவுகளில் மிகப் பெரியதாகும். விஷயம், கோட்டம் போன்ற மற்ற நிர்வாகப் பிரிவுகளும் வேங்கிச் சாளுக்கியர் ஆட்சியில் இருந்தன. விஷயபதிகள் அரசனின் சார்பில் விஷய நிர்வாகத்தை ஏற்று நடத்தியவர்கள். அரசனின் ஆணையின்படி அரசனின் நலனுக்காக அவர்கள் தங்கள் ஆட்சிப் பகுதிகளை ஆண்டனர். சாமந்தர்கள் அரசனின் ஆதிக்கத்திற்குட்பட்ட சிற்றரசர்கள். கிராமபோகிகர்கள், கிராமகூடர்கள் ஆகியோர், கிராம அதிகாரிகள். மகாத்தரர்கள் என்பவர்கள் கிராமத்து முக்கியஸ்தர்கள் ஆவர். ராஷ்டிரகூடப் பேரரசு மிகப்பரந்த ஒன்றாகையால் நிர்வாகம் செவ்வனே நடைபெற நாட்டைச் சிறு பிரிவுகளாகப் பிரித்து, நிர்வாகப்

பொறுப்பைப் பல்வேறு அதிகாரிகளிடையே பகிர்ந்து கொடுக்க வேண்டியது அவசியமாயிற்று. ராஷ்டிரம் என்னும் பிரிவு தற்கால மாநிலத்திற்கும், விஷயம் தற்கால மாவட்டத்திற்கும் சமம் எனக் கருதலாம். விஷயத்தை விடச் சிறியது புக்தி என்னும் பிரிவு. நூறு முதல் ஐந்நூறு கிராமங்களைக் கொண்டது ஒரு புக்தி. தற்கால மாவட்டத்தின் ஒரு கோட்டத்தை (Division) இந்தப் பிரிவு ஒத்திருந்தது.

சாளுக்கியர் ஆட்சியிலும், ராஷ்டிரகூடர் ஆட்சியிலும், மாநிலத்தின் ஆளுநர்களாக அல்லது அரசப் பிரதிநிதிகளாக அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்களே நியமிக்கப்பட்டார்கள். அவர்கள் ராஷ்டிரபதிகள் என்று அழைக்கப்பட்டனர். உதாரணமாக இரண்டாம் புலிகேசியின் ஆட்சியில் சாளுக்கிய அரசு நான்கு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு. அவற்றிற்குப் புலிகேசியின் நான்கு பிள்ளைகள் அரசப் பிரதிநிதிகளாக நியமிக்கப்பட்டனர். அதே போலத் துருவனுடைய பிள்ளைகளும் மாநில ஆளுநர்களாக நியமிக்கப்பட்டனர். சில சமயங்களில் இப் பதவி அரச குடும்பத்தினரின் பரம்பரை உரிமையாக இருந்தது. வேங்கியிலும், குஜராத்திலும், வெமுலவாடத்திலும் இதுபோலப் பரம்பரை உரிமையாக ஆளுநர் பதவியை அனுபவித்து வந்த அரச குடும்பத்தினர் தான் நாளடைவில் சுதந்திரமெய்தி அப் பகுதிகளைச் சுதந்திர அரசுகளாக உருவாக்கினார்கள். சில சமயங்களில் படைத் துறையில் நல்ல சாதனைகளைப் புரிந்த படைத்தலைவர்கள் ஆளுநர்களாக நியமிக்கப்பட்டனர். முதலாம் அமோகவருஷன் ஆட்சியில் படைத்தலைவனாக இருந்த பங்கேயன் வனவாசியின் ஆளுநனாக நியமிக்கப்பட்டதை இதற்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம். ஆளுநர்கள் தங்களை 'ராஜா' என்று அழைத்துக் கொண்டனர். துருவனுடைய ஆட்சியில் வனவாசியின் ஆளுநன் தன்னை 'மாரக்கராஜன் என்றும், மூன்றாம் கோவிந்தன் ஆட்சியில் 'ராஜாதித்ய ராஜபரமேஸ்வரன்' என்றும் அழைத்துக் கொண்டான். சிற்றரசர்களைப்போலச் சில ஆளுநர்களும் 'மகா சாமந்தன்' என்ற பட்டத்தைச் சூட்டிக்கொண்டனர். ஒவ்வொரு மாநில ஆளுநனும் பெரும் படைகளை வைத்துக் கொண்டிருந்தான். போர்க்காலங்களில் அரசனுக்கு உதவவும், மற்றச் சமயங்களில் மாநிலத்தில் அமைதியையும், ஒழுங்கையும் நிலைநாட்டவும் இப் படைகள் பயன்படுத்தப்பட்டன. நிலவரி நிர்ணயம் செய்வது, வசூலிப்பது போன்ற வருவாய்த்துறைப் பணிகளையும் இந்த ஆளுநர்கள் மேற்கொண்டனர். ஆனால் சிற்றரசர்களைப் போல ஆளுநர்களுக்கு அரசனுடைய முன் அனுமதியின்றி நிலத்தையோ. கிராமத்தையோ தானமாகக்

கொடுக்கும் உரிமை கிடையாது. நிலஉரிமை பற்றிய விவரங்கள், கோயிலுக்கும் அந்தணர்களுக்கும் மானியமாக வழங்கப்பட்டிருக்கும் கிராமங்கள் பற்றிய விவரங்கள் போன்ற நிலத் தொடர்பான செய்திகளடங்கிய ஆவணங்களை இவர்கள் தயாரித்து வைத்துக் கொள்ள வேண்டும்.

விஷயம் என்னும் பிரிவான மாவட்டத்தின் நிர்வாகத் தலைவன் விஷயபதி என்றழைக்கப்பட்டான். புக்தி என்ற பிரிவின் தலைவன் போகபதி ஆவான். இந்த அதிகாரிகள் தங்கள் ஆட்சி எல்லைக்குள் மாநில ஆளுநன் பெற்றிருந்த அதே அதிகாரங்களைப் பெற்றிருந்தனர். அவர்களிடமும் ஒரு படை இருந்தது. சில வலிமைமிக்க விஷயபதிகள் சிற்றரசர்கள் அந்தஸ்த்தைப் பெற்றிருந்தனர். மாவட்டங்களிலும் கோட்டங்களிலும் அமைதி, ஒழுங்கைப் பாதுகாப்பது அவர்கள் கடமை. மாவட்ட ஆட்சித் தலைவர்கள் நிலவரி நிர்ணயம் செய்வது, நிலவரி வசூல் செய்வது, அவை தொடர்பான கணக்கு வழக்குகளைப் பார்த்துக் கொள்வது போன்ற பணிகளைச் செய்தனர். மாவட்ட ஆட்சி அதிகாரிக்கு நிர்வாகத்தில் உதவி புரிய மாவட்ட முக்கியஸ்த்தர்களின் பிரதிநிதிகளைக் கொண்ட ஒரு மன்றம் இயங்கியது.

புக்திகளின் நிர்வாக அதிகாரியான 'போகபதி' 'நாள் காவுண்டர்கள்' அல்லது தேசக் கிராமகூடர்கள் (Nalgavundas or Desagramakutas) என்றழைக்கப்பட்ட பரம்பரை வருவாய்த்துறை அதிகாரிகளின் உதவியோடு கோட்ட வருவாய்த்துறை நிர்வாகத்தைக் கவனித்தான். கோட்ட ஆட்சி நிர்வாகத்தில், கோட்ட ஆட்சித் தலைவனுக்குத் துணையாகக் கோட்ட முக்கியஸ்த்தர்கள் பிரதிநிதிகளைக் கொண்ட ஓர் அமைப்பு இருந்திருக்க வேண்டும்.

இதற்கு அடுத்துக் கிராமங்கள் நிர்வாக அமைப்பின் அடித்தளமாக இருந்தன. சாளுக்கியர்கள் காலத்தில் கிராம போகிகன் அல்லது காமுண்டன் என்ற கிராம அதிகாரி கிராம நிர்வாகத்தின் மையமாக விளங்கினான். அரசனால் நியமிக்கப்பட்ட இந்த அதிகாரி கிராம மக்களுக்கும், மத்திய அரசிற்கும், ஓர் இணைப்புப் பாலமாக விளங்கினான். இவனைத் தவிர கரணன் (Karanas) என்ற கிராமக் கணக்கனும் இருந்ததாகச் சில பொறிப்புகள் கூறுகின்றன. வேங்கிச் சாளுக்கியர்கள் ஆட்சியில் இந்தக் கிராம அதிகாரி கிராமணி என்றழைக்கப்பட்டான். கிராமத்தை நிர்வகிக்கும் பொறுப்பும், அதன் பல சமூக, பொருளாதாரப் பிரச்சினைகளை ஒழுங்கு படுத்தும் பொறுப்பும் 'மகாஜனங்கள்'

என்றழைக்கப்பட்ட கிராம முதியோர்களிடம் ஒப்படைக்கப் பட்டது. இருப்பினும் சில சமயங்களில் கிராமப் பிரச்சினைகளைத் தீர்க்கவும் கிராம விவகாரங்களை ஒழுங்கு படுத்தவும் அரசனுடைய தலையீடு தேவைப்பட்டது என்பதை ஒரு சில பொறிப்புகள் மூலம் அறிகின்றோம். 'ராஜபுருஷர்' என்ற அரச அதிகாரிகள் கிராம மக்களின் உரிமைகளை நிலைநாட்டும் பொறுப்பைச் சில சமயங் களில் ஏற்க வேண்டியிருந்தது. கிராமத்தில் அமைதியையும் ஒழுங்கையும் நிலைநாட்டுவது கிராமத்தின் தலைமை அதிகாரியின் பொறுப்பாகும். இதற்காக அவனிடம் எப்பொழுதும் ஒரு படை இருந்தது. திருடர்களாலோ, கொள்ளைக்காரர்களாலோ கிராமத்தின் அமைதி பாதிக்கப்படவில்லை. சிற்றரசர்களின் கலகங்களும் கிராமங்களிடையே காணப்பட்ட போட்டி, பொறாமைகளும் தான் கிராம அமைதி கெடுவதற்குக் காரணமாக இருந்தன. அமைதி காக்கும் பொறுப்பு தவிர, கிராமத்தில் வரிகளை வசூல் செய்யும் பொறுப்பையும் இந்த அதிகாரி ஏற்றி ருந்தான். கிராம நிர்வாகத்தில் கிராம மக்களுக்கும் ஒரு முக்கிய பங்கு இருந்தது. ஒவ்வொரு கிராமத்திலும் வயது வந்த கிராம வாசிகளின் பிரதிநிதிகளைக் கொண்ட ஒரு மன்றம் செயல் பட்டு வந்தது. கிராமப் பள்ளிகளையும், குளங்களையும், கோயில் களையும், சாலைகளையும் பராமரிக்க கிராம மகாஜனங்கள் சிறு குழுக்களை நியமித்தார்கள். இந்தக் குழுக்களும் கிராம அதிகாரி களும் இணைந்து செயல்பட்டுக் கிராம நிர்வாகத்தைச் செம்மை யாக நடத்தினர். சிவில் வழக்குகளும் இந்தக் கிராம மன்றத் தினால் தீர்க்கப்பட்டன.

மேற் கூறப்பட்ட நிர்வாகப் பிரிவுகளைத் தவிர நகரங்களும், சிற்றூர்களும் தனித்தனி நிர்வாகப் பிரிவுகளாக இயங்கின. புரபதிகள் அல்லது நகரபதிகள் என்ற அதிகாரிகள் இந் நகரங் களின் ஆட்சிப் பொறுப்பை ஏற்றிருந்தனர். கி.பி. 725-ஆம் ஆண்டுச் சாளுக்கிய சாஸனம் ஒன்று இளவரசன் விக்கிரமாதித்யன் ஒரு நகரத்திற்கு அளித்த உரிமைகள் சாஸனத்தைப் பற்றிக் கூறுகின்றது. இது போல மற்ற நகரங்களும் அரசனிடமிருந்தோ, அரச அதிகாரிகளிடமிருந்தோ உரிமைச் சாஸனங்களைப் பெற் றிருக்கக்கூடும். ராஷ்டிரகூடர்கள் ஆட்சியில் நகர நிர்வாகத்தைக் கவனிப்பதற்குப் படைத்துறை அதிகாரிகள் நியமிக்கப்பட்டனர். சில நகர அதிகாரிகள், சிற்றரசர்கள் அந்தஸ்த்து பெற்றிருந்தனர். ஆகவே அவர்கள் தங்களை மகாசாமந்தர்கள் என்றழைத்துக் கொண்டனர். நகர நிர்வாகத்தை நடத்துவதில் இந்த அதிகாரி களுக்கு உதவியாகச் சிறு குழுக்கள் இருந்தன. ஒவ்வொரு நகர மும் பல குடும்புகளாகப் பிரிக்கப்பட்டு (ward) ஒவ்வொரு குடும்பி

லிருந்தும் இக் குழுவிற்குப் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப் பட்டனர். நகர அதிகாரிகளை மாநிலத்துத் தலைமை அதிகாரி களான ராஷ்டிரபதிகள் கண்காணித்தனர்.

கீழைச் சாளுக்கிய நிர்வாக அமைப்பில் 'நியோகாதிக்கிரிதா' (Niyogadhikrita) என்ற ஓர் அதிகாரி இருந்ததாக அவர்கள் சாஸனங்களிலிருந்து தெரிய வருகின்றது. எண்ணிக்கையில் மிகுந்திருந்த அரண்மனை அலுவலர்களைக் கண்காணிக்கும் மேற்பார்வையாளராக இந்த அதிகாரி இருக்கக்கூடும். இவர்களைத் தவிர நியோகிகவல்லபர்கள் (Naiyo ikavallabhas) கிராமேய கர்கள் (Grameyakar) மன்னேயர்கள் (Manneyas) போன்ற அலுவலர்களும் வேங்கிச் சாளுக்கியர் ஆட்சியில் இருந்ததாக அவர்கள் பொறிப்புகள் கூறுகின்றன. வேங்கி நாட்டுக் கிராமம் ஒன்றின் மகாஜனங்கள் ஓர் அந்தணக்குடும்பத்தினரைப் பஞ்ச வாரம் என்னும் ஐவர் கொண்ட குழுவின் உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுத்தார்கள் என்று வேங்கிச் சாஸனம் ஒன்று கூறு கின்றது. இதிலிருந்து சோழ நாட்டில் சுயாட்சி உரிமை பெற்ற கிராம மன்றங்கள், வாரியங்கள் மூலமாகக் கிராம நிர்வாகத்தை நடத்தியது போல வேங்கி நாட்டிலும் கிராம நிர்வாகம் இயங் கியது என்று கருதலாம். வேங்கி நாடு அடிக்கடி உள்நாட்டுப் போர்களுக்கும், வெளி நாட்டுப் படையெடுப்புகளுக்கும் உள்ளானதால் நிலையான ஒரு நிர்வாகம் இயங்குவதற்குச் சாதகமான சூழ்நிலை அவர்கள் ஆட்சியிலிருக்கவில்லை. நாடு எப்பொழுதுமே ஒரு நெருக்கடி நிலையிலிருந்ததால் பல பிரிவுகளாய் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு பகுதியும் பேராற்றல் மிக்க பிரபுக்கள் குடும்பங்களிடம் ஒப்படைக்கப்பட்டது. இருப்பினும் கிராமங் களைப் பொறுத்தவரையில் கிராம ஆட்சி கிராமேயர்கள், கிராமணி போன்ற அலுவலர்களின் உதவியோடு மரபு அடிப் படையில் இயங்கி வந்தது, நாட்டில் தோன்றிய அரசியல் சூறுவளிகளும், மற்ற நிகழ்ச்சிகளும் கிராம நிர்வாகத்தை எந்த வகையிலும் பாதிக்கவில்லை.

சாளுக்கிய ராஷ்டிரகூட ஆட்சி முறையைப் பற்றி ஆராயும் பொழுது, அது தொடர்பான மற்றெரு செய்தியையும் இங்குக் குறிப்பிடவேண்டும். நாட்டின் பல்வேறு நிர்வாகப் பிரிவுகளைக் குறிப்பிடும்பொழுது, ஒவ்வொரு பிரிவின் பெயரின் முடிவிலும் ஓர் எண் குறிப்பிடப்பட்டிருப்பதைச் சாஸனங்கள் மூலம் அறிகிறேம். உதாரணமாகப் புகை விஷயம்-1000, கரஹாடக விஷயம்-4000, கங்கவாடி-96,000, வனவாசி-12000, நொளம்பவாடி-32000. நிர்வாகப்பிரிவின் பெயர்களின் முடிவில் காணப்படும்

இந்த எண்கள் எதைக் குறிக்கின்றன என்பதுபற்றி வரலாற்றறிஞர்களிடையே கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன. இந்த எண் அந்த நிர்வாகப்பிரிவிலடங்கிய கிராமங்களின்மொத்த எண்ணிக்கையைக் குறிப்பிடும் என்பது ஒரு சிலருடைய கருத்தாகும். ரைஸ் என்னும் அறிஞர், அது அந்தப் பிரிவின் வருவாய், அவ்வளவு தங்க நாணயங்கள் என்பதைக் குறிக்கின்றது என்று கருதுகிறார். இக் கருத்து ஏற்புடையதன்று. ஏனெனில் ஒரு பகுதியின் வருவாய் எங்ஙனம் ஓவ்வோர் ஆண்டும் சிறிதும் மாறாமல் அதே தொகையாக இருக்க முடியும்? மேலும் சில நிர்வாகப் பிரிவுகளின் பெயருடன் காணப்படும் குறைந்த மதிப்புள்ள எண்ணைப் பார்க்கும்பொழுது ஒரு நிர்வாகப்பிரிவின் வருவாய் அவ்வளவு குறைவாக இருக்க முடியுமா என்ற ஐயப்பாடு எழுகிறது. மேலும், தக்காணத்தில் அந்தக் காலப்பகுதியில் வரிகள் யாவும் பணமாக வசூலிக்கப்படவில்லை; பொருள்களாவே வசூலிக்கப்பட்டது என்பதை நினைவில் கொள்ளும்பொழுது இக் கருத்து பொருத்தமுடையதன்று என்பது விளங்கும். அந்த எண் அப் பகுதியின் மக்கள் தொகையைக் குறிக்கும் என்று சிலர் கருதுவர். ஆனால் அந்தக் காலத்தில் தக்காணத்தில் ஒழுங்காக மக்கள் தொகைக் கணக்கு எடுக்கப்பட்டது என்பதற்கு எவ்வித ஆதாரமும் இல்லை. அவ்வாறிருப்பினும் கங்கவாடி போன்ற ஒரு பெரிய பகுதியின் மக்கள்தொகை 96,000 என்பது பொருத்தமுடையதாகாது அந்த எண் அப் பகுதியின் மக்கள்தொகையைக் குறிக்கவில்லை. மாறாக அப் பகுதியில் போரிடக்கூடிய தகுதியைப் பெற்ற போர் வீரர்களின் எண்ணிக்கையைக் குறிக்கும் என்று சிலரும், அப் பகுதியிலிருக்கும் குடும்பங்களின் எண்ணிக்கையைக் குறிக்குமென்று வேறு சிலரும் கருத்து தெரிவித்துள்ளனர். டாக்டர் பிராண்நாத் என்னும் வரலாற்றறிஞர் அண்மையில் இது பற்றிய புதிய கருத்து ஒன்றைத் தெரிவித்துள்ளார். அந்த எண் கிராமங்களின் எண்ணிக்கையைக் குறிக்கவில்லை. மாறாக அப் பகுதியிலிருந்த பண்ணைகளின் (Estates) எண்ணிக்கையைக் குறிக்கின்றது என்று அவர்கள் கூறுகிறார். அது அப் பிரிவிலிருந்த வருவாய்த் தொகுதிகளின் (revenue units) எண்ணிக்கையைக் குறிப்பதாக இருக்கலாம் என்று டாக்டர் டி.வி. மகாலிங்கம் கருத்து தெரிவிக்கிறார்.[1]

### வருவாயும், செலவினங்களும்

ஒரு நாட்டின் அரசாங்கம் வெற்றிகரமாக நடைபெறுவதற்கு அந்நாட்டின் நிதிநிலை முழு நிறைவுள்ளதாக இருக்கவேண்டு

[1] T V. Mahalingam — South Indian Polity p. 312.

மென்பது பற்றி மாறுபட்ட கருத்துகள் இருக்கமுடியா. அதனுடைய இன்றியமையாமையைப் பண்டைய தக்காண அரசுகள் நன்ருக உணர்ந்திருந்தன. அதனுல்தான் ஓர் அரசின் ஏழு முக்கிய கூறுகளில் கருவூலம் ஒன்று, என்று பண்டைய இந்தியர்கள் வரையறை செய்திருந்தனர். தக்காண அரசுகளின் வருவாய்பற்றி அறிந்துகொள்வதற்கு அவ்வரசர்களின் பொறிப்புகள் போன்ற பயனுடைய சான்றுகள் தவிர, வேறு ஒன்றும் இருக்க முடியாது. அரசாங்கம் மக்கள் மீது விதித்த பல்வேறு வரிகள் பற்றி இந்தப் பொறிப்புகள் கூறுகின்றன. கிராமங்களை மானியமாக வழங்கும்பொழுது அவை என்னென்ன வரிகளி லிருந்து விலக்கு அளிக்கப்பட்டுள்ளன என்ற செய்தியும் அல்லது ஓர் அறநிலையத்திற்கு மானியமாக ஒதுக்கப்பட்டிருக்கும் வரிகள் எவை என்ற செய்தியும் பல பொறிப்புகளில் காணப்படுவதால் அரசாங்கம் விதித்த வரிகளைப்பற்றி நாம் அறிய முடிகின்றது. வரிகளில் முக்கியமானது நிலவரி. இரண்டாம் புலிகேசியின் ஹைதராபாத் செப்பேடுகள் (கி.பி. 612) மாகரப்பி என்னும் கிராமம் தானமாக வழங்கப்பட்ட செய்தியையும், 'உத்ரங்கர்' (udranga) என்றழைக்கப்பட்ட நிலவரியும் 'உபரிகரா' [1] (uparikara) என்ற மிகைவீத நிலவரியும் (surcharge on land tax) தானமாக வழங்கப்பட்ட செய்தியையும் கூறுகின்றது. கி.பி. 671ஆம் ஆண்டு நவசாரிச் செப்பேடுகள் இதேபோலத் தானம் செய்யப் பட்ட கிராமத்துடன் அதன் நிலவரியும் தானமாக வழங்கப்பட் டது என்ற செய்தியைக் கூறுகின்றது. எனவே நிலவரி ஒரு முக்கியமான வரியாக வசூலிக்கப்பட்டது என்பது புலப்படுகிறது. ராஷ்டிரகூடப் பொறிப்புகளிலும் நிலவரியைக் குறிப்பிடும் 'உத்ரங்கா' என்ற சொல்லும், சில பொறிப்புகளில் 'பாககரா' (Bhagakara) என்ற சொல்லும் காணப்படுகின்றன. நிலவரி விகிதம் என்ன என்பதுபற்றி அறிந்துகொள்ளப் போதுமான ஆதாரங்கள் இல்லை. ராஷ்டிரகூடர்கள் காலத்தில் நிலத்தின் விளைச்சலில் இருபத்தைந்து சதவிகிதம் நிலவரியாக வசூலிக்கப் பட்டிருக்கவேண்டும். செழிப்பான நிலங்களுக்கு இந்த விகிதமும், செழிப்பற்ற நிலங்களுக்குக் குறைவான விகிதமும் இருந்திருக்க லாம். சாளுக்கிய, ராஷ்டிரகூட அரசர்கள் அடிக்கடி போர்களில் ஈடுபட்டதால் இவ்வளவு அதிகமான வரி விகிதம் தவிர்க்க

[1] உபரிகரா (Uparikara) என்னும் நில வரி மிகை வீத நில வரியாகவோ, அல்லது நில வரி அல்லாத மற்ற வரிகளாகவோ இருக்கலாம். அரசனுடைய அன்றாட வாழ்க்கைத் தேவைகளான காய்கறிகள், பழங்கள், மலர்கள், வெற்றிலை போன்ற பொருள்களை மக்களிடமிருந்து வசூல் செய்வதை இது குறிக்கும் என்று சிலர் கருதுகின்றனர். தல அதிகாரிகளுக்குச் சம்பளம் கொடுப்பதற்கு மக்களிட மிருந்து பொருளாக வசூலிக்கும் வரியை இது குறிக்கும் என்று வேறு ஒரு கருத்தும் உண்டு.

முடியாததாகிவிட்டது போலும். கோயில்களுக்கும், அறநிலையங்களுக்கும், அந்தணர்களுக்கும் நன்கொடையாக வழங்கப்பட்ட நிலங்களுக்கு நிலவரி விகிதம் இதில் பாதியாக இருந்தது. சில சமயங்களில் அந் நிலங்களுக்கு முழு வரிவிலக்கு அளிக்கப்பட்டது. நிலவரி பணமாக வசூலிக்கப்படுவதற்குப் பதிலாகத் தானியமாகவே வசூலிக்கப்பட்டது. அதுவும் மூன்று தவணைகளில் வசூலிக்கப்பட்டது. நிலம் அனைத்தும் அரசனுக்கு சொந்தம் என்ற கருத்து தக்காணத்தில் இக் காலப்பகுதியில் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. தனி நபர்களும் குடும்பங்களும் நிலத்தின் சொந்தக்காரர்கள். அரசிற்குச் சேரவேண்டிய நிலவரியைச் செலுத்தத் தவறும் பொழுதுதான் நிலத்தை அரசு, நிலச் சொந்தக்காரரிடமிருந்து பறிமுதல் செய்யலாம். நிலத்தைத் தவிர அரசின் உடைமைகளாகக் கருதப்பட்ட சுரங்கங்கள், காடுகள், தரிசு நிலங்கள், உப்பளங்கள் ஆகியவற்றிலிருந்தும் அரசிற்கு வருவாய் கிடைத்தது இவை தவிர சாளுக்கியர் காலத்தில் வீடோ, வீட்டு மனையோ, கால்நடைகளோ வைத்திருந்தவர்கள் அரசிற்குச் சொத்து வரியைச் செலுத்தவேண்டியிருந்தது. யுவராஜன் விக்கிரமாதித்யனின் லட்சுமேஸ்வரம் பொறிப்பில் இந்தச் சொத்துவரி, சொத்துள்ளவர்கள் அனைவரும் கொடுக்கவேண்டும் என்று கூறப்பட்டுள்ளது. வாரிசில்லாத சொத்தின் மீதும் அரசு வரிவிதித்தது என்பது சாளுக்கியப் பொறிப்பு ஒன்றிலிருந்து தெரிகின்றது. உள்நாட்டுத் தீர்வைகள் மூலமும், சுங்கவரிகள் மூலமும் அரசிற்கு வருவாய் கிடைத்தது. போர்க்காலங்களில் படை வீரர்கள் நாட்டின் ஒரு பகுதியிலிருந்து மற்றொரு பகுதிக்கு அணிவகுத்துச் செல்லும்பொழுது அவர்கள் தங்கவும், உணவு உண்ணவும் வசதிகள் செய்து கொடுக்கும் பொறுப்பு கிராம மக்களின் மீது சுமத்தப்பட்டது. சாளுக்கிய ராஷ்டிரகூடப் பொறிப்புகளில் கூறப்படும் இந்த வழக்கங்களும் ஒரு வரியைப் போலத்தான் என்று கொள்ளலாம். சில கிராமங்கள் இந்தக் கட்டாயத்திலிருந்து விலக்களிக்கப்பட்டன. யுவராஜ விஷ்ணுவர்த்தனனின் சதாரா சாஸனம், ஆலந்ததீர்த்தம் என்னும் கிராமம் இதுபோன்ற விலக்கைப் பெற்ற செய்தியைக் கூறுகிறது. குற்றம் புரிந்தவர்கள் நீதிமன்றங்களிலும் கிராம மன்றங்களிலும் அபராதம் செலுத்தும்படித் தண்டிக்கப்பட்டு, அவ்வாறு அவர்களால் செலுத்தப்பட்ட அபராதத் தொகை அரசின் வருவாய்களுள் ஒன்றாக இருந்தது. இவை தவிர குடிமக்கள் அரசிற்கு ஊதியமில்லாக் கட்டாயப்பணி செய்யவேண்டும். கிராமங்களில் தானியக் களஞ்சியங்களைப் பழுதுபார்த்தல், சாலை அமைத்தல், குளம் வெட்டுதல் போன்ற பொதுப்பணிகளில் மக்கள் எல்லாரும்

பங்குகொள்ள வேண்டும். போரில் வெல்லப்பட்ட அரசர்கள் செலுத்தும் கப்பப் பணம் அரசின் வருவாயைப் பெருக்கியது. சாளுக்கிய அரசன் இரண்டாம் புலிகேசி பாணராஜ விஷயத்தை வென்றவுடன் அப்பகுதியிலிருந்த ஒவ்வொரு கிராமமும் ஒரு குறிப்பிட்ட தொகையைப் பொன்னாகக் கொடுக்கவேண்டுமென்று ஆணையிட்டான். விஜயாதித்யனுடைய பாதாமிப் பொறிப்பு திரிமூர்த்திகள் கோயிலுக்கு ஒவ்வொரு கடைக்காரரும், சர்க்கரை, எண்ணெய் போன்ற பொருள்களைக் குறிப்பிட்ட விகிதத்தில் கொடுக்கவேண்டுமென்று கூறுகின்றது. இதேபோலக் குறிப்பிட்ட வியாபாரத்தில் ஈடுபட்டிருக்கும் வியாபாரக் குழுக்களும் (Guilds) தாமாகவே கோயில்களுக்குத் தானங்கள் செய்ய முன்வருவதையும், அரசன் அதற்கு அனுமதி வழங்குவதையும் சாளுக்கியப் பொறிப்புகளிலிருந்து அறிகிறோம்.

சுக்கிரநீதி போன்ற ஆட்சிமுறை பற்றிய நூல்களில் காணப்படும் அடிப்படையில் சாளுக்கிய, ராஷ்டிரகூட அரசுகள் தங்கள் செலவினங்களை நிர்ணயம் செய்துகொண்டன. அரசின் வருவாய் ஆறு பாகங்களாகப் பிரிக்கப்பட்டு ஒரு பாகம் க்ஷேமநிதிக்காக ஒதுக்கீடு செய்யப்பட்டது; மூன்று பாகங்கள் படைத்துறைச் செலவிற்காகவும் மீதி இரண்டு பாகங்கள் அரச மானியம், ஆட்சித்துறை, பொதுப்பணிகள், அறப்பணிகள் ஆகிய செலவினங்களுக்காகச் சமமாகப் பங்கிடப்பட்டது. சாளுக்கிய, ராஷ்டிரகூட அரசுகள் பெரிய படைகளை வைத்துப் பராமரிக்க வேண்டிய அவசியத்திற்குள்ளானதால் வருவாயில் ஏறத்தாழ ஐம்பது சதவிகிதம் படைத்துறைக்காகச் செலவழித்ததில் வியப்பொன்றுமில்லை. காவல்துறைச் செலவும் இதில் அடங்கியிருந்தது. மொத்த வருவாயில் ஆட்சித் துறைக்காகச் செலவிடப்பட்ட விகிதம் மிகக் குறைவாகக் காணப்பட்டாலும், ஆட்சித்துறை அலுவலர்கள் பலர் ஊதியமாக அரசிடமிருந்து நிலங்களை மானியமாகப் பெற்றனர் என்பதை இங்கு நினைவில் கொள்ளவேண்டும். அரசனுடைய செலவிற்காக ஒதுக்கீடு செய்யப்பட்ட தொகை மிகவும் குறைவாகத்தான் காணப்படுகிறது. ஒருவேளை இதைவிடச் சற்று அதிகமாகவே தொகை ஒதுக்கீடு செய்யப்பட்டிருக்கக்கூடும். அறப்பணிகளுக்காக ஒதுக்கீடு செய்யப்பட்ட தொகை இன்றைய கண்ணோக்கில் சற்று அதிகமாகவே தோன்றினாலும், அன்று சமயமும், அறப்பணிகளும் மக்களிடையே பெற்றிருந்த செல்வாக்கையும், அரசர்கள் சமயப்பணிகளுக்கு அளித்த முக்கியத்துவத்தையும் வைத்துப் பார்க்கும்பொழுது இந்த ஒதுக்கீட்டை அதிகம் என்று கருதமுடியாது. மேலும் இவ் வறப்பணிகளில் கல்வியும் அடங்கியிருந்தது என்பதை இங்குக் குறிப்பிட வேண்டும்.

படைத்துறை அமைப்பு

சாளுக்கிய, ராஷ்டிரகூட அரசர்களில் போரில் ஈடுபடாத வர்களே இல்லை என்று கூறலாம். தங்கள் நாட்டை அந்நியப் படையெடுப்பிலிருந்து பாதுகாக்கவோ, உள்நாட்டுக் குழப்பங்களை அடக்கவோ, நாடு பிடித்து அரசின் எல்லைகளை விரிவாக்கவோ அவர்கள் ஓயாது போரிட்டார்கள். எனவே வலிமையுள்ள பெரும்படை ஒன்று அவ் வரசர்களுக்கு எப் பொழுதும் தேவைப்பட்டது. நல்ல பயிற்சி பெற்ற ஆற்றல் மிக்க படைகளை இவ்விரு அரசுகளும் பெற்றிருந்தன. சாளுக்கியப் படைகளின் போராற்றல் குறித்து யுவான் சுவாங்கின் குறிப்புகளி லிருந்து சில செய்திகளை அறிகிறோம். வட இந்தியப் பேரரசனை ஹர்ஷவர்த்தனனைச் சாளுக்கியப் படைகள் தோல்வியடையச் செய்தது இதற்குச் சான்றாகும். ஆற்றல் மிக்க படைத்தளபதி களையும், ஒரு சிறந்த யானைப் படையையும் பெற்றிருந்ததால் சாளுக்கிய அரசன் புலிகேசி அண்டை நாடுகளைச் சற்றும் மதிக்க வில்லை என்று யுவான்சுவாங் கூறுகிறார், யுவான் சுவாங்கின் வாழ்க்கை வரலாற்றை எழுதிய ஹுவுய் லி (Hwui Li) என்பவர். சாளுக்கிய நாட்டில் காலாட்படையும், குதிரைப்படையும் செம்மையான முறையில் அமைக்கப்பட்டுள்ளன. போர் விதிகள் நன்றாகப் புரிந்துகொள்ளப்பட்டு, தவறாமல் கடைப்பிடிக்கப் படுகின்றன. ஒரு படையெடுப்பிற்குத் தலைமை தாங்கிப் படைகளை நடத்திச்செல்லும் படைத்தளபதி போரில் தோற்றபோதிலும் அவன் தண்டிக்கப்படுவதில்லை. அதற்கு மாறாக அவன் படைவீரன் சீருடைகளைக் களைந்துவிட்டுப் பெண்கள் அணியும் உடைகளை அணிந்துகொள்ள வேண்டும். இந்த அவமானத்திலிருந்து தப்பித்துக்கொள்ளப் பல படைத்தளபதிகள் தங்கள் உயிரையே மாய்த்துக்கொண்டிருக்கிறார்கள் என்று கூறுகிறார். சாளுக்கி யர்கள் ஒரு தலைசிறந்த நிலப்படை மட்டுமன்றி, ஒரு கடற் படையையும் வைத்திருந்தார்கள் என்பது, அவர்கள் ரேவதி திவீபம் போன்ற இடங்களில் போர் செய்ததிலிருந்து அறியலாம். ஆனால் இதுபற்றிய விளக்கமான செய்திகள் நமக்குக் கிடைக்கவில்லை.

ராஷ்டிரகூடர்கள் ஆட்சியில் படைத்துறைக்கு ஒரு சிறப்பிடம் அளிக்கப்பட்டிருந்தது. மாநில ஆளுநர்கள், மாவட்ட அதிகாரிகள், நகர அதிகாரிகள் போன்ற பல ஆட்சித்துறை அலு வலர்கள் கூடப் படைத்தலைவர்களாக இருந்ததிலிருந்து அதன் முக்கியத்துவம் வெளிப்படும். போர் ஆர்வமும், போர் ஆற்றலும், வீரமும் மிக்கவர்களாக ராஷ்டிரகூட மக்கள் இருந்தனர். வங்காளம் போன்ற அரசுகள்கூடத் தங்கள் படை வீரர்களை

ராஷ்டிரகூட அரசிலிருந்து தேர்ந்தெடுத்துக் கொண்டன என்பதி லிருந்து இது புலப்படும். ராஷ்டிரகூடப் படைகளில் பெரும்பகுதி தலைநகரத்தில் நிறுத்தப்பட்டிருந்தது. இதுதவிர நாட்டின் சில முக்கிய பகுதிகளிலும் முக்கிய இடங்களில் படைத்தளங்கள் அமைக்கப்பட்டிருந்தன. பேரரசின் தென்பகுதியில் வனவாசி அரசப் பிரதிநிதியின் பொறுப்பில் ஒரு படையும், வடக்கில் குஜராத் கிளையைச் சேர்ந்த இளவரசர்களின் பொறுப்பில் மற்றொரு படையும் அமைக்கப்பட்டிருந்தன. இதேபோலக் கிழக்கிலும் ஒரு படைத்தளம் இருந்திருக்கவேண்டும். தெற்கில் அமைக்கப்பட்டிருந்த படைகள் தெற்கு எல்லைகளைப் பாதுகாப்ப தற்கும், கங்கர்கள், நொளம்பர்கள், பல்லவர்கள், சோழர்கள் போன்ற அரசுகளுடன் போர் புரிவதற்கும், வடக்குப் படைகள் குர்ஜரப்பிரதிஹாரர்கள் ஆக்கிரமிப்பைத் தடுப்பதற்கும், கிழக்குப் படைகள் வேங்கி எல்லைகளைப் பாதுகாப்பதற்கும் அமைக்கப்பட் டன. இதுபோலப் படைகள் பிரிக்கப்பட்டு நாட்டின் மூன்று எல்லைகளில் வைக்கப்பட்டிருந்த போதிலும் பல சமயங்களில் அவை யாவும் ஒரு குறிப்பிட்ட இடத்திற்கு அழைக்கப்பட்டு அங்குப் போர் செய்யவேண்டிய சூழ்நிலையும் ஏற்பட்டுள்ளது.

முதலாம் அமோகவருஷனின் ஆட்சியில் வனவாசிப்படைகள் அங்கிருந்து அழைக்கப்பட்டுப் பேரரசின் மத்திய வடக்குப் பகுதி களில் தோன்றிய கிளர்ச்சிகளை அடக்கப் பயன்படுத்தப்பட்டன. மூன்றும் கோவிந்தன், மூன்றும் இந்திரன், மூன்றும் கிருஷ்ணன் போன்ற அரசர்களின் வட இந்திய, தென்னிந்தியப் படை யெடுப்புகளில் எல்லாப் படைகளும் முக்கிய பங்கேற்றன. ராஷ்டிரகூடப் படையமைப்பில் வழக்கமாக இந்தியப் படைகளில் காணப்படும் ஒரு முக்கிய அங்கமான தேர்ப்படை இடம் பெற வில்லை. ராஷ்டிரகூடப் பொறிப்புகளில் தேர்ப்படை பற்றிய ஒரு குறிப்பும் இல்லை. அவர்கள் படையமைப்பில் காலாட்படை சிறப்பிடத்தைப் பெறுகிறது. குதிரைப்படையும், யானைப் படையும் போர்களில் முக்கிய பங்கேற்றன. சமகாலத்து முஸ்லிம் அறிஞர்கள் தங்கள் குறிப்புகளில் ராஷ்டிரகூடர்களின் காலாட்படை, மிக்க புகழ் பெற்றது என்று கூறுகிறார்கள். ராஷ்டிரகூடர்களின் படையில் குதிரைகளும், யானைகளும் அதிக மாக இருப்பினும், படையின் பெரும்பகுதி காலாட்படைகளைக் கொண்டதாக இருந்தது என்று அல்மசூதி குறிப்பிடுகிறார். பரம்பரையாகப் போர் செய்வதையே தங்கள் தொழிலாகக் கொண்ட போர் வீரர்கள் மட்டும் அடங்கிய சில பிரிவுகளும் அவர்கள் படையில் இருந்தன. சிற்றரசர்களாலும், மாநில ஆளுநர்களாலும் அனுப்பப்பட்ட பிரிவுகளும் இருந்தன. எல்லாச்

சமூகப் பிரிவைச் சேர்ந்தவர்களும் படைத்துறையில் பணிபுரிந் தனர். அந்தணர்களும், சமண சமயத்தினரும்கூட இத் துறையில் பணிபுரிந்தார்கள். ராஷ்டிரகூடர்களின் புகழ்பெற்ற படைத் தளபதிகளில் பங்கேயன், ஸ்ரீ விஜயன், நரசிம்மன் போன்ற வர்கள் சமணசமயத்தைச் சேர்ந்தவர்கள். சமணசமயத்தின் அஹிம்சைக் கொள்கை உலகத்தைத் துறந்த துறவிகளுக்குத்தான் பொருந்தும் என்றும், தங்களைப் போன்றவர்களுக்கு அல்ல என் றும் அவர்கள் நினைத்தனர் போலும். கனரம்மா, (Ganaramma) ரேவதாசதீட்சிதன், தட்சதத்தன் ஆகியோர் ராஷ்டிரகூடர் களின் அந்தணப் படைத்தளபதிகளில் குறிப்பிடத்தக்கவர்கள். ராஷ்டிரகூடப் படைகள் போர்க்கலையில் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தன. நல்ல தேர்ச்சியும் அனுபவமும் பெற்றவர்கள் படைவீரர்களுக்குப் பயிற்சி அளிக்க நியமிக்கப்பட்டனர். போர்த் துறையில் பணியாற்றியவர்களுக்கு அரசாங்கம் நேரிடையாக ஊதியம் அளித்தது. போரில் கொல்லப்பட்டவர்களின் குடும்பங் களுக்கு ஓய்வு ஊதியங்கள் அளிக்கப்பட்டன. செல்வம் மிக்க வணிகர்கள் உதவியுடனும், ஒத்துழைப்புடனும் படைத் துறைக்குத் தேவைப்பட்ட உணவுப் பொருள்களை அரசு பெற்றது. இதுபோலப் படைத்துறையின் உணவுப்பொருள் தேவையைப் பூர்த்தி செய்த மூன்றும் கிருஷ்ணன் ஆட்சியைச் சேர்ந்த ஒரு வணிகனைப்பற்றிய குறிப்பு ராஷ்டிரகூடப் பொறிப்பு ஒன்றில் காணப்படுகிறது.

சமையற்காரர்கள், சலவையாளர்கள் போன்ற பல வகைப்பட்ட பணியாளர்களும் படைவீரர்களைத் தொடர்ந்து சென்றனர். அரசனுடைய பெண் உறவினர்களும் போர்க்களத் துக்கு அரசனுடன் சென்றனர். போரில் கோட்டைகளின் இன்றியமையாமையைச் சாளுக்கியர்களும், ராஷ்டிரகூடர்களும் நன்கு உணர்ந்திருந்தனர். அவர்களுடைய நாட்டின் இயற்கை யமைப்பு கோட்டைகள் அமைப்பதற்கு ஏற்றவகையில் அமைந் திருந்ததால், சாளுக்கியர்களும் ராஷ்டிரகூடர்களும் ஏராளமான கோட்டைகளை நிர்மாணித்திருக்கவேண்டும். பண்டைக்காலத்தில் பின்பற்றப்பட்டு வந்த போர்க்கால விதிமுறைகளும், ஒழுக்க நெறிகளும் இப்பொழுது புறக்கணிக்கப்பட்டன. போரில் நேரிடையாக ஈடுபட்டவர்கள்தாம் போர்புரிய வேண்டுமென்ற நியதி மறைந்து, போருடன் தொடர்பில்லாதவர்கள் கூடப் பல இன்னல்களுக்கு உள்ளாக்கப்பட்டார்கள். கிராமங்களும், நகரங் களும் அழிவுக்குள்ளாயின. மக்களின் செல்வம் சூறையாடப் பட்டது. போர்க்களத்தில் நியாயம், நேர்மை போன்ற பண்புகள் மதிப்பிழந்தன.

# 2. சமூக, பொருளாதார நிலை

இந்தக் காலப்பகுதியில் தக்காணத்தில் சமுதாயம், பரம்பரை யாக இந்தியச் சமுதாயம் இயங்கிவந்த அடிப்படையில் இயங்கியது. அதாவது சாதிமுறை, சமூக அமைப்பின் ஒரு கூறாக இருந்தது. சாதிப் பிரிவினைகளை வெறுத்த பௌத்தர்களும், சமணர்களும் கூட நாளடைவில் இம் முறையின் செல்வாக்கிற்குட் பட்டார்கள். அக் காலத்து இலக்கியங்களிலிருந்தும் முஸ்லிம் எழுத்தாளர்களின் குறிப்புகளிலிருந்தும் சாதிமுறை பற்றிய பல செய்திகளை நாம் அறிய முடிகின்றது. வழக்கமாகக் காணப்படும் நான்கு சாதிகளைத் தவிர, பல புதிய சமூகப் பிரிவுகள் இக் காலப் பகுதியில் தோன்றின. சமூக அமைப்பில் பிராம்மணர்கள் உயர்ந்த இடத்தைப் பெற்றிருந்தனர். அறிவிற் சிறந்தவர்களா கவும், பண்பாளர்களாகவும் அவர்கள் கருதப்பட்டுச் சமூகத்தினால் பெரிதும் மதிக்கப்பட்டார்கள். அவர்களுள் ஒரு சாரார், அவர் களுக்கே உரித்தான வேதங்களை ஓதுதல், கற்பித்தல், சமயச் சடங்குகளைச் செய்தல், ஹிந்து தத்துவ உண்மைகளைப் போதித்தல் போன்ற பரம்பரைத் தொழில்களைச் செய்துவந்தனர். அரசர் களும், பிரபுக்களும் அவர்களுடைய அறிவாற்றலைப் போற்றி அவர்களுக்கு நிலம், பணம் முதலியவற்றை நன்கொடையாக வழங்கினர். அறிவைப் பெறுவதற்கும், அறிவை வளர்ப்பதற்கும் தங்கள் வாழ்நாளை முழுமையாக அர்ப்பணித்துக் கொண்டவர் களும், சமூக நலனைப்பற்றிய எல்லாப் பிரச்சினைகளையும் விருப்பு வெறுப்பின்றிச் சிந்திக்கும் ஆற்றல் பெற்றவர்களும், ஒவ்வொரு கிராமத்திலும், நகரத்திலும் நல்லொழுக்க, சமய நெறிகளின் அடிப்படையில் வாழ்க்கை முறைகளை அமைத்துக்கொண்டு மற்றவர்களுக்கு எடுத்துக்காட்டாக விளங்கியவர்களுமாகிய பிராம்மணர்களின் நலனில் அரசர்களும், பிரபுக்களும், வணிகர் களும் அக்கறை காட்டினார்கள் என்பது அக் காலத்து நூற்றுக் கணக்கான பொறிப்புகளிலிருந்து நாம் அறியலாம். சிலர் ஆட்சித் துறையிலும், படைத்துறையிலும் பணி புரிந்தனர். அரசியல், சமய இலக்கியங்களில் அவர்கள் பெற்றிருந்த ஆழ்ந்த அறிவை அரசர்கள் பயன்படுத்திக்கொண்டு அவர்களுக்கு அரசாங்கத்தில் முக்கிய பதவிகள் அளித்தனர். போர் புரிவது க்ஷத்திரியர் களுடைய தொழிலாக இருப்பினும், இக் காலப்பகுதியில்

தக்காணத்தில் பிராம்மணர்கள் படைத்தளபதிகளாகப் பணிபுரிந் தார்கள் என்பதைச் சாளுக்கிய, ராஷ்டிரகூட வரலாறு மூலம் நாம் அறிகிறோம். பிராம்மணர்கள் பலர் அமைச்சர்களாகவும், அரசனின் ஆலோசகர்களாகவும், நிர்வாக அதிகாரிகளாகவும் பணிபுரிந்தனர். இவர்கள் யாவரும் சட்டம், இலக்கியம், வான சாஸ்த்திரம் போன்ற துறைகளில் நல்ல தேர்ச்சி பெற்றிருந் தார்கள். பிராம்மணர்களில் சிலர் கல்வி கற்பிக்கும் பணியில் ஈடுபடுத்திக்கொண்டனர். பள்ளிகள், கல்லூரிகள் போன்ற தங்களை கல்விக்கூடங்களை இவர்கள் நிறுவி அரசிடமிருந்தும், செல் வர்களிடமிருந்தும் பண உதவியைப் பெற்றனர். அல் இத்ரிஸி **(Al Idrisi)**, ஆல்பிருனி **(Alberuni)**, அபு ஸையிது **(Abu zaid)** போன்ற முஸ்லிம் அறிஞர்களின் குறிப்புகளிலிருந்து நாம் மேற் கண்ட விவரங்களை அறிகிறோம். அக் காலத்துச் சாளுக்கிய ராஷ்டிரகூடப் பொறிப்புகள் கூறும் செய்திகளும் இவற்றை உறுதிபடுத்தும் வகையில் அமைந்துள்ளன. வரிகளிலிருந்து விலக்கும், மரணதண்டனையிலிருந்து விலக்கும் அவர்கள் பெற் றிருந்த இரண்டு சிறப்புரிமைகளாகும். எல்லாப் பிராம்மணர் களுக்கும் வரி விலக்கு அளிக்கப்பட்டிருந்ததா என்பது ஐயப்பாட் டிற்குரிய விஷயமாகும். ஏனெனில், கோயில்களுக்கு அளிக்கப் பட்ட நிலங்கள் கூட முழுவதும் வரிகளிலிருந்து விலக்கு பெற வில்லை என்பதை நோக்கும்பொழுது பிராம்மணர்களுக்கு அளிக் கப்பட்ட நிலங்கள் வரியிலிருந்து விலக்கு பெற்றன என்று கருது வது பொருந்தாது. பொதுவாகப் பிராம்மணர்கள் எல்லாரும் வரி விலக்கு பெற்றனர் என்று கருதுவதற்குப் போதுமான ஆதாரம் இக் காலத்துப் பொறிப்புகளில் காணப்படவில்லை.

சமூகத்தின் நான்கு சாதிப் பிரிவுகளைச் சேர்ந்தவர்கள் அவர் களுக்கு வரையறுக்கப்பட்ட தொழில்களை விட்டுப் புதுத் தொழில் களில் ஈடுபட்டனர் என்பதற்கு இக் காலப் பகுதியில் சான்றுகள் உள்ளன. பிராம்மணர்கள் பலர் போர்த்தொழிலை மேற்கொண் டனர் என்பதை முன்பே பார்த்தோம். அதேபோல விவசாயம், வாணிகம் போன்ற துறைகளிலும் பிராம்மணர்கள் ஈடுபட் டிருந்ததை இக் காலப் பகுதியில் காணமுடிகின்றது. சமூக அமைப்பில் பிராம்மணர்களுக்கு அடுத்த நிலையில் இருந்தவர்கள் க்ஷத்திரியர்கள். அவர்களும் பிராம்மணர்கள் பெற்றிருந்த பல சிறப்புரிமைகளைப் பெற்றிருந்தார்கள். நாட்டை ஆளும் பொறுப்பு இந்த வகுப்பினர்களிடம் இருந்தது. நாடாளும் அரசர்களைக் கொண்ட இந்தப் பிரிவினர் 'சத்க்ஷத்திரியர்கள்' என்றழைக்கப்பட்டனர். அவர்கள் சாதாரண க்ஷத்திரியர்களை விட ஒருபடி உயர்ந்தவர்களாகவே கருதப்பட்டனர். சூத்ரிய

குலத்தைச் சேர்ந்தவர்களென்றும், சந்திர குலத்தைச் சேர்ந்தவர்களென்றும் இவர்களில் இரு பிரிவினர் இருந்தனர். போர் செய்வது இவர்கள் முக்கிய தொழில் ஆனுலும், எல்லா க்ஷத்திரியர்களும் இத் தொழிலை மேற்கொள்ளவில்லை. க்ஷத்திரியர்கள் அல்லாதார் பலரும் இத் தொழிலில் ஈடுபட்டனர். சில க்ஷத்திரியர்கள் வணிகத் தொழிலையும் மேற்கொண்டார்கள். வேதங்கள் ஓதுதல் பிராம்மணர்களுக்கே உரித்தான தொழிலாயினும், க்ஷத்திரியர்களும் இதற்கு அனுமதிக்கப்பட்டார்கள். வைஸ்யர்கள் என்ற மூன்ருவது பிரிவினர் பொதுவாக வணிகத் தொழிலில் ஈடுபட்டவர்கள். அவர்கள் சமூகத்தில் முன்பு பெற்றிருந்த உயர்ந்த நிலையை இப்பொழுது பெற்றிருக்கவில்லை. அவர்கள் சூத்திரர்களாகக் கருதப்பட்டனர். அவர்கள் வேதங்கள் ஓதுவதற்குத் தகுதியற்றவர்களாகக் கருதப்பட்டார்கள். அவர்களில் சிலர் போர்த்தொழிலைக் கூட மேற்கொண்டார்கள்.

தக்காணத்தில் இக் காலப்பகுதியில் காணப்பட்ட சில வணிகச் சங்கங்கள் தங்களுக்கென்று தனிப்படைகளை வைத்துக்கொண்டிருந்தன என்பதிலிருந்து அவர்கள் போர்த் தொழிலில் ஈடுபட்டார்கள் என்பது விளங்கும். வேங்கி நாட்டில் அவர்கள் கோமுட்டிகள் என்றழைக்கப்பட்டனர். பெனுகொண்டா என்னும் நகரம் அவர்களின் முக்கிய இடமாக விளங்கியது. அவர்கள் செல்வர்களாக விளங்கினுர்கள். கோயில்களுக்கும், சமய, அறப் பணிகளுக்கும் அவர்கள் வழங்கிய மானியங்களும், நன்கொடைகளும் குறிப்பிடத்தக்கவை. இந்தச் சமூகப் பிரிவினர் தங்களுக்கென 'நகரங்கள்' என்ற சங்கங்களை (guilds) அமைத்துக்கொண்டு தங்கள் வாழ்க்கையிலும், தொழிலிலும் மிக்க கட்டுப்பாட்டுடன் நடந்துகொண்டார்கள். போதிய படை வலிமையும், ஆற்றலும் அறிவும் பெற்றிருந்ததால் இப் பிரிவைச் சேர்ந்த ஒருவன் நாட்டின் ஒரு சிறு பகுதியின் தலைவனுகவோ, சிற்றரசனுகவோ ஆவதற்கு ஏராளமான வாய்ப்புகள் இருந்தன. இதுபோன்ற 'நகரங்கள்' என்னும் வைஸ்யர்களுடைய சங்கங்கள் கர்நாடகப் பகுதியிலும் இருந்தன என்பதைப் பொறிப்புகள் மூலம் அறிகின்ருேம். சூத்திரர்களுடைய நிலைமையில் இக் காலப் பகுதியில் சிறிது முன்னேற்றம் ஏற்பட்டது. இருப்பினும், அவர்கள் வேதங்களை ஓதுவதற்குத் தகுதியற்றவர்கள். சில குறிப்பிட்ட சடங்குகள் மட்டும் செய்ய அவர்கள் அனுமதிக்கப்பட்டனர். சமூகத்தில் பெருவாரியானவர்கள் இப் பிரிவைச் சேர்ந்தவர்கள். பயிர்த் தொழில், ஆடு, மாடு வளர்த்தல், சிறு கைத்தொழில்கள் செய்தல் போன்றவை இவர்களுடைய முக்கிய தொழில்கள். இவர்களில் பலர் போர்த்துறையில் பணியாற்றினுர்கள். இப் பணியின்மூலம்

அரசனின் அன்பையும், ஆதரவையும் பெற்று, இவர்களில் பலர் சமூகத்தில் உயர் அந்தஸ்த்தையும், அரசாங்கத்தில் உயர் பதவிகளையும் பெற்றனர். அரச பதவியை இவர்கள் பெறுவதில் கூடத் தடை ஏதுமிருக்கவில்லை என்பது யுவான் சுவாங்கின் குறிப்புகளிலிருந்து விளங்கும். வெவ்வேறு பழக்க வழக்கங்களைக் கொண்ட பல்வேறு உட்பிரிவுகளைக் கொண்டதாக இருந்தது இந்தச் சமூகப் பிரிவு. காலணி செய்பவர்கள், மூங்கில் தொழிலாளர், மீன் பிடிப்போர். சலவைத் தொழிலாளர் போன்றோர் தீண்டப்படாதவர்களுக்குச் சமமானவர்களாகக் கருதப்பட்டனர். துப்புரவாளர், சண்டாளர்கள் போன்றோர் தீண்டத்தகாதவர்களாகக் கருதப்பட்டனர்.

இவ்வாறு சாதிமுறையின் அடிப்படையில் இயங்கிய சமுதாய அமைப்பு மக்கள் எல்லாராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டது மன்றி, அந்த அமைப்பைப் பாதுகாப்பது அரசனின் தலையாய கடமையாகக் கருதப்பட்டது. உணவு, திருமணம், பழக்க வழக்கங்கள் போன்றவற்றில் இந்தப் பிரிவுகளிடையே பல வேறுபாடுகள் காணப்பட்ட போதிலும், கோயில்களை நிர்வகித்தல். நில உரிமை, பாசன வசதிகள் பற்றிய உரிமைகளை ஒழுங்கு படுத்துதல் போன்ற பொதுக் காரியங்களில் அப் பிரிவைச் சேர்ந்தவர்கள் ஒன்றிணைந்து செயல்பட்டனர். வெவ்வேறு சாதியைச் சேர்ந்தவர்கள் திருமணம் செய்து கொள்ளும் பழக்கமும், ஒன்றாகச் சேர்ந்து உணவு உண்ணும் பழக்கமும் இக் காலப் பகுதியில் வழக்கிலிருந்ததாகத் தெரியவில்லை. பெண்களுக்கு இளம் வயதிலேயே திருமணம் செய்து வைக்கும் பழக்கம் நிலவியது. பதினாறு வயது நிரம்புவதற்கு முன்பே ஆண்களும், பன்னிரண்டு வயது நிரம்புவதற்கு முன்பே பெண்களும் திருமணம் செய்து கொண்டனர். பெற்றோர்கள் பார்த்து மணமகளைத் தேர்ந்தெடுக்கும் பழக்கம் இருந்தது. விதவைகள் திருமணம் புரிந்து கொள்ளும் பழக்கம் வழக்கொழிந்துவிட்டது. ஆனால் கணவனின் சொத்தைப் பெறுவதில் விதவைக்கு உரிமை உண்டு என்னும் கருத்து ஏற்றுக் கொள்ளப்பட்டது. 'பர்தா' என்னும் பெண்கள் முகத்தை மூடிக் கொள்ளும் முறை இக் காலப் பகுதியில் வழக்கிலிருக்கவில்லை. இறந்துவிட்ட கணவனுடன் மனைவியும் உடன் கட்டை ஏறும் 'சதி' என்ற பழக்கம் சமூகத்தில் காணப்படவில்லை. தகப்பனுடைய சொத்தில் மகளுக்கும் பங்கு உண்டு என்ற கருத்து ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்தது. தாய் வழி மாமனுடைய மகளை மணந்து கொள்ளும் முறை பின்பற்றப்பட்டு வந்தது என்பது ராஷ்டிரகூட அரசர்கள் சிலர் செய்துகொண்ட திருமணங்களிலிருந்து தெரிகிறது. ஒரு கணவனுக்குப் பல மனைவியர்கள்

என்ற முறை இக் காலத்தில் பின்பற்றப்பட்டது. குறிப்பாக அரச குடும்பத்தினரிடையே இப் பழக்கம் அதிகமாகக் காணப் பட்டது. சாளுக்கிய, ராஷ்டிரகூட அரசர்கள் பலருக்கு ஒன்றுக்கும் மேலான மனைவியர்கள் இருந்தனர். பிரபுக்கள் குடும்பத்தினரும், செல்வர்களும் அரசனின் உதாரணத்தைப் பின்பற்றினர்கள். காமக்கிழத்தியர்களை வைத்துக் கொள்ளும் பழக்கமும் வழக்கிலிருந்தது. செல்வர்களுக்கும் சிற்றரசர் களுக்கும் காமக் கிழத்தியர்களாக இருந்த பெண்கள் கோயில் களுக்கு நன்கொடைகள் அளித்திருக்கும் செய்தியை நாம் கீழைச் சாளுக்கியச் சாஸனங்கள் மூலம் அறிகிறோம் இக் காலப் பகுதியில் தக்காணத்தில் எண்ணற்ற அவை அணங்குகள் (Courtesans) (பரத்தையர்கள்) இருந்தனர். இவர்களுக்கும் அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்களுக்கும் நெருங்கிய தொடர்பு இருந்தது. சில அரசர்கள் இத்தகைய அணங்குகளைத் திருமணம்கூடச் செய்து கொண்டார்கள். அப் பரத்தையர்களில் பலர் கோயில் பணிக் காகத் தங்களை அர்ப்பணித்துக் கொண்டார்கள். அவர்கள் இசை, நாட்டியம் போன்ற கலைகளில் நல்ல தேர்ச்சி பெற்று, அவற்றின் மூலமும், நகைச்சுவையுடன் அளவளாவுவதின் மூலமும், ஆண்களை இன்பம் பெறச் செய்தனர். அவர்கள் பொதுவாகச் சமயப் பற்று மிக்கவர்கள் மட்டுமின்றி அவர்களில் பலர் கோயில்களுக்கும் அறநிலையங்களுக்கும் நன்கொடைகளை யும், மானியங்களையும் வழங்கியுள்ளனர். இக் காலப் பகுதியில் தக்காணத்தில் ஆண்கள் இடுப்பைச் சுற்றி ஒரு துணியையும், இடுப்பிற்குமேல் உடற்பகுதியை மூட மற்றொரு துணியையும் உபயோகித்தனர். இன்று நாம் அணிந்து கொள்ளும் தைக்கப் பட்ட சட்டை போன்ற உடுப்புகளை அவர்கள் அணியவில்லை. ஆண்கள் தலைப்பாகை அணியும் பழக்கம் இருந்தது. பெண்கள் பாவடைகள் போன்ற தைக்கப்பட்ட உடுப்புகளை அணிந்தனர். ஆண்கள் தாடி வளர்க்கும் பழக்கம் பரவலாகக் காணப்பட்டது. இசை, நடனம் போன்ற கேளிக்கைகளையும், வேட்டையாடுதல், மிருகங்கள் சண்டை போன்ற பொழுது போக்குகளையும் அவர்கள் அறிந்திருந்தனர். ராஷ்டிரகூட அரசன் மூன்றும் கோவிந்தன் கி.பி. 804-ல் காஞ்சிபுரத்தைக் கைப்பற்றிய பிறகு துங்கபத்திரை ஆற்றங்கரையில் பன்றி வேட்டையில் பங்கு கொண்டான். குதிரை மீது உட்கார்ந்து கொண்டு ஒரு பந்தை அடித்து விளையாடும் (இன்றைய 'போலோ') விளையாட்டு நான்காம் இந்திரனுக்கு மிகப் பிடித்த பொழுதுபோக்கு ஆகும். இரண்டாம் புலிகேசியின் ஆட்சியில் மேலைச் சாளுக்கிய நாட்டிற்கு வந்த யுவான் சுவாங் என்னும் சீனப் பயணியின் பயணக் குறிப்புகளி லிருந்து தக்காண மக்களைப் பற்றிய சில செய்திகளை நாம்

அறிகிறோம். சாளுக்கிய நாட்டை, அவர் மொ-ஹொ-லா-சா (Moho-la-cha) என்றழைக்கின்றார். அந் நாட்டு மக்களைப் பற்றிக் கூறும் பொழுது, உருவத்தில் உயரமாயிருந்த அந் நாட்டு மக்கள், எளிமை, நேர்மை போன்ற பண்புகளைப் பெற்றிருந்தனர். அவர்களிடம் பழிவாங்கும் தன்மையும் காணப்பட்டது. கல்வி யறிவு பெறுவதில் அம் மக்கள் ஆர்வம் காட்டினர். தங்களுக்கு உதவி செய்தவர்களுக்குக் கடப்பாடு உடையவர்களாகவும் பகைவர்களிடம் ஈவிரக்கம் இல்லாதவர்களாகவும் அவர்கள் இருந்தனர். இன்னலுற்றவர்களுக்கு உதவி செய்யத் தயங்காத அம் மக்கள், தங்களை அவமதித்தவர்களைப் பழிவாங்குவதில் தங்கள் உயிரையே பணயம் வைக்கவும் தயங்கமாட்டார்கள். தப்பித்துச் செல்ல முயன்ற பகைவர்களைத் துரத்திச் செல்வார்கள். ஆனால் சரணடைந்து விட்ட ஒருவனுக்கு எந்தத் தீங்கும் இழைக்கமாட்டார்கள் என்று அந் நாட்டு மக்களின் பண்புகளைப் பற்றிக் குறிப்பிடுகின்றார். இதே சமயத்தில் கீழைச் சாளுக்கியர்கள் ஆண்டு கொண்டிருந்த வேங்கிப் பகுதிக்கும் யுவான்சுவாங் வந்தார். ஆந்திர நாட்டு மக்களைப் பற்றிக் கூறும் பொழுது அவர்கள் கோபாவேசம் மிக்கவர்களென்றும், கறுப்பு நிறமானவர்கள் என்றும், கலைகளில் ஆர்வம் மிக்கவர்கள் என்றும் கூறுகிறார். விவசாயம், கனிப் பொருள்கள் வியாபாரம் ஆகியவை நாட்டின் செல்வ வளத்திற்குக் காரணமாக இருந்தன. குஜராத் பகுதியில் பஞ்சும், மஹாராஷ்டிர, கர்நாடகப் பகுதிகளில் சோளம், மக்காச் சோளம் போன்ற தானியங்களும், நெல், தேங்காய், பாக்கு போன்ற பொருள்கள் கொங்கணப் பகுதியிலும் ஏராளமாக விளைந்தன. ராஷ்டிரகூடப் பேரரசின் சில பகுதிகளில் சந்தனம், தேக்கு, கருங்காலி போன்ற விலையுயர்ந்த மரங்களும் பயிர் செய்யப்பட்டன. மேற்கு ஆசியா நாடுகளுடன் நடந்துகொண்டிருந்த வியாபாரத்தில் இப் பொருள்கள்தான் இந்தியாவின் முக்கிய ஏற்றுமதிப் பொருள்களாகும். நன்செய் நிலம், புன்செய் நிலம், பூந்தோட்டம், பழத்தோட்டம், காடுகள் போன்றவை வெவ்வேறு வகை நிலங்கள் என்ற வேறுபாடு வரிவிதிப்பின் பொருட்டு வலியுறுத்தப்பட்டது. நன்செய், புன்செய், தோட்டம் போன்ற நிலங்களைத் தவிர கறுப்புமண் நிலம், செம்மண்நிலம் என்ற இரண்டு வகை நிலங்களைப் பற்றிய சாளுக்கியப் பொறிப்புகள் கூறுகின்றன. உணவுத் தானியங்கள், பயறு வகைகள் தவிர, பருத்தி, கரும்பு போன்ற பயிர் வகைகளும், காய்கறிகளும், பூக்களும் ஏராளமாகப் பயிர்செய்யப்பட்டன. கால்நடை வளர்த்தல், பால்பண்ணை போன்ற மற்றத் தொழில்களையும் மக்கள் மேற்கொண்டார்கள். கடப்பை, பெல்லாரி, பீஜபூர், தார்வார் பகுதிகளில் செப்புச் சுரங்கங்கள் இருந்ததால்

தக்காணத்தில் செப்பு உற்பத்தி செய்யப்பட்டது. கோல் கொண்டாப் பகுதிகளில் விலையுயர்ந்த கற்கள் சுரங்கங்களிலிருந்து வெட்டி எடுக்கப்பட்டன. எனவே மான்யகேடம் போன்ற பகுதிகளில் விலையுயர்ந்த ஆபரணங்கள் செய்யப்பட்டு அந் நகரம் நகை வியாபாரத்தின் மையமாக விளங்கியது. ராஷ்டிரகூடப் பேரரசின் குஜராத், பீரார், தெலிங்கானு பகுதியில் துணி நெய்தல் மக்களின் முக்கிய தொழிலாகும். துணிகளில் நேர்த்தியான ரகங்கள் வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப் பட்டன. நூல்நூற்றல், துணிநெய்தல் ஆகிய தொழில்களில் ஏராளமானவர்கள் ஈடுபட்டிருந்தார்கள். நெசவாளர் சங்கங்கள் வளம் பொருந்திய அமைப்புகளாக இருந்தது மட்டுமன்றிச் சமூகத்தின் பொதுப் பணிகளில் அவை முக்கிய பங்கேற்றன. போர்க்கருவிகள் உற்பத்தி செய்வது ஒரு முக்கிய தொழிலாக வளர்ந்தது. உப்பு உற்பத்தி செய்வது அரசாங்கத்தின் ஏகபோக உரிமையாகக் கருதப்பட்டது. குஜராத்தின் தென்பகுதியிலும், மகாராஷ்டிரத்தின் வடபகுதியிலும் தோல்பதனிடும் தொழில் வளர்ச்சி பெற்றது. ஒவ்வொரு தொழிலிலும் ஈடுபட்டிருந்தவர்கள் தங்கள் பொதுநலனைப் பாதுகாத்துக் கொள்ளவும், பொதுத் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளவும் குழுக்களை (guilds) அமைத்துக் கொண்டிருந்தார்கள். கட்டடக் கலைஞர்கள், சிற்பிகள் ஓவியர்கள் போன்ற கலைஞர்கள் கூடத் தங்களுக்கென்று தொழிற் குழுக்களை அமைத்துக் கொண்டிருந்தனர். அன்றைய பொரு ளாதார அமைப்பில் தொழிலாளர்கள், ஒன்றிணைந்த ஒரு நிறுவன ரீதியில் இயங்கினர்களேயன்றித், தனிப்பட்ட ஒரு தொழி லாளிக்கோ, வணிகனுக்கோ எந்த முக்கியத்துவமும் அளிக்கப்பட வில்லை. ஆனால் மேலைச் சாளுக்கியர் ஆட்சியில் ஒரே ஒரு விதி விலக்கைக் காண்கிறோம். பட்டடக்கல் லோகேஸ்வரர் கோயிலைக் கட்டிய ஸ்ரீகுண்டன் அனிவாரிதசாரி (Sri Gundan Anivari-tachari).[1] என்ற கட்டடக் கலைஞன் மட்டும் தனிப்பட்ட முறையில், பல சலுகைகளைச் சாளுக்கிய அரசர்களிடமிருந்து பெற்றான்.

இக் காலப் பகுதியில் தக்காண மக்கள் வியாபாரத் துறையில் முன்னணியில் இருந்தனர். உள்நாட்டு வியாபாரமும் வெளி நாட்டு வியாபாரமும் பெருமளவில் நடந்தன. உள்நாட்டு வியாபாரம் நாட்டின் சாலைகள் மூலம் நடந்தது, கால்வாய்கள்

[1] அந்தக் கோயில் சுவர்களை அலங்கரிக்கும் ராமாயண நிகழ்ச்சிகளைச் சித்திரிக்கும் ஏராளமான சிற்பங்களை உருவாக்கியவன் இந்தக் கலைஞன் ஆவான். நகரங்களை அமைப்பதிலும், அரண்மனைகளை நிர்மாணிப்பதிலும், சிம்மாசனங்கள், செய்வதிலும் இவன் கைதேர்ந்தவன். 'தெங்கண திசைய சூத்ரதாரி' (architect of the South) என்று இவன் அழைக்கப்பட்டான்.

போன்ற நீர்வழிகள் வியாபாரத்திற்காகப் பயன்பட்டதாகத் தெரியவில்லை. சாலைகளைப் பராமரிப்பதும், பழுதுபார்ப்பதும் தல அரசாங்கங்களின் முக்கிய பொறுப்புகளில் ஒன்று. சாலை அமைப்பது, பழுதுபார்ப்பது போன்ற பணிகளில் கிராம மக்கள் ஊதியமில்லாமல் உழைப்பைத் தரவேண்டுமென்று எதிர்பார்க்கப் பட்டது. மாட்டு வண்டிகளும், பொதி சுமக்கும் மிருகங்களும் பொருள்களை ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு எடுத்துச் செல்லப் பயன்படுத்தப்பட்டன. பாரசீகம், அரேபியா, சீனு, மலேயா போன்ற நாடுகளுடன் தக்காண மக்கள் வியாபாரத் தொடர்பு கொண்டிருந்தனர். பைதன், டகாரா, புரோச் போன்ற துறைமுகப்பட்டினங்கள் இந்த வியாபாரத்தில் ஈடுபட்டிருந்த முக்கிய நகரங்களாகும்.

தொழிலாளர்கள் குழுக்களை அமைத்துக் கொண்டதைப் போல வியாபாரிகளும் தங்களுக்கென்று சங்கங்களை அமைத்துக் கொண்டனர். கி. பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்து தக்காணத்தில் இந்த வியாபாரச் சங்கங்கள் மக்களின் பொருளாதார வாழ்க்கையில் ஓர் இன்றியமையாத இடத்தைப் பெற்றன. தக்காணத்திலும், தென்னிந்தியாவிலும், மணிக்கிராமம், அய்யவோல், ஐந்நூற்றுவர், நானுதேசிகன் போன்ற பல வியாபாரச் சங்கங்கள் இயங்கிக்கொண்டிருந்தன என்பதைக் கி.பி. எட்டாம் நூற்றாண்டு முதல், பொறிப்புகள் அடிக்கடி குறிப்பிடுகின்றன. இவற்றுள் மணிக்கிராமம், அய்யவோல் என்னும் சங்கங்கள் சிறப்பிடத்தைப் பெறுகின்றன.

நாம் ஆராய்ந்து கொண்டிருக்கும் தக்காண வரலாற்றுடன் நெருங்கிய தொடர்புள்ள அய்யவோல் வியாபாரச் சங்கத்தைப் பற்றி ஒரு சில செய்திகளை இங்குக் கூறுவது பொருத்தமுடையதாகும். மேலைச் சாளுக்கிய அரசிலுள்ள அய்ஹோள் நகரம் இவ் வியாபாரச் சங்கத்தின் தலைமையிடமாகும். அதன் உறுப்பினர்கள் 'அய்யவேல்புர பரமேஸ்வரீய மக்கள்' என்றழைக்கப் பட்டனர். உள்நாட்டு வியாபாரிகளும், வெளிநாட்டு வியாபாரிகளும் பல்வேறு நாடுகளைச் சேர்ந்த வியாபாரிகளும் இதன் உறுப்பினர்களாக இருந்தார்கள் அவர்கள் முறையே சுதேசி, பரதேசி, நானுதேசி வியாபாரிகள் என்றழைக்கப் பட்டனர். இந்த வியாபாரச் சங்கம் 'ஐந்நூற்றுவர்' என்றும் 'அய்யவோல் (அய்ஹோள்) புரத்து ஐந்நூறு ஸ்வாமிகள்' என்றும் சில சமயங்களில் அழைக்கப்பட்டனர். அந்தக் காலத்து அரசர்களைப் போல அவர்களும் தங்கள் மரபுகளையும், சாதனைகளையும் பொதுமக்களுக்கு அறிவித்துக் கொண்டார்கள். வீர வியாபாரிகளின் அறத்தைக் (Veera Bananju Dharma) காப்பது

அவர்களுடைய கடமையாகக் கருதப்பட்டது. அவர்களுடைய அறம் என்பது அவர்களுடைய தலைவர்களின் ஐந்நூறு ஆணைகளில் (Vira sasanas) அடங்கியிருந்தது. எருதுச் சின்னம் தாங்கிய ஒரு தனிக் கொடியை அவர்கள் பயன்படுத்தினர். ஐந்நூறு உறுப்பினர்களைக் கொண்ட இயக்குநர் குழு ஒன்று இந்த வியாபாரச் சங்கத்தின் அலுவல்களைக் கவனித்து வந்தது.

கவரா, கட்ரிகா, செட்டி, செட்டிகுட்டா போன்ற பல்வேறு வணிகப் பிரிவினர் இச்சங்கங்களின் உறுப்பினர்களாக இருந்தனர். அவர்கள் சேர, சோழ, பாண்டிய, மகத, கோசல, சௌராஷ்டிர, காம்போஜ, பாரசீக, நேபாள நாடுகளுடன் வியாபாரத் தொடர்புகள் கொண்டிருந்தனர். முத்து, வைரம், மரகதம் போன்ற விலையுயர்ந்த கற்கள், ஏலம், இலவங்கம், சந்தனம், கற்பூரம், குங்குமப்பூ போன்ற வாசனைத் திரவியங்கள், யானைகள், மிளகு, மஞ்சள், பாக்கு, பயறு வகைகள், நெல், பருத்தி, பருத்தி ஆடைகள், பட்டு ஆடைகள் போன்ற பொருள்களில் அவர்கள் வியாபாரம் செய்தனர். அவர்களுடைய வியாபாரச் சங்கங்கள் விஜயநகரம், ஹஸ்திணுவதி, துவார சமுத்திரம், குத்தி, பெனுகொண்டா, அதோனி, உதயகிரி, சந்திரகிரி, காஞ்சி, மங்களூர், ஹொணுவர், அன்னிகேரி, ஹூலிகேரி போன்ற இடங்களில் இயங்கிக் கொண்டிருந்தன என்பது பொறிப்புகள் மூலம் தெரியவருகிறது.

சயாம், சுமத்ரா, பர்மா, இலங்கை போன்ற நாடுகளிலும் இச்சங்கங்கள் இயங்கிவந்தன. இந்த வியாபாரிகள் அரசாங்கத்திற்குச் செலுத்தவேண்டிய சுங்கவரிகளை ஒழுங்காகச் செலுத்தியதன் மூலம் அரசாங்கத்தின் வருவாய் பெருக உதவின. இச்சங்கங்கள் அவற்றின் உறுப்பினர்களின் நலனுக்கான பணிகள் மட்டுமன்றிச் சமூக நலத்திற்கான பல பணிகளை மேற்கொண்டனர். கோயில்கள், குளங்கள் முதலியவற்றைப் பராமரித்தல், பழுது பார்த்தல், அறப்பணிகளுக்கு மானியங்கள் வழங்குதல் போன்றவை அவர்களுடைய அறச்செயல்களாகும். ஒவ்வோர் ஆண்டும் உறுப்பினர்கள் இவ்வறப்பணிகளுக்காக ஒரு குறிப்பிட்ட தொகையைக் கொடுத்தனர்; அல்லது ஒவ்வொரு சங்கமும் தனக்கு வியாபாரத்தில் கிடைத்த இலாபத்தின் ஒரு பகுதியை இதுபோன்ற அறப்பணிக்குச் செலவு செய்வதற்காக ஒதுக்கி வைத்தது.

ஒவ்வொரு வியாபாரச் சங்கத்திற்கும் ஒரு தலைவன் இருந்தான். அவன் பட்டணஸ்வாமி, பட்டணக்கிழார், தண்டநாயகா, பட்டலியவஹாரி போன்ற பெயர்களால் அழைக்கப்பட்டான்.

அவனைத் தவிர மணிகாரா, ஹெக்கடே, ஸ்வாமி, பிரபு போன்ற வேறு சில அதிகாரிகளும் இருந்தனர். உறுப்பினர்களிடையே ஒற்றுமை உணர்வு மேலோங்கியிருந்தது. தங்களுடைய வருவாய் பற்றிய உண்மையான விவரங்களைச் சங்கத்தினிடம் கூறாமல் மறைத்தவர்கள் நாட்டுத் துரோகிகளாகக் கருதப்பட்டார்கள். தல நிர்வாகத்தில் இச் சங்கங்கள் நல்ல செல்வாக்கு பெற்றிருந்தன. மக்கள் தங்கள் பணத்தை இந்தச் சங்கங்களில் முதலீடு செய்வதற்கான வசதியும் செய்யப்பட்டிருந்ததால், அவை தற்கால வங்கிகள் ஆற்றும் பணியைச் செய்து வந்தன. மேற்கூறிய அய்யவோல் பற்றிய விவரங்கள் அனைத்தும் நமக்கு நம் காலப் பகுதியைச் சேர்ந்த பொறிப்புகளிலிருந்தும் பிற்காலப் பொறிப்புகளிலிருந்தும் தெரியவருகின்றன. பெருவாரியான வியாபாரம் பண்டமாற்று முறையில் நடந்தது. அல்லது தங்கம், வெள்ளிக் கட்டிகள் கொடுத்துப் பொருள்களை வாங்கிக் கொண்டனர். நாணய மாற்று முறை வழக்கிலிருந்ததாகத் தெரியவில்லை. சுவர்ண, டிரம்மா, கட்யாண (**Suvarna, dramma. gadyana**) போன்ற நாணயங்கள் இருந்ததாக ராஷ்டிரகூடப் பொறிப்புகளிலிருந்து அறிகிறோம். முதலாம் அமோகவருஷனின் கன்ஹேரி பொறிப்புகளில் டிரம்மா என்றும் தங்க நாணயங்கள் பற்றிய குறிப்பும், நான்காம் கோவிந்தனின் செப்பேடுகளில் சுவர்ண என்ற நாணயம் பற்றிய குறிப்பும் காணப்படுகின்றன[1]. ஆனால் இந்த நாணயங்களில் ஒன்றுகூட நமக்கு இன்று கிடைக்கவில்லை.

தக்காணத்தின் சமூக, பொருளாதார வாழ்க்கையில் கோயில்கள் ஓர் இன்றியமையாத பங்கை ஏற்றுள்ளன. அது பற்றிய ஒரு சில செய்திகளை இங்குக் கூறுவது பொருத்தமுடையதாகும். அன்று கோயில், வழிபாட்டிற்குரிய ஓர் இடமாக மட்டும் கருதப்படவில்லை. மக்களின் பொருளாதார, கலாச்சார வாழ்க்கையில் அது ஒரு முக்கிய இடத்தைப் பெற்றிருந்தது. நாட்டின் பயனுள்ள எல்லாக் கலைகளும் நுண்கலைகளும் கோயிலை மையமாகக் கொண்டே வளர்ந்தன. ஒரு கோயில் கட்டும் வேலை தொடங்கியதிலிருந்தே, அது ஏராளமானவர்களுக்கு வேலை வாய்ப்பை அளித்தது. கட்டடக் கலைஞர்கள் தங்கள் திறமையையும், ஆற்றல்களையும் வெளிப்படுத்தவும், அவர்களுக்கும் மற்ற ஏராளமான தொழிலாளர்களுக்கும் வேலை வாய்ப்புகள் அளிக்கவும் கோயில்கள் பயன்பட்டன. கோயில்களுக்குத்

[1] டிரம்மா (Dramma), சுவர்ண (Suvarna) என்ற இவ்விரு நாணயங்களும் 65 நெல்மணி எடையுள்ள தங்க, வெள்ளி நாணயங்களாக இருக்கலாம். தமிழ் நாட்டில் கழஞ்சு, காசு போன்ற நாணயங்கள் வழக்கிலிருந்தன.

தேவைப்பட்ட சிலைகளைக் கல்லிலும், உலோகத்திலும் உருவாக்கிக் கொடுக்க ஏராளமான சிற்பக் கலைஞர்கள் தேவைப்பட்டார்கள். அவர்களுக்கும் கோயில் வேலை வாய்ப்புகளைக் கொடுத்தது. எல்லாக் கோயில்களிலும், குறிப்பாகப் பெரிய கோயில்களில், பின் பற்றப்பட்டு வந்த அன்றாட வழிபாட்டு முறைகள், பூசாரிகள், சமையற்காரர்கள், மலர் வியாபாரிகள், இசை நாட்டியக் கலைஞர்கள் போன்றோருக்கு வேலை வாய்ப்பை அளித்தது. இவ்வாறாகச் சமூகத்தின் ஒரு பெரிய பொருளாதாரப் பிரச்சினையான வேலையில்லாத் திண்டாட்டம் ஓரளவிற்கு இந்த நிறுவனத்தின் மூலம் தீர்க்கப்பட்டது.

திருவிழாக் காலங்களில் கோயில்கள் நடத்திய விளையாட்டுகளும், கேளிக்கைகளும், போட்டிகளும் மக்களுக்குப் பொழுது போக்கிற்கு வாய்ப்புகளை அளித்தன. பல இடங்களில் கல்விக் கூடங்களும், மருத்துவ மனைகளும் கோயில்களுக்குள்ளேயே இயங்கியதால் மக்களின் உடல் நலத்தைப் பாதுகாக்கும் பொறுப்பையும், கல்வி, அறிவை வளர்க்கும் பொறுப்பையும் கோயிலே ஏற்றிருந்தது. இந்தக் கல்விக்கூடங்களும், மருத்துவ நிலையங்களும் செவ்வனே நடைபெறும் பொருட்டு அரசர்களும், செல்வர்களும், வணிகர்களும் கோயில்களுக்கு ஏராளமான நன்கொடைகளை வழங்கினர். கற்றறிந்த பெரியோர்களுக்கும், சமயத் துறவிகளுக்கும், ஏழை மாணவர்களுக்கும் அன்றாடம் இலவசமாக உணவு அளிப்பதும், ஏழை எளியவர்களுக்குத்தேவைப் பட்ட உதவி செய்வதும் கோயிலின் மற்றொரு முக்கிய பணியாக இருந்தது. இதற்கு ஏராளமான பொருள் தேவைப்பட்டதால், நிலமாகவும், பொருளாகவும் பலர் கோயில்களுக்கு மானியங்களைக் கொடுத்தனர்.

மேலைச் சாளுக்கிய அரசன் மங்கலேசனுடைய பாதாமிக் கல்வெட்டு அன்றாடம் பதினாறு அந்தணர்களுக்கும், சமயத் துறவிகளுக்கும் உணவளிக்க ஏற்பாடு செய்வதற்காக அங்கிருந்த விஷ்ணு கோயிலுக்கு லஞ்ஜீஸ்வரம் என்னும் கிராமத்தை மானியமாக அளித்த செய்தியைக் குறிப்பிடுகிறது. பட்டடக் கல்லிலிருந்து கிடைத்துள்ள ஒரு பொறிப்பு கோயிலில் பணி செய்த இசைக் கலைஞர்களைப் பற்றியும், அவர்கள் விஜயாதித்யனிடமிருந்து பெற்ற சில சிறப்புச் சலுகைகளையும் கூறுகின்றது. மங்கலேசன் காலத்தைச் சேர்ந்த பாதாமிக் கல்வெட்டு ஒன்று அந்நகரத்துக் கோயிலின் மலர்மாலை தொடுக்கும் தொழிலாளிக்கு அளிக்கப்பட்ட நன்கொடையைக் குறிப்பிடுகிறது. நான்காம் கோவிந்தனின் காம்பே செப்பேடுகள் 400 கிராமங்களை அவன்

பல்வேறு கோயில்களுக்கு மானியமாக அளித்த செய்தியைக் கூறுகிறது. ராஷ்டிரகூட முதலாம் கிருஷ்ணன் எல்லோராச் சிவன் கோயிலுக்கு தங்க ஆபரணங்களை நன்கொடையாக அளித்தான். இவ்வாறாக ஒரு வழிபாட்டு இடமாக மட்டுமில்லாமல், சமூகத்தின் பொது நலனிற்காகப் பல்வேறு சமூக நலப்பணிகளை மேற் கொண்டிருந்த கோயிலுக்கு மானியங்களும், நன்கொடைகளும் ஏராளமாகக் கிடைத்தன.

கடவுள் அருளைப் பெறுவதற்குத் தானம் செய்வதுதான் சிறந்த வழி என்ற நம்பிக்கை மக்களிடையே வளர்ந்திருந்ததால், கோயில்களுக்கும், அறப்பணிகளுக்கும் நன்கொடைகள் வழங்கப் பலர் முன்வந்தனர். இவ்வளவு செல்வத்தைப் பெற்றிருந்த இந்த நிறுவனம் தேவைப்பட்டவர்களுக்குப் பண உதவி செய்யத் தயங்கவில்லை. இன்றைய வங்கிகள் ஆற்றிவரும் தொண்டினைக் கோயில்கள் அன்றே செய்து கொண்டிருந்தன. ஊர் மக்கள் தங்கள் பொதுப் பிரச்சினைகளை விவாதிக்கக்கூடிய இடமும் கோயிலே ஆகும். ஹிந்து சமயக் கோட்பாடுகள், நல்லொழுக்க நெறிமுறைகள் பற்றிச் சமயச் சொற்பொழிவுகள் கோயில் களில் அடிக்கடி நடைபெற்றன. இசையும், நாட்டியமும் கோயில்கள் போற்றி வளர்த்த இரு கலைகளாகும். இசைக் கலைஞர்களும், நாட்டியக் கலைஞர்களும் கடவுளின் பணிக்காகத் தங்களை அர்ப்பணித்துக் கொண்டனர். இவர்கள் தேவதாசிகள் என்றழைக்கப்பட்டனர். கி.பி. எட்டாம் நூற்றாண்டில் பட்டடக் கல்லிலுள்ள லோகமகாதேவி கோயிலில் தேவதாசிகள் இருந் தார்கள் என்பதைப் பொறிப்புகள் மூலமாக நாம் அறிகிறோம். 'நிலச் சொந்தக்காரராகவும், வேலை கொடுப்பவராகவும், வங்கி யாகவும், கல்விக் கூடமாகவும், மருத்துவமனையாகவும், கலைக் கூடமாகவும் சுருங்கச் சொன்னால் பண்பட்ட வாழ்க்கையின் சிறப்புக் கூறுகள் அனைத்திற்கும் மையமாக விளங்கிய இடைக்கால இந்தியக் கோயிலுக்கு இணையான ஒரு நிறுவனம் மனித வரலாற் றிலேயே காண்பது அரிது', என்ற பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியின் கருத்து குறிப்பாகத் தமிழ்நாட்டுக் கோயில்களை மனத்தில் கொண்டு கூறப்பட்டதாயினும் இந்தியா முழுவதற்கும் அது பொருந்தும் என்பதில் ஐயப்பாடே இருக்கமுடியாது.[1]

[1] "As landholder, employer and consumer of goods and services, as bank, school and museum, as hospital and theatre, in short as a nucleus which gathered round itself all that was best in the arts of civilized existence.....the medieval Indian temple has few parallels in the annals of mankind."

—K. A. Nilakanta Sastri—The Cholas. p. 654.

# 3. சமயம்

## ஹிந்து சமயம்

சாளுக்கியர், ராஷ்டிரகூடர் ஆட்சிக் காலத்தில் சைவ சமயமும், வைணவ சமயமும், போற்றி வளர்க்கப்பட்டன. குறிப்பாகச் சைவ சமயத்திற்குப் பேராதரவு கிடைத்தது. பாதாமி, பட்டடக்கல், மகாகூடம், எல்லோரா போன்ற இடங்களில் பிரம்மாண்டமான கோயில்கள் கட்டப்பட்டு அன்றாடம் பூஜைகளும், விழாக்களும் தவறாமல் நடத்தப்பட்டன. கங்கை ஆற்றங்கரைப் பகுதியிலிருந்து சைவ ஆச்சாரியர்கள் வரவழைக்கப்பட்டுக் கோயில்களில் அர்ச்சகர்களாக நியமிக்கப்பட்டனர். சாளுக்கிய அரசர்கள் முதலாம் புலிகேசி, கீர்த்திவர்மன், மங்கலேசன், இரண்டாம்புலிகேசி போன்றோர் வேத வேள்விகளைச் செய்தும், கற்றறிந்த பிராமணர்களைப் போற்றி ஆதரித்தும் 'பிரம்மண்ய' 'பரம மகேஸ்வரா' 'பரமவைஷ்ணவா' போன்ற பட்டங்களைச் சூடிக் கொண்டனர். ஸ்மிருதி நூல்களில் கூறப்பட்டுள்ள நோன்புகளையும், தானங்களையும் அவர்கள் தவறாமல் கடைப்பிடித்தனர். உதாரணமாக மங்கலேசனுடைய நெரூர் சாஸனம் கார்த்திகை மாதம் துவாதசி நாளன்று அவன் விஷ்ணுவை வழிபட்டு உண்ணா நோன்பு இருந்தான் என்று கூறுகிறது. ஒரு பிராம்மண குடும்பத்திற்கு, குடும்பச் சடங்குகளைச் செய்வதற்காக ஒரு கிராமம் நன்கொடையாக வழங்கப்பட்ட செய்தியை விஷ்ணுவர்த்தனனின் சதாரா சாஸனம் கூறுகிறது. தக்காணச் சைவத்திற்கும் வட இந்தியச் சைவ சமயத்திற்கும் நெருங்கிய தொடர்பு இருந்தது என்பது வட இந்தியச் சைவ ஆச்சாரியர்களில் ஒருவரான ஞான சிவாச்சாரியர் என்பவர் பட்டடக்கல் சங்கமேஸ்வரர் கோயிலில் அர்ச்சகராகப் பணியாற்றியதிலிருந்து தெரிகிறது. சாளுக்கிய அரசர்கள் 'பரம பாகவதன்' என்ற பட்டத்தைச் சூட்டிக் கொண்டதிலிருந்து அவர்களுக்கு வைணவ சமயத்திலிருந்த பற்று புலப்படும். பாதாமிக் கோயிலிலுள்ள புடைப்புச் சிற்பங்கள் விஷ்ணு லட்சுமியுடன் பாம்புப் படுக்கையில் படுத்திருக்கும் காட்சியையும், விஷ்ணுவின் வராஹ, நரசிம்ம அவதாரங்களையும் சித்திரித்துக் காட்டுகிறது. அரிய வேலைப்பாடுகளமைந்த இந்த விஷ்ணு கோயிலைக் கட்டியதோடு மட்டுமன்றி, அங்கு ஒரு விஷ்ணு

சிலையைப் பிரதிஷ்டை செய்து அக் கோயிலுக்குப் பல நன்கொடைகளை மங்கலேசன் வழங்கினான். சிவன், விஷ்ணுவைத் தவிர சாளுக்கிய அரசர்கள் கார்த்திகேயனையும் வழிபட்டனர். ராஷ்டிரகூடர்கள் ஆட்சியில் சைவ, வைணவச் சமயங்களை விடச் சமண சமயம் செழித்து வளர்ந்திருந்தது. சாளுக்கியர்கள் காலத்தைப் போலல்லாமல் வேதவேள்விகளிலும், சடங்கு களிலும் அரசர்களுக்கு இருந்த நம்பிக்கை குறைந்து விட்டது. குமாரிலர் போன்ற ஹிந்து சமய ஆச்சாரியர்கள் வேதச் சடங்குகளின் இன்றியமையாமையைப் பற்றிப் பிரசாரம் செய்தும்கூட, அவற்றிற்கு மக்களிடையே இருந்த செல்வாக்கு குறைந்துவிட்டது. ஸ்மிருதி, புராண இலக்கியங்களில் கூறப்பட்டிருந்த சடங்குகளைச் செய்வதில் மக்கள் அக்கறை காட்டினர். பின்னே கூறப்பட்ட சடங்குகள் எளிமையானவைகளாக இருந்ததோடு மட்டுமின்றி, உயிர்ப்பலிக்கு அவற்றில் அவசியமில்லாததால் அச் சடங்குகள் மக்கள் கவனத்தைக் கவர்ந்திருக்க வேண்டும். சமண, பௌத்த சமயங்கள் வலியுறுத்திய கொல்லாமை அறம் தக்காண மக்களின் மனத்தைக் கவர்ந்திருக்க வேண்டும். அதன் செல்வாக்கின் காரணமாகத்தான் வேத வேள்விகளை அரசர்களும், மக்களும் வெறுத்தனர் போலும்.[1] விஷ்ணு, சிவன், இலட்சுமி, சூரியன் போன்ற ஹிந்துக் கடவுள்களை மக்கள் வழிபட்டனர். பாண்டுரங்க வழிபாட்டின் மையமாக விளங்கியது பண்டரிபுரம் என்னும் நகரம். ராஷ்டிரகூடர்களின் பொறிப்புகள் யாவற்றிலும் சிவனையும், விஷ்ணுவையும் வழிபடும் செய்யுள்கள் தொடக்கத்தில் காணப்படுகின்றன.

ஹிந்து சமயத்தின் மறுமலர்ச்சி, ராஷ்டிரகூடர்களின் ஆட்சியில் உயர்நிலையை அடைந்தது. ஹிந்து சமயக் கருத்துகளுக்கு ஒரு புதிய பொருள் விளக்கத்தைக் கொடுத்து, அதன் அடிப்படையில் ஹிந்து சமய தத்துவத்தை உருவாக்கிய சங்கராச்சாரியார் இக் காலப் பகுதியில் தீவிரப் பிரச்சாரம் செய்துகொண்டிருந்தும் கூட, தக்காணப் பகுதியில் அவருடைய கருத்துகள் ஏற்றம் பெறவில்லை. ராஷ்டிரகூடப் பொறிப்புகளில் அரசர்கள் சமண, பௌத்த மடாலயங்களுக்கும், துறவிகளுக்கும் நன்கொடைகள் அளித்த செய்தி காணப்படுகிறதேயன்றி, அதே போல ஹிந்து மடாலயங்கள், துறவிகள் பற்றிக் குறிப்புகள் காணப்படவுமில்லை. வேத நூல்களின் அடிப்படையில் இயங்கிய பழைய ஹிந்து சமயம்

[1] முதலாம் அமோகவருஷனின் சஞ்சன் செப்பேடுகளிலும், நான்காம் கோவிந்தனின் காம்பே செப்பேடுகளிலும் ராஜசூயம், வாஜபேயம், அக்னிஸ்தோமம் போன்ற வேள்விகளைச் செய்வதற்காகப் பிராம்மணர்களுக்கு நன்கொடைகள் அளிக்கப்பட்ட செய்தி கூறப்பட்டுள்ளது.

பாமர மக்களிடையே வழக்கொழிந்து, ஸ்மிருதி நூல்களில் வலியுறுத்திக் கூறப்படும் ஸ்மார்த்தபௌராண ஹிந்து சமயம் பாமர மக்களால் பின்பற்றப்பட்டது. இந்தச் சமயத்தில் மிருக பலிக்கு முக்கியத்துவம் அளிக்கப்படவில்லை. சடங்குகளும் எளிதாகப் பின்பற்றக் கூடியவையாக இருந்ததால் அவற்றின் செல்வாக்கு பாமர மக்களிடையே வளர்ந்தது. ஒவ்வொரு ஹிந்துவும் தன் அன்றாட வாழ்க்கையில் பின்பற்றவேண்டிய சமய நெறிமுறைகள், சடங்குகள் போன்றவை இந் நூல்களில் குறிப்பிடப்பட்டிருந்தன. பல வகையான நோன்புகளை ஹிந்துக்கள் கடைப்பிடிக்க வேண்டுமென்பது வலியுறுத்தப்பட்டது. தான, தர்மங்கள் செய்வதில் மக்கள் மிகுந்த ஈடுபாடு காட்டினர்.

கீழைச் சாளுக்கியர்கள் ஆட்சியில் வைணவத்தைவிடச் சைவ சமயம் மக்கள் ஆதரவைப் பெற்றிருந்தது! முதலில் வேங்கி அரசர்கள் வைணவ சமயத்தை ஆதரித்த போதிலும், பிறகு சைவ சமயம் அவர்களால் அதிகமாக ஆதரிக்கப்பட்டது. மக்களின் சைவ சமயப் பற்றின் விளைவாகப் பல கோயில்கள் கட்டப்பட்டன. கோயில்கள் கட்டி, அவற்றில் அன்றாட வழிபாடு நடப்பதற்குத் தேவையான மானியங்களையும், நன்கொடைகளையும் வழங்குவது ஒரு முக்கிய சமயப் பணியாகக் கருதப் பட்டது.

பெரும்பாலான வேங்கி அரசர்கள் சைவ சமயப் பற்று மிக்கவர்கள். அவர்கள் தங்களைப் பரமமகேஸ்வரர்கள் என்றழைத்துக் கொண்டனர். இரண்டாம் விஜயாதித்யன்தான் பகைவர்கள் மீது பெற்ற வெற்றிகளின் நினைவாக 108 சிவன் கோயில்களைக் கட்டியதாக அவன் பொறிப்புகள் கூறுகின்றன. இரண்டாம் யுத்தமல்லன் பெஜவாடாவில் போர்க்கடவுளான கார்த்திகேயனுக்கு ஒரு கோயிலையும், முதலாம் சாளுக்கிய பீமன் திராட்சாராமம், சாளுக்கிய பீமவரம் என்னுமிடங்களில் சிவனுக்குக் கோயில்களையும் எழுப்பினார்கள். கோயில்களுக்குச் சென்று வழிபடுவது மட்டுமல்லாமல் புனித ஸ்தலங்களுக்கு யாத்திரை செல்லும் பழக்கம் மக்களின் சமய வாழ்க்கையின் முக்கிய ஒரு கூறாக அமைந்திருந்தது.

பௌத்த புனித ஸ்தலங்களாக ஒரு காலத்தில் புகழ்பெற்று விளங்கிய அமரர்ராமம் (அமராவதி) பீமபுரம், தாகரேமி, பாலிர காஊஞு, திராட்சாராமம் ஆகிய ஐந்தும் ஹிந்து சமயப் புனித ஸ்தலங்களாக மாறி ஆயிரக்கணக்கான ஹிந்து புனிதப் பயணிகள் அவ்விடங்களுக்கு வந்தார்கள். இவை தவிர செப்ரோலு (Chebrolu) என்னுமிடத்திலுள்ள மகாசேனர் கோயிலும்,

பிடபுரத்திலுள்ள (Bidapura) ஹும்கார சங்கரி கோயிலும், பெஜவாடாவிலுள்ள மல்லேஸ்வரர் கோயிலும், காளஹஸ்தி, ஸ்ரீ சைலம் ஆகியவைகளும் ஹிந்துக்களின் மற்றச் சில புண்ணிய ஸ்தலங்களாகும். இரண்டாம் யுத்தமல்லனும், இரண்டாம் விஜயாதித்யனும் பெஜவாடாவில் சைவ மடாலயங்களைக் கட்டினார்கள். இந்த மடாலயங்களில் வாழ்ந்த துறவிகள், உலகப் பற்றற்றவர்களாக இருப்பினும், மக்களின் நல்வாழ்வில் அக்கறை காட்டினார்கள். ஏழை, எளியவர்களுக்கு உணவளிக்க இலவச உணவு விடுதிகள், நோயுற்றவர்களுக்குச் சிகிச்சை அளிக்க மருத்துவ விடுதிகள், வேதங்கள், ஆகமங்கள் ஆகியவற்றில் பயிற்சி அளிக்கக் கல்விக்கூடங்கள் போன்ற பல நற்பணிகளை இந்த மடாலயத் துறவிகள் மேற்கொண்டு மக்களின் முன்னேற்றத்திற்குப் பாடுபட்டார்கள்.

**சமணம் :**

சமணத் துறவிகளுக்கும், சமண மடாலயங்களுக்கும் பல நன்கொடைகளையும், மானியங்களையும் அளித்த போதிலும், மேலைச்சாளுக்கிய அரசர்கள் சமண சமயத்தைப் பின்பற்றினார்கள் என்று கூறுவதற்குப் போதுமான ஆதாரங்கள் இல்லை. (சாளுக்கியர்களின் சாஸனங்களில் சில முதலாம் புலிகேசியும், கீர்த்திவர்மனும் சமணப் பள்ளிகளுக்குக் கொடுத்த மானியங்கள் பற்றியும், சில சமணத் துறவிகளின் பெயர்களையும் குறிப்பிடுகின்றன) மேலைச்சாளுக்கிய அரசில் சமண சமயத்தைச் சார்ந்தவர்கள் பலர் வாழ்ந்தனர். இரண்டாம் புலிகேசியின் அவைக் கவிஞனான ரவிகீர்த்தி சமண சமயத்தைச் சேர்ந்தவன். அவன் ஐஹோள் என்ற இடத்தில் 'மேகுதி' என்ற சமணக் கோயில் ஒன்றைக் கட்டினான் என்றும், அக்கோயிலைக் கட்டும் பணியில் இரண்டாம் புலிகேசி மிக்க அக்கறை காட்டினான் என்றும் தெரிகிறது. விஜயாதித்யனுடைய தங்கையான இளவரசி குங்குமதேவி குடிகேரே (Gudigere) என்ற இடத்தில் சமண பஸதி (கோயில்) ஒன்றைக் கட்டுவித்தாள் என்று அவ்விடத்தில் கிடைத்த பொறிப்பு ஒன்று கூறுகிறது. இரண்டாம் கீர்த்திவர்மன் ஆட்சியில் அன்னிகேரே (Annigere) என்ற இடத்தில் சமண சமயத்தைச் சேர்ந்த கிராம அதிகாரி ஒருவன் சமணக் கோயில் ஒன்றைக் கட்டினான்.

(வினயாதித்யன், விஜயாதித்யன், விக்கிரமாதித்யன் போன்ற சாளுக்கிய அரசர்கள் சமணத் துறவிகளுக்கு நன்கொடைகள் அளித்த) செய்தியை அவர்கள் சாஸனங்கள் மூலம் அறிகிறோம். பாதாமி, ஐஹோள் போன்ற இடங்களில் சமண

தீர்த்தங்கரர்களின் உருவங்கள் செதுக்கப்பட்ட சமணக் குகைகள் பல இருக்கின்றன. சாளுக்கியர் ஆட்சியில் ஆழ்ந்த சமண சமயப் பற்று கொண்ட பல அறிஞர்கள் வாழ்ந்தார்கள். அவர்கள் பல சமண சமய நூல்களை எழுதினார்கள். ஜைனேந்திர வியாகர்ணம் என்ற ஒரு வடமொழி இலக்கண நூலை எழுதிய பூஜ்யபாதர் என்ற சமண சமயத் துறவி மேலைச் சாளுக்கிய விஜயாதித்யன் ஆட்சியில் வாழ்ந்தவர். பிராகிருத, கன்னட வடமொழிகளில் நல்ல தேர்ச்சி பெற்ற சியாம குண்டாச்சாரியார் என்பவர் மற்றொரு சமண அறிஞராவார். வெமுலவாடச் சாளுக்கிய அரசன் இரண்டாம் அரிகேசரியால் ஆதரிக்கப்பட்ட பம்பன் என்னும் கவிஞன் ஆதிபுராணம் என்னும் நூலில் சமண சமயத்தின் முதல் தீர்த்தங்கரரின் வாழ்க்கை வரலாற்றைக் கூறுகின்றான். இவனும் சமண சமயப் பற்றுள்ளவனாக இருந்திருக்க வேண்டும்.

மேலைச்சாளுக்கியர்கள் காலத்தைவிட ராஷ்டிரகூடர்கள் காலத்தில் சமண சமயத்தின் செல்வாக்கு ஏற்றம் பெற்றிருந்தது. ஹிந்து சமயத்துடன் போட்டியிடக்கூடிய அளவிற்கு அதன் வலிமையும், செல்வாக்கும் வளர்ந்திருந்தது. இலக்கிய வளர்ச்சிக்காகச் சமண சமயத்தவர்கள் ஆற்றிய தொண்டு மகத்தானது. பாமர மக்களிடையே கல்வி அறிவைப் பரப்புவதிலும் சமண சமயத்தவர்கள் மிக்க ஆர்வம் காட்டினார்கள். இக் காலப் பகுதியில் தக்காணத்தில் சமணர்களின் செல்வாக்கு இவ்வளவு வளர்ச்சியடைந்ததற்குக் காரணம் ராஷ்டிரகூட மன்னர்களிடமிருந்து அவர்கள் பெற்ற ஆதரவேயாகும். ராஷ்டிரகூட அரசன் முதலாம் அமோகவருஷன் சமண சமயத்தில் மிக்க பற்று கொண்டிருந்தான். அவனுடைய நீண்ட ஆட்சியில் பல சமயங்களில் அரச பொறுப்புகளிலிருந்து சற்று ஓய்வு பெற்று அமைதியை நாடி அவன் சமண மடாலயங்களுக்குச் சென்றான் என்ற செய்தியைப் பொறிப்புகள் மூலம் நாம் அறிகிறோம். குணபத்ரர் என்ற புகழ்பெற்ற சமணத் துறவியை இளவரசன் கிருஷ்ணனின் ஆசானாக அவன் நியமித்தான். பல சமண அறிஞர்களை ஆதரித்ததோடு மட்டுமன்றிச் சமணப் பள்ளிகளுக்கு ஏராளமாக மானியங்களை வழங்கினான். 'பார்ஸ்வப்யூதயம்' (Parsvabhyudayam) என்னும் நூலில் அதன் ஆசிரியர் ஜினசேனர் என்பவர் தன்னை அமோகவருஷனின் தலைமை ஆசான் என்று கூறிக்கொள்கிறார். 'சாரசங்கிரகம்' என்னும் சமண சமயக் கணித நூல் ஒன்று அமோகவருஷன் சமண சமயத்தைப் பின்பற்றியவன் என்று கூறுகிறது. சமண சமயம் வலியுறுத்திய துறவுக் கொள்கையை அமோகவருஷன் நடைமுறையில் பல சமயங்களில் கடைப்பிடித்தான். அரச பதவியைத் துறந்து அமோகவருஷன் சமண மடாலயங்களில்

அமைதியையும், ஆறுதலையும் பெற்ற செய்தியை முன்பே குறிப்பிட்டுள்ளோம். அவனுடைய மகன் இரண்டாம் கிருஷ்ணன் பல சமணப் பள்ளிகளுக்கு மானியங்கள் வழங்கிய செய்தி பொறிப்புகள் மூலம் தெரியவருகிறது. முல்குண்ட் என்ற இடத்திலிருந்த பள்ளி அதுபோல மானியம் பெற்ற ஒரு சமணப் பள்ளியாகும். மூன்றும் இந்திரனும் சமணக் கோயில்களுக்குப் பல அறக் கட்டளைகளை வழங்கியிருந்தான்.

ராஷ்டிரகூட அரசர்கள் மட்டுமல்லாமல், சிற்றரசர்கள், அதிகாரிகள், படைத்தலைவர்கள், பிரபுக்கள், வணிகர்கள் பலரும் சமண சமயத்தை ஆதரித்தனர். தக்காணத்து வணிகக் கழகங்களில் பல உறுப்பினர்கள் சமண சமய ஆதரவாளர்களாக இருந்தனர். வனவாசியின் அரசப் பிரதிநிதிகளாக இருந்த பங்கேயனும் அவன் மகன் லோகாதித்யனும் சமண சமயத்தில் தீவிரப் பற்று கொண்டவர்கள். லோகாதித்யனின் ஆசானான குணசந்திரர் அவனைச் சமண சமயத்தைப் பரப்பும் பணியில் ஈடுபட்டவன் என்று குறிப்பிடுகின்றார்; மூன்றும் இந்திரனின் படைத்தலைவர்களுள் ஒருவனான ஸ்ரீ விஜயன் சமண சமயத்தைப் பின்பற்றியவன். சமண இலக்கிய வளர்ச்சியைப் பெரிதும் ஆதரித்தவன். அரசர்கள் அந்தச் சமயத்திற்கு அளித்த ஆதரவு, சமண இலக்கிய வளர்ச்சி, சமண அறிஞர்களின் எண்ணிக்கை இவற்றின் அடிப்படையில் நோக்கும்பொழுது ராஷ்டிரகூட அரசின் மக்கள் தொகையில் ஏறத்தாழ மூன்றில் ஒரு பங்கினர் சமண சமயத்தைச் சேர்ந்தவர்களாக இருக்கலாம் என்று கருத இடமிருக்கிறது. ராஷ்டிரகூட அரசில் சில பெண்கள்கூடச் சமண சமயப்பற்று மிக்கவர்களாக இருந்தனர் என்பது சமகாலத்துப் பொறிப்புகளிலிருந்து தெரிகிறது. மூன்றும் கிருஷ்ணனின் ஆட்சியில் தன் கணவனுக்குப் பதிலாக வருவாய்த்துறை அதிகாரியாக நியமிக்கப்பட்ட ஜக்கியப்பே (Jakkiabbe) என்ற பெண் சல்லேகனம் என்னும் சமண சமய உண்ணா நோன்பு நோற்று உயிர் துறந்தாள் என்ற செய்தியிலிருந்து அவளுடைய சமண சமயப் பற்றைப் புரிந்துகொள்ளலாம். அத்திமெப்பே (Atthimebbe) என்ற படைத்தலைவனின் மகள் ஒருத்தி சமண சமயத்தைப் பின்பற்றியவள். கி.பி. 968ல் ஜக்கி சுந்தரி என்ற ஒரு பெண் சமணக் கோயில் (பஸதி) ஒன்றைக் கட்டுவித்தாள்.[1]

சமண சமயக் கோயில்களில் ஹிந்து சமய வழிபாட்டு முறைகளும், சடங்குகளும் பின்பற்றப்பட்டன. விஷ்ணு, சிவன்

[1] R. C. Majumdar (Ed.) The History aud culture of the Indian people, —Vol. IV The Age of Imperial Kanauj - p. 292.

போன்ற கடவுள்களை ஹிந்துக்கள் வழிபடுவது போலவே சமணர்களும் ஜினனை வழிபட்டார்கள். இந்தச் சமயச் சடங்குகளைச் செய்வதற்காகச் சமணக் கோயில்களுக்கு நன்கொடைகளும், மானியங்களும் வழங்கும் பல பொறிப்புகளை நாம் பார்த்திருக்கின்றோம். முதலாம் அமோகவருஷனின் கொன்னூர் செப்பேடுகளும், கார்க்கனின் சூரத் செப்பேடுகளும் இதுபோல மானியங்கள் வழங்கிய செய்தியைக் கூறுகின்றன.

வேங்கிச் சாளுக்கியர்கள் ஆட்சியிலும் சமண, சமயம் மக்களின் ஆதரவைப் பெற்றிருந்தது. அரசர்களும் அதன் வளர்ச்சியை ஊக்குவித்தனர். அரசர்களும், மக்களும் சமணக் கோயில்கள் (பஸதி) கட்டிய செய்தியையும் அவற்றிற்கு நிலங்கள் மானியமாக வழங்கிய செய்தியையும் சாஸனங்கள் மூலம் அறிகிறோம். விமலாதித்யனைத் தவிர வேறெந்தக் கீழைச் சாளுக்கிய அரசனும் சமண சமயத்தைப் பின்பற்றவில்லை. இரண்டாம் அம்மன் 'சர்வலோகாஸ்ரையா', 'கடகாபரணு' என்ற இரண்டு ஜினலயங்களைக் (சமணக் கோயில்கள்) கட்டிச் சமணத் துறவிகளுக்கு உணவளிக்கும் பொருட்டு ஒவ்வொன்றிலும் ஒரு சத்திரத்தை நிறுவினான். ஆந்திர மாநிலத்தில் பல்வேறு பகுதிகளில் காணப்படும் சமணக்கோயில்களில் அழிந்துபட்ட சின்னங்களையும், சமண சமயத் தலைவர்களின் உருவங்களையும் காணும்பொழுது, ஒரு காலத்தில் இப் பகுதியில் சமண சமயம் செல்வாக்கு பெற்று விளங்கியது என்பதையும், அச் சமயத்தைப் பின்பற்றிய பலர் இருந்திருக்கவேண்டும் என்பதையும் எளிதாக ஊகிக்கலாம். இரண்டாம் அம்மனின் மூன்று சாஸனங்கள் வேங்கிப் பகுதியில் சமண சமயம் உன்னத நிலையில் இருந்ததாகக் கூறுகின்றன. சமணக் கோயில்கள் தவிர மடாலயங்கள் பலவும் நிறுவப்பட்டன. இம் மடாலயங்களில் வாழ்ந்த துறவிகள் மக்களின் நல்வாழ்விற்கான பல சமூகப் பணிகளை மேற்கொண்டனர்.

## பௌத்தம் :

மேலைச் சாளுக்கியர் ஆட்சியில் பௌத்த சமயமும் தக்காணத்தில் மக்களால் ஆதரிக்கப்பட்டது. ஆனால் ஹிந்து சமயத்திற்கும், சமண சமயத்திற்கும் இருந்த அளவிற்கு ஆதரவு பௌத்த சமயத்திற்கு இருக்கவில்லை. கி.பி. 7ஆம் நூற்றாண்டில் சாளுக்கிய அரசிற்கு வந்த சீனப்பயணி யுவான்சுவாங்கின் குறிப்புகளிலிருந்து தக்காணத்தில் பௌத்த சமயத்தின் நிலையைப் புரிந்துகொள்ளலாம். சாளுக்கிய அரசில் மக்கள் வைதீக, அவைதீக சமயக் கருத்துக்கள் இரண்டையும் பின்பற்றினர் என்று

அவர் கூறுகின்றார். நூற்றுக்கும் மேலான மடாலயங்கள் இருந்தனவென்றும் ஹீனயான, மகாயான பிரிவுகளைச் சேர்ந்த 5000க்கும் மேற்பட்ட பௌத்த சமயத்தினர் சாளுக்கிய அரசில் இருந்தனர் என்றும் அவர் குறிப்பு கூறுகிறது. யுவான்சுவாங்கின் வாழ்க்கை வரலாற்று நூலில், 'உடல் முழுவதும் திருநீற்றைப் பூசிக்கொண்டு (சிவனை) தேவர்களை வழிபடும் சமயத் துரோகிகளும் அங்கு இருந்தனர். சாளுக்கியத் தலைநகரான நாசிக்கில் ஐந்து அசோக ஸ்தூபங்களும் கல்லினால் கட்டப்பட்ட மற்றப் பல ஸ்தூபங்களும் இருந்தன' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. யுவான் சுவாங் சாளுக்கிய அரசைப் பற்றிய தன் குறிப்பின் இறுதியில் அஜந்தாக் குகைகளைப் பற்றியும் அங்குக் காணப்பட்ட பௌத்த மடாலயத்தைப் பற்றியும் கூறுகிறார். சாளுக்கிய அரசில் சைவ, சமண சமயங்களுக்கு அளிக்கப்பட்ட ஆதரவை நோக்கும்பொழுது பௌத்த சமயம் யுவான்சுவாங் வருணித்துள்ள அளவுக்கு உன்னத நிலையில் இருந்திருக்குமா என்பது ஐயப்பாட்டிற்குரிய விஷயமாகும். அதை உறுதிபடுத்துவதற்குப் போதுமான சாஸன சான்றுகள் நமக்குக் கிடைக்கவில்லை. நமக்குக் கிடைத்திருக்கும் சாளுக்கிய சாஸனங்கள் யாவும் இந்து, சமண சமயங்களைப் பற்றித்தான் அதிகம் பேசுகின்றன.

ராஷ்டிரகூடர்கள் காலத்தில் பௌத்த சமயம் முன்பு பெற்றிருந்த செல்வாக்கை இழந்து காணப்பட்டது. ஒரு காலத்தில் தக்காணத்தில் பௌத்த சமயத்தின் மையமாக விளங்கிய எல்லோரா, அஜந்தா போன்ற இடங்களில்கூட அந்தச் சமயம் வீழ்ச்சியடைந்திருந்தது. கி. பி. 7ஆம் நூற்றாண்டில் ஏறத்தாழ 200 பௌத்த மடாலயங்கள் இருந்த அப் பகுதியில், ராஷ்டிரகூடர்கள் காலத்தில் ஒரு சில மடாலயங்களே காணப்பட்டன. ராஷ்டிரகூடப் பொறிப்புகளிலிருந்து கன்ஹேரி, கம்பில், டம்பல் (Kanheri, Kampil, Dambal) ஆகிய மூன்று பௌத்த மடாலயங்களைப் பற்றித்தான் கேள்விப்படுகிறோம். மற்றவை ஆதரிப்பாரின்றி அழிந்துவிட்டிருக்கக்கூடும். கன்ஹேரி மட்டும் தொடர்ந்து பௌத்த சமயத்தின் ஒரு முக்கிய புண்ணியஸ்தலமாகக் கருதப்பட்டது. கி.பி. 853ல் வங்காளத்திலிருந்து வந்த பௌத்தத் துறவி ஒருவன் கன்ஹேரியில் பௌத்த சங்கத்தினருக்காக 'மகா விகாரம்' என்னும் ஒரு மடாலயத்தைக் கட்டிய செய்தி நமக்குக் கிடைத்துள்ளது. அம் மடாலயத்தில் ஒரு கல்விக் கூடமும், நூல் நிலையமும் இருந்தன. கி.பி. 877ல் அதற்ருகே துறவிகள் தியானம் செய்வதற்காகத் தியான அறை ஒன்றைக் கொங்கணத்தை ஆண்ட சிலாஹார அரசின் அமைச்சன் ஒருவன் கட்டுவித்தான் என்ற செய்தியையும் அறிகிறோம். புத்தருடைய

வழிபாட்டிற்காக மானியங்களும், அறக் கொடைகளும் வழங்கப் பட்ட செய்தியை அக்காலத்துப் பொறிப்புகள் கூறுகின்றன. கம்பில் என்ற இடத்திலிருந்த பௌத்தப் பள்ளிக்கு ஒரு கிராமத்தை நன்கொடையாக வழங்கிய செய்தியைத் தந்திவர்மனின் பொறிப்பு ஒன்று கூறுகிறது.

(கீழைச் சாளுக்கியர் ஆட்சியில் பௌத்த சமயம் செல்வாக்கு இழந்து காணப்பட்டது.) கிறிஸ்துவ சகாப்தத்தின் தொடக் கத்தில் ஆந்திரப் பகுதியில் ஏற்றம் பெற்றிருந்த பௌத்த சமயம் இப்பொழுது ஆதரவின்றி வீழ்ச்சிப்பாதையில் சென்றுகொண் டிருந்தது. அமராவதி, பீமபுரம், தாகரேமி, பாலகொலனு, திராட்சாராமம் ஆகிய ஐந்து பௌத்த ஸ்தலங்களும் இப்பொழுது ஹிந்து சமயப் புனித ஸ்தலங்களாகக் காட்சி அளித்தன. கி.பி. ஏழாம் நூற்றாண்டில் யுவான்வாங் வேங்கி நாட்டிற்கு வந்தபொழுது பௌத்த மடாலயங்கள் வெறிச்சோடிக் கிடந் ததைப் பார்த்து மனம் வருந்தினான். பௌத்த சமயத்தின் அரண்களாகக் கருதப்பட்ட மேலே குறிப்பிடப்பட்டுள்ள ஐந்து ஆராமங்களும் தங்கள் பௌத்தப் பண்புகளை இழந்து, மறுமலர்ச்சி பெற்ற ஹிந்து சமயத்தினால் இணைத்துக் கொள்ளப்பட்டன. அமராவதி போன்ற இடங்களில் புத்தர் வழிபடப்பட்ட போதிலும், பௌத்த சமயத்தைத் தோற்றுவித்தவராக அல்லாமல், விஷ்ணுவின் ஒரு அவதாரமாகப் புத்தர் வழிபடப் பட்டார். பௌத்த சமயம் இவ்வாறு மக்களிடையே செல்வாக் கிழந்திருந்த காரணத்தினால், அக்காலத்துப் பொறிப்புகளில் பௌத்த சமயத்தைப் பற்றிய குறிப்பு ஏதும் இல்லை.

மேலே விளக்கப்பட்டுள்ளவாறு இக் காலப்பகுதியில் தக்காணத் தில் சைவ, வைணவ, பௌத்த, சமண சமயங்கள் மக்களால் ஆதரிக்கப்பட்டபோதிலும், அவைகளிடையே விரும்பத்தகாத போட்டி, பொறாமை உணர்ச்சிகள் காணப்படவில்லை. தங்கள் சமயத்தின் உயர்வை நிலைநாட்டும் பொருட்டு இச் சமயத்தைச் சேர்ந்தவர்கள் அடிக்கடி சமய விவாதங்களில் ஈடுபடுவதை நாம் காண்கிறோம். இதுபோன்ற விவாதங்கள் பல்வேறு சமயத்தின ரிடையே காழ்ப்புணர்ச்சியையோ, பகைமை உணர்வையோ ஏற்படுத்தவில்லை. ஏனெனில் அரசர்களும், சிற்றரசர்களும், அதிகாரிகளும், சமயத்துறையில் பரந்த நோக்கோடு செயல்பட்டு மற்றவர்களுக்கு எடுத்துக்காட்டாக விளங்கினர். உதாரணமாக ராஷ்டிரகூட முதலாம் அமோகவருஷன் தீவிர சமண சமயப்பற்று மிக்கவனாயிருந்தும், ஹிந்துக் கடவுளான இலட்சுமியை வழிபட் டான். குஜராத் ராஷ்டிரகூட மரபைச் சேர்ந்த தந்திவர்மன்

ஹிந்து சமயத்தைச் சேர்ந்தவனாக இருந்தபோதிலும், பௌத்தப் பள்ளிகளுக்கு நன்கொடைகள் வழங்கினான். தீவிர ஹிந்து சமயப் பற்றுகொண்ட பிராம்மணர்கள் பலர் சமண மடாலயங்களுக்கு மானியங்கள் வழங்கினர். இவ்வாறு சமயத்துறையில் அரசர் களும், அவர்களைப் பின்பற்றி மக்களும் சகிப்புத் தன்மையைக் கடைப்பிடித்தொழுகினர்.

சமணர்கள், பௌத்தர்கள் மட்டுமன்றி, முஸ்லிம்களும் இதேபோல நடத்தப்பட்டார்கள். மேற்கு இந்தியத் துறைமுகப் பட்டினங்களில் வந்து தங்கியிருந்த முகம்மதிய வர்த்தகர்கள் பலர் சமய சுதந்திரத்தோடு வாழ்ந்தார்கள் என்பதற்குச் சம காலத்து முஸ்லிம் அறிஞர்களின் குறிப்புகள் சான்று பகர்கின்றன. அவர்கள் மசூதிகளைக் கட்டிக்கொள்ளவும், தம் விருப்பப்படி வழிபாடு நடத்தவும் எந்தவிதத்தடையும் இருக்கவில்லை என்பதை முஸ்லிம் வரலாற்றறிஞர்கள் குறிப்பிடுகிறார்கள்.

# 4. இலக்கியம், கல்வி

இந்தக் காலப் பகுதியில் தக்காணத்தில் வட மொழியும், கன்னடமும், தெலுங்கும் அரசர்களால் போற்றி வளர்க்கப்பட்டு, நல்ல தரமான பல இலக்கியப் படைப்புகள் உருவாக்கப்பட்டன. இளவரசர்கள் பெற்ற கல்வியிலும், பயிற்சியிலும் (வடமொழி இலக்கியம் ஓர் இன்றியமையாத கூருக விளங்கியது) பழமையான தர்மசாஸ்திர நூல்கள், புராண இலக்கியம், ராமாயணம், மகாபாரதம் போன்ற காவியங்கள் இன்ன பல வடமொழி நூல்களை இளவரசர்கள் கற்றறிந்திருக்க வேண்டுமென்று எதிர்பார்க்கப் பட்டது. இத் துறையில் வல்லுநர்களாக இருந்த பல அறிஞர்கள் அரசர்களால் போற்றி ஆதரிக்கப்பட்டார்கள். வடமொழி இலக்கிய வளர்ச்சியைப் பற்றிக் கூறும்பொழுது, (அக் காலத்துப் பொறிப்புகள் இலக்கிய வளர்ச்சிக்குப் பெருமளவில் துணைபுரிந்தன) என்பதை மறந்துவிடக் கூடாது. பொறிப்புகளில் காணப்படும் (வாசகங்கள் அவைக் கவிஞர்களால் புனையப்பட்டு, இலக்கிய நயம் மிகுந்து காணப்பட்டன.)

வடமொழி இலக்கிய வரலாற்றை ஆராய முற்படும் எந்த மாணவனும் அம்மொழி நூல்களை மட்டுமன்றி, அம்மொழியில் வெளியிடப்பட்ட பொறிப்புகளையும் சற்றுக் கூர்ந்து ஆராய வேண்டும். (உதாரணமாக மங்கலேசனுடைய மகாகூடத் தூண் கல்வெட்டு ஹர்ஷர் காலத்துத் தலைசிறந்த கவிஞனை பாணனின் இலக்கிய நடையை அப்படியே பின்பற்றி இருப்பதைக் காண் கிறோம்.) அர்த்தசாஸ்த்திரம், ராமாயணம், ரகுவம்சம் போன்ற பண்டைய வடமொழி நூல்களிலிருந்து பல சொற்றொடர்கள் இக் கல்வெட்டில் கையாளப்பட்டிருப்பதையும் நாம் காணலாம். இரண்டாம் புலிகேசியின் ஐஹோள் கல்வெட்டு வாசகத்தைப் புனைந்த ரவிகீர்த்தி என்னும் கவிஞன் காளிதாஸனுடைய பாணி யைப் பின்பற்றி மெய்க்கீர்த்தியில் புலிகேசியினுடைய போர்த் துறைச் சாதனைகளைக் காளிதாஸன் ரகுவம்சத்தில் ரகுவின் திக்விஜயத்தை வருணித்துள்ள பாணியில் வருணிக்கின்றான். இதன் அடிப்படையில் தன்னைக் காளிதாசன், பாரவி போன்ற கவிஞர்களுடன் ஒப்பிட்டுக் கொள்கிறான். ராஷ்டிரகூட மூன்றாம் கோவிந்தனின் கட்பா செப்பேடுகளின் உரை நடைப் பகுதியை அதன் ஆசிரியர் பாணனுடைய பாணியைப் பின்பற்றி இயற்றி யுள்ளார். கல்வெட்டு வாசகங்களைப் புனைந்த அவைக் கவிஞர்கள்

மட்டுமல்லாமல் அரச குடும்பத்தினரும், சிற்றரசர்களும் கூட வடமொழி இலக்கிய வளர்ச்சிக்குக் காரணமாக இருந் தார்கள், இரண்டாம் புலிகேசியின் சிற்றரசர்களுள் ஒருவனை கங்க துர்விநீதன் 'சப்தாவதாரம்' என்னும் வடமொழி இலக்கண நூல் ஒன்றை எழுதினன். குணுத்யன் என்பவனுடைய பிருஹத் கதா என்ற பிராகிருத நூலை முதல் முதலாக வடமொழியில் எழுதி யவனும் இவனே என்று கருதப்படுகிறது. இரண்டாம் புலிகேசியின் மகன் சந்திராதித்யனின் மனைவி விஜயபாட்டாரிகா என்பவள் வடமொழியில் நல்லபுலமை பெற்றிருந்தாள். பத்தாம் நூற்றாண் டைச்சேர்ந்த வடமொழி இலக்கியத்திறனாய்வாளனான ராஜசேகர னால் வடமொழி இலக்கியப் பாணியில் காளிதாசனுக்கு அடுத்த வராகக் கருதப்படும் விஜயாஸ்கா என்னும் கவிஞர் மேலே கூறப்பட்ட விஜயபாட்டாரிகாவாக இருக்கவேண்டுமென்று பி.வி. கானே என்னும் வடமொழி அறிஞர் கருதுகிறார்.[1] பரத நாட்டியக் கலைத்தொடர்பான ஒரு சில நூல்களும் வடமொழியில் இக்காலப் பகுதியில் எழுதப்பட்டன. ஜைனேந்திர வியாகரணம் என்னும் வடமொழி இலக்கண நூலை எழுதிய சமண முனிவரும் அறிஞருமான பூஜ்ய பாதர் சாளுக்கிய விஜயாதித்யன் ஆட்சியில் வாழ்ந்தவர். (கி. பி. எட்டாம் நூற்றாண்டு). தக்காணத்தில் இயங்கிக் கொண்டிருந்த நூற்றுக் கணக்கான உயர் கல்விக் கூடங்கள் வடமொழி வளர்ச்சிக்குப் பேருதவி புரிந்தன.

ராஷ்டிரகூடர்கள் ஆட்சியில் பல வடமொழிக் கவிஞர்கள் ஆதரிக்கப்பட்டனர். நளசம்பு என்ற நூலின் ஆசிரியனான திருவிக்ர மன் மூன்றாம் இந்திரன் ஆட்சியில் வாழ்ந்த கவிஞன் அவ்வரசனின் பெகும்ரா செப்பேடு வாசகத்தைப் புனைந்தவன் இந்தத் திருவிக்ர மனாக இருக்க வேண்டுமென்று டி. ஆர். பண்டார்கர் கருதுகிறார். 'சம்பு' என்னும் இந்த வகை வடமொழிக் கவிதை தக்காணத்தில்தான் முதன் முதலாகத் தோன்றியதாகக் கருதப்படு கிறது. மூன்றாம் கிருஷ்ணனால் ஆதரிக்கப்பட்ட மற்றொரு கவிஞன் ஹாலாயுதன். அவனுடைய கவிரகசியம் என்னும் நூலில் அவனை ஆதரித்த ராஷ்டிரகூட அரசன் மூன்றாம் கிருஷ்ணனைப் பற்றிய புகழுரை ஒன்று இடம் பெற்றுள்ளது. சமந்தபத்ரர் என்ற சமண சமய அறிஞரால் எழுதப்பட்ட ஆப்தமீமாம்சம் என்னும் சமண சமயக் கோட்பாடுகளை விளக்கும் நூலுக்குத் தக்காணத்துச் சமண சமய அறிஞர்கள் பலர் உரை எழுதியுள்ளனர். அவர்களில் அகளங்கதேவர் என்பவர் ஒருவர், சிரவணபெல்கோலா பொறிப்பு அவரைப் பற்றிக் குறிப்பிடுகின்றது. தந்திதுர்க்கன் ஆட்சியில் அவர் வாழ்ந்திருக்கக் கூடும். அவர் எழுதிய நூல்

[1] G. Yazdani—The Early History of the Deccan p. 245.

அஷ்டசதி என்பதாகும். அவரை ராஷ்டிரகூட அரசன் முதலாம் கிருஷ்ணனின் மகன் என்று கருதுவோரும் உண்டு. ஆனால் இதை ஏற்றுக் கொள்ளுவதற்குப் போதுமான ஆதாரங்கள் இல்லை. சிரவணபெல்கோலா பொறிப்பில் கூறப்பட்டிருக்கும் மற்றொரு சமண அறிஞர் வித்யானந்தர் என்பவர். அவரும் ஆப்தமீமாம்சம் என்னும் நூலிற்கு மேலும் விரிவான ஓர் உரையை எழுதியுள்ளார். கி.பி. எட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த மாணிக்கநந்தி என்ற சமண அறிஞர் பரிட்சாமுக சூத்திரம் (Parikshamukasutra) என்னும் தர்க்க சாஸ்திர நூல் ஒன்றை எழுதியவர். அடுத்த நூற்றாண்டைச் சேர்ந்த பிரபா சந்திரர் என்ற மற்றோர் அறிஞர் இந்த நூலுக்கு ஓர் உரை எழுதியதோடு மட்டுமன்றி நியாய குமுதசந்திரோதயம் என்ற தர்க்க நூல் ஒன்றையும் எழுதியுள்ளார். மல்லவாதின் என்பவர் தர்க்கநூல் எழுதிய மற்றொரு சமண அறிஞராவார். அவர் தர்மோத்தராச்சாரியர் என்ற பௌத்த சமய அறிஞர் எழுதியுள்ள நியாய பிந்து டீகா என்ற தர்க்க சாஸ்திரகாவிற்கு ஓர் உரை நூலை எழுதியுள்ளார்.

ராஷ்டிரகூட முதலாம் அமோகவருஷனின் ஆட்சியில் இலக்கிய வளர்ச்சி பெரிதும் ஊக்குவிக்கப்பட்டது என்பதை முன்னரே குறிப்பிட்டிருக்கின்றோம். அவனுடைய ஆன்மீக வழிகாட்டியாக விளங்கிய ஜினசேனர் என்பவர் கி.பி. 783-ல் ஹரிவம்சம் என்னும் நூலை எழுதி முடித்தார். இந் நூலின் பின்னணி யுரையில் அக் காலப் பகுதியில் ஆண்ட பல்வேறு அரசர்களின் பெயர்கள் குறிப்பிட்டிருப்பதால், வரலாற்றாராய்ச்சியாளர்களுக்கு இந் நூல் மிகவும் பயனுடையதாக உள்ளது. இவரால் தொடங்கப்பட்டு முற்றுப்பெறாமல் நின்றுவிட்ட நூல் ஆதி புராணம் என்னும் நூலாகும். குணசந்திரர் என்ற மற்றொரு சமண அறிஞர் இந் நூலை எழுதி முடித்தார். இந் நூல் சமண சமய தீர்த்தங்கரர்களின் வாழ்க்கை வரலாற்று நூலாகும். பார்ஸ்வப்யூதயம் (Parsvabhyudayam) என்ற நூலை இயற்றிய ஜினசேனர் அமோகவருஷனின் காலத்தில் வாழ்ந்த மற்றொரு எழுத்தாளர். இந்நூல் பார்ஸ்வநாதரின் வாழ்க்கை வரலாற்றைக் கூறுகின்றது. காளிதாசனின் உணர்ச்சிப் பாடலான மேகதூதத்திலிருந்து பாடலின் அடிகள் எடுத்து இந் நூலில் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதுபோன்ற உத்திகளைக் கையாளுவதில் இவர் கைதேர்ந்தவர். சாகதயாளர் என்பவர் இயற்றிய அமோகவிருத்தி என்னும் இலக்கண நூலும், வீராச்சாரியர் என்பவர் எழுதிய கணித சாரசங்கிரகம் என்னும் கணித நூலும் முதலாம் அமோகவருஷனின் ஆட்சியில் எழுதப்பட்டவையாகும். முதலாம்

அமோகவருஷனே ஒரு சிறந்த எழுத்தாளன் என்ற ஒரு கருத்தும் உண்டு. கன்னட மொழியில் கவிராஜமார்க்கம் என்னும் முதல் செய்யுளியல் நூலை எழுதிய பெருமை முதலாம் அமோகவருஷனைச் சாரும். அவனே இந் நூலை எழுதினுை, இந் நூல் எழுதப் படுவதற்குக் காரணமாக இருந்தானு என்பது குறித்து வரலாற் றறிஞர்களிடையே கருத்து வேறுபாடுகள் உண்டு. பிரசன்னோத் திரமாலா என்னும் மற்றொரு நூலையும் இவன் இயற்றியதாகச் சிலர் கருதுவர். இரண்டு நூற்றாண்டுகள் கழித்து வெமுலவாடச் சாளுக்கிய அரசர்களால் ஆதரிக்கப்பட்டு, வடமொழி இலக்கிய வளர்ச்சிக்குப் பெரும் தொண்டாற்றியவர் சோமதேவசூரி என்னும் சமண அறிஞராவார். கொல்லாமை போன்ற சமண சமயக் கோட்பாடுகளையும் நல்லொழுக்கநெறிகளையும் வலியுறுத்தி யஸஸ்திலகசம்பு (Yasastilakachampu) என்னும் ஒரு நூலும் நீதிவாக்கியாமிருதம் (Nitivakyamrta) என்னும் அர்த்த சாஸ்த் திரத்தை ஒத்த ஆட்சிமுறை நூல் ஒன்றும் அவரால் எழுதப் பட்டவையாகும். சமண அறநெறி ஒழுக்கங்களின் அடிப்படையில் அர்த்தசாஸ்த்திரம் கூறும் கருத்துக்களை அவர் இந் நூலில் விமரிசிக் கிறார். அவருடைய பரந்த அறிவும், அவர் இலக்கியப் பாணியின் சிறப்பும் மேலே கூறப்பட்டுள்ள இரண்டு நூல்களின் ஒவ்வொரு பக்கத்திலிருந்தும் தெளிவாகப் புலப்படும்.

இதுவரை வடமொழி இலக்கிய வளர்ச்சியைப் பற்றி ஆராய்ந்தோம். அடுத்துக் கன்னடமொழி வளர்ச்சி பற்றிச்சுருக்க மாக ஆராயலாம். தென்னிந்தியாவில் தமிழுக்கு அடுத்தபடி யாகத் தொன்மையான இலக்கியத்தைப் பெற்றிருக்கும் மொழி கன்னடமாகும். முதலாம் அமோகவருஷனின் செய்யுளியல் நூலான கவிராஜமார்க்கம் இயற்றப்படுவதற்கு முன்பே கன்னட மொழியில் உரைநடை, செய்யுள் நூல்கள் பல உருவாகியிருக்க வேண்டும். கி.பி. நான்காம் நூற்றாண்டிலிருந்து எட்டாம் நூற் றாண்டு வரையிலான காலப்பகுதியில் பல கன்னட எழுத் தாளர்கள் தோன்றிப் பிற்காலக் கன்னடமொழி, இலக்கிய வளர்ச் சிக்கு வித்திட்டிருக்க வேண்டும். ஆனுல் அக் காலத்து நூல்கள் எவையும் நமக்குக் கிடைக்கவில்லை. கர்நாடகத்தின் புலிகேரி (Puligere) என்ற பகுதிதான் தூய கன்னட மொழியின் பிறப்பிட மாகக் கருதப்பட்டது. கன்னட உரைநடை எழுத்தாளர்களில் சிறந்தவனுகக் கருதப்படும் துர்விநீதன் இரண்டாம் புலிகேசியின் சமகாலத்துக் கங்க அரசனுக இருத்தல் வேண்டும். கி.பி. ஏழாம் நூற்றாண்டில் கன்னட இலக்கியத்துறையில் இரண்டு சமண அறிஞர்கள் சிறப்புற்று விளங்கினுர்கள். அவர்களில் ஒருவர் தத்வார்த்த மகாசாஸ்த்திரம் என்னும் நூலுக்குச் சூடாமணி

என்ற உரை எழுதிய தும்புலூராச்சார்யர் என்றழைக்கப்பட்ட ஸ்ரீவர்த்ததேவர் என்பவர். இந்நூல் இன்று நமக்குக் கிடைக்க வில்லையாயினும் கி. பி. பதினேழாம் நூற்றாண்டைச் சேர்ந்த பட்டாகளங்கன் என்ற இலக்கண நூலாசிரியன் இந் நூலைப் பற்றிக் குறிப்பிடுகின்றான். கி.பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த மற்றோர் அறிஞர் சியாம குண்டாச்சாரியார் என்பவர். பிராகிருதம் வடமொழி, கன்னடம் ஆகிய மொழிகளில் நல்லபுலமை வாய்ந்த வரென்றும், பல நூல்கள் எழுதியவரென்றும் இவரைப் பற்றிப் பிற்கால அறிஞர்கள் குறிப்பிடுகின்றார்கள். ராஷ்டிரகூட அரசன் முதலாம் அமோகவருஷன் கன்னட மொழியில் நல்ல புலமை பெற்றிருந்தான். தண்டியின் காவியதர்சம் என்ற நூலின் அடிப்படையில் அவன் கன்னட மொழியில் கவிராஜமார்க்கம் என்னும் செய்யுளியல் நூல் ஒன்றை எழுதியுள்ளான். 'வட்டா ராதனை' (Vaddārādāhana) என்னும் உரைநடை நூல் ஒன்றை எழுதிய சிவகோடி ஆச்சார்யன் என்னும் புலவனும் இக் காலப் பகுதியில் வாழ்ந்தவன். பழைய கன்னட மொழிப் பாணியில் (Purva hala Kannada)எழுதப்பட்ட இந்நூல் சமண முனிவர்களின் வாழ்க்கை வரலாற்றை விவரிக்கிறது. அமோகவருஷனால் குறிப்பிடப்பட்டுள்ள மற்ற இரு கவிஞர்கள் ஸ்ரீவிஜயனும், குணவர்மனும் ஆவர். அவர்களால் எழுதப்பட்ட நூல்கள் இன்று நமக்குக் கிடைக்கவில்லையாயினும், பிற்கால அறிஞர்கள் அவர்கள் நூல்களிலிருந்து மேற்கோள்களைக் கையாண்டிருக்கின்றனர். ராஷ்டிரகூடர்களின் ஆதிக்கத்திற்கு உட்பட்டிருந்த சிற்றரசர் களாயிருந்த வெமுலவாடச் சாளுக்கியர் அவையில் பல கன்னடப் புலவர்கள் போற்றி ஆதரிக்கப்பட்டனர்.

மூன்றாம் கிருஷ்ணனின் சிற்றரசனான வெமுலவாடச் சாளுக் கிய அரசன் இரண்டாம் அரிகேசரியின் அவையில் பம்பன் என்ற கவிஞன் இருந்தான். (கி.பி. பத்தாம் நூற்றாண்டு). அவன் முன்னோர்கள் வேங்கியைச் சேர்ந்தவர்கள். முப்பத்திரண்டு வயது இளைஞனாக இருந்த பொழுதே அவன் கன்னட மொழியில் ஆதி புராணம், விக்ரமார்ஜுன விஜயம் என்னும் இரண்டு நூல்களை எழுதினான். பண்டைய கன்னட நூல்களில் தலைசிறந்தவையாக இவை கருதப்படுகின்றன. ஆதிபுராணம் என்னும் நூல் முதல் சமண தீர்த்தங்கரரான ரிஷப தேவரைப் பற்றி மரபு வழிச் செய்திகளின் அடிப்படையில் எழுதப்பட்ட நூலாகும். விக்ர மார்ஜுன விஜயம் மகாபாரத நிகழ்ச்சிகளின் ஒரு பகுதியை வருணிக்கின்றது. எனவே இது பம்பபாரதம் என்றும் அழைக்கப் படுகிறது. அந்நூலில் பம்பன் தன்னுடைய புரவலனை

இரண்டாம் அரிகேசரியை அர்ஜுனனுடன் ஒப்பிட்டு அவனைப் புகழ்ந்து பாராட்டுகிறான்.

சமகால வரலாற்று நிகழ்ச்சிகள் பலவற்றைப் பம்பன் இந் நூலில் சுவைபட எடுத்துக் கூறுகின்றான். எடுத்துக் காட்டாக ராஷ்டிரகூட இளவரசன் மூன்றாம் இந்திரனின் வடஇந்தியப் படையெடுப்புப் பற்றிய செய்திகள் இந் நூலில் காணப்படுகின்றன. கி.பி. பத்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த மற்றொரு புலவன் பொன்னன் என்பவன். இவனுடைய முன்னோர்களும் வேங்கியைச் சேர்ந்தவர்கள். பம்பனை விட வயதில் இளையவனான பொன்னன், பதினாறாவது சமண சமயத் தீர்த்தங்கரரின் வாழ்க்கை வரலாற்றைக் கூறும் சாந்திபுராணம் என்னும் நூலை எழுதியுள்ளான். 'புவனைகராமாப்யூதயம்' 'ஜினாட்சரமாலே' என்ற வேறு இரண்டு நூல்களும் இவனால் எழுதப்பட்டவையாகும். இவனுக்கு வடமொழியிலும், கன்னட மொழியிலும் இருந்த புலமையைப் பாராட்டி ராஷ்டிரகூட அரசன் மூன்றாம் கிருஷ்ணன் இவனுக்கு 'உபயகவிச் சக்கரவர்த்தி' என்ற பட்டத்தை அளித்தான். அசங்கன், ஜீன சந்திரன் என்ற வேறு இரு கன்னடக் கவிஞர்கள் பற்றியும் பொன்னன் குறிப்பிடுகின்றான். ஆனால் அவர்களால் எழுதப்பட்ட நூல் ஒன்றும் நமக்குக் கிடைக்கவில்லை.

கங்க அரசன் இரண்டாம் மாறசிம்மனின் சமண சமய அமைச்சனும், படைத்தலைவனுமான சாமுண்டராயன் ஒரு தலை சிறந்த எழுத்தாளன் ஆவான்.[1] சாமுண்டராய புராணம் என்னும் உரைநடை நூல் இவனால் எழுதப்பட்டதாகும். இது இருபத்துநான்கு சமண சமயத் தீர்த்தங்கரர்களின் வரலாற்றை விரிவாகக் கூறும் நூல். கன்னட எழுத்தாளர்களில், மூன்று இரத்தினங்களில் ஒருவனாகக் கருதப்படும் ரண்ணன் (மற்ற இருவர் பம்பனும், பொன்னனும் ஆவர்) கி.பி. பத்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியைச் சேர்ந்தவன். பிற்காலச் சாளுக்கிய அரசன் இரண்டாம் தைலனின் அவையை அலங்கரித்தரண்ணன் கவிச்சக்கரவர்த்தி என்றழைக்கப்பட்டான். அவனுடைய அஜிதபுராணம் என்னும் நூல் இரண்டாவது தீர்த்தங்கரரின் வரலாற்றைக் கூறுகிறது. அவனுடைய சாகஸ பீமவிஜயம் அல்லது கதாயுத்தம் என்னும் சம்பு வகையைச் சேர்ந்த செய்யுள் நூல் பீமனும், துரியோதனனும் கதை என்னும் போர்க் கருவி

[1] சாமுண்டராயன் என்னும் இந்த அமைச்சன் சிரவண பெல்கோலாவிலுள்ள கோமதேஸ்வரர் சிலை எழுப்புவதற்குக் காரணமாயிருந்தவன்.

தாங்கிச் செய்த மகாபாரதப் போர் நிகழ்ச்சியைப் பற்றி விளக்கு கிறது. பரசுராம சரிதம், சக்ரேஸ்வர சரிதம் என்னும் வேறு இரு நூல்களையும் ரண்ணன் எழுதியதாகக் கருதப்படுகிறது. ரண்ண கண்டம் என்னும் ஓர் அகராதியையும் அவன் இயற்றியதாகச் சிலர் கருதுவர்.

மேலே கூறப்பட்டுள்ள எழுத்தாளர்கள் அனைவரும் சமண சமயத்தவர் ஆவர். சமண சமயத்தைத் தோற்றுவித்த மகாவீரரின் ஆணைக்கேற்ப அவர்கள் அனைவரும் தம் சமயக் கருத்துகளை மக்களிடையே பரப்ப அந்தப் பகுதி மொழியையே பயன்படுத்தினர். கன்னட மொழி வளர்ச்சிக்குச் சமண சமயத் தவர்கள் ஆற்றிய தொண்டு மிக மகத்தானது. இந்தக் காலப் பகுதியின் இறுதியில்தான் (கி.பி. பத்தாம் நூற்றாண்டு) மராத்தி மொழி உருவாகிக் கொண்டிருந்தது. எனவே பிராகிருத மொழி யிலோ, மராத்தியிலோ எந்த நூல்களும் வெளிவரவில்லை. மேலும் ராஷ்டிரகூடர்களும் சாளுக்கியர்களும் கன்னடமொழியை ஆதரித் தார்கள். பிராந்திய மொழிகள் வளருவதற்கு ஆக்கம் அளித்த சமண சமயம் மகாராஷ்டிரப் பகுதியில் செல்வாக்கு பெறாததால் கன்னடத்தைப் போல அம்மொழி வளர்ச்சி பெறுவதற்கான வாய்ப்புகள் அப்பொழுது இருக்கவில்லை. எனவே மராத்திய மொழியில் நூல்கள் பல எழுதப்படாதது வியப்பிற்குரியது அன்று.

வடமொழியைப் போலவோ, கன்னடத்தைப் போலவோ, தெலுங்கு மொழி அவ்வளவு வேகமாக வளர்ச்சி பெறவில்லை. ஆந்திரப் பகுதியில் (கீழைச் சாளுக்கிய அரசில்) நிலவிய அரசியல் சூழ்நிலையும், அப் பகுதியின் இலக்கிய மரபுகளும் இவ் வளர்ச்சி தடைபடுவதற்குக் காரணமாயிருந்தன. வேங்கிநாடு அடிக்கடி அயல்நாட்டுப் படையெடுப்புகளுக்கும், உள்நாட்டுக் குழப்பங் களுக்கும் இலக்காகியது என்பதை வேங்கியின் அரசியல் வரலாற்றை ஆராயும்பொழுது பார்த்தோம். பண்பட்ட தெலுங்கு மொழி மரபு வழக்குகள் இன்னும் உருவாகாததால் இலக்கிய உலகில் வடமொழிக்கு அடுத்த உயர்ந்த இடத்தைக் கன்னட மொழி பெற்றிருந்தது, தெலுங்கு மொழியில் செய்யுள் வடிவத்தை நாம் முதல் முதலாக வேங்கிச் சாளுக்கிய அரசன் குணகவிஜயாதித்யனின் (கி.பி. 849-892) பொறிப்புகளில் காண் கிறோம். அதற்குச் சற்று முன்னதாக கி.பி. 846-49ல் பாண்டு ரங்கன் என்ற கீழைச் சாளுக்கியப் படைத்தலைவனின் ஒரு சாஸனத் திலும் தெலுங்குமொழி, செய்யுள் வடிவில் கையாளப்பட்டுள்ளது. எனவே, கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டிலிருந்துதான் தெலுங்கு மொழி வளர்ச்சி தொடங்கியிருக்க வேண்டுமென்று கருதுவது

தவருகாது. அதற்கு முன்பே எழுத்து வடிவில் இல்லாத பாமர இலக்கியம் உருவாகியிருக்கவேண்டும். தாலாட்டுப் பாட்டுகள், பக்திப் பாடல்கள், அறுவடைக் காலப் பாடல்கள் போன்றவை இவ்வாறு உருவாகியிருக்கலாம். ராஷ்டிரகூடஆதிக்கம் ஏற்பட்டவுடன் கீழைச் சாளுக்கியர்கள் கர்நாடகப் பகுதியுடன் தங்களுக்கிருந்த தொடர்பைத் துண்டித்துக் கொண்ட போதிலும் அவர்கள் அரசின் சில பகுதியில் வாழ்ந்த அறிஞர்களும், புலவர்களும், குறிப்பாக ராஷ்டிரகூட எல்லைக் கருகில் வாழ்ந்தவர்கள், கன்னட மொழியினுல் ஈர்க்கப்பட்டு வளர்ச்சியடைந்திராத தெலுங்கு மொழிக்குப் பதிலாக வளமிக்க கன்னட மொழியையே விரும்பினர்கள். பம்பன், பொன்னன் போன்ற தலைசிறந்த கன்னட மொழிக்கவிஞர்கள் வேங்கி நாட்டின் கம்மநாடு என்ற பகுதியைச் சேர்ந்தவர்கள் என்பது இங்குக் குறிப்பிடத் தக்கது. பம்பன் கன்னட மொழி எழுத்தாளனுக இருந்த போதிலும் தெலுங்கு இலக்கியம் அவன் செல்வாக்கிற்கு உட்பட்டது. தெலுங்கு மொழியில் நல்ல, தரமான இலக்கியப்படைப்புகள் கி.பி. பதினேராம் நூற்றுண்டுக்கு முன் உருவாகவில்லை. இந்த வகையைச் சேர்ந்த நூல்தான் நன்னையனின் பாரதம். அவனுடைய இலக்கியப் படைப்புகளில் காணப்படும், சொல்நயம் பொருள்நயம் ஆகியவற்றைப் பார்க்கும் பொழுது அவன் காலத்திற்கு முன்பே தெலுங்குமொழி இலக்கிய வளர்ச்சி தொடங்கியிருக்க வேண்டும் என்று நினைக்கத் தோன்றுகிறது. அந்தக் காலப் பகுதியைச் சேர்ந்த இலக்கியப் படைப்புகள் நமக்குக் கிடைக்காமல் அழிந்து விட்டன போலும்.

### கல்வி

கி.பி. ஏழாம் நூற்றுண்டில் மேலைச் சாளுக்கிய அரசிற்கு வந்த சீனப்பயணி யுவான்சுவாங், 'அப் பகுதி மக்கள் அறிவு வளர்ச்சியில் நல்ல ஆர்வம் காட்டினர்கள்' என்று குறிப்பிடுகின்றூர். கல்வியைப் பரப்பும் பணியை மேற்கொள்ளுவதற்காகப் பல அறிஞர்களுக்கு மானியங்கள் அளிக்கப்பட்ட செய்தியை நாம் அக்காலப் பொறிப்புகள் மூலம் அறிகின்றேம். கிராமங்களில் ஆரம்பக் கல்வி, கிராமப் பூசாரிகள், கணக்கர்கள், அவர்கள் குடும்பத்தைச் சேர்ந்தவர்களால் அளிக்கப்பட்டது. இதற்கு ஊதியமாக கிராமத்து மக்கள் அவர்களுக்கு ஒவ்வோர் ஆண்டும் ஒரு குறிப்பிட்ட அளவு உணவுத் தானியங்களை அறுவடை முடிந்தவுடன் கொடுத்து விடுவது வழக்கம். உயர் கல்வி முறையைப் பற்றிய பல செய்திகளை நாம் அக்காலச் சாஸனங்கள் மூலம் அறிகின்றேம். உயர் கல்வி என்றுல், அன்று வடமொழிக் கல்வி என்று பொருள் படும். வடமொழி, வேதம், வியாகர்ணம், ஜோதிடம், இலக்கியம்,

மீமாம்சம், புராணங்கள், தர்மசாஸ்திரம் போன்றவை அதில் படிக்க வேண்டிய பல்வேறு பாடங்களாகும்) கோயில்களோடு இணைக்கப்பட்டிருந்த மடங்களிலும், பிராம்மணர்களுக்குத் தானமாக அளிக்கப்பட்ட 'அக்கிரஹாரம்' என்னும் கிராமங்களிலும், (கிராமச் சமூகத்தினாலோ தனிப்பட்டவர்களாலோ நடத்தப்பட்ட கல்விக் கூடங்களில் உயர் கல்வி அளிப்பதற்கான வசதிகள் இருந்தன.)

தார்வார் மாவட்டத்தில் ஹெப்பால் என்னுமிடத்தில் உயர் கல்வி அளிப்பதற்காக நிறுவப்பட்ட ஒரு மடாலயத்திற்கு மானியங்கள் வழங்கப்பட்ட செய்தி கி. பி. 975ஆம் ஆண்டுப் பொறிப்பு ஒன்றில் காணப்படுகிறது. (ராஷ்டிரகூட அரசன் நான்காம் கோவிந்தன் உயர் கல்வி அளிப்பதற்காக 400 அக்கிரஹாரங்களை நிறுவினான் என்று அவனுடைய சாஸனங்கள் கூறுகின்றன. இங்கு மாணவர்களுக்கு இலவசமாகக் கல்வி போதிக்கப்பட்டதோடு மட்டுமன்றித் தங்குவதற்கு வசதியும், உணவும் இலவசமாகக் கொடுக்கப்பட்டன. கல்வி கற்பிக்கும் பணியில் கோயில்கள் ஒரு முக்கிய பங்கேற்றன என்பதை முன்பே கூறியுள்ளோம். குறிப்பாக உயர் கல்வி போதிப்பதில் கோயில்கள் ஓர் இன்றியமையாத இடத்தைப் பெற்றன. பீஜப்பூர் மாவட்டத்தைச் சேர்ந்த சலோட்கி (Salotgi) என்ற கிராமத்தில் மூன்றும் கிருஷ்ணன் ஆட்சியில் ஒரு புகழ்பெற்ற உயர் கல்வி நிறுவனம் இயங்கி வந்த செய்தி, பொறிப்புகள் மூலம் தெரிகிறது.) இந்தியாவின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் மாணவர்கள் அக் கல்லூரிக்குக் கல்வி பயிலும் பொருட்டு வந்தனர். அக் கிராமத்துக் கோயிலின் ஒரு பெரிய பொது அறையில் அக் கல்லூரி இயங்கியது. 250 ஏக்கர் நிலத்தின் வருமானம் அக் கல்லூரியின் முதல்வருக்குச் சம்பளமாகக் கொடுக்கப்பட்டது. அந்த ஊர் செல்வந்தர் ஒருவரும், பொதுமக்களும் அக் கல்லூரிக்கு ஏராளமான மானியங்களை வழங்கியிருந்தனர். கி.பி. 945-ல் கட்டப்பட்ட அக் கல்லூரியின் பொது அறை இடிந்து விழுந்த செய்தியையும், அடுத்த நூற்றாண்டில் அது மீண்டும் கட்டப்பட்ட செய்தியையும் ஒரு பொறிப்பு கூறுகிறது. சலோட்கியைப் போல வேறு பல இடங்களிலும் கோயில்கள் உயர் கல்விக் கூடங்களாகப் பணிபுரிந்திருக்க வேண்டும். பௌத்த, சமண மடாலயங்களும் இதே போலக் கல்விக் கூடங்களாக உருவாகியிருக்கக்கூடும். மான்யகேடம், பைதன், நாசிக், கர்ஹாட் போன்ற புனித யாத்திரை ஸ்தலங்களும் உயர்கல்வியின் மையமாக விளங்கியிருக்க வேண்டும்.

# 5. கலை

இந் நூல் ஒரு பொது வரலாற்று நூல் என்ற காரணத்தினுல் கலை வல்லுநர்கள், கலை விமரிசகர்கள் கண்ணேட்டத்தில் இத் தலைப்பு இங்கு விரிவாக ஆராயப்படவில்லை. சாளுக்கிய ராஷ்டிரகூடக் கலைகளைப் பற்றிய பொதுவான சில கருத்துகளை மட்டும் இப் பகுதியில் கூற முற்படுகின்ருேம்.

குப்தர்கள் காலத்தில் வடஇந்தியாவில் தோன்றிய ஹிந்துசமய மறுமலர்ச்சி தக்காணத்தில் சாளுக்கியர்கள், ராஷ்டிரகூடர்கள் காலத்துக் கட்டடச் சிற்பக் கலை வாயிலாக வெளிப்பட்டது. சாளுக்கியர் காலத் தொடக்கத்தில்தான் தக்காணத்தில் கோயில் கட்டடக் கலையின் தோற்றத்தைக் காண்கிருேம். இன்று தக்காணத்தில் கிடைத்துள்ள, காலத்தால் அழிக்க முடியாத கலைச் சின்னங்களைக் காணும்பொழுது கட்டடக் கலையும், சிற்பக் கலையும் அன்று எய்திய மேம்பாட்டை நன்ருக உணர முடிகின்றது. கலை ரசிகர்களின் கவனத்தை இன்றும் கவரும் அக் கலைப் படைப்புகளை உருவாக்கிய கலைஞர்கள் பற்றியும், அக் கலைஞர்களை ஆதரித்தவர்களைப் பற்றியும் அக்காலத்துப் பொறிப்புகள் கூறுகின்றன.

தக்காணத்தின் மிகப் பழமையான கலைச் சின்னங்களாக விளங்குபவை பௌத்த சேதியங்களும், விகாரங்களும் (Chaityas and Viharas) ஆகும். பௌத்தசமயக் கோயில்கள் சேதியங்கள் என்றும், அவர்களின் மடாலயங்கள் விகாரங்கள் என்றும், அழைக்கப்பட்டன. அவை பெரிய பெரிய பாறைகளில் குடையப் பட்டிருந்தன. எனவே, அவை குடை வரைக்கோயில்கள் என்றும் அழைக்கப்பட்டன. மகாயான பௌத்த சமயம் தோன்றிய பிறகுதான் புத்தரின் உருவச் சிலையை வழிபடும் பழக்கம் தோன்றியது. அது வரையில் சேதியங்களில் புத்தரைக் குறிக்கும் சில அடையாளங்கள் வழிபடப்பட்டன. கன்ஹேரி, நாஸிக் போன்ற இடங்களில் இது போன்ற கோயில்களை நாம் காண்கிருேம். மையத்தில் ஒரு பெரிய அறையும், அதைச் சுற்றிச் சிறிய அறை களையும் கொண்ட அமைப்பு மடாலயம் என்பது. பௌத்தத் துறவிகள் தனிமையில் தங்கித், தங்கள் அன்ருடச் சமயக்கடன் களைப் பின்பற்ற வசதியாக அமைக்கப்பட்ட இடங்கள் மடாலயங்

களாகும். மடாலயங்கள் யாவும் கோயில்களுக்கு அருகிலேயே கட்டப்பட்டன.

குடைவரைக் கோயில்கள்

மிகப் பெரிய அளவில் உருவாக்கப்பட்ட குடைவரைகள் எல்லோராவில் உள்ளன. அங்குள்ள 34 குடைவரைகளில் பன்னிரண்டு பௌத்த சமயத்தையும், பதினேழு ஆரிய சமயத்தையும், ஐந்து சமண சமயத்தையும் சார்ந்தவை. புத்தக் குடைவரைகள் கி.பி. 4 முதல் 7ஆம் நூற்றாண்டு வரையிலான காலப் பகுதியையும் ஆரியக் குடைவரைகள் கி.பி. 8, 9ஆம் நூற்றாண்டுகளையும், சமணக் குடைவரைகள் கி.பி. 10, 12ஆம் நூற்றாண்டுகளையும் சேர்ந்தவை. புத்தக் குடைவரைகளில் முதலாவது 52அடி சமசதுரக் குடைவரையாகும். இதில் எட்டுத் தனி அறைகள் காணப்படுகின்றன. இது பல பௌத்தத் துறவிகள் தங்கும் மடமாகும். இரண்டாவது குடைவரை ஒரு கோயிலாகும். இது 48 அடி சமசதுர வடிவில் அமைந்துள்ளது. இதன் நான்கு பக்கங்களிலும் பன்னிரண்டு தூண்கள் எழுப்பப்பட்டுள்ளன. தாமரை மலர் மீது அமர்ந்து உபதேசம் செய்யும் புத்தரின் உருவம் நான்கு புறங்களிலும் செதுக்கப்பட்டுள்ளது. இக் குடைவரைகளில் மிகவும் சிறப்பான கலையழகுடன் செதுக்கப்பட்டுள்ளது, விசுவ கர்மா கோயில் என்றழைக்கப்படும் பத்தாவது குடைவரையாகும். இக் கோயிலின் நடுவில் உள்ள ஸ்தூபத்தின் முன்னால் பன்னிரண்டு அடி உயரமுள்ள ஒரு புத்தர் சிலை அமர்ந்திருக்கும் பாணியில் காட்சி தருகிறது. 11, 12ஆவது குடைவரைகள் மிகப் பெரியவை. இவை இரண்டும் மூன்று மாடிகளைக் கொண்ட மடாலயங்களாகும். பன்னிரண்டாவது குடை வரையில் பல கற்றூண்களும், கண்ணைக் கவரும் பல சிற்ப, ஓவியப் படைப்புகளும் காணப்படுகின்றன. இவ்விரு குடைவரைகளும் முறையே தோதல் (Dothal), தின்தல் (Tinthal) என்றழைக்கப் படுகின்றன. 10, 11, 12ஆவது குடைவரைகள் ராஷ்டிரகூடர்கள் ஆட்சியில் உருவாக்கப்பட்டவை. பதின்மூன்றாவது முதல் இருபத்து ஒன்பதாவது வரையிலான குடைவரைகள் ஆரிய சமயத்தைச் சார்ந்தவை. பதினான்காவது இராவணன் குகை என்றும், பதினைந்தாவது தசாவதாரக் குகை என்றும், பதினாறாவது கைலாசம் என்றும், இருபத்து ஒன்றாவது இராமேசுவரம் என்றும் இருபத்தொன்பதாவது சீதா குளியலறை என்றும் அழைக்கப் படுகின்றன. இவற்றுள் சில குடைவரைகள் புத்த மடாலயங்களின் மாதிரியில் அமைக்கப்பட்டிருந்தாலும், அவற்றின் முன்னால் தனிக்கல்லால் செதுக்கப்பட்ட ஒரு மண்டபம்

காணப்படுகின்றது. தூண்களையுடைய முற்றமும், கருவறையும் இவற்றின் மற்றச் சிறப்புக் கூறுகளாகும். வேறு சில குடைவரை களில் கருவறை தனித்துக் காணப்படுகிறது. அதைச்சுற்றி வலம் வரும் பிரகாரம் அமைந்துள்ளது. இராவணன் குகையும், இராமர் குகையும் இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாகும். இராமர் குகையின் முன்பக்கத்தில் தூண்களைக் கொண்ட ஒரு மண்டபம் எழுப்பப்பட்டுள்ளது. கருவறையின் நுழைவாயிலில் துவாரபாலகர் உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. கருவறைக்குள் துர்க்கையின் உருவம் அமைக்கப்பட்டுள்ளது. மண்டபத்தின் கற்றூண்களிலும் பக்கச்சுவர்களிலும், ஒரு புறம் சைவசமயச் சிற்பங்களும், மற்றொரு புறம் வைணவச் சிற்பங்களும் செதுக்கப் பட்டுள்ளன. வேறு சில குடைவரைகளில் கற்றளி பாணியில் அமைந்த குகைகளும் உள்ளன. கைலாச குகை இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும். கைலாச குடைவரை நிலமட்டத்திற்கு மேல் கட்டப்பட்டுள்ள கற்றளியைப் போலக் காட்சியளிக்கிறது. பட்டடக்கல்லிலுள்ள விருபாட்சர் கோயிலைப்போல இது உள்ளது. இக் கோயிலும் ராஷ்டிரகூடர்கள் காலத்தில் அமைக்கப்பட்டிருக்க வேண்டும்.

ஒரே பாறையில் குடையப்பட்ட குடைவரைகளில் முதலிடத் தைப் பெறுவது இந்தக் கைலாசக் குகையாகும். இதிலுள்ள தாழ்வாரத்தில் நுழைந்து படிக்கட்டுகள் வழியாக முதல் மாடியை அடையலாம். இப் பகுதியில் யானைகள், யாளிகள் ஆகிய உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. உட்புறத்திலுள்ள கூடத்தின் நடுவில் எட்டு அடி உயரமுள்ள லிங்கமூர்த்தியின் உருவம் காணப்படுகிறது. இதற்கு எதிரில் பதினாறு தூண்களைக் கொண்ட ஒரு பெரிய மண்டபம் எழுப்பப்பட்டுள்ளது. அம் மண்டபச் சுவர்களில் இராமாயணக் காட்சிகள் ஓவியங்களாகத் தீட்டப்பட்டுள்ளன. இப் பெரிய மண்டபத்திற்கு முன்னால் ஒரு நந்தி மண்டபம் காணப்படுகிறது. இதனை அடுத்திருக்கும் மற் றொரு மண்டபத்தில் உமையொரு பாகன், கங்காதரன், திரிபுர மெரித்தவன் போன்ற சிவ்பெருமானின் உருவ்ங்களும் திருமாலின் பல உருவ்ங்களும், திருமாலும் சிவ்னும் இணைந்து நிற்கும் உருவங் களும் காணப்படுகின்றன. இக்கோயிலில் காணப்படும் சிற்பங் களும் ஓவியங்களும் புராண இதிகாசக் கதைகளை அடிப்படை யாகக்கொண்டு உருவாக்கப்பட்டவை. இந்தியர்களின் ஆழ்ந்த சமய உணர்வும் பண்பாடுமே தனி ஒரு கல்லில் இவ்வளவு சிறந்த ஒரு கலைப்படைப்பை உருவாக்குவதற்குக் காரணமாக இருந்தன என்று பெர்ஸி பிரவுன் கருதுகிறார். இந்தக் கோயில்களில் காலத்தால் பிற்பட்டது கைலாசர் கோயிலேயாகும்.

(கி.பி. 750—850). மாமல்லபுரத்திலுள்ள ஒற்றைக் கற்கோயில்கள்(ரதங்கள்) கைலாசர் கோயில் மாதிரியில் உருவாக்கப்பட்டவை என்று பர்கஸ் என்னும் அறிஞர் கருதுகிறார்.

சமண சமயத்தைச் சார்ந்த குடைவரைகள் மற்றச் சமயத்தைச் சார்ந்தவற்றைவிடக் காலத்தால் பிற்பட்டவை. இவை கி.பி. 750-850 காலப்பகுதியில் குடையப்பட்டவை. இந்திரன் சபை என்றழைக்கப்படும் முப்பத்து மூன்றாவது குகையும், ஜகன்னாதன் சபை என்றழைக்கப்படும் முப்பத்து நான்காவது குகையும் இவற்றில் தலைசிறந்தவையாகும். இந்திரன் சபை என்பது மாடியோடு கூடிய சமணக் கோயிலாகும். அங்குள்ள மண்டபத்தில் இருபத்து நான்கு சமண தீர்த்தங்கரர்களின் உருவம் செதுக்கப்பட்டுள்ளது. அம் மண்டபத்தின் நடுவில் இந்திரன் கொலுவீற்றிருக்கின்றான். எல்லோராவிலுள்ள மண்டபங்களிலேயே மிகச் சிறந்த கலையழகோடு விளங்குவது இம் மண்டபம் ஒன்றுதான். ஜகன்னாத சபையின் தரை மட்டத்திலுள்ள மண்டபத்தில் மூன்று கருவறைகள் உள்ளன. இதன் மாடியில் ஒரு பெரிய கூடம் காணப்படுகிறது. இதன் நாற்புறத்திலும் பன்னிரண்டு தூண்கள் உள்ளன. இம் மண்டபத்தின் ஒரு மூலையில் காணப்படும் கருவறையில் அரியணையி லமர்ந்தவண்ணம் மகாவீரர் காட்சி தருகிறார். இந்தச் சமணக் குடைவரைகளின் மாதிரியிலேயே மாமல்லபுரத்துக் குடைவரைகள் குடையப்பட்டன என்று பர்கஸ் என்னும் அறிஞர் கருத்துத் தெரிவிக்கிறார்.

### கட்டடக் கலை—சாளுக்கியரின் கோயில்கள்

சாளுக்கியர்களின் கோயில் கட்டடக் கலை வளர்ச்சியில் அய்ஹோளில் காணப்படும் கோயில்களை அதன் முதல் கட்டமாகவும், பாதாமி, பட்டடக்கல் போன்ற இடங்களிலுள்ள கோயில்களை அதன் இரண்டாவது கட்டமாகவும் கருதலாம்; அல்லது சாளுக்கியர்களுடைய கோயில்களை அவர்களுடைய தொடக்க காலக் கோயில்கள், பிற்காலக் கோயில்கள் எனப் பிரித்து ஆராயலாம். தக்காணத்தைப் பொறுத்தவரை கோயில்களைக் கட்டத் தொடங்கியவர்களே சாளுக்கியர்கள்தாம். எளிமையாகக் காட்சியளிக்கும் கருவறை, தாழ்வான சிகரம், மண்டபம், வலம்வரும் பாதையைச் சுற்றியமைந்த தாழ்வாரம் போன்றவை இவர்களின் தொடக்கக் காலக் கோயில்களில் காணப்படும் சிறப்பு அம்சங்களாகும். பிற்காலக் கோயில்களில் அகன்ற மண்டபங்களும், உயரமான கோபுரங்களும், எண்ணிறந்த சிற்பங்களும் காணப்படுகின்றன. இவை கிட்டத்தட்ட பல்லவர் காலத்துக் கோயில்களை ஒத்துள்ளன.

அய்ஹோள்

ஏறத்தாழ எழுபது கோயில்களைக் கொண்ட அய்ஹோள் நகரம் 'கோயில் நகரம்' என்றழைக்கப்படுவது மிகப் பொருத்தமானதேயாகும். அங்குள்ள கோயில்களில் மிகப் பழமையானதும், காலத்தால் முற்பட்டதும் லதக்கான் (Ladh Khan) கோயிலாகும். இது கி.பி. 450-ல் கட்டப்பட்டதென்று சிலரும், கி. பி. 620-ல் கட்டப்பட்டதென்று வேறு சிலரும் கருதுவர். ஐம்பது அடி சம சதுர வடிவிலிருக்கும் இக் கோயிலின் கூரை தாழ்வாகவும், சமதளமுடையதாகவும் இருக்கிறது. இதன் சுவர்கள் கற்களைக் கொண்டு கட்டப்பட்டிருக்கின்றன. சுவரோடு ஒட்டிய சதுரத் தூண்களின் தலைப்புகளில் வளைவு அடைப்புகள் காணப்படுகின்றன. ஒரு பக்கத்துச் சுவரின் முக மண்டபத்திலுள்ள தூண்களில் ஆற்றுத் தேவதைகளின் உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. கூரையின்மேல் ஒரு சமசதுர சிறு மண்டபம் போன்ற கருவறை கட்டப்பட்டுள்ளது. இதில் சூரியனின் படிமம் சமைக்கப்பட்டுள்ளது. இக் கோயிலின் உட்புறத்தில் பல தூண்களைக்கொண்ட ஒரு சதுர மண்டபம் உள்ளது. நடுவில் மிகப் பெரிய உருவிலான நந்தி ஒன்று காணப்படுகிறது. இக் கோயிலமைப்பை ஒட்டு மொத்தமாக வைத்து ஆராயும் பொழுது இக் கட்டடம் நகர மக்கள் கூடும் ஒரு சபையாக இருந்திருக்கவேண்டுமென்றும், பிறகு ஒரு கோயிலாக மாற்றப் பட்டிருக்க வேண்டுமென்றும் பெர்ஸி பிரவுன் கருதுகிறார்.

லதக்கான் கோயிலில் காணப்படும் தூண்களின் தலைப்புகள் வட இந்தியத் தூண் தலைப்புகளிலிருந்து முற்றிலும் மாறுபட்டுக் காணப்படுகிறது. (திராவிடத்தூண் தலைப்புப்பாணி என்று பிற் காலத்தில் அழைக்கப்பட்ட இந்தப் பாணியானது முதன் முதல் சாளுக்கியர்களால் தொடங்கப்பட்டது.) பெரிய பெரிய தட்டையான கற்பலகைகளை ஒன்றாக இணைத்துக் கட்டப்பட்ட இக் கோயில் மண்டபங்களின் கூரையமைப்பு முறையும் சாளுக்கியர்களால் தொடங்கப்பட்டதேயாகும். அய்ஹோளிலுள்ள மற்றொரு முக்கியமான கட்டடம் துர்க்கைக் கோயிலாகும். ஒரு ஹிந்துக் கோயிலைப் பௌத்த சேதியத்தைப் போலவே அமைக்கும் பரிசோதனையில் இது மற்றொரு முயற்சியாகும். கி. பி. எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த இக் கோயிலில் பிராமண - புத்த கோயில் கட்டடக் கலைக் கூறுகள் கலந்து காணப்படுகின்றன. அறுபது அடிக்கு, முப்பத்தாறு அடி அரைவட்ட வடிவில் அமைந்துள்ள இக் கட்டடத்தை ஒட்டி இருபத்து நான்கு அடி நீளமுள்ள ஒரு முக மண்டபம் உள்ளது. மிக உயரமான மேடையில் அமைக்கப் பட்டிருக்கும் இக் கோயிலின் கருவறைக்குமேல் 'பிரமிட்' வடிவில்

ஒரு கோபுரம் எழும்பியுள்ளது. கோயிலைச் சுற்றித் தூண் வரிசைகளுக்கிடையிலமைந்த தாழ்வாரம் கோயிலைச்சுற்றி வலம் வரும் பாதையாகப் பயன்படுகிறது. அய்ஹோளிலுள்ள மிகப் பழமையான கோயில் ஹுச்சிமல்லிகுடி (Huccimalligudi) என்னும் கோயிலாகும். இதுவும் துர்க்கைக் கோயிலைப்போல நீள் சதுரவடிவில் அமைந்துள்ளது. அதன் உட்புறத்தில் நீள் சதுர மண்டபம் ஒன்று உள்ளது. அதன் நடுவில் ஒவ்வொன்றிலும் மூன்று தூண்களைக்கொண்ட இரண்டு கற்றூண் வரிசைகள் காணப்படுகின்றன. கருவறைக்கு முன்னால் ஓர் அழகிய இடை நாழிகை (Vestibule) அமைந்துள்ளது.

கருவறைக்கு மேல் சிகரம் அமைக்கப்பட்டுள்ளது. அய்ஹோள் கோயில்களில் குறிப்பிடத்தக்கது, மெகுடி சமணக் கோயிலாகும். அங்குள்ள ஒரு கல்வெட்டிலிருந்து அக் கோயில் கி.பி. 634-ல் கட்டப்பட்டதென அறிகிறோம். சாளுக்கியக் கட்டடக் கலையின் பரிணாம வளர்ச்சியில் இது ஒரு வளர்ச்சிக் கட்டத்தைக் காட்டுகிறது. மற்றச் சாளுக்கியக் கட்டடங்களிலிருந்து மாறுபட்டதாகவும், பல கலைநுணுக்கங்களைக் கொண்டதாகவும் இக் கோயில் உள்ளது. மற்றக் கோயில்களில் நீளமான தனிக்கற்கள் பயன்படுத்தப்பட்டன. இக்கோயிலில் சிறிய அளவிலான துண்டுக்கற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. சுவரோடு ஒட்டிய சதுரத்தூண்களின் தலைப்புகளில் காணப்படும் கலை நுட்பங்கள் பிற கோயில்களில் காணப்படுவதைவிடச் சிறந்து விளங்குகின்றன. இக் கோயிலின் ஒரு பகுதி, கல்லுளியால் செதுக்கப்பட்டு அழகிய அலங்கார வேலைப்பாடுகளுடன் காணப்படுகிறது.

பாதாமி (வாதாபி)

(பாதாமியில் மேலைச் சாளுக்கிய அரசன் மங்கலேசனால் குடைவிக்கப்பட்ட விஷ்ணுவின் குடைவரைக் கோயில் மிகவும் சிறப்புடையதாகும்.) அங்குள்ள நான்கு குடைவரைக் கோயில்களில் மூன்று பிராம்மண சமயத்தைச் சார்ந்தவை. மற்றொன்று சமண சமயக் கோயிலாகும். இந்த நான்கு கோயில்களிலும் தூண்களுடைய தாழ்வாரங்களும், மண்டபங்களும், சதுர வடிவிலான கருவறையும் உள்ளன. பிராம்மணக் கோயில்களில் ஒன்றான விஷ்ணு கோயிலின் சுவரிலும், தாழ்வாரத்திலும் விஷ்ணு பாம்பணையில் அமர்ந்திருக்கும் காட்சியும், நரசிம்ம அவதாரக் காட்சியும் அணிப்படிமங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன. தாழ்வாரத்திலுள்ள தூண்களிலும் மனித உருவங்கள் மிக நேர்த்தியாகச் செதுக்கப்பட்டுள்ளன. சமணக்கோயில் ஏறத்தாழ பிராம்மணக்

கோயில்களின் அமைப்பையே ஒத்திருக்கிறது. இதன் முகப்பில் நான்கு தூண்கள் காணப்படுகின்றன. இக் கோயிலில் சமண தீர்த்தங்கரர்களின் உருவங்களும் செதுக்கப்பட்டுள்ளன. மேற் கூறிய நான்கு குடைவரைக் கோயில்களைத் தவிரப் பாதாமியில் சிறப்புப் பெற விளங்கும் மற்றொரு கோயில் மாலகிட்டிச் சிவன் கோயிலாகும். பாதாமிக்கு அண்மையில் குன்றுகளுக்கு நடுவில் இக் கோயில் அமைந்துள்ளது. இதனுடைய விமானம் எண்கோணக் கூண்டு வடிவில் அமைந்துள்ளது. கருவறை, முன்மண்டபம், அம்பலம் ஆகியவையும் இக் கோயிலில் காணப் படுகின்றன.

**பட்டடக்கல்**

சாளுக்கியக் கட்டடக் கலைவளர்ச்சியில் பட்டடக்கல் கட்டடங்கள் ஒரு முக்கிய இடத்தைப் பெறுகின்றன. இங்குச் சாளுக்கியர்களின் பத்துக் கோயில்கள் உள்ளன. விஜயாதித்யன், இரண்டாம் விக்கிரமாதித்யன் ஆகியோரால் இக் கோயில்கள் கட்டப்பட்டன. இவற்றுள் பாவநாதர் கோயில், சம்புலிங்கர் கோயில், காசிநாதர் கோயில் போன்றவை இந்தோ-ஆரிய பாணியில் கட்டப்பட்டவை என்றும் விருபாட்சர், சங்கமேசுவரர், மல்லிகார்ச்சுனர் கோயில்கள் திராவிட பாணியில் கட்டப்பட்டவை என்றும் கட்டடக்கலை வல்லுநர்கள் கருதுகின்றனர். கி.பி. 680-ல் கட்டப்பட்டதாகக் கருதப்படும் பாவநாதர் கோயில் 90 அடி நீளமுள்ளது. ஆனால், நீளத்திற் கேற்ற உயரத்தை இது பெற்றிருக்கவில்லை. கிழக்குப் பக்கத்திலுள்ள சிகரம் குட்டையாக உள்ளது. முன் மண்டபம், முக மண்டபம், கருவறை, அதனையடுத்து நீள்மேடை, கற்றூண்கள் முதலியவை இக் கோயிலில் காணப்படும் சிறப்புக் கூறுகளாகும்.

லோகேசுவரர் கோயில் என்று அழைக்கப்பட்ட விருபாட்சர் கோயில் லோகேஸ்வரனாகிய சிவபெருமானுக்கு இரண்டாம் விக்கிரமாதித்யனால் கட்டப்பட்டது. காஞ்சிபுரத்திலுள்ள கைலாசநாதர் கோயிலைப் போலவே இது அமைந்துள்ளது. பல்லவ நாட்டிலிருந்து கட்டடக் கலைஞர்களை வரவழைத்துத் தன் பட்டத்தரசியின் விருப்பத்திற்கிணங்க இரண்டாம் விக்கிரமாதித்யன் இந்தக் கோயிலைக் கட்டினான் என்று கருத இடமுள்ளது. இதன் கருவறை மண்டபத்தைச் சுற்றிலும் வலம்வரும் பாதை அமைந்துள்ளது. இதன் முன் மண்டபம் கருவறையிலிருந்து தனித்துக் காணப்படுகிறது. அடியில் அகன்றுவரும் முதனிலை மாடத்தை அடுத்த மாடங்கள் தக்க அளவில் குறைந்து சென்று சதுர வடிவிலான சிகரத்தில் முடிகின்றன. ஒரே கல்லினாலான

தூண்களிலும், பெரிய நீள் சதுரக் கற்களால் கட்டப்பட்ட சுவர் களிலும், கூரைகளிலும் அலங்காரப் படிம அணிகள் காணப்படு கின்றன. சிவன், நாகர், நாகினியர் உருவங்களும், இராமா யணக் காட்சிகளும் இவற்றில் செதுக்கப்பட்டுள்ளன. இக் கோயி லைக் கட்டிய தலைமைத் தச்சன் ஸ்ரீகுண்டன் அனிவாரிதாச்சாரி என்பவன் இக் கோயிலைக் கட்டிய பிறகு அவன் 'திரிபுவன ஆசாரி' என்னும் பட்டத்தைப் பெற்றான். நகரங்களைத் திட்டமிட்டு அமைப்பதில் வல்லுநனான அவன் பல நகரங்களை உருவாக்கு வதில் முக்கிய பங்கேற்றான். அரண்மனைகள், சிம்மாசனங்கள், ரதங்கள் போன்றவற்றை உருவாக்குவதில் அவன் நல்ல தேர்ச்சி பெற்றவன். அக் கோயிலில் காணப்படும் இராமாயணச் சிற்பங்களை உருவாக்கியவனும் அவனாகத்தான் இருக்கவேண்டும்.

### ஆலம்பூர்

துங்கபத்திரை ஆற்றங்கரையில் மகபூப் நகர் மாவட்டத் திலுள்ள ஆலம்பூர் என்னுமிடத்திலும் சாளுக்கியர்களின் சில கோயில்கள் உள்ளன. இவற்றில் பெரும்பாலானவை கி.பி. ஏழாம் நூற்றாண்டில் கட்டப்பட்டவை. இக் கோயில்கள் அமைப்பிலும், உருவத்திலும் பட்டடக்கல்லிலுள்ள பாவநாதர் கோயிலைப் போலவே உள்ளன. நீள் சதுர வடிவில் காணப்படும் இக் கோயில் களின் ஒரு மூலையில் கலசமும், அதனைச் சுற்றிலும் தூண் வரிசை களும், வலம்வரும் பாதையும் உள்ளன. இங்கு உள்ள ஒன்பது கோயில்கள் 'நவ பிரம்மக் கோயில்' என்றழைக்கப்படுகின்றன.

### சிற்பக்கலை

சாளுக்கியர் காலத்தில் கட்டடக் கலை வளர்ச்சியடைந்த அள விற்குச் சிற்பக் கலை வளர்ச்சியடையவில்லை. அவர்கள் காலத்துச் சிற்பங்களை அய்ஹோள், பாதாமி, பட்டடக்கல் கோயில் தூண் களிலும், சுவர்களிலும் புடைப்புச் சிற்பங்களாகக் காண்கிறோம்.

### ஓவியம்

சாளுக்கியர் காலத்தில் ஓவியக்கலையும் வளர்ச்சி பெற்றது. சாளுக்கிய அரசன் மங்கலேசன் ஒரு சிறந்த கலைஞன். அவனால் பாதாமியில் குடையப்பட்ட விஷ்ணு குகைக் கோயிலில் பல சிறந்த ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன. அஜந்தா குகைகளில் தங்கள் கைவண்ணத்தைக் காட்டிய ஓவியர்களும் அவர்கள் மரபில் தோன்றியவர்களுமே பாதாமிக் குகைக் கோயில் ஓவியங் களைத் தீட்டியிருக்கவேண்டும். எனவே, சாளுக்கியர் காலத்தில் வாகாடகர்களுடைய ஓவியக் கலைப்பாணியே தொடர்ந்து

பின்பற்றப்பட்டது என்று கருதலாம். இக் கோயிலின் கூரையில் வரையப்பட்டிருக்கும் இந்த ஓவியங்கள் ஆரிய சமயத்தின் கருவூலமாக விளங்குகின்றன. இங்குப் பல வண்ணங்களில் நரசிம்மமூர்த்தி, வராகமூர்த்தி ஆகிய விஷ்ணுவின் அவதாரங்கள் ஓவியமாக வரையப்பட்டுள்ளன. வாதாபியில் மங்கலேசனால் கட்டப்பட்ட அரண்மனையில் ஓர் அழகிய ஓவியம் தீட்டப்பட்டுள்ளது. அதில் மிகப் பெரிய மண்டபத்தின் நடுவில் ஓர் உருவம் உட்கார்ந்து கொண்டு, இசைவாணர்களும் நடனக்காரர்களும் நடத்தும் நிகழ்ச்சியைக் கண்டுகளிக்கும் காட்சி சித்திரிக்கப்பட்டுள்ளது. மேலேயுள்ள பலகணியில் நின்றுகொண்டு பலர் இக் காட்சியை ரசிக்கின்றனர். தேவர்களின் தலைவனான இந்திரன் இந்திர சபையிலமர்ந்து நடனக் காட்சி ஒன்றைக் கண்டு ரசிக்கும் காட்சியை இந்த ஓவியம் சித்திரிக்கின்றது என்று கொள்ளலாம். இதேபோல மற்றோர் ஓவியம் அரண்மனை உட்புறக் காட்சி ஒன்றைச் சித்திரிக்கிறது. அதில் அரசன், அரசியர், அரசிளங் குமரர்கள், பணிப்பெண்கள் ஆகிய எல்லோர் உருவமும் தீட்டப்பட்டுள்ளது. இந்த ஓவியத்தில் காணப்படும் அரசன் மங்கலேசனின் அண்ணன் கீர்த்திவர்மனாக இருக்கலாம். வாதாபி குகையில் காணப்படும் ஓவியங்களில் ஒரு வித்தியாதர ஜோடியின் உருவங்கள் குறிப்பிடத்தக்கவையாகும். இவ்வாறு முழு உருவத்தோடு காணப்படும் ஓவியங்களைத் தவிர அழிந்த நிலையில் காணப்படும் சாளுக்கியர் காலத்துப் பல ஓவியங்களும் கிடைத்துள்ளன.

### ராஷ்டிரகூடர்கள் காலம்

மேலைச்சாளுக்கியர்கள் ஆதிக்கத்தை ஒழித்துவிட்டு அரசியலில் முன்னணிக்கு வந்த ராஷ்டிரகூடர்கள், கலைத்துறையில் சாளுக்கியர்கள் மரபுகளையும், அனுபவத்தையும் முற்றிலும் புறக்கணிக்க முடியவில்லை. எனவே, சாளுக்கியக் கலையின் பல கூறுகளையும் மரபுகளையும் அவர்கள் பின்பற்றினார்கள். கற்களைக் கொண்டு கோயில்கள் கட்டும் பழக்கம் சாளுக்கியர்களால் வழக்கில் கொண்டுவரப்பட்ட போதிலும், குடைவரைக் கோயில்கள் குடையப்படும் பழக்கம் முற்றிலும் மறைந்துவிடவில்லை. ராஷ்டிரகூடர்கள் காலத்துக் கோயில்கள் அனைத்தும் குகைகளில் குடையப்பட்ட குடைவரைகளேயாகும். குடைவரைக் கோயில் கட்டும் பாணி பௌத்த சமயத்தவருக்கே உரித்தான போதிலும், சைவ சமயத்தைப் போற்றி வளர்த்த ராஷ்டிரகூடர்கள் தங்கள் சமயத் தேவைகளுக்கேற்ற வகையில் குடைவரைக் கோயில் பாணியில் மாற்றங்களைச் செய்துகொண்டனர். எனவே, முற்காலத்து பௌத்தக் குடை வரைக் கோயில்களுக்கும், பிற்கால ராஷ்டிரகூடக் குடைவரைக் கோயில்களுக்கு

மிடையே பல வேற்றுமைகளைக் காண்கிறோம். எல்லோராவிலும் எலிஃபெண்டாவிலும் ராஷ்டிரகூடர்களின் குடைவரைக் கோயில்கள் காணப்படுகின்றன. பௌத்தக் குடைவரைகளில் தூண்களில்லாத பெரிய மண்டபங்கள் உள்ளன. ராஷ்டிர கூடர்கள் காலத்துக் குடைவரைகளில் தூண்வரிசைகள் முக்கிய இடத்தைப் பெறுகின்றன. உருவத்திலும், அலங்கார வேலைப் பாடுகளிலும் ராஷ்டிரகூடர்களுடைய தூண்கள் பௌத்தக் குடை வரைத் தூண்களிலிருந்து வேறுபட்டுக் காணப்படுகின்றன. பௌத்த குகைக்கோயில்களில் சிற்பங்களால் அலங்கரிக்கப்பட்ட முகப்பு (facade) ஓர் இன்றியமையாத கூறாகும். ராஷ்டிரகூடக் கோயில்களில் இது போன்ற முகப்பு கிடையாது.

எல்லோராவில் பௌத்தக் குடைவரைகளான விஸ்வகர்மா, தோதல், தின்தல் ஆகியவை முடிவடையுமிடத்திலிருந்து ராஷ்டிர கூடர்களின் கோயில்கள் தொடங்குகின்றன. இவற்றுள் முக்கியமான சிலவற்றைப் பற்றி மட்டும் இங்கு ஆராயலாம். இராவணன் குகையில் கருவறை தனியாகவும், அதற்கு முன் பல தூண்களைக்கொண்ட மண்டபமும் அமைந்துள்ளன. இக் கோயி லைச் சுற்றிவர வலம் வரும் பாதை உள்ளது. சதுரத் தூண்களின் பக்கங்களில் மகிஷாசுரமர்த்தினி, சிவதாண்டவம், துர்க்கை, வராக அவதாரம், விஷ்ணு, இலட்சுமி ஆகிய உருவங்கள் புடைப்புச் சிற்பங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன. கருவறையின் முன்புறத்தில் இரண்டு துவாரபாலகர்கள் உருவமும் செதுக்கப்பட்டுள்ளது. தசாவதார குகைக்கோயில் இரண்டு மாடிகளைக் கொண்டது. முதன் மாடத்தில் பதினன்கு சதுரத்தூண்கள் தாங்கி நிற்கும் ஒரு பெரிய மண்டபம் உள்ளது. மேல்மாடியில் ஐம்பத்து நான்கு தூண்கள் கொண்ட மற்றொரு மண்டபம் காணப்படுகிறது. இக் கோயிலின் தூண்களிலும் சுவர்களிலும், புடைப்புச் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. ஒரு புறத்தில் பைரவர், லிங்கோத்பவர், பார்வதி, இலட்சுமி ஆகிய கடவுள்களின் உருவங்களும், சிவன் தாண்டவமாடும் காட்சியும், சிவன் மார்க்கண்டேயனைக் காப் பாற்றும் காட்சியும் செதுக்கப்பட்டுள்ளன. மற்றொரு புறத்தில் விஷ்ணு கோவர்த்தன மலையைத் தாங்கிக் கொண்டிருக்கும் காட்சியும், விஷ்ணு பாம்புப் படுக்கையில் படுத்திருக்கும் காட்சியும், விஷ்ணுவின் வராக, வாமன, நரசிம்ம அவதாரங்களும் சிற்பவடிவில் சித்திரிக்கப்பட்டிருக்கின்றன. இந்தக் குகைகளிலும் துவார பாலகர்கள் உருவம் காணப்படுகிறது.

ராஷ்டிரகூடர்களின் குடைவரைகளில் தலைசிறந்தது கைலாச நாதர் குகையாகும். இது அமைப்பில் பட்டடக்கல் விருபாட்சர்

கோயிலை ஒத்திருக்கிறது. இக் கோயிலின் முகப்புப் பகுதியில் இராமாயண, மகாபாரத நிகழ்ச்சிகள் சிற்பவடிவில் சித்திரிக்கப் பட்டிருக்கின்றன. முகப்பின் மற்றொரு புறத்தில் கைலாய மலை யைப் பெயர்க்கும் இராவணன் உருவம் செதுக்கப்பட்டுள்ளது. மற் றொரு புறத்தில் சுவர் மாடங்களில் (Niches) சிவன், பிரும்மா, அர்த்தநாரி, விஷ்ணு மற்றும் வராக, வாமன, நரசிம்ம அவதாரங்கள் ஆகிய சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. மேலே விளக்கப்பட்டுள்ள பிராம்மண குகைக் கோயில்களைத் தவிர எல்லோராவில் ராஷ்டிரகூடர்கள் காலத்தைச் சேர்ந்த இந்திர சபை, ஜகன்னாத சபை என்ற இரண்டு சமண சமயக் குடைவரை களும் உள்ளன. இவ்விரண்டு கோயில்களிலும் காணப்படும் இந்திரன், மகாவீரர், இருபத்துநான்கு சமண தீர்த்தங்கரர்களின் உருவங்கள் ராஷ்டிரகூடர்களின் காலத்துச் சிற்பக்கலையின் சிறப்பைப் பறைசாற்றுகின்றன.

எல்லோராவிலுள்ள துமர்லேனு குடைவரையைப் போல இருக்கும் மற்றொரு குடைவரைக் கோயில் எலிஃபென்டா தீவில் உள்ளது. அங்குள்ள மொத்தம் ஏழு குகைகளில் முக்கியமான ஒன்றில் தலை சிறந்த சிற்பங்கள் காணப்படுகின்றன. இந்தியச் சிற்பக்கலை எலிஃபென்டாவில் உயர் கட்டத்தை அடைந்தது என்று கூறலாம். பம்பாய்க்கு அருகிலிருக்கும் இச் சிறிய தீவு ஸ்ரீபுரி என்றழைக்கப்பட்டது. போர்த்துக்கீசியர்களால் கைப்பற்றப் பட்டபொழுது அங்கிருந்த பல அரிய சிற்பப் படைப்புகளை அவர்கள் அழித்ததோடு மட்டுமன்றி, அத் தீவில் இருந்த ஒரு பெரிய யானைச் சிற்பத்தைப் பார்த்த போர்த்துக்கீசியர்கள் அத் தீவை எலிஃபென்டா என்றழைக்கத் தொடங்கினர். இங்குக் காணப்படும் குடைவரைகளும் சிற்பங்களும் கி. பி. 8ஆம், 9ஆம் நூற்றாண்டுகளைச் சேர்ந்தவையாக இருக்க வேண்டு மென்று பர்கெஸ் (Burgess) கருதுகிறார். எல்லோராவில் ராஷ்டிர கூடர்களால் துவக்கப்பட்ட சிற்பக்கலைப் பாணி எலிஃபென்டா வில் முழுமை பெற்றது என்று கூறலாம். ராஷ்டிரகூட ஆதிக்கத் திற்கு உட்பட்ட சிற்றரசர்களாயிருந்த சில ஹரர்களின் ஆதர வில் எலிஃபென்டாவின் சிற்பப் படைப்புகள் தோன்றின என்று லும், எல்லோராச் சிற்பங்களை உருவாக்கிய ராஷ்டிரகூட ஸ்தபதிகள் தாம் எலிஃபென்டாச் சிற்பங்களையும் உருவாக்கி யிருக்க வேண்டும். ஏனெனில், எல்லோராச் சிற்பங்களுக்கும், எலிஃபென்டாச் சிற்பங்களுக்குமிடையே அவ்வளவு நெருங்கிய ஒற்றுமையுள்ளது. கோயிலின் கருவறையைச் சுற்றி வலம்வரும் பாதை அமைந்துள்ளது. கருவறையின் வாயிலில் பெரிய துவார பாலகர் உருவங்கள் காட்சியளிக்கின்றன. கருவறையைச் சுற்றிச்

சுவர்மாடங்கள் ஒவ்வொன்றிலும் சிவனின் பல்வேறு உருவங்கள் —நடராஜர், கங்காதரர், அர்த்தநாரீஸ்வரர், சோமாஸ்கந்தர், சிவயோகி — சிற்பங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன. இவை யெல்லாவற்றையும் விடச் சிறந்ததும், கலை ரசிகர்களால் இன்றும் போற்றப்படுவதும் அக்கோயிலில் உள்ள பிரம்மாண்டமான திரிமூர்த்தியின் சிற்பமாகும்.[1] இச்சிற்பங்கள் யாவும் சைவ சமயத்தின் சிறந்த தத்துவங்களை விளக்கி நிற்கின்றன. இந்தியக் கலை புகழின் உச்ச நிலையை அடைவதற்கு ராஷ்டிரகூடக் கலை உதவியது என்றால் அது மிகையாகாது.

ராஷ்டிரகூடர்களின் கட்டட, சிற்பக் கலைகளைப்பற்றி இது வரை ஆராய்ந்தோம். ஓவியக்கலைக்கு அவர்கள் ஆற்றிய தொண்டு என்ன என்பதை அடுத்துச் சுருக்கமாக ஆராயலாம். எல்லோராவிலிருக்கும் குகைகளிலுள்ள ஓவியங்கள் இன்று அழிந்து காணப்படுகின்றன. அவற்றுள் பெரும்பாலானவை பௌத்தசமய ஓவியங்களாகும். கைலாசநாதர் கோயில், தசாவதாரக் குகை, தும்மர்லேனு போன்ற பிராம்மணக் குகைகளில் பல ஓவியங்கள் உள்ளன. கைலாசநாதர் கோயிலின் மேற்கு வாயிலிலுள்ள மேல்தள மண்டபத்தின் விதானத்தின் நடுவில் ஓர் அழகிய ஓவியம் தீட்டப்பட்டுள்ளது. ஒரு தாமரைக் குளத்தில் இரண்டு யானைகள் இறங்கி விளையாடிக் களிக்கின்றன. நீரில் ஏற்படும் சலனத்தால் தாமரை இலை வளைந்து தோன்றுகிறது. யானை ஒரு மீனைப் பிடித்திழுத்துக் கடிக்கின்றது. யானைகளை அடுத்துக் குளத்தில் பல குள்ளர்களின் உருவங்கள் காணப்படுகின்றன. கந்தர்வரும், வித்யாதரரும் ஆடிப்பாடித் தழுவிச் செல்கின்றனர். மற்றொரு புறத்திலுள்ள ஓவியத்தில், இருபக்கமும் பூமகளும் திருமகளும் குவிந்த கைகளுடன் தன்னைத் தொழுதுவர திருமால் சங்கு சக்கரமேந்திக் கருடன்மீது அமர்ந்திருக்கும் திருமாலின் உருவம் தீட்டப்பட்டுள்ளது. மேல் பாகத்தில் சிவன், பார்வதி, முருகன், கணபதி ஆகியோரின் உருவங்களும் வரையப்பட்டுள்ளன. இவற்றுள் சில ஓவியங்கள் முற்றுப் பெறாமலும் சில அழிந்தும் காணப்படுகின்றன. மண்டபத்தின் தெற்கு வாயிலிலுள்ள விதானத்தில் தீட்டப்பட்டுள்ள ஓர் ஓவியத்தில் சிவபெருமான் தாண்டவமூர்த்தியாகக் காட்சியளிக்கிறார்.

[1] இந்தத் திரிமூர்த்தி சிற்பத்தைப்பற்றி குருஸே(Grousset) என்னும் கலை வல்லுநர் பின்வருமாறு கூறுகின்றார்: 'The three countenances of the one being are here harmonized without a trace of effort; there are few material representations of the divine principle at once as powerful and as well balanced as this in the art of the whole world. Nay, more here we have undoubtedly the grandest representation of the pantheist god ever made by the hand of man'—The Art of the Rashtrakutas, O.C. Gangoli and A. Goswami, p. 24.

இந்திரசபை என்னும் சமணக் கோயிலின் விதானத்தின் நடுவில் காணப்படும் ஓவியங்களில் தேவர்களின் ஆடல், பாடல் காட்சியும், யமனும் அவன் மனைவியும் உள்ள காட்சியும் குறிப்பிடத் தக்கவையாகும். இக் கோயிலில் காணப்படும் விலங்கினங்கள், பறவைகள் முதலிய ஓவியக்காட்சிகள் சமண நூல்களிலுள்ள கதைகளைச் சித்திரிக்கின்றன. கோமதேஸ்வரரின் உருவம் இங்கு மிக அழகாகத் தீட்டப்பட்டுள்ளது. கைலாச நாதர் கோயிலின் மேற்கு வாயிலை அடுத்துப் பல ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன. அவை போர்க்களக் காட்சியைச் சித்திரிக்கின்றன. பறக்கும் வித்தியாதரர்கள், அவர்களுக்குப் பின்னால் காணும் முகில் திரைகள், இசைக்கருவிகள் ஆகியவை ராஷ்டிர கூடர்களின் ஓவியங்களில் நாம் காணும் சிறப்புக் கூறுகளாகும். மனித உருவங்களைப் பொறுத்தவரையில் அகன்ற மார்பும், குறுகிய இடையும், பிதுங்கி நிற்கும் கூரிய கண்களும், அசைவுகளைக் குறிக்கும் கோடுகளும் ராஷ்டிரகூட ஓவியங்களில் நாம் காணும் சிறந்த கலை நுணுக்கங்களாகும்.

# மேற்கோள் நூற்பட்டியல்

## (BIBLIOGRAPHY)


1. Altekar, A.S. — The Rashtrakutas and their times (1934).
2. Bhandarkar, R. G. — Early History of the Deccan.
3. Desai, P. B. (Editor) — A History of Karnataka (1970).
4. Fergussom, James — History of Indian and Eastern Architecture (1876).
5. Gangoli, O. C. and Goswami, A. — The Art of the Rashtrakutas (1958).
6. Ganguly, D. C. — The Eastern Chalukyas.
7. Jouvean Dubreuil — Ancient History of the Deccan (1919).
8. Mahalingam, T. V. — Kanchipuram in Early South Indian History (1968), South Indian Polity (1955).
9. Majumdar, R.C.(Editor) — The History and Culture of the Indian People, volumes III and IV (1962, 1964).
10. Nilakanta Sastri, K.A. — A History of South India (1966), Cholas (1975),
11. Sathianathier, R. — A Political and Cultural History of India, vol. I (1969).
12. Sircar, D. C. — Successors of the Satavahanas in the Lower Deccan.
13. Venkataramanayya, N. — Eastern Chalukyas of Vengi (1950).
14. Yazdani, G. (Editor) — The Early History of the Deccan, Parts I to XI (1960).
15. தங்கவேலு, கோ. — இந்தியக் கலை வரலாறு, முதல் புத்தகம், இரண்டாம் புத்தகம் (1976).

